உ

சிவமயம்.

# சோம சம்பு பத்ததி.








சிவாகம சங்கம்,

தேவகோட்டை.

தேவகோட்டை சிவாகம சங்கத்து வெளியீடு எண்—கஎ

உ

சிவமயம்.

ஸ்ரீசோமசம்பு சிவாசாரியர் இயற்றிய

கிரியாகாண்ட க்ரமாவளீ என்னும்

# சோமசம்பு பத்ததி.

(தமிழ் மொழி பெயர்ப்பு)

இது

சிவாகம சங்கத்து வித்வான் வியாகரண சிரோமணி

K. M. சுப்பிரமணிய சாஸ்திரியவர்களால்

மொழிபெயர்க்கப்பெற்று

அம்மாளக்கிரகாரம் சிவாகம பாடசாலை ஆசிரியர்

தி. ரா. பஞ்சாபகேச சிவாசாரியரவர்களாலும்

சிவாகம சங்கத்துச் சித்தாந்த சாத்திர போதகர்

பொ. முத்தைய பிள்ளையவர்களாலும்

பரிசோதிக்கப்பெற்று

தேவகோட்டை சிவாகம சங்கத்திலிருந்து

கும்பகோணம்

ஸ்ரீ கோமளாம்பா அச்சுக்கூடத்தில்

பதிப்பிக்கப்பெற்றது.

விலை ] 1934. ஸ்ரீமுகஞு [ ரூ. 2–8–0

திருமகள்

சிவமயம்.

# முகவுரை.

சிவாகமங்களிலுள்ள கிரியாகாண்டப் பொருள்களைத் திரட்டி முறையாக வரிசைப்படுத்தி பத்ததி என்னும் பெயருடன் பதினெட்டுப்பத்ததிகள் பதினெட்டுச் சிவாசாரியர்களால் செய்யப்பெற்றுள்ளன. அந்தப் பதினெட்டுச் சிவாசாரியர்களுள் சோமசம்பு சிவாசாரியரும் ஒருவரென்பது சைவ பூஷணத்திலுள்ள 342, 343-வது சுலோகங்களால் அறியப்படுகின்றது.

சோமசம்பு சிவாசாரியரால் செய்யப்பெற்ற இந்தப் பத்ததிக்குக் கிரியாகாண்ட க்ரமாவளீ என்பது பெயர். இது ஒவ்வொரு விதியின் முடிவிலும் அவர் கூறியது கொண்டு அறியக்கிடக்கின்றது. ஆயினும் இயற்றியஆசிரியர் பெயரால் சோமசம்புபத்ததி என வழங்கப்பெறுகின்றது. பத்ததி என்னும் சொல்லுக்கு வழி என்பது பொருள். ஆகவே இப்பத்ததி சோமசம்பு சிவாசாரியர் காட்டிய வழியெனப்படும்.

இதனுள் நித்தியம், நைமித்திகம், காமியம் என்னும் மூன்று விதிகள் உள்ளன. இவற்றுள் அடங்கிய விஷயங்கள்பொருள் அட்டவணையில் காட்டப்பட்டிருக்கின்றன.

இந்தப் பத்ததியின் முடிவுரையிலுள்ள முதலாவது சுலோகத்தால் நூலாசிரியருடைய குருபரம்பரை விளக்கப்பெற்றிருக்கிறது. அடுத்த சுலோகத்தால் இவ்வாசிரியர் கோளகமடாதிபதி என்பது விளங்குகின்றது. அதற்கடுத்த சுலோகத்தால் விக்கிரம சகாப்தம் 811ல் இந்தப்பத்ததி முற்றுப்பெற்றதென்பது விளங்குகின்றது. ஆகவே இப்பத்ததியை இயற்றி 1180 வருடங்கள் ஆகின்றன.

அகோர சிவாசாரியர் இயற்றிய கிரியாக்ரமத்யோதிகையில் நிர்வாண தீக்ஷா விதியின் முடிவில் "போஜதேவர், சோமசம்பு முதலிய ஆசாரியர்கள் கூறியதை அனுசரித்து கிரியைகள் இனிது விளங்கும்பொருட்டு தீக்ஷாவிதி என்னால் கூறப்பட்டது," என்று

கூறப்பட்டிருக்கின்றபடியால் அகோர சிவாசாரியர் இந்நூலாசிரியருக்குப் பிற்பட்டவரென்பது விளங்குகின்றது.

இந்தச் சோமசம்பு பத்ததியிலுள்ள ஒவ்வொரு சுலோகங்களும் சூத்திரம்போல் அநேக விஷயங்களை உள்ளடக்கியும் கெம்பீரதையுடனும் இருப்பதால் இதற்கு வியாக்யானமாகவே பிரயோக முறையில் அகோர சிவாசாரியர் இயற்றிய பத்ததி அமைந்திருக்கிறது. சிற்சில இடங்களில் சோமசம்பு சிவாசாரியருக்கும் அகோர சிவாசாரியருக்கும் கருத்து வேறுபாடு காணப்படுகின்றது. அவ்வேறுபாடுகள் டிப்பணியில் அங்கங்கே காட்டப்பட்டிருக்கின்றன.

அசிந்திய விசுவசாதாக்கியமென்னும் ஆகமத்தை முற்றிலும் ஆதாரமாகக்கொண்டே இந்தச் சோமசம்பு பத்ததி இயற்றப்பெற்றிருக்கின்றது. இது அவ்வாகமத்தை ஆராயுங்கால் விளங்குகின்றது.

ஆகையால் அசிந்திய விசுவசாதாக்கியம், சித்தாந்தசேகரம் முதலிய நூல்களிலுள்ள விஷயங்கள் வேண்டுமிடங்களில் டிப்பணியில் இச் சங்கத்து வித்வான் சுப்பிரமணிய சாஸ்திரிகளால் சேர்க்கப்பட்டிருக்கின்றன.

இந்நூலின் முடிவுரையிலுள்ள இறுதிச் சுலோகத்தால் இந்நூல் இரண்டாயிரம் சுலோகங்களை உடையதென்பது அறியப்படுகிறது. இதனை வடமொழியில் அச்சிடுதற்கு சூரியனார்கோவில் ஆதீனம் ஸ்ரீலஸ்ரீ முத்துக்குமாரத் தம்பிரான் சுவாமிகள் ஒரு பிரதி தந்து உதவினார்கள். அதில் ஆயிரத்து எண்ணூற்று ஐம்பத்தொரு (1851) சுலோகங்கள் இருந்தன. பின்னர் தமிழ் மொழிபெயர்ப்பு அச்சாகிக்கொண்டிருக்கும் பொழுது தருமபுர ஆதீனமகாசன்னிதானம் ஸ்ரீலஸ்ரீ சுப்பிரமணிய தேசிகரவர்கள் வடமொழிப் பிரதி ஒன்று தந்து உபகரித்தார்கள். இதில் ஒன்பது சுலோகங்கள் அதிகமாக இருந்தன. எல்லாம் சேர்ந்து ஆயிரத்து எண்ணூற்று அறுபது சுலோகங்களில் இத் தமிழ் மொழிபெயர்ப்பு முற்றுப்பெற்றிருக்கின்றது.

முன் அச்சிடப்பட்ட மூலத்திலுள்ள சில சுலோகங்கள் தருமபுர ஆதீனப்பிரதியில் இல்லை. சில சுலோகங்கள் தருமபுர

ஆதீனப்பிரதியில் அதிகமாகவுள்ளன. இத்தமிழ் மொழிபெயர்ப்பில் அவை சேர்த்து மொழிபெயர்க்கப்பட்டிருக்கின்றன. டிப்பணியிலும் அவை காட்டப்பட்டிருக்கின்றன. வடமொழி மூலம் இரண்டாம்பதிப்பு அச்சிடநேருங்கால் விபரமான அட்டவணை சேர்க்கப்பெறும்.

பிரதி தந்து உதவிய தருமபுர ஆதீனமகாசன்னிதானத்தின் கருணையை இச்சங்கம் மிகவும் போற்றுகின்றது.

இந்தச் சோமசம்புபத்ததி ஸ்ரீமாதவச் சிவஞானசுவாமிகள் முதலிய பெரியார் பலராலும் பெரிதும் பாராட்டப்பெற்ற ஓர் அரிய நூல்.

இத்தமிழ் மொழிபெயர்ப்பை மூலத்தோடு முற்றும் ஒப்பு நோக்கி உபகரித்த அம்மாளக்கிரகாரம் சிவாகமபாடசாலை ஆசிரியர் தி. ஙா. பஞ்சாபகேச சிவாசாரியாரவர்களுடைய நன்றி என்றும் போற்றத்தக்கது.

இந்நூலைச் சைவர்கள் ஒவ்வொருவரும் வாங்கிப்படித்துச் சங்கத்தை ஆதரித்துப் பயன் பெறுமாறு எல்லாம்வல்ல சிவபெருமான்றிருவருள் துணைபுரிவதாக.

இங்ஙனம்,

சிவாகமசங்கம்,

தேவகோட்டை.

---

உ
சிவமயம்.

# பொருள் அட்டவணை.

## நித்திய விதி.


| பொருள். | பக்க எண் | பொருள். | பக்க எண் |
|---|---|---|---|
| மலமூத்திர விஸர்ஜனம் | 2 | ஸ்தானசுத்தி | 28 |
| தந்ததாவனவிதி | 3 | அந்தரியாகபூஜை | 29 |
| மலஸ்நாநவிதி | 4 | அந்தரக்கினி காரியம் | 22 |
| விதிஸ்நாநவிதி | 5 | அர்க்கியம் சேகரிக்குமுறை | 29 |
| பஸ்மஸ்நாநவிதி | 7 | திரவியசுத்தி | 30 |
| மாகேந்திரஸ்நானவிதி | 8 | ஆத்மபூஜை | 30 |
| மாருதஸ்நானவிதி | 8 | மந்திரசுத்தி | 30 |
| மந்திரஸ்நானமுறை | 8 | லிங்கசுத்தி | 30 |
| மானஸஸ்நானவிதி | 8 | சிவாஸனபூஜை | 31 |
| ஆசமனவிதி | 8 | ஆவாஹநமுறை | 34 |
| சைவசந்தியாவிதி | 9 | ஆவாஹநமுதலியவற்றின் பொருள் | 35 |
| ப்ராஹ்மீசந்தியின் தியானம் | 9 | ஆவாஹநத்திற்குப்பின் செய்ய வேண்டுவன | 36 |
| வைஷ்ணவீசந்தியின் தியானம் | 10 | பாத்யம்முதலியன கொடுத்தல் | 37 |
| ரௌத்ரீசந்தியின் தியானம் | 10 | இருதயமுதலிய அங்கங்களின் பொருள் | 37 |
| நிர்வாணதீக்ஷை உடையாருக்குரிய நான்கு சந்திகள் | 11 | அபிஷேகமுறை | 38 |
| பிதிர்தீர்த்தம் முதலியவற்றின் விபரம் | 11 | அபிஷேகத்திற்குப்பின் செய்ய வேண்டுவன | 38 |
| மார்ஜனவிதி | 11 | போகாங்கபூஜை | 39 |
| அகமர்ஷம் | 12 | பவித்திரம் சமர்ப்பித்தல் | 40 |
| சிவார்க்யதானம் | 12 | ஜபஸமர்ப்பணம் | 40 |
| தர்ப்பணமந்திரங்கள் | 13 | **அக்கினிகாரிய விதி.** | |
| சூரியபூஜை | 16 | குண்டத்திற்குச் செல்லுமுறை | 42 |
| **சிவபூஜா விதி.** | | குண்டஸம்ஸ்காரவிதி | 42 |
| துவாரபாலபூஜை | 22 | வாகீசுவரி வாகீசுவரர்களின் ஆவாஹநம் | 44 |
| விக்நோச்சாடனம் | 22 | குண்டத்தில் அக்கினியிடுதல் | 44 |
| பூஜாகிருகத்திற்குச் செல்லுதல் | 23 | அக்கினியை வைத்தபின் செய்ய வேண்டுவன | 45 |
| அபிஷேகஜலம்சேகரிக்குமுறை | 23 | கர்ப்பாதாநமுதலியன | 45 |
| பூதசுத்தி | 23 | ஜனனமானபின் செய்யவேண்டுவன | 46 |
| சூக்ஷ்மதேகசுத்தி | 24 | | |
| தூலதேகசுத்தி | 25 | | |
| ஜீவனை இருதயகமலத்தில் ஸ்தாபிக்குமுறை | 28 | | |

| பொருள் | பக்க எண் |
|---|---|
| அக்கினிக்குழந்தையைக் காப்பாற்றுதல் | 47 |
| ஸ்ருக்ஸ்ருவங்களின் ஸம்ஸ்காரம் | 47 |
| ஆஜ்யஸம்ஸ்காரம் | 48 |
| அக்கினிக்குழந்தைக்குப் பெயரிடுதல் | 52 |
| வாகீசுவரி வாகீசுவரர்களை விஸர்ஜனம் செய்தல் | 52 |
| அக்கினியில் சிவனைப் பூஜித்தல் | 53 |
| ஹோமதிரவியங்களின் அளவு | 53 |
| பூர்ணாகுதிமுறை | 54 |
| சிவபெருமானை விஸர்ஜனம் செய்தல் | 55 |
| அந்தர்ப்பலி பஹிர்ப்பலிமுறை | 55 |
| சுருக்கமான அக்கினிகாரியம் | 57 |
| சிவபூஜையின் முடிவு | 58 |
| சண்டேசுவர பூஜை | 59 |
| கபில பூஜை | 60 |
| வித்யாபீடம் குருபரம்பரைகளின் பூஜை | 62 |
| மத்தியாஹ்னத்தில் செய்யவேண்டுவன | 62 |
| போஜனம் செய்யுமிடத்தில் செய்யத்தக்கன | 63 |
| சுல்லீஹோமம் செய்யு முறை | 63 |
| வாஸ்துபலி முறை | 64 |
| ஸாந்தானிக பிக்ஷாபோஜனவிதி | 64 |
| அயாசித பிக்ஷாடனம் | 67 |
| பிக்ஷையெடுத்தபின் செய்யவேண்டுவன | 70 |
| ஸாயங்காலத்தில் செய்யவேண்டுவன | 71 |
| சயன விதி | 71 |
| அர்த்தராத்திரியில் செய்யவேண்டுவன | 71 |
| **நைமித்திக விதி.** | |
| பவித்திர லக்ஷணவிதி | 72 |
| **பவித்திர அதிவாஸ விதி.** | |
| பவித்திர மண்டப பூஜை | 77 |
| துவார பால பூஜை | 77 |
| விரதபோகாங்க திரவியங்களைச் சமர்ப்பித்தல் | 81 |
| பவித்திரங்களுக்குச் செய்யவேண்டுவன | 83 |
| கந்தபவித்திரம் சாத்துமுறை | 83 |
| அக்கினியிலுள்ள சிவபெருமானுக்குச் செய்யவேண்டுவன | 85 |
| பவித்திரங்களை இரக்ஷித்தல் | 86 |
| சித்தாந்த சாத்திரம் குரு இவர்களைப் பூஜித்தல் | 87 |
| பவித்திரம் சாத்துதற்குமுன் செய்யவேண்டுவன | 88 |
| மண்டப தேவர்களுக்குப் பவித்திரம் சாத்துதல் | 88 |
| பரமசிவனுக்குப் பவித்திரம் சாத்துதல் | 89 |
| சிவபெருமானுக்கு விக்ஞாபனஞ் செய்தல் | 91 |
| பவித்திரம் சாத்துதற்குரிய மூல மந்திரங்கள் | 91 |
| அக்கினி காரியவிதி | 93 |
| ஹோம மந்திரங்கள் | 93 |
| ஆசாரிய பூஜை | 93 |
| ஏக தினபூஜையில் செய்யவேண்டுவன | 94 |
| பவித்திர சண்டேசுவர பூஜை | 95 |
| சண்டேசுவரப் பிரார்த்தனை | 95 |
| தமன பூஜாவிதி | 96 |
| கந்த தமனம் சாத்துதல் | 99 |
| எஞ்சிய தமனங்களை இரக்ஷித்தல் | 99 |
| தமனஞ்சாத்துமுறை | 100 |
| ஆசிரியர்வேதியர்களைப் பூஜித்தல் | 101 |
| பிராயச்சித்த விதி | 101 |
| அநுட்டான லோபத்திற்குப் பிராயச்சித்தம் | 103 |
| பூஜாலோபத்திற்குப் பிராயச்சித்தம் | 103 |
| சிவலிங்கத்திற்குத் தோஷங்கள் ஏற்படின்பிராயச்சித்தம் | 104 |

நைமித்திகவிதி.


| பொருள். | பக்க எண் |
|---|---|
| சிவாக்கினி அணைந்தால் | 108 |
| நிர்மாலியம் ஆறுவகை | 111 |
| போஜனதோஷம் பரிச தோஷம் | 113, 115 |
| சண்டாளனுடைய பரிச தோஷம் | 116 |
| பஞ்சகவ்வியம் சேகரிக்கு முறை | 118 |
| **ஸமய தீக்ஷாவிதி** | |
| தீக்ஷையின் சொரூபம் | 120 |
| ஆன்மாக்களின் வகை | 121 |
| தீக்ஷையின் பேதம் | 121 |
| ஆசாரிய இலக்கணம் | 122 |
| சிஷ்ய இலக்கணம் | 123 |
| துவார பாலபூஜை முதலியன | 123 |
| மண்டலேசுவர பூஜை | 128 |
| ஓமம் செய்தல் | 129 |
| ஸ்தாலீபாக விதி | 133 |
| **விசேஷ தீக்ஷாவிதி.** | |
| ஆத்மாவை வாகீசுவரியின் கர்ப்பத்தில் வைத்தல் | 141 |
| ஹோமஞ்செய்யவேண்டிய காலம் | 142 |
| அக்கினியால் ஊகிக்கப்படும் பாபங்கள் | 142 |
| கர்ப்பாதாந முதலியவற்றின் பொருள் | 143 |
| ஹோமத்திற்குப் பின் செய்யவேண்டுவன | 144 |
| பிரமசாரிக்குரிய விரதாங் கங்கள் | 145 |
| **நிர்வாண தீக்ஷாவிதி.** | |
| பாச சூத்திரங் கட்டுமுறை | 147 |
| நூலில் சத்தி முதலியவற்றை நியாசம் செய்தல் | 148 |
| நூலில் ஆத்மாவை நியாசஞ் செய்தல் | 149 |
| சாந்தியதீதகலையைச் சேர்க்கு முறை | 150 |
| சாந்திகலையைச்சேர்க்குமுறை | 151 |
| வித்தியாகலையைச் சேர்க்கு முறை | 152 |
| பிரதிட்டாகலையைச் சேர்க்குமுறை | 153 |
| நிவிருத்தி கலையைச் சேர்க்கு முறை | 154 |
| சபீஜதீக்ஷையில் பாவனை வேற்றுமை | 155 |
| கிரந்தி கற்பிக்கு முறை | 155 |
| பாசசூத்திரத்தை ரக்ஷிக்கு முறை | 156 |
| பஞ்சகவ்வியம் அருந்துமுறை | 157 |
| சருப்ராசன முறை | 157 |
| தந்தகாஷ்டத்தைச் சேவிக்குமுறை | 158 |
| சேவித்தபின்னர்ச் செய்ய வேண்டுவன | 158 |
| சிஷ்யனுடைய நித்திரையின் முறை | 159 |
| ஆசாரியர் செய்யவேண்டுவன | 160 |
| சொப்பன ஆராய்ச்சி | 160 |
| தீக்ஷைக்காக முன்னர்ச் செய்யவேண்டுவன | 161 |
| நிவிருத்திகலையைச் சுத்தி செய்யுமுறை | 162 |
| பிரதிட்டாகலையைச் சுத்தி செய்யுமுறை | 173 |
| வித்தியாகலையைச் சுத்தி செய்யுமுறை | 180 |
| சாந்திகலையைச் சுத்தி செய்யுமுறை | 183 |
| சாந்தியதீதகலையைச் சுத்தி செய்யுமுறை | 187 |
| சிகையைச் சேதிக்குமுறை | 191 |
| சிகையை ஓமஞ்செய்தபின் செய்யவேண்டுவன | 192 |
| ஹகாரம் முதலியவற்றைக் கடந்து செல்லுதல் | 194 |
| சர்வஞ்ஞத் தன்மை முதலியவற்றை உண்டு பண்ணுதல் | 195 |

காமிய விதி.


| பொருள் | பக்க எண் | பொருள் | பக்க எண் |
|---|---|---|---|
| சிஷ்யனிடத்தில் ஆன்மாவைச் சேர்த்தல் | 196 | சிலைகளை நியாஸஞ் செய்யும் முறை | 269 |
| சேர்த்தபின் செய்ய வேண்டுவன | 196 | சிலைகளைப்பிரார்த்திக்குமுறை | 269 |
| | | **பிரதிஷ்டாதிவாஸ விதி.** | |
| | | பிரதிஷ்டைக்குரிய காலம் | 271 |
| **திரிதத்துவ தீக்ஷாவிதி.** | | ஜாதிபேதத்தால் நக்ஷத்திர பேதம் | 273 |
| அதிவாஸ முறை | 197 | வேதியின் லக்ஷணம் | 274 |
| ஆன்மதத்துவ சுத்தி | 200 | குண்டங்கள் செய்யுமுறை | 275 |
| வித்யா தத்துவசுத்தி | 202 | குண்டங்களின் விஸ்தாரம் | 275 |
| சிவதத்துவ சுத்தி | 203 | காமனையின் பேதத்தால் குண்டங்களின் பேதம் | 276 |
| ஏகதத்துவ தீக்ஷாவிதி | 206 | குண்ட இலக்கணம் | 276 |
| ஆசாரியாபிஷேக விதி | 207 | தோரணங்கள் செய்யுமுறை | 277 |
| சிஷ்யனுக்கு அபிஷேகஞ் செய்யுமுறை | 209 | பதாகை துவஜங்களின் இலக்கணம் | 279 |
| அதிகாரத்தைச் சமர்ப்பிக்கு முறை | 210 | ஸருக்ஸ்ருவங்களின் இலக்கணம் | 283 |
| சிவபெருமானிடம் விக்ஞாபனம் செய்தல் | 211 | சமித்து முதலியவற்றைச் சேகரித்தல் | 284 |
| ஸாதகாபிஷேக விதி | 212 | யாகசாலைக்குச் செல்லுமுறை | 286 |
| அஸ்திராபிஷேக விதி | 214 | துவார பூஜை | 286 |
| விரதோத்தார விதி | 217 | எட்டுத் திக்குகளில் பைரவர்களைப் பூஜித்தல் | 288 |
| பிறிதொருவகையான விரதோத்தாரவிதி | 220 | பூதசுத்தி முதலியன | 288 |
| அந்தியேஷ்டி விதி | 221 | மண்டலம் செய்யுமுறை | 293 |
| சிராத்த விதி | 237 | வேத பாராயணம் | 295 |
| **காமிய விதி.** | | ஹோமம் செய்யுமுறை | 295 |
| **சிலாநியாஸம்.** | | ஸ்நாந மண்டபத்தில் செய்ய வேண்டுவன | 296 |
| பிரதிஷ்டைகளின் பிரிவு | 246 | லக்ஷணோத்தாரவிதி | 296 |
| பூமியைப் பரீக்ஷித்தல் | 247 | குறிசெய்தபின் செய்ய வேண்டுவன | 298 |
| பூபரிக்ரஹ விதி | 248 | மண்டபத்தின் மேற்குவாயிலுக்குச் செல்லுமுறை | 299 |
| சல்யோத்தார விதி | 251 | நவகுண்டபக்ஷத்தில நியாஸம் | 301 |
| மண்டபத்தில் தோரண பூஜை முதலியன | 253 | பஞ்சகுண்டபக்ஷத்தில் நியாஸம் | 301 |
| பிராஸாத சிலைகளின் இலக்கணம் | 254 | ஜீவந்யாசஞ் செய்யுமுறை | 303 |
| சிலைகளை அருச்சிக்குமுறை | 255 | பீடம் முதலியவற்றில் நியாஸம் | 303 |
| சிலைகளிற் செய்யப்படும் நியாஸங்கள் | 257 | | |
| ஹோமவிதி | 259 | | |
| வாஸ்து பூஜை | 260 | | |

கர்மிய விதி.


| பொருள் | பக்க எண் | பொருள் | பக்க எண் |
|---|---|---|---|
| ஹோமம் செய்யுமுறை | 304 | சல லிங்கப் பிரதிட்டை | 321 |
| லிங்கத்தைச் சுத்திசெய்யும் முறை | 305 | கௌரீப் பிரதிட்டை | 322 |
| பீடசுத்தி முதலியன | 306 | ஆதித்யப் பிரதிட்டை | 325 |
| சிவலிங்கப் பிரதிஷ்டாவிதி | 308 | விஷ்ணுப் பிரதிட்டை | 326 |
| பிண்டிகையை ஸ்தாபிக்கும் முறை | 312 | துவாரபாலப் பிரதிட்டை | 331 |
| விருஷப ஸ்தாபனம் | 314 | ஹிருத்கும்பப் பிரதிட்டை | 332 |
| சண்டேசுவரப் பிரதிட்டை | 317 | சூளி, துவஜம், தண்டம் பிரதிட்டை | 334 |
| ஆசாரிய தக்ஷிணை | 319 | ஜீர்ணோத்தார விதி | 337 |
| பிரதிட்டையின் பயன் | 319 | மடாலயப் பிரதிட்டை | 341 |
| ஆசாரியருக்கு யஜமானன் கூறும் உபசாரம் | 319 | புஷ்கரணீப் பிரதிட்டை | 342 |
| விநாயதேவர்களின் பிரதிட்டை | 320 | கூபப் பிரதிட்டை | 345 |
| | | விருக்ஷப் பிரதிட்டை | 346 |
| | | முடிவுரை | 347 |



உ

சிவமயம்.

# சோமசம்பு பத்ததி.



(தமிழ் மொழிபெயர்ப்பு)

## மங்கலம்.

1. மதயானையின் மத்தகங்களுடன் கூடின முகத்தையுடைய விநாயகப் பெருமானது மத நீர்வாஸனையுடன் கூடிய, 1 கன்னங்களில் 2 விழுகின்ற வண்டுக்கூட்டங்களை விரட்டுவதற்காக அசைகிற ஆடைபோன்ற காதுகளின் வீசுதலாலுண்டான காற்றானது மனிதர்களின். இடையூறாகிய பஞ்சுத்திரள்களை விரைவில் விரட்டக்கடவது §

2,3. 3 எல்லா அறிவுகளையும் தோற்றுவிப்பவராயும் 4 எல்லா ஞானங்களின் வடிவினராயும், 5 எல்லாத் தத்துவங்களின் சொரூபராயும், 6 மேலானவராயும், உலகத்திற்கு ஈசனாயும், 7 நாசமற்ற

---

1. மத நீர் வாஸனையுடன் கூடிய என்னும் அடைமொழி பின் வரும் காற்றானது என்னும் பதத்துடன் அன்வயிக்கின்றது.

2. மதஜலத்தோடு கூடிய கன்னங்களில் அம்மத நீரைப் பானம் செய்தற்கு விழுகின்ற வண்டுக் கூட்டங்களை என்பது பொருள்.

§ இந்தச் சுலோகம் அச்சுப்ரதியில் இல்லை. பின்னர்க் கிடைத்த தருமபுர ஆதீனத்துப்பிரதியிலுள்ளது. வியாக்கியானத்திலும் எடுத்தாளவில்லை.

3. எல்லா அறிவுகளையும் என்னும் பதத்தால் கர்மாவினாலும் மல பரிபாகத்தாலும் உண்டாகும் சித்துக்களின் போதமும், தம் தொழிலில் சாமர்த்தியத்தை உண்டு பண்ணும் அசித்துக்களின் போதமும் கொள்ளப்படுகின்றன. 4. எல்லாக்ஞானங்களின் என்னும் பதத்தால், சித்ரூபமாயுள்ள சத்திகளும் காமிகம் முதலிய ஆகமங்களும் கொள்ளப்படுகின்றன. 5. எல்லாத் தத்துவங்களின் சொரூபராயும் என்னும் பதத்தால், பரமசிவன் சிவதத்துவம்முதல் பிருதுவீதத்துவமீறாகவுள்ள எல்லாத்தத்துவங்களையும் எப்பொழுதும் அதிஷ்டித்திருப்பதால் எல்லாத் தத்துவரூபமாக பரமசிவன் இருக்கிறார் என்பது அறிவிக்கப் படுகின்றது. 6. மேலானவராயும் என்னும் பதத்தால் பரமசிவன் ஒருவருக்கும் அடங்கவில்லை என்பது அறிவிக்கப்படுகின்றது. 5. நாசமற்றவராயும் என்னும் பதத்

வராயும் இருக்கிற பரமசிவனை வணங்கி, 1 நல்ல ஆசாரியர்களின் உபதேசத்தினால் திவ்யாகமங்களையறிந்து, கிரியாக்ரமங்களில் (நாளடைவில்) அறிவு விருத்தியடையும்பொருட்டு, முறையாக நித்திய விதி, நைமித்திகவிதி, காம்யவிதி என்னும் இவற்றைக்கூறுகிறேன்.

## நித்தியவிதி.

3½. காலையில் எழுந்திருந்து மங்களமுண்டாவதற்காக 2அக்ஷரமாகிய சிவனைத்தியானித்து,

4, 6. உரிய இடத்தை அடைந்து, மலம்மூத்திரம் 3 முதலியவற்றைவிஸர்ஜனம் செய்யவேண்டும். பகலிலும் ஸந்தியாகாலங்களிலும்வடக்குத்திக்கை நோக்கினவனும், இரவில் தெற்குத் திக்கை நோக்கினவனும், மூக்கினது நுனியில் பார்வையைச் செலுத்தினவனும், ஒன்றும் பேசாதவனும், சிரசை வஸ்திரத்தினால் மூடினவனும், நிலையுற்ற மனதை உடையவனும், மல விஸர்ஜனம் செய்ய உரியதான பூமியைப் புற்களால் மறைத்துக் கொண்டவனும், வலதுகாதில் பூணூலைத் தரித்தவனும், வேதியர் முதலியவர்களைப் பாராதவனுமாய் மலமூத்ரவிஸர்ஜனஞ்செய்யவேண்டும்.

7. பின்னர் யாகத்திற்கு உதவியாகாத புற்களாலேனும், மண்கட்டியாலேனும் குதத்தைத் துடைத்துக்கொள்ளல் வேண்டும். சாணி, கல், மரத்துண்டு இவற்றால் ஒருபொழுதும் துடைத்துக்கொள்ளக்கூடாது.

---

தால் நாசமற்ற சக்தியையுடையவர் என்பது அறிவிக்கப்படுகின்றது. 1. நல்ல ஆசாரியர்களின் என்னும் பதத்தால் பரமசிவன் முதற்கொண்டு இடைவிடாத ஸம்பிரதாய ஞானத்தை உடைய ஆசாரியர்களின் என்பது அறிவிக்கப்படுகின்றது. 2. அக்ஷரமாகிய சிவனை என்றதனால் ஸ்வபாவத்தினால் உண்டானவையாயும், காரணத்தினாலுண்டானவையாயும் இருக்கிற நாசம் முதலிய தோஷங்களற்ற நிஷ்கள சிவனை என்னும் கருத்தாவது, போகாவஸ்தையிலுள்ள ஸகள நிஷ்கள சிவனை என்னும் கருத்தாவது, ஐந்து முகங்கள் முதலிய ரூபத்தை உடைய அதிகாராவஸ்தையிலுள்ள ஸதாசிவரை என்னும் கருத்தாவது, அந்த அந்த அதிகாரிகளுக்குத் தக்கவாறு கிரகிக்கத் தக்கது. அல்லது லயம் போகம் அதிகாரம் ஆகிய அவஸ்தைகளையுடைய சிவனைச் சொல்லக்கூடிய மந்திர சிரேஷ்டமான பிராசாதமே "சிவமக்ஷரம்" என்னும் சப்தத்தால் கொள்ளத்தக்கது.

3 "முதலியவற்றை" என்ற இதனால் காது கண் மூக்கு என்னும் இவைகளின் மலங்களும் கொள்ளத்தக்கன.

8. சுத்தமான மண்ணை எடுத்து அதனை நீரின் சமீபத்தில் வைத்துக்கொண்டு 1 இடையில் மண்ணாலும், பின் நீராலும் சௌசஞ் செய்துகொள்ளல் வேண்டும்.

9. லிங்கத்தை ஒருமுறையும், குதத்தை ஐந்து முறையும், இடதுகையைப் பத்துமுறையும், இரண்டு கைகளையும் எழு முறையும் மண்ணால் சுத்திசெய்யவேண்டும். பின்னர் பிருஷ்டங்களைத் துடைத்துக்கொள்ளல்வேண்டும். (4)

10½. அல்லது 2 பாவசுத்தி உண்டாகும்வரை சௌசஞ்செய்து கொள்ளல்வேண்டும். 3 பாவமாவதுசுத்தம் செய்துகொள்ளுபவரின் அந்தக்கரணம். அதன் சுத்திக்காக சௌசவிதியானது முனிவரால் கொள்ளப்பட்டது. கால்கைகளை ஒவ்வொரு முறை மண்ணாலும் ஜலத்தாலும் சுத்திசெய்து,

## தந்ததாவன விதி.

11. பின்னர் முறைப்படி ஆசமனஞ்செய்து, சுத்தனாய் தந்ததாவனஞ் செய்யவேண்டும்.

12. ஈரமுள்ளதாயும், தோலுடன் கூடியதாயும், சமமாய் ஒடிக்கப்பட்டதாயும், நேர்மையாயும், சுத்தமாயும், கணுவற்றதாயும், கடைவிரல் அளவு பருமனுமுள்ள தந்தகாஷ்டம் (பற்குச்சி) சிறந்ததாகும்.

13. புங்கமரம், கொடிப்புங்கை, வாகை, கருங்காலி, மருது இவற்றின் குச்சுக்களை எட்டு அங்குல அளவாக முமுக்ஷுக்களுக்கும்,

---

1 முன்னர் ஜலத்தாலும், இடையில் மண்ணாலும், அதன் பின் ஜலத்தாலும், சௌசம் செய்ய வேண்டுமென்பது பொருள்.

2. "பாவசுத்தி உண்டாகும் வரை" இதனால் கூறப்பட்ட அளவினும் அதிக அளவாகச் சுத்தி செய்யவேண்டுமெனக் கொள்ள வேண்டும், குறைந்த அளவில் தாத்பரியமில்லை. அவ்வாறாயின் எண்ணைவிதித்தது பயனற்றதாய் முடியும்.

3. ஸவிநாம் என்ற பாடத்தைக் கொண்டால் "பாவமாவது ஸம்ஸாரத்தில் இருப்பவர்களின் மனம்" என்ற பொருளைத்தரும். மனச்சுத்தியாவது— சுத்தி செய்தது போதுமென்று மனத்திற்குத் தோன்றுதல்.

14. இரளி, மா, மருது, அசோகம், நாவல், சம்பகம், நாயுரிவி, குருக்கத்தி, இவற்றின் காஷ்டங்கள் பன்னிரு அங்குல அளவாக கிரகஸ்தர்களுக்கும் விதிக்கப்பட்டிருக்கிறது.

15. அல்லது பிராமணர், க்ஷத்திரியர், வைசியர், சூத்திரர், அநுலோமர் பிரதிலோமர் ஆகிய இவர்கள் விஷயத்தில் முறையே 1 பன்னிரு அங்குலத்தினின்றும், ஒவ்வொரு அங்குலம் குறைவாக விதிக்கப்பட்டிருக்கிறது.

16. நறுவிலி, நெல்லி, நமை, 2 ஆமணக்கு, பழமுண்ணிப்பாலை, வேம்பு, ஆவிரை, புல், முருங்கை, வஞ்சி, (நொச்சி) பைசாசவிருக்ஷம், நாணல், விரல், தர்ப்பை இவற்றால் பல்துலக்கக்கூடாது.

17. நவமீ, அமாவாஸ்யை, ஷஷ்டீ, பிரதமை, இந்தத்தினங்களில் தந்தகாஷ்டத்தால் பல்துலக்கலாகாது. கிரகஸ்தர் இந்தத் தினங்களில் பரிசுத்தமான இலைகளால் தந்ததாவனஞ் செய்யலாம்.

18. அல்லது இந்தத்தினங்களில் தந்ததாவனஞ் செய்யாமல் பன்னிரு முறை வாயைக்கொப்பளித்து முகத்தைச் சுத்திசெய்து கொண்டு ஸ்நானஞ் செய்யவேண்டும்.

## மலஸ்நான விதி.

19. இரண்டு நதிகள் கூடுமிடம், அல்லது சமுத்திரத்தில் நதி கூடுமிடம், ஓடை, தாமரைத் தடாகம், மேற்குத்திக்கை நோக்கி பிரவஹிக்கும் நதமென்று கூறப்படும் ஆறு, நதியின் நடுவிலுள்ள வற்றாத நீரையுடைய மடு, குட்டை, அருவி என்னும் இவற்றில் ஸ்நானஞ்செய்தல் மிகவும் உத்தமமாகும்.

---

1. தசாங்குலம் ஸமாரப்ய என்ற பாடத்தைக் கொண்டால் பத்து அங்குலத்திலிருந்தும் என்னும் பொருளைக் கொள்ளவேண்டும். ஆனால் பன்னிரண்டு அங்குலமென்பதே ஸர்வசம்மதம்.

2 சோமசம்பு பத்ததி வியாக்யானத்தில் ஆமணக்கு விருக்ஷத்தைக் கூறாமல் நமை, பாதிரி, என்ற இரண்டு விருக்ஷங்களும் ஆமணக்கின்ஸ்தானத்தில் கூறப்பட்டிருக்கின்றன. இந்த முறையை அனுசரித்தால் ஶேலுபாத்ரீயவலாஶீ என்று மூலபாடம் இருக்கவேண்டும். சேலு என்னும் பதத்திற்கு நறுவிலி என்பது பொருள்.

20. கால்வாய், புஷ்கரிணீ, (நான்கு மூலையுள்ள தடாகம்) இவற்றில் ஸ்நானஞ்செய்தல் மத்தியமமாகும். கிணறு, பாத்திரம் (எடுத்துவந்த தீர்த்தம்,) இறங்கும் கிணறு, வீடு, இவற்றில் ஸ்நானம் செய்தல் அதமமாகும்.

21. அஸ்திர மந்திரத்தால் எட்டு அங்குலத்திற்குக் கீழே உள்ள மண்ணைத் தோண்டிக் கிளறி, இருதய மந்திரத்தால் எடுத்துவைத்துக்கொண்டு, மீண்டும் அந்த மந்திரத்தாலேயே தோண்டின இடத்தை மூடிவிடவேண்டும்.

22. எடுத்துவைத்த மண்ணை, சிரோமந்திரத்தால் தீர்த்தக் கரையில் வைத்துக்கொண்டு, அஸ்திரமந்திரத்தால் சுத்தி செய்ய வேண்டும். சிகாமந்திரத்தால் புல் முதலியவற்றைக் களைந்து, கவசமந்திரத்தால் மூன்று பாகஞ்செய்யவேண்டும்.

23-24. ஒரு பாகமாகியமண்ணால், நாபி முதல் கால் ஈருகச் சுத்திசெய்து, அஸ்திர மந்திரத்தை ஜபித்து, அதனால் பிரகாசிக்கப்பட்டதாகப் பாவிக்கப்பட்ட மற்றொரு பாகமாகிய மண்ணால், எல்லா அங்கங்களையும் பூசிக்கொண்டு, இரு கைகளால் கண் காது முதலிய இந்திரியங்களை மூடிக்கொண்டு, காலாக்னிபோல் பிரகாசமுள்ள அஸ்திர மந்திரத்தை இருதயத்தில் பாவனை செய்துகொண்டு, பிராணவாயுக்களை அடக்கி ஜலத்தில் மூழ்கியிருக்கவேண்டும்.

24½ இவ்வாறுமலஸ்நானம்செய்தபின்னர், நீரிலிருந்துமெழுந்து,

25. அஸ்திரசந்தியை உபாஸித்து பின்னர் விதிஸ்நானம் செய்ய வேண்டும்.

## விதிஸ்நான முறை.

26. ஸரஸ்வதி, கங்கை, யமுனை முதலிய தீர்த்தங்களுள் யாதானுமோர் தீர்த்தத்தை, அங்குசமுத்திரை செய்து இருதய மந்திரத்தை உச்சரித்து ஆகர்ஷணம் செய்து, அவ்வாறே ஸம்ஹாரமுத்திரை செய்துகொண்டு இருதய மந்திரத்தால் தன்னுடைய முன்பாகத் தாபித்துக் கொள்ளல் வேண்டும்.

27. எஞ்சிய மண்ணின் பாகத்தை எடுத்துக்கொண்டு தொப்புள் அளவாக உள்ள நீருள் சென்று வடக்கு முகமாக நின்றுகொண்டு, இடது உள்ளங்கையில் அம்மண்ணை மூன்று பாகமிடவேண்டும்.

28. தெற்குத்திக்கிலுள்ள மண்ணை அங்க மந்திரங்களால் ஒரு முறையும், கிழக்குத் திக்கிலுள்ள மண்ணை அஸ்திர மந்திரத்தால் எழு முறையும், வடக்குத் திக்கிலுள்ள மண்ணை சிவமந்திரத்தால் பத்து முறையும், முறையே மூன்று பாகங்களையும் ஜபிக்க வேண்டும்.

29. ஹூம்பட் இறுதியில் உடைய அஸ்திர மந்திரத்தை உச்சரித்துக்கொண்டு கிழக்குத் திக்கிலுள்ள மண்ணை எல்லாத்திக்குகளிலும் போகும்படி வீசவேண்டும். பின்னர் சிவமந்திரத்தை உச்சரித்து வடக்குத் திக்கிலுள்ள மண்ணை கையினால் சுழற்றி நான்கு பக்கங்களிலும் போகும்படிவீசி தீர்த்தத்தைச் சிவதீர்த்தமாக்கவேண்டும்.

30. நான்கு அங்கமந்திரங்களை உச்சரித்துக்கொண்டு, அங்க மந்திரங்களால் ஜபிக்கப் பெற்ற தெற்குத் திக்கிலுள்ள மண்ணால் தலை முதல் கால் ஈறாக எல்லா அங்கங்களையும் பூசிக்கொள்க.

31. ஷண்முகீகரணமுத்திரைசெய்து எல்லா இந்திரியங்களையும் மூடிக்கொண்டு, சிவ மந்திரத்தைத் தியானித்து நீரின் மத்தியில் சிவ தீர்த்தத்தினுள் மூழ்கவேண்டும்.

32. பின்னர் நீரில் நின்றும் எழுந்து சந்திர சூரியர்களாகப் பாவிக்கப்பட்ட இரண்டு கைகளால் கும்பமுத்திரை செய்துகொண்டு, நீரையெடுத்து வௌஷடை இறுதியிலுடைய ஷடங்கமந்திரங்களால் சிரசில் தெளித்துக் கொள்ளல் வேண்டும்.

33. ஆன்மரக்ஷையின் பொருட்டும் விக்கினங்களைப் போக்குதற்பொருட்டும், தீர்த்தத்தை அஸ்திர மந்திரத்தால் அபிமந்திரித்து மகாதிக்கு உபதிக்கு இவற்றில் தாரையாக இறைக்க வேண்டும்.

34. சக்ரவர்த்திக்குச் செய்யப்படும் உபசாரத்துடனும், பரிமள திரவியங்கள் நெல்லிப் பொடி இவற்றுடனும் ஸ்நானம் செய்து கரைக்குவந்து ஸம்ஹார முத்திரையால் சிவ தீர்த்தத்தை உபசம்ஹாரம் செய்ய வேண்டும்.

35-36. மாடப்புறா, கோழி, இளிக்கண்குருவி, காகம், கழுகு, கழுதை, நாய், ஊர்ப்பன்றி, பருந்து, ஒட்டகம், 1 இவற்றின்

1. இறக்கை, மூக்கு, உரோமம், குளம்பு, எலும்பு, என்னும் இவை அங்க விகாரங்களாகும்.

அங்கவிகாரங்கள், மயானம், பதிதன், பிரேதம், பிரசவித்தவள், நிர்மால்யம் 1 போஜகன், பிறமஹஸ்தர் ஆகிய இவர்களைப்பரிசித்தால் ஜலஸ்நானம் செய்யவேண்டும்.

37. தொப்புளுக்கு மேல் கை நீங்கலாகவுள்ள அங்கங்களில் ரேதஸ், மலம், மூத்திரம் இவற்றின் சம்பந்தம் ஏற்பட்டால் ஜலஸ்நானத்தால் சுத்தி செய்துகொள்ளல் வேண்டும். வமனம் செய்துகொண்டாலும், வாந்தி செய்தாலும், சுத்தியின்பொருட்டு ஜலஸ்நானம் செய்ய வேண்டும்.

## பஸ்மஸ்நான விதி.

38. ஜல ஸ்நானம் செய்த பின்னர், கற்பம் முதலிய முறையாகச் சித்தித்ததாயும், ஸம்ஹிதாமந்திரங்களால் மந்திரிக்கப்பட்டதாயும் (அகற்பமாயின்) நிவிருத்தி முதலிய கலைகளாற் சுத்தம் செய்யப்பட்டதாயுமுள்ள பஸ்மத்தால் ஸ்நானம் செய்யவேண்டும்

39. தலை முதற்கொண்டு பாதமளவாக ஹும்பட் இறுதியிலுடைய அஸ்திரமந்திரத்தை உச்சரித்து திருநீற்றால் மலஸ்நானம் செய்து விதிஸ்நானம் செய்யவேண்டும்.

40. ஈசான மந்திரத்தால் சிரசு, தத்புருஷ மந்திரத்தால் நெற்றி, அகோர மந்திரத்தால் மார்பு, வாமதேவமந்திரத்தால் தொப்புள், ஸத்யோஜாத மந்திரத்தால் எல்லா அங்கங்கள் ஆகிய இவற்றில் முறைப்படி 2 உத்தூளனம் செய்யவேண்டும்.

41-42 மூன்று சந்திகளிலும், இரவிலும், பிக்ஷாடனத்தின் ஆரம்பம் முடிவு இவற்றிலும், நித்திரையினின்று எழுந்தவுடனும், போஜனத்திற்குப் பின்னரும், தீர்த்தம் அருந்திய பின்னரும், மல ஜலம் கழித்த பின்னரும், அவ்வாறே பெண்கள், நபும்ஸகன், சூத்திரர், பூனை, கொக்கு, எலி, இவைகளைப் பரிசித்தவிடத்தும் 3 விதிப்படி பஸ்மஸ்நானம் செய்யவேண்டும்.

---

1. புருஷன் இறந்தபின் சோரபுருஷனிடத்தில் உண்டானவன்.

2. யதிகள் உத்தூளனம் செய்யவேண்டும், கிரஹஸ்தர்கள் திரிபுண்டரம் தரிக்க வேண்டுமென்று சோமசம்பு பத்ததி வியாக்யானமான ஸ்பஷ்டபோதினியில் இருக்கின்றது.

3 தயாவியா நெ ந என்ற பாடத்தை தயாவியா ந ந்யாது என்ற பாடமாகக் கொண்டால் இவைபோன்ற பிறவற்றைத் தொட்டவிடத்தும் என்று பொருள் சொள்ளவேண்டும்.

43. விரதத்தை அனுட்டிப்பவன் ஈசுவரர், அக்னி, ஆசிரியர், வித்யாபீடம், இவற்றின் சமீபத்திலும், சண்டாளரின் பார்வையிலும், அசுத்தமான இடத்திலும், வழியிலும் உத்தூளனம் செய்யலாகாது.

## மாஹேந்திர ஸ்நானமுறை.

44. சூரியகிரணங்களோடு (வெய்யிலுடன்) மழை சேர்ந்தகாலத்தில் கிழக்கு முகமாக கைகளை உயரே தூக்கி ஈசான மந்திரத்தை உச்சரித்துக் கொண்டு ஏழு அடிகள் நடக்கவேண்டும். இது மாஹேந்திர ஸ்நானமாகும்.

## மாருதஸ்நானமுறை.

45. தத்புருஷ மந்திரத்தையேனும், கவசமந்திரத்தையேனும் உச்சரித்துக்கொண்டு, பசுக்களின் குளம்புகளால் கிளப்பப்பட்ட தூளிகள், தன் சரீரத்தில் விழும்படி பசுக்களின் மத்தியில் செல்லுதல் மாருதஸ்நானம் எனப்படும்.

## மந்திரஸ்நான விதி.

46. ஸத்யோஜாதம் முதலிய மந்திரங்களை உச்சரித்துக்கொண்டு தீர்த்தத்தைச் சிரசில் புரோக்ஷித்துக் கொள்ளுதல் மந்திர ஸ்நானமாகும். இந்த மந்த்ரஸ்நானமானது, வாருண ஸ்நானம் ஆக்னேய ஸ்நானம் இவற்றில் விதிக்கப்பட்டிருக்கிறது.

## மானஸ ஸ்நானவிதி.

47. பிராணுயாமம் செய்து மனதால் 1 மூலமந்திரத்தை உச்சரித்து மானஸஸ்நானம் செய்யவேண்டும். இந்த மானஸ ஸ்நானம் 2 எல்லாக் காலங்களிலும் விதிக்கப்பட்டிருக்கின்றது.

## ஆசமனவிதி

48-49. சுத்தமான ஜலத்தால் கால் கைகளைக் கழுவிய பின்னர் சுத்தமான தீர்த்தத்தைப் 3 பார்த்து பெருவிரலின் அடியிலுள்ள

---

1 மூலமந்திரத்தை உச்சரித்தலால் கலக்கப்பட்ட குண்டலினீ சத்தியினின்றும் பெருகிய அமிருததாரையால் மானச ஸ்நானம் செய்யவேண்டும்

2 "எல்லாக் காலங்களிலும்" என்பதற்கு அசுசியேற்பட்ட காலங்களிலெல்லாம் என்பது பொருள்.

3. சுத்தமான தீர்த்தத்தைச் சுக்லபக்ஷத்தில் சந்திரரூபமாகவும், கிருஷ்ணபக்ஷத்தில் சூர்யரூபமாகவும் பாவனைசெய்துபார்த்து என்பது கருத்து.

தீர்த்தத்தை ஸ்வதா என்னும் பதத்தை இறுதியிலுடைய ஆத்மதத்துவம் முதலிய மந்திரங்களால் மூன்று முறை ஆசமனம் செய்ப வேண்டும். இருதய மந்திரத்தை உச்சரித்துக்கொண்டு வலது கைப் பெருவிரல் அடியால் கீழ்மேலுதடுகளை இருமுறை துடைத்து நடுவிரல் மூன்றாலும் பரிசிக்க வேண்டும்.

**50.** பெருவிரல் சுட்டுவிரல் இவற்றின் நுனியால் இரண்டு நாசிகளையும், பெருவிரல் அணிவிரல் இவற்றின் நுனியால் கண் காது இவற்றையும் தொடுதல் வேண்டும். அடிக்கடி ஜலத்தால் கையைக் கழுவவேண்டும்.

**51.** கடைவிரல் பெருவிரல் இவற்றின் 1 அடியால் நாபியை யும், உள்ளங்கையால் மார்பையும், எல்லா விரல்களாலும் சிரசு தோள் இவற்றையும், இருதய மந்திரத்தை உச்சரித்துக்கொண்டு தொடுதல் வேண்டும்.

## சைவஸந்தியா விதி.

**52.** ஸமயிமுதல் ஆசாரியர் ஈறுகிய யாவரும் ஸகளீகரணஞ் செய்து பிராணுயாமம் செய்துகொண்டு சிவஸம்ஹிதையை மனதால் மூன்று முறை உச்சரிக்க வேண்டும்.

**53-54.** வலது காதைத்தொடுதலாகிய மந்திரமில்லாத ஆசமனத்தைச் செய்து, மீண்டும் முன்போல் மந்திரத்துடன் ஆசமனஞ் செய்து, கரந்யாசம் அங்கந்யாசங்களைச் செய்து, ஒரே மனதை உடையவனாய், காலையில் ப்ராஹ்மீஸந்தியை செம்மை நிறமுடையதாகவும், உச்சிக்காலத்தில் வைஷ்ணவீ ஸந்தியை வெண்மை நிறமுடையதாகவும், சாயங்காலத்தில் ரௌத்ரீ சந்தியை கருமை நிறமுடையதாகவும் தியானிக்க வேண்டும்.

## ப்ராஹ்மீசந்தியின் தியானம்.

**55-56.** விடியற்காலத்தில் ஆகாயமானது நக்ஷத்திரங்களுடன் இருக்கும் சமயத்தில், ப்ராஹ்மீ சந்தியை செம்மையான ஆபரணம் வஸ்திரம் இவற்றை உடையவளாகவும், செம்மை நிறம் உடையவளாகவும், ஜடை, யக்ஞோபவீதங்

---

1 கநிஷ்டாங்குஷ்டாப்யாம் என்பதாக பாடத்தைக்கொண்டால் கடைவிரல் பெருவிரல்இவ்விரண்டால் எனப்பொருள்கொள்ளவேண்டும்

களை உடையவளாகவும், அன்னத்தின் மீது பத்மாஸனமாக வீற்றிருப்பவளாகவும், இளமைப் பருவமுள்ளவளாகவும், நான்கு முகங்கள் நான்கு கைகள் இவற்றை உடையவளாகவும், ஸ்ருக்கு, அக்ஷமாலை இவற்றை வலது கையிலும், தண்டம், கமண்டலம் இவற்றை இடது கையிலும் தரித்திருப்பவளாகவும், எட்டுக் கண்களை உடையவளாகவும் தியானிக்க வேண்டும்.

## வைஷ்ணவீ ஸந்தியின் தியானம்.

57-58. மத்யாஹ்ன காலத்தில் வைஷ்ணவீ சந்தியை, வெண்மை நிறமுள்ள வஸ்திரமணிந்தவளாகவும், வெண்மை நிறமுள்ளவளாகவும், துளசிமாலை, உபவீதம் இவற்றை உடையவளாகவும், கருடன் மீது பத்மாஸனமாக அமர்ந்தவளாகவும், வெளிப்பட்ட புதிதான யௌவநத்தை உடையவளாகவும், இடது கைகளில் சங்கு சக்ரங்களையும், வலது கைகளில் கதை, அபயம் இவற்றையும் உடையவளாகவும், எல்லா ஆபரணங்களையு மணிந்தவளாகவும் தியானிக்க வேண்டும்.

## ரௌத்ரீ ஸந்தியின் தியானம்.

59-60. சூரியன் பாதிஅஸ்தமித்த காலத்தில் ரௌத்ரீ சந்தியை, நீலோத்பலதளத்தின் காந்தியை உடையவளாகவும், சிறிது நீங்கிய யௌவநத்தை உடையவளாகவும், நான்கு கைகள் மூன்று கண்கள் இவற்றை உடையவளாகவும், ஜடை, அர்த்த சந்திரன் இவற்ருல் அலங்கரிக்கப் பட்டவளாகவும், வலது கைகளில் த்ரிசூலம், அக்ஷமாலை இவற்றையும், இடது கைகளில் அபயம், சக்திகளையும் தரித்திருப்பவளாகவும், விருஷபத்தின்மீது பத்மாஸனமாக வீற்றிருப்பவளாகவும் தியானிக்க வேண்டும்.

61. எல்லா ஸந்தியா தேவதைகளையும், மான்தோலைத் தரித்திருப்பவர்களாகவும், எல்லாக் கர்மாக்களுக்கும் சாக்ஷிபூதர்களாகவும் தியானிக்க வேண்டும். அந்த ஸந்தியா தேவதைகளுடைய விஸ்தாரமான காந்தியின் சமூகத்தில் பிரவேசித்ததாகத் தன் சரீரத்தைத் தியானிக்க வேண்டும்.

62. இப்பொழுது நிர்வாணதீக்ஷை உடையவர்களுக்கு மேலான நான்கு சந்திகளையும் விதிக்கிறார். சிவசக்தி ஒன்றே உபாதி பேதத்தால் அனேகவிதமாகப் பவிக்கின்றது.

63-64. தாமரைநூல்போல் சூக்குமவடிவமும், செம்மை நிறமுமுள்ள ப்ராஹ்மீசந்தி தேவதையும், வெண்மை நிறமுள்ள வைஷ்ணவீசந்தி தேவதையும், கருமை நிறமுள்ள ரௌத்ரீசந்தி தேவதையும், எந்தச் சந்தியானது அர்த்தமாத்ரியில் தியானிக்கப படுகிறதோ, அந்த ரூபமற்றதாகவேனும், கருமைநிறமுடைய தாகவேனுமிருக்கும் நான்காம் காலத்துச் சந்திதேவதையும், முறையே இருதயம் புருவநடு பிரமரந்திரம் துவாதசாந்தம் ஆகிய ஸ்தானங்களில் இருக்கின்றனர். பிராஹ்மீசந்திதேவதை ஸத்துவ குணத்தையும், வைஷ்ணவீசந்திதேவதை ரஜோகுணத்தையும், ரௌத்ரீசந்திதேவதை தமோகுணத்தையும் உடையதாக இருக்கும். நான்காவது காலத்தில் தியானிக்கப்படும் சந்திதேவதை ஒருவித குணமுமில்லாதது.

65. 1 ஹம்ஸயோகிகள் மேலும் கீழும் செல்லும் சுவாஸங்களை அடக்கி 2 இரண்டு சந்திகளையும் உபாஸிக்கவேண்டும். ஒரு உபாதியுமற்ற துவாதசாந்தத்தில் இருக்கும் பரமசிவனை அறிதல் ரூபமான சந்தியானது மிகவும் மேலானதாகக் கூறப்படுகிறது.

## பிதிர்தீர்த்தம் முதலியவற்றின் விபரம்.

(66-67) சுட்டுவிரலினடியில் பிதிர்தீர்த்தமும், கடைவிரலினடியில் ப்ரஜாபதி தீர்த்தமும், பெருவிரலினடியில் ப்ரஹ்மதீர்த்தமும், கையின் நுனியில் தேவதீர்த்தமும், வலது உளளங்கையில் அக்னிதீர்த்தமும்,இடது உள்ளங்கையில் சோமதீர்த்தமும்,எல்லா விரல்களின் கணுக்களுடைய சந்திகளில் ரிஷி தீர்த்தமும் இருக்கின்றன.

## மார்ஜனவிதி.

(68-69) பின்னர் பஞ்சப்பிரம மந்திரம் அங்கமந்திரங்களால் தீர்த்தத்தைச் சிவதீர்த்தமாகச்செய்து,அந்தத் தீர்த்தத்தால ஸம்

---

1 நிர்வாணதீக்ஷையுடையாரும் மேலான ஞானிகளும் ஹம்ஸயோகிகள் ஆவார்.

2 நிர்வாணதீக்ஷையுடையார் செய்யவேண்டிய நான்காவது க[illegible] சந்தியும், மேலான ஞானிகளால் செய்யப்படும் துவாதசாந்தத்தி[illegible] விற்கும் சிவனுக்கும் ஸமரஸபாவத்தைக் கற்பித்தல் ரூபமாயுள்[illegible] ஆகிய இரண்டு சந்திகளும் குறிக்கப்படுகின்றன.

ஹிதாமந்திரத்தை உச்சரித்துக்கொண்டு மார்ஜனம் செய்யவேண்டும். இடதுகையின் கீழ் ஒழுகுகிற ஜலத்தை வலதுகையால் சிரசில் முறைப்படி ஸம்ஹிதா மந்திரங்களால் ப்ரோக்ஷித்துக்கொள்ளல் மார்ஜனமெனப்படும்.

## அகமர்ஷம்.

(70-71) தொன்னைபோன்ற வலதுகையில் இடதுகையிலுள்ள எஞ்சிய ஜலத்தை வாங்கி மூக்கின் நுனியருகே சேர்ப்பித்து ஞானரூபமாயும் வெண்மையாயும் சுத்தமாயுமுள்ள அந்தத் தீர்த்தத்தை இடையென்னும் நாடியால் இடது மூக்குத் துவாரத்தால் இழுத்து, கும்பகஞ் செய்து, அந்த ஜலத்தை பாபஸ்வரூபமாகவும் கருமை நிறமுள்ளதாகவும் சிந்தித்து, பிங்கலை என்னும் நாடியால் வலது மூக்குத் துவாரத்தால் ரேசகஞ்செய்து, அஸ்திரமந்திரத்தை உச்சரித்துக்கொண்டு 1 வஜ்ரசிலையில் விடவேண்டும். இது அகமர்ஷமெனப்படும்.

## சிவார்க்யதானம்.

72. ஸ்வாஹாந்தமாக மூலமந்திரத்தை உச்சரித்து, தர்ப்பை புஷ்பம் அக்ஷதை இவற்றுடன் ஜலத்தால் அஞ்சலி செய்து, சிவபெருமானுக்கு அர்க்யங்கொடுத்து, காயத்ரியைச் சக்திக்குத் தக்கவாறு ஜபிக்க வேண்டும்.

73. தர்ப்பை, அக்ஷதை, எள்ளு இவற்றுடன் 2 அஸ்திர மந்திரத்தை உச்சரித்து அர்க்யம் கொடுக்க வேண்டும். 3 உபதேசத்தைப் பெற்றவன் கைவிரல் நுனிகளால் தர்ப்பணம் செய்ய வேண்டும்.

---

1. நிருருதி திக்கில் வஜ்ரசிலை இருப்பதாகப் பாவித்து அதில் விட வேண்டுமென்பது கருத்து.

2 [illegible] என்ற பாடத்தை [illegible] என்பதாகக் கொண்டால் மந்திரோச்சாரணத்துடன் தீர்த்தத்தைக் கொடுத்தலாகிய தர்ப்பண... செய்யவேண்டுமென்று பொருள் கொள்க.

3 ... [illegible] என்பதை ... என்பதாகக் கொண்டால் தேவர் முதலியவர்களின் பெயரைக் ... பொருள் கொள்க.

## தர்ப்பண மந்திரங்கள்.

ஓம் ஹாம் ஹௌம் ஶிவாய ஸ்வாஹா

ஓம் தத்புருஷாய வித்மஹே வாக்விஶுத்தாய தீமஹி । தந்நஶ்ஶிவ: ப்ரசோதயாத் ॥ என்பது சிவகாயத்ரியாகும்.

ஓம் ஹோம் ஈஶாநமூர்த்தாய ஸ்வாஹா

ஓம் ஹைம் தத்புருஷவக்த்ராய ஸ்வாஹா

ஓம் ஹூம் அகோரஹ்ருதயாய ஸ்வாஹா

ஓம் ஹிம் வாமதேவகுஹ்யாய ஸ்வாஹா

ஓம் ஹம் ஸத்யோஜாதமூர்த்தயே ஸ்வாஹா

ஓம் ஹாம் ஹ்ருதயாய ஸ்வாஹா

ஓம் ஹீம் ஶிரஸே ஸ்வாஹா

ஓம் ஹூம் ஶிகாயை ஸ்வாஹா

ஓம் ஹைம் கவசாய ஸ்வாஹா

ஓம் ஹௌம் நேத்ரேப்யஸ்ஸ்வாஹா

ஓம் ஹ: அஸ்த்ராய ஸ்வாஹா

ஓம் ஹாம் ஸர்வேப்யோ மந்த்ரேப்யஸ்ஸ்வாஹா

என்று சொல்லிக் கொண்டு தேவதீர்த்தமாகிற விரல் நுனிகளால் மந்திரக் கூட்டத்திற்குத் தர்ப்பணம் செய்யவேண்டும். அவ்வாறே,

ஓம் ஹாம் ருத்ரேப்யஸ்ஸ்வாஹா

ஓம் ஹாம் வஸுப்யஸ்ஸ்வாஹா

ஓம் ஹாம் ஆதித்யேப்யஸ்ஸ்வாஹா

ஓம் ஹாம் விஶ்வேப்யஸ்ஸ்வாஹா

ஓம் ஹாம் ஸாத்யேப்யஸ்ஸ்வாஹா

ஓம் ஹாம் மருத்ப்யஸ்ஸ்வாஹா

ஓம் ஹாம் ப்ருகுப்யஸ்ஸ்வாஹா

ஓம் ஹாம் அங்கிரோப்யஸ்ஸ்வாஹா

என்று சொல்லிக் கொண்டு தேவதீர்த்தமாகிற விரல் நுனிகளால் எட்டுத் தேவகணங்களுக்குத் தர்ப்பணம் செய்யவேண்டும்.

பின்னர் கழுத்தில் உபவீதத்தைத் தரித்து,

ஓம் ஹாம் அத்ரயே நம:
ஓம் ஹாம் வஸிஷ்டாய நம:
ஓம் ஹாம் புலஸ்த்யாய நம:
ஓம் ஹாம் க்ரதவே நம:
ஓம் ஹாம் பாரத்வாஜாய நம:
ஓம் ஹாம் விஶ்வாமித்ராய நம:
ஓம் ஹாம் 1 ப்ரசேதஸே நம:

என்று சொல்லிக் கொண்டு விரல்களின் கணுக்களின் சந்திகளாகிற ரிஷிதீர்த்தத்தால் ஏழு ரிஷிகளுக்குத் தர்ப்பணம் செய்யவேண்டும்.

ஓம் ஹாம் ஸநகாய வஷட்
ஓம் ஹாம் 2 ஸநந்தநாய வஷட்
ஓம் ஹாம் ஸநாதநாய வஷட்
ஓம் ஹாம் ஸநத்குமாராய வஷட்
ஓம் ஹாம் கபிலாய வஷட்
ஓம் ஹாம் பஞ்சஶிகாய வஷட்
ஓம் ஹாம் ருபவே வஷட்

என்று சொல்லிக் கொண்டு மானவதீர்த்தமாகிற கடை விரலடிகளால் ஏழு மனுஷ்யர்களுக்கும் தர்ப்பணம் செய்ய வேண்டும்.

ஓம் ஹாம் ஸர்வேப்யோ பூதேப்யோ வௌஷட்

என்று சொல்லிக் கொண்டு சேர்ந்த இரண்டு உள்ளங்கைகளினடியால் ஐந்து பூதங்களுக்குத் தர்ப்பணம் செய்யவேண்டும்.

---

1 ப்ரசேதஸே நம: என்பதற்குப் பின்னர் க்ரியாக்ரம த்யோதிகையில் ஓம் ஹாம் ஶுகாய நம: ஓம் ஹாம் அகஸ்த்யாய நம: ஓம் ஹாம் ததீசயே நம: ஓம் ஹாம் துர்வாஸஸே நம: என்று அதிகமான பாடமிருக்கின்றது.

2 ஸநஜாய என்பது பாடபேதம்.

பின்னர் வலதுதோளில் உபவீதமிட்டு தர்ப்பத்தை மடித்து கரதலத்தில் வைத்து அடி நுனிகளால் எள்ளுடன் கூடிய தீர்த்தத்தால்,

ஓம் ஹாம் கவ்யவாஹனாய ஸ்வதா
ஓம் ஹாம் அனலாய ஸ்வதா
ஓம் ஹாம் ஸோமாய ஸ்வதா
ஓம் ஹாம் யமாய ஸ்வதா
ஓம் ஹாம் அர்யம்ணே ஸ்வதா
ஓம் ஹாம் அக்னிஷ்வாத்தாய ஸ்வதா
ஓம் ஹாம் 1 பர்ஹிஷத்ப்ய ஸ்வதா
ஓம் ஹாம் ஆஜ்யபாய ஸ்வதா
ஓம் ஹாம் ஸோமபாய ஸ்வதா

என்று சொல்லிக் கொண்டு தேவபிதுருக்களுக்குத் தர்ப்பணம் செய்ய வேண்டும்.

ஓம் ஹாம் பித்ருப்ய ஸ்வதா
ஓம் ஹாம் பிதாமஹேப்ய ஸ்வதா
ஓம் ஹாம் ப்ரபிதாமஹேப்ய ஸ்வதா
ஓம் ஹாம் வ்ருத்தப்ரபிதாமஹேப்ய ஸ்வதா
ஓம் ஹாம் மாத்ருப்ய ஸ்வதா
ஓம் ஹாம் மாதாமஹேப்ய ஸ்வதா
ஓம் ஹாம் ப்ரமாதாமஹேப்ய ஸ்வதா
ஓம் ஹாம் வ்ருத்தப்ரமாதாமஹேப்ய ஸ்வதா
ஓம் ஹாம் ஸர்வேப்ய: பித்ருப்ய ஸ்வதா
ஓம் ஹாம் ஸர்வேப்யோ மாத்ருப்ய ஸ்வதா
ஓம் ஹாம் ஸர்வேப்யோ ஜ்ஞாதிப்ய ஸ்வதா
ஓம் ஹாம் ஸர்வேப்ய ஆசார்யேப்ய ஸ்வதா

1 பர்ஹிஷதே என்றும் பாடபேதமுண்டு.

என்று சொல்லிக் கொண்டு ஞாதி, ஆசாரியன், பித்ருக்கள் இவர்களுக்குச் சுட்டு விரலடிகளால் தர்ப்பணம் செய்யவேண்டும்.

74. ஈசர் 1 முதலாயினோர், 2 பதிகள், ஸித்தர், மாதிருக்கள், கிரஹங்கள், ரக்ஷஸ்கள் ஆகிய இவர்களுக்கு முறைப்படி பிதிரு என்னும் பதம் முதலாகத் தர்ப்பணம் செய்யவேண்டும்.

---

# சூரிய பூஜை.

1. விதிப்படி ஆசமனம் செய்து, செம்மையான புஷ்பம்முதலிய 3 வற்றுடன்கூடிய தீர்த்தத்தால் அஞ்சலிசெய்து, சூரியமூல மந்திரத்தை உச்சரித்து, சூரியபகவானுக்கு மூன்று முறை அர்க்யம் சமர்ப்பிக்க வேண்டும்.

2. ஸமயி முதல் ஆசாரியர் ஈருகிய எல்லோரும் மந்திரத்தினல் ஸாதிக்கப்படும் பலன் சித்திக்கும்பொருட்டு ஆசமனம் செய்ய நேரிடும் சமயங்களில் அங்கந்யாஸ கரந்யாஸங்களைச் செய்ய வேண்டும்.

3-4 பின்னர் ஸாங்கமான சூரியபூஜை கூறப்படுகிறது. சூரிய ஹிருதயமந்திரம் முதலிய மந்திரங்களால் கரநியாஸ அங்கநியாஸங்களைச் செய்து, தன்னைச் சூரியனுகப் பாவனைசெய்து, அர்க்யபாத்திரத்தை நெற்றியிலிருந்தும் இழுக்கப்பட்ட செம்மை நிறமுள்ள அமிருதபிந்து ரூபமான நீரால் நிரப்பவேண்டும்.

---

1 "முதலாயினோர்" என்னும் பதத்தால் ஸதாசிவர் சாந்தர் இவர்களைக் கொள்ளவேண்டும். ஓம் ஹாம் ஶிவாய பித்ரே ஸ்வதா. ஓம் ஹாம் ஸதாஶிவாய பிதாமஹாய ஸ்வதா. ஓம் ஹாம் ஶாந்தாய ப்ரபிதாமஹாய ஸ்வதா. என்பது விசேஷ பிதிருக்களுக்குத் தர்ப்பணம் செய்ய வேண்டிய மந்திரங்கள்.

2 "பதிகள்" என்னும் பதத்தால் ஓம் ஹாம் பித்ருப்ய: ஸ்வதா. ஓம் ஹாம் பித்ருபித்ருப்ய: ஸ்வதா என்னும் மந்திரங்களை உச்சரித்து திக்பதிகளுக்கு தர்ப்பணம் செய்யவேண்டுமென்பது கருத்து.

3 "முதலியவற்றுடன்" என்னும் பதத்தால் செஞ்சந்தனம் அரிசி இவற்றைக் கொள்ளவேண்டும். சிந்திய விசுவத்திலும் "அந்தப்பாத்திரத்தில் ஜலத்தை நிரப்பி, செஞ்சந்தனம் அரிசி செம்மையான புஷ்பம் தர்ப்பை இவற்றுடன் அர்க்கியம் கொடுக்கவேண்டும்" என்று கூறப்பட்டிருக்கிறது.

5, அந்தத் தீர்த்தத்தை 1 சூரியஷடங்க மந்திரங்களால் பூசித்து 2 ரக்ஷை அவகுண்டனங்கள் செய்து, அந்த ஜலத்தால் பூஜாதிரவியங்களைப் புரோக்ஷித்து, கிழக்கு முகமாக இருந்து சூரியனைப் பூசிக்கவேண்டும்.

ஓ 3 ஹாம் தண்டிநே நமஃ

ஓம் ஹாம் பிங்கலாய நமஃ

என்று சொல்லிக்கொண்டு வலது இடது பக்கங்களில் உள்ள இரண்டு சாகைகளில் இரண்டு துவாரபாலர்களையும் பூசிக்கவேண்டும்.

ஓம் ஹாம் கணபதயே நமஃ என்று ஈசானதிக்கில் கணபதியைப் பூசித்து, ஓம் ஹாம் குருப்யோ நமஃ என்று அக்னிதிக்கில் குருவைப் பூசிக்க வேண்டும். ஓம் ஹாம் ப்ரபூதாஸனாய நமஃ என்று நடுவில் வெண்மையான பீடத்தைப் பூஜிக்கவேண்டும்.

5½ அக்னிதிக்கு முதல் ஈசானதிக்கு முடியவுள்ள உபதிக்குக்களில் முறையே,

ஓம் ஹாம் விமலாய நமஃ

ஓம் ஹாம் ஸாராய நமஃ

ஓம் ஹாம் ஆராத்யாய நமஃ

ஓம் ஹாம் பரமஸுகாய நமஃ

என்று சொல்லிக்கொண்டு, வெண்மை, செம்மை, பொன்மை, பசுமை, நிறங்களை உடைய சிம்மங்களைத் தியானித்து அர்ச்சிக்கவேண்டும்.

அதற்குமேல் ஓம் ஹாம் பத்மாஸனாய நமஃ என்று வெண்மையான பத்மத்தின் நடுவைப் பூஜிக்கவேண்டும்.

---

1 ஹாம் ஹ்ருதயாய நமஃ, ஹாம் அர்க்காய ஶிரஸே நமஃ, ஹாம் பூர்புவஸ்ஸுவரோம் ஜ்வாலினீ ஶிகாயை நமஃ, ஹாம் ஹும் கவசாய நமஃ, ஹாம் பாஸ்வதே நேத்ராப்யாம் நமஃ, ரஃ அஸ்த்ராய நமஃ என்னும் ஷடங்க மந்திரங்களால் என்பது கருத்து.

2 அஸ்திரமந்திரத்தால் ரக்ஷையும், கவசமந்திரத்தால் அவகுண்டனமும் செய்து என்பது கருத்து.

3 ஹாம் ஹாம் தண்டிநே நமஃ என்பது முதலாக ஹாம் என்னும் பீஜாக்ஷரம் ப்ரதியில் அதிகமாக இருக்கிறது.

6. பின்னர் தாமரையின் கிழக்கு முதல் ஈசானதிக்கு முடிவாகவுள்ள தளங்களில்,

ஓம் ராம் தீப்தாயை நம:
ஓம் ரீம் ஸூக்ஷ்மாயை நம:
ஓம் ரூம் ஜயாயை நம:
ஓம் ருூம் பத்ராயை நம:
ஓம் ரெம் விபூத்யை நம:
ஓம் ரைம் விமலாயை நம:
ஓம் ரோம் அமோகாயை நம:
ஓம் ரௌம் வித்யுதாயை நம:

என்று சொல்லிக்கொண்டு எட்டுச்சத்திகளையும் பூஜிக்கவேண்டும்.

7. ஒன்பதாவதான ஸர்வதோமுகி என்னும் சத்தியை ஓம் ர: ஸர்வதோமுக்யை நம: என்று கர்ணிகையின் மத்தியில் பூசிக்கவேண்டும். இந்த ஒன்பது சக்திகளையும், பிரகாசிக்கும் தீபங்களுக்குச் சமமான ஸ்வரூபத்தையுடையவர்களாகத் தியானித்து, இவர்களுக்கு விஸ்புரமுத்திரையைக் காண்பிக்கவேண்டும்.

ஓம் அம் ஸூர்யாஸநாய நம: என்று சூரியபகவானின் ஆஸநத்தைப் பூஜித்து,

8-9. சூரியபகவானை, வெண்டாமரையில் வீற்றிருப்பவராகவும், மாதுளம்பூவின் காந்தியை ஒத்தவராகவும், பிரகாசிக்கும் செம்மையான பெரிய தேஜோமண்டலத்தின் நடுவில் இருப்பவராகவும், இரண்டு தோள்களிலும் சாத்திய மலர்ந்த இரண்டு வெண்டாமரைகளைக் காம்புகளுடன் இரண்டு கைகளில் பற்றியவராகவும், ஒரு முகத்தையு மிரண்டுகண்களையுமுடையவராகவும், செம்மையான வஸ்திரத்தையணிந்தவராகவும் சிந்திக்கவேண்டும்.

பின்னர் ஓம் வம் வஷட்காய ஸூர்யமூர்த்தயே நம: என்னும் மந்திரத்தை உச்சரித்து ஆஸநத்திற்குமேல் மூர்த்தியை நியாஸஞ்செய்து, ஓம் ஹாம் ஹாம் நேத்ராப்யாம் நம: என்று நேத்திரங்களை நியாஸஞ்செய்து, நெற்றியிலிருந்தும் இழுக்கப்பட்ட பிரகாசிக்கிற செம்மையான பிந்துவிலுள்ள தேஜஸை புஷ்பங்கள் நிரம்பிய அஞ்சலியில் இருப்பதாகத் தியானித்து,

ஓம் ஹ்ராம் ஹ்ரீம் ஸ: ஶிவஸூர்யாய நம: என்ற மூலமந்திரத்தால் கஷோல்கமூர்த்தியினிடத்தில் வியாபகமாக ஆரோபணஞ் செய்யவேண்டும்.

10. ஆவாஹனமுத்திரை முதலிய முத்திரைகளால் ஆவாஹனம் 1 முதலியவற்றைச் செய்து, சூர்யபகவானுக்கு ப்ரீதி உண்டாவதற்காக பிம்பமுத்திரை காண்பிக்கவேண்டும்.

11. ஸகளீகரணம் (சூரியனுடைய இருதயம் முதல் சரம் முடியவுள்ள ஸ்தானங்களில் இருதயம் முதலிய மந்திரங்களை நியாஸஞ் செய்தல்) ஏகத்துவம் (இருதயம் முதலிய அங்கங்களுக்கு அங்கியுடன் வேறுபடாதிருக்கும் தன்மை)இவற்றைச்செய்து 2 கஷோல்கமந்திரத்தால் பாத்யம் ஆசமநீயம் சிரஸில் அர்க்யம் இவற்றைச் சமர்ப்பித்து சூரியனுடைய தேகத்தைப் 3 பூஜிக்கவேண்டும்.

12. மூலமந்திரத்தை உச்சரித்து, சந்தனம் புஷ்பம் முதலியவற்றுல் சூரியபகவானைப் பூஜித்து, அன்புடன் பத்மமுத்திரை பிம்பமுத்திரை இவற்றைச் சூரியபகவானுக்குக் காண்பிக்கவேண்டும்.

---

1 'முதலியவற்றை' என்னும் பதத்தால், ஸ்தாபினீ முத்திரையால் பத்மாஸனத்தில் ஸ்தாபனம் செய்தல், ஸந்நிதான முத்திரையால் ஸந்நிதாபனஞ் செய்தல், நிஷ்டுர முத்ரையால் நிரோதனஞ் செய்தல் ஆகிய இவை கொள்ளத்தக்கன.

2 ஓம் வம் வஷோல்காய நம: என்ற மந்திரத்தால் பாதங்களில் பாத்யமும், ஓம் வம் வஷோல்காய ஸ்வதா என்ற மந்திரத்தால் முகத்தில் ஆசமனமும், ஓம் வம் வஷோல்காய ஸ்வாஹா என்ற மந்திரத்தால் சிரசில் அர்க்யமும் சமர்ப்பிக்கவேண்டுமென்பது கருத்து.

3 "தேகத்தைப் பூஜிக்கவேண்டும்" என்பதனுல் வௌஷடை இறுதியிலுடைய மூலமந்திரத்தால் சிவசூரியனின்பொருட்டு புஷ்பம் அறுகு அக்ஷதை இவற்றைச் சமர்ப்பித்தல், தைலம் முதலியவற்றுல் அபிஷேகம் செய்தல், செம்மையான வஸ்திரம் புஷ்பம் சந்தனம் இவற்றுல் அலங்கரித்தல், மூலமந்திரத்தால் மூன்று புஷ்பாஞ்சலிகளைச் சமர்ப்பித்தல், அர்க்யம் சமர்ப்பித்தல் ஆகிய இவை கொள்ளத்தக்கன.

13. அழகுடையவர்களாகவும், செம்மை நிறமுள்ளவர்களாகவும், வரதம் தாமரை இவற்றைக்கைகளில் உள்ளவர்களாகவும், அலங்கரிக்கப்பட்டவர்களாவும், இரண்டு கைகளை உடையவர்களாவும், சூரியனுடைய அங்க தேவதைகளைத் தியானிக்க வேண்டும்.

14. கோரப்பல்லால் பயங்கரராகவும், மிகவும் உக்ரராகவும், ஜ்வலிக்கிற அக்னிக்குச் சமானராகவும், விக்னக்கூட்டத்தைப்போக்குபவராகவும், இவ்வாறு அஸ்திரத்தைத் தியானிக்க வேண்டும். (இவ்வாறு தியானித்த பின்னர்) அக்னிதளத்தில் ஓம் ஆம் ஹ்ருதயாய நம: என்றும், ஈசானதளத்தில் ஓம் அம் அர்காய ஶிரஸே நம: என்றும், நிருருதி தளத்தில் ஓம் பூர்புவஸ்ஸ்வரோம் ஜ்வாலினீ ஶிகாயை நம: என்றும், வாயுதளத்தில் ஓம் ஹும் கவசாய நம: என்றும், நடுவில் ஓம் 1 பாம் பா நேத்ராப்யாம் நம: என்றும், கிழக்கு முதல் வடக்கு ஈறாகவுள்ள நான்கு திக்குக்களிலுள்ள தளங்களில் ஓம் 2 ரம் அஸ்த்ராய நம: என்றும் பூஜிக்க வேண்டும்.

15. இருதயம் முதலியவற்றிற்கு தேநு முத்ரையும், நேத்திரங்களுக்கு கோவிஷாண முத்ரையும், அஸ்திரத்திற்கு த்ராஸிநீ முத்ரையும், கிரஹங்களுக்கு ந ம ஸ் கா ர முத்ரையும் காண்பிக்க வேண்டும்.

ஓம் ஸம் ஸோமாய நம: என்று கிழக்குத் தளத்திலும், ஓம் அம் அங்காரகாய நம: என்று அக்னி திக்கிலுள்ள தளத்திலும், ஓம் பும் புதாய நம: என்று தெற்குத் தளத்திலும், ஓம் ஶம் ஶனைஶ்சராய நம: என்று நிருருதி திக்கிலுள்ள தளத்திலும், ஓம் கும் குரவே நம: என்று மேற்குத் தளத்திலும், ஓம் ரம் ராஹவே நம: என்று வாயுதளத்திலும், ஓம் ஶும் ஶுக்ராய நம: என்று வடக்குத் தளத்திலும், ஓம் கேம் கேதவே நம: என்று ஈசான தளத்திலும், பூஜிக்கவேண்டும்.

---

1 ஓம் ஹாம் என்றும் பாடபேதமுண்டு.

2 ஓம் ர: என்றும் பாடபேதமுண்டு.

16-17: சந்திரனை ஆம்பல்பூ, முல்லைப்பூ, இவற்றின் காந்தியை உடையவராகவும், புதனை சொர்ணத்தின் காந்தியை உடையவராகவும், குருவை கோரோசனையின் காந்தியை உடையவராகவும், சுக்கிரனை பசுவின் பாலுக்குச் சமானராகவும், அங்காரகனைச்செம்மை நிறமுடையவராகவும், சனீசுவரரை ராஜாவர்த்தமென்னும் கருமை நிறமுடைய காசாம் புஷ்பத்திற்குச் சமானராகவும், ராகுவைக் கருமை நிறமுடையவராகவும்அஞ்சலிபந்தம் செய்துகொண்டிருப்பவராகவும், கேதுவைப் புகைவர்ணமுள்ளவராகவும் பாம்புக்குச் சமானராகவும் தியானிக்க வேண்டும்.

18. எல்லாக்கிரஹங்களும் இஷ்டமான ரூபத்தைத் தரிப்பவர்களாகவும், திவ்யமான ஆடை ஆபரணமணிந்தவர்களாகவும், இடது துடையில் வைக்கப்பட்ட இடது கையை உடையவர்களாகளாகவும், வலத் கையால் அபயத்தைக் கொடுப்பவர்களாகவும், இருக்கின்றனர்.

19. இவ்வாறான தியானத்துடன் கிரஹங்களை முறையாகப் பூஜித்து, கஷோல்க மந்திரத்தால் தூபம் தீபம் நைவேத்தியம்முதலிய எல்லாவற்றையும் சமர்ப்பிக்க வேண்டும்.

20. கவனத்துடன் மூலமந்திரத்தைச் சக்திக்குத்தக்கவாறு ஜபித்து ஜபத்தை அர்க்யபாத்திரத்திலிருக்கும் தீர்த்தத்தினால் சூரியபகவானின் பொருட்டு அன்புடன் சமர்ப்பிக்க வேண்டும்.

21-22. ஸ்தோத்ரம் செய்து, நமஸ்கரித்து, பூஜித்து, பராங்முகார்க்யம் கொடுத்து, பொறுத்தருள வேண்டும் என்று வேண்டிக் கொண்டு ஸூர்யாய ஹாஹாஸ் வௌஷட் என்னும் மந்திரத்தினால் அங்கமந்திரம் முதலிய மந்திரங்களை எழுப்பி, ஸம்ஹார முத்திரையினால் உபஸம்ஹாரம் செய்து, இருதய கமலத்தின் மத்தியிலிருக்கும் சிவ சூரியனிடத்தில் சேர்க்க வேண்டும்.

23. பின்னர் ஓம் தேஜச்சண்டாய நம: என்னும் மந்திரத்தால் சூர்ய நிர்மாலியத்தை ஈசான திக்கில் அமர்ந்துள்ள சண்டேசுவரருக்குச் சமர்ப்பிக்க வேண்டும். இவ்வாறு சூரிய பூஜை கூறப்பட்டது. ஆகச் சுலோகம் 97.

## சிவபூஜா விதி.

### (துவாரபால பூஜை)

1. பின்னர் விதிப்படி 1 ஆசமனம் செய்து, பிரணவத்தால் 2 அபிமந்திரிக்கப்பட்ட ஸாமான்யார்க்ய தீர்த்தம் நிரம்பிய பாத்திரத்தைக் கையிலேந்தி, துவாரத்தை அஸ்திர ஜலத்தால் புரோக்ஷித்து, துவாரபாலர்களைப் பூஜிக்க வேண்டும். துவாரத்தின்மேலுள்ள உதும்பரத்தின் வலது பக்கத்தில் ஓம் ஹாம் கணபதயே நம: என்றும், இடப்பக்கத்தில் ஓம் ஹாம் ஸரஸ்வத்யை நம: என்றும், நடுவில் ஓம் ஹாம் மஹாலக்ஷ்ம்யை நம: என்றும், வாயிலின் வலது சாகையில் ஓம் ஹாம் நந்திநே நம: ஓம் ஹாம் கங்காயை நம: என்றும், வாயிலின் இடது சாகையில் ஓம் ஹாம் மஹாகாலாய நம: ஓம் ஹாம் யமுனாயை நம: என்றும் பூஜிக்கவேண்டும்.

### விக்நோச்சாடனம்.

2-3. ஓம் ஹாம் ஹௌம் ஶிவாய நம: என்ற மூலமந்திரத்தை உச்சரித்து, கண்களால் மேல் நோக்கிப் பார்த்து மேலே உள்ள தேவலோகத்திலிருக்கும் விக்னங்களையும், நாராசமுத்ரை செய்துகொண்டு ஓம் ஹ: அஸ்த்ராய ஹும் பட் என்ற பிரகாசிக்கும் அஸ்திரமந்திரத்தை உச்சரித்து ஆகாசத்தில் பூவை எறிந்து ஆகாயத்திலுள்ள விக்னங்களையும், ஓம் ஹூம் பட் என்னும் பரசுபதாஸ்திரத்தை உச்சரித்து வலது குதிக்காலடியினால் மூன்று முறை பூமியைத் தட்டுதலால் பூமியில் உள்ள விக்னங்களையும், இவ்வாறு மூன்றுவித விக்னங்களையும் பூஜாகிருஹத்தின் மத்தியினின்றும் ஸாதகன் முதல் ஆசாரியர் ஈருகிய யாவரும் போக்கவேண்டும்.

---

1. சூரிய சம்பந்தமான பாவனை நீங்குதற்காக ஆசமனம் வேண்டும் என்பது கருத்து. ஆசமனம் செய்த சமயங்களில் ஸகளீகரணமும் ஆவசியகமானதால் ஆசமனத்திற்குப் பின் ஸகளீகரணத்தையும் செய்யவேண்டும்.

2 பிரணவத்தால் ஏழு முறை அபிமந்திரிக்கப்பட்டதாயும், ரக்ஷை அவகுண்டனம் அமிருதீகரணம் இவை செய்யப் பெற்றதாயும் இருக்கிற சாமான்யார்க்ய தீர்த்தம் நிரம்பிய என்பது கருத்து.

## பூஜாகிருஹத்திற்குச் செல்லுதல்.

4. சிறிது இடப்புறமாக வலது காலை முன்னே வைத்து கீழே உள்ள உதும்பரத்தைக் (படியை) கடந்து சென்று, கீழ்ப் படியில் ௐ ஹ: ஃபட் அஸ்த்ராய நம: என்று அஸ்திரத்தைப் பூஜிக்க வேண்டும். (வலமாகச் சென்று) நிருருதி திக்கில் ஓம் ஹாம் வாஸ்து அதிபதயே ப்ரஹ்மணே நம: என்று புஷ்பத்தினால் வாஸ்துப் பிரமனைப் பூஜிக்க வேண்டும்.

## அபிஷேகஜலம் சேகரிக்குமுறை.

5-6. அபிஷேக கலசங்களை மூலமந்திரத்தை உச்சரித்து நிரீக்ஷணஞ் செய்து, அஸ்திர மந்திரத்தை உச்சரித்துப் புரோக்ஷணம் தாடனமிவற்றைச் செய்து, கவசமந்திரத்தை உச்சரித்து அப்யுக்ஷணம் செய்து, சுத்தமாகிய அக்கலசங்களை எடுத்துக்கொண்டு, சிவபெருமானிடம் உத்தரவு பெற்று, பேசாது கங்கை முதலிய நதியை அடைந்து, பஞ்சப்பிரமமந்திரம் அங்கமந்திரங்கள் ஜபிக்கப் பெற்றதாயும், வடிகட்டப் பெற்றதாயும் உள்ள ஜலத்தால் அஸ்திரமந்திரத்தினால் பரிசுத்தமான கலசங்களை காயத்ரியையேனும் இருதயமந்திரத்தையேனுமுச்சரித்து நிரப்பவேண்டும்.

7. கலசதீர்த்தம் அக்ஷதை புஷ்பம் முதலிய எல்லாத் திரவியங்களையும் பூஜைக்காக அருகே வைத்துக்கொண்டு பூதசுத்தி முதலியன செய்யவேண்டும்.

## பூதசுத்தி.

8-9-10. ஈசுவரருக்குத் தென்பக்கத்தில் மிருதுவான 1 கிருஷ்ணாஜினம் முதலிய ஆஸனத்தில் பத்மகம் ஸ்வஸ்திகம் முதலியவற்றுள் யாதானுமோர் ஆஸனமுறையை அனுசரித்து, வடக்குமுகமாக அமர்ந்து, சித்தத்தை அடக்கி, கரந்யாசம் செய்துகொண்டு, மூர்த்திமந்திரத்தைஉச்சரித்து தீக்ஷையில்நாசமடையாத பிராரப்தகர்மாவை அனுபவிப்பதற்காக ஜீவனை ஸம்ஹார முத்திரையால் சரீரத்தினின்றும் எடுத்து, இருதயம் முதலிய பற்றுக்கோடான ஸ்தானங்களை அறிந்தவனாய், இருதய கமலத்திலேனும் பாணிகச்சபி

1 கிருஷ்ணாஜினம்— கருப்புப் புள்ளியை உடைய மான் தோல்.

கை (புறங்கை) என்னும் ஸ்தானத்திலேனும், துவாதசாந்தத்திலேனும் தன் ஜீவனை வைத்துவிட்டு, ஐந்து பூதங்களையும் சுத்தி செய்யவேண்டும்,

11. தன்னுடைய சரீரத்தில் சுழுமுனைநாடியை இரண்டு கால்களின் கட்டை விரல்கள் முதற்கொண்டு மூலாதாரம் வரை இரண்டு ரூபமாகவும், மூலதாரம் முதற்கொண்டு பிரம்ந்திரம் முடிய ஒரு ரூபமாகவும் தியானம் செய்து, சுழுமுனைநாடியின் உட்புறத்திலும் வெளிப்புறத்திலும் குண்டலினீ சக்தி வியாபிக்கிறதாகத் தியானிக்க வேண்டும்.

12. ஆசாரியர் சுழுமுனை நாடியின் மத்தியில் இருக்கிறதாயும், பிரகாசிக்கிற அக்னியின் காந்தியை உடையதாயும் இருக்கிற ஹூம்காரத்தினிடம், ப்ராணனை அடக்கி(பூரககும்பங்கள் செய்து) சித்தத்தைச் செலுத்த வேண்டும்.

13. வாயுவை உயரே எழுப்பி ஹூம்பட் என்னும் பதத்தை(ஐந்து முறை)உச்சரித்தலால் இருதயம், கழுத்து, அண்ணம், புருவநடு, பிரமரந்திரம், இவற்றிலுள்ள க்ரந்திகளை (தளங்களின் ஸந்திகளை)ப் பேதித்து ஹூம்காரத்தைத் திருப்ப வேண்டும்.

14. பூரக வாயுவால் ஒடுக்கப்பட்ட சைதன்யத்தையுடையதாயும், ஹாம் என்னும் இருதயபீஜங்களின் நடுவை அடைந்ததாயும், பிரகாசிக்கிற நக்ஷத்திரத்தின் சொரூபத்தை உடையதாயும் இருக்கிற ஜீவனுன ஹம்காரத்தை ஹூங்காரத்தின் சிரஸில் வைக்க வேண்டும்.

15. வித்வானனவன் ஜீவனைச் சுத்தனுகவும் (அவித்யை முதலியன் அற்று ஸத்வகுண ரூபனுகவும்) பரம காரணமான பிந்து ரூபனுகவும் தியானித்து, கும்பகஞ்செய்து ரேசகஞ்செய்து கொண்டு,ஒரே 1 உத்காதத்தினுல்துவாதசாந்தத்திலுள்ள பரமசிவனிடத்தில் சேர்க்க வேண்டும்.

## சூக்ஷ்மதேகசுத்தி.

16. நாதரூபமாக சிவனிடத்து ஒடுங்கிய பூஜகனுகிய ஆத்மாவானவன் பிருதிவீ முதலான முப்பத்தாறு தத்துவங்களைத்

1 உத்காதமாவது- உதான வாயுவின் தொழிற்பாடு,

தத்தம் காரணங்களில் ஸிருஷ்டிக்ரமத்திற்கு மாருக குண்டலினீ சக்தி பரியந்தம் 1 ஒடுங்கச் செய்து சுத்திசெய்யவேண்டும்.

## ஒன்ருலொன்றைச் சுத்தி செய்தலாகிய ஸ்தூல தேக சுத்தி.

17. பிருதிவி வாயு இவ்விரண்டையும் தமக்குவிரோதியான ஒன்ருல் ஒன்றையும், ஜலம் அக்னி இவ்விரண்டையும் தமக்கு விரோதியான ஒன்ருலொன்றையும் சுத்தி செய்க. ஆகாசத்தை 2 விரோதமில்லாமல் சுத்தி செய்க. சுத்தி செய்யவேண்டிய முறை இனி கூறப்படுகிறது.

18, 19, 19½. பிருதிவிமண்டலத்தைப் பொன்னிறமாகவும், கடினமாகவும், வஜ்ரத்தாலடையாளமிடப் பெற்றதாகவும், ஹ்லாம் என்னும் பார்த்திவ பீஜத்துடன் கூடியதாகவும், நிவிருத்தி கலை யால் அதிட்டிக்கப்பட்டதாகவும், பாதம் முதல் சிரசு ஈருக வியா பித்திருப்பதாகவும், நாற்கோணவடிவமாகவும், ஸத்யோஜாத மந் திரத்துடனும் காரணேசுவரரான பிரமாவுடனும் கூடியதாகவும்,

1 "ஒடுங்கச் செய்து"— சந்தம் முதலிய ஐந்து தன்மாத்திரைகளிட த்தில் பிருதிவி முதலிய ஐந்து தத்வங்களும், இந்தத் தன்மாத்திரைகள் தாமஸாஹங்காரத்தினிடமும், வாக்கு பாணி பாதம் பாயு உபஸ்தம் ஆகிய இவை ராஜஸாஹங்காரத்தினிடமும், ச்ரோத்ரம் த்வக் சக்ஷுஸ் ஜிங்வை ஆக்ராணம் இவையும், மனமும் ஸாத்விகாஹங்காரத்தினிடமும், அகங்காரம் புத்தியினிடமும், புத்தி குணதத்துவத்தினிடமும், குணதத்துவம் பிரகிருதியினிடமும், பிரகிருதி அராகம் வித்தை ஆகிய இவை கலையினிடமும், புருஷதத்துவம் காலம் நியதிகலை ஆகிய இவை மாயையினிடமும் ஒடுங்கினவையாகப் பாவித்து, சுத்தவித்யாதத்துவம் ஈசுவர தத்துவத்தினிடமும், ஈசுவரதத்துவம் ஸதாசிவ தத்துவத்தினிடமும், ஸதாசிவ தத்துவம் சக்திதத்துவத்தினிடமும், சக்தி தத்துவம் சிவதத்துவத்தினிடமும், சிவதத்துவமானது நிர்விகார ரூபமான குண்டலினீ சக்தியிடமும் ஒடுங்கினதாகச் செய்து என்பது கருத்து.

2. ஆகாசமானது பிருதிவி ஜலம் தேஜஸ் வாயு இவற்றிற்கு இடங் கொடுத்தல்பற்றி கட்பாக இருக்கின்றது. பரசக்திரூபமான பரமாகாசந் தான் ஆகாசத்திற்குப் பகையாகும்.

தியானித்து, 1 ஐந்து உத்காதங்களால் பிருதிவியின் ஐந்து குணங்களைப்போக்கி, தனக்கு விரோதியான வாயுவால் தோல்வியுற்று வாயுவாக பவித்ததாகத் தியானித்துச் சுத்தி செய்யவேண்டும்.

20, 21, 21½ ஜலமண்டலத்தை அர்த்த சந்திரவடிவமாகவும், திரவமாகவும், அழகாகவும், வெண்மை நிறமுள்ளதாகவும், தாமரையாலடையாளம் செய்யப்பட்டதாகவும், ஹ்வீம் என்னும் பீஜாக்கரத்தை உச்சரித்துக் கொண்டாவது, தியானித்துக் கொண்டாவது பிரதிட்டா கலையால் அதிட்டிக்கப் பட்டதாகவும், வாமதேவ மந்திரத்துடன் கூடியதாகவும், காரணேசுவரரான 2 விஷ்ணுவுடன் கூடியதாகவும், பாதம் முதல் சிரசு ஈறுக வியாபித்திருப்பதாகவும்தியானித்து, ஹ்வீம் ஹ்வீம் ஹ்வீம் ஹ்வீம் என்னும்நான்கு உத்காதங்களால், ஜலத்தினுடைய ரஸம் ரூபம் பரிசம் சப்தம் ஆகிய குணங்களைப் போக்கி, அக்னியால் தோல்வியுற்று அக்னியாகப் பவித்ததாகத் தியானித்துச் சுத்தி செய்ய வேண்டும்.

22. 23, அக்னி மண்டலத்தை முக்கோண வடிவமாகவும், செம்மை நிறமுள்ளதாகவும், ஸ்வஸ்திகத்தால் அடையாளமிடப்பட்டதாகவும் ஹ்ரூம் என்னும் பீஜாக்ஷரத்தை உச்சரித்தேனும் தியானித்தேனும் வித்யாகலையால் அதிட்டிக்கப் பட்டதாகவும், அகோர மந்திரத்துடன் கூடியதாகவும், காரணேசுவரரான ருத்ரருடன் கூடியதாகவும், பாதம் முதல் சிரசு ஈறுக வியாபித்திருப்பதாகவும் தியானித்து ஓம் ஹ்ரூம் ஹ்ரூம் ஹ்ரூம் வித்யாகலாயை ஹூம் ஃபட் என்னும் மூன்று உத்காதங்களால் அக்நியினுடைய ரூபம் ஸ்பரிசம் சப்தம் ஆகிய குணங்களைப் போக்கி

---

1 ஓம் ஹ்ரூம் ஹ்ரூம் ஹ்ரூம் ஹ்ரூம் ஹ்ரூம் நிவ்ருத்திகலாயை ஹூம் ஃபட் என்பதான ஐந்து உத்காதங்களால் என்பது கருத்து.

2 ஆபாதசீர்ஷாந்தகாரணம் என்ற பாடத்தைக் கொண்டு காரணேசுவரரான விஷ்ணுவுடன் கூடியதாகவும் என்று மொழிபெயர்க்கப்பட்டது. "ஆபுருஷாந்தகாரணம்" என்ற பாடத்தைக் கொண்டால் புருஷதத்துவமீறுக வியாப்தியை உடையதாகவும் காரணேசுவரரான விஷ்ணுவுடன்கூடியதாகவும் என்று பொருள் கொள்ளல் வேண்டும்,

ஜலத்தினில் தோல்வியுற்று ஜலமாகப் பவித்ததாகத்தியானித்து சுத்தி செய்யவேண்டும்.

24. 25. வாயுமண்டலத்தை அறுகோண வடிவமுள்ளதாகவும், ஆறு புள்ளிகளுடன் கூடினதாகவும், கருமை நிறமுள்ளதாகவும், ஹ்யைம் என்னும் பீஜாக்கரத்தை உச்சரித்தேனும் தியானம் செய்தேனும் சாந்தி கலையால் அதிட்டிக்கப் பட்டதாகவும், தத்புருஷ மந்திரத்துடன் கூடியதாகவும், காரணேசுவரரான மகேசுவரருடன் கூடியதாகவும், பாதம் முதல் சிரசு ஈறுக வியாபித்திருப்பதாகவும் தியானித்து, ஹௌம் ஹௌம் ஶாந்திகலா யை ஹூ: ஹும்பட் என்று இரண்டு உத்காதங்களால் வாயுவின் பரிசம் சப்தம் ஆகிய குணங்களைப் போக்கி, பிருதிவியால் தோல்வியுற்று பிருதிவியாகப் பவித்ததாகத் தியானிக்கவும்.

26. 27. 27½. ஆகாச மண்டலத்தைச் சப்தமாகிய ஒரு குணத்துடன் கூடியதாகவும், குடிலா சக்தியால் அலங்கரிக்கப் பட்டதாகவும், இடந்தரும் வெளிரூபமாகவும், வட்டமாகவும், சுத்தமான படிகம் போல் நிர்மலமாகவும், ஹௌம் என்னும்பீஜத்தை உச்சரித்தேனும் தியானித்தேனும் சாந்தியதீத கலையால் அதிட்டிக்கப் பட்டதாகவும், ஈசான மந்திரத்துடன் கூடியதாகவும், காரணேசுவரரான ஸதாசிவருடன்கூடியதாகவும், பாதம்முதல் சிரசு ஈறுக வியாபித்திருப்பதாகவும் தியானித்து ஓம் ஹௌம் ஶாந்த்யதீதகலா யை ஹூ: ஹும்பட் என்னும் ஒரு உத்காதத்தால் சுத்தி அடைந்ததாகத் தியானிக்க வேண்டும்.

28. பின்னர் 1 அமிருதத்தைப் பெருக்குகிற மூலமந்திரத்தை உச்சரித்து எல்லாப் பூதங்களையும் நனைக்க வேண்டும்.

---

1 நாதாந்தமாக உச்சரிக்கப்பட்ட குடிலா சக்தியினின்று பெருகும் அமிருத தாரையால் எல்லாப் பூதங்களையும் நனைக்க வேண்டுமென்பது கருத்து.

## துவாதசாந்தத்திலிருக்கும் ஜீவனை இருதயகமலத்தில் ஸ்தாபிக்கும் முறை.

29. 29½ பின்னர், இருதயகமலத்தின் கர்ணிகையில் ஆதாரசக்தியையும், அனந்தாஸனத்தையும், தர்மம் 1 ஞானம் முதலிய் ஆஸனங்களையும், பத்மாஸனத்தையும் சமர்ப்பித்து, புரியஷ்டகதேகத்தை 2 நியாசம் செய்து, அதில் சிவமாகப் பவித்தஜீவாத்மாவைத் துவாதசாந்தத்திலிருந்து கொண்டுவந்து ஸிருஷ்டிக்ரமமாக ஆவாஹனம் செய்ய வேண்டும்.

30 30½ பின்னர் ஓம் ஹௌம் ஶக்தயே வௌஷட் என்னும் மந்திரத்தை உச்சரித்து, 3 திவ்யமான அமிருதத்தால் ஜீவாத்மாவை முற்றிலும் நனைத்து சகளீகரணம் செய்யவேண்டும்.

31, 31½, இருதயம் முதல் கரம் (கை) ஈறுகவுள்ள ஸ்தானங்களிலும், கடைவிரல் முதலிய விரல்களிலும், இருதயம் முதலிய மந்திரங்களை நியாஸம் செய்தல் ஸகளீகரணமாகும்.

### ஸ்தான சுத்தி.

32. 33. 34. மூன்று தாளங்களை (கைதட்டுதல்களை) முன்னிட்டு, சோடிகைகளுடன் இரக்ஷித்தற்காகப் பத்துத் திக்குகளிலும் உள்ள விக்கினங்களைப்போக்கும் அஸ்திரமந்திரத்தை உச்சரிக்க அஸ்திரமந்திரத்தால் பிராகாரத்தைச் செய்து, அதற்கு வெளியில் கவசமந்திரத்தால் அகிழ்களையும் செய்து, சத்திகளின்

---

1 "ஞானம் முதலிய— என்றதனுல் வைராக்கியம், ஐசுவரியம், இரண்டும் கொள்ளப்படும். இதுவே ஷடுத்தாஸனம் எனப்படும். ஓம் ஹாம் அநந்தாஸநாய நம:, ஓம் ஹாம் தர்மாய நம:, ஓம் ஹாம் ஜ்ஞாநாய நம:, ஓம் ஹாம் வைராக்யாய நம:, ஓம் ஹாம் ஐஶ்வர்யாய நம:, ஓம் ஹாம் பத்மாய நம: என்று பூஜிக்க வேண்டும் என்பது கருத்து.

2 ஓம் ஹாம் ஹம் ஹாம் ஆத்மமூர்த்தயே நம: என்னும் மந்திரத்தால் நியாசம் செய்து என்பதாம்.

3 துவாதசாந்தத்திலுள்ள சத்தி மண்டலத்திலிருந்து பெருகும் அமிருததாரையால் என்பது கருத்து.

1 கூட்டத்தைக் கீழும் மேலும் இருப்பதாகப் பாவித்து, அதன் பின் அமிருதீகரணம் செய்து, பாதம் முதல் சிரசு ஈறாக மகா முத்திரையையும் காண்பிக்க வேண்டும்.

## அந்தரியாகம்.

34½. மனதால் சேகரிக்கப்பட்ட புஷ்பம் முதலியவற்றால் பரமசிவனை இருதயகமலத்தில் பூஜிக்க வேண்டும்.

## அந்தரக்னி கார்யம்.

35½. இயல்பாகவே ஸித்தித்த நாபியாகிற குண்டத்தில் உள்ள சிவாக்னியில், ஆஸன மூர்த்தி மூலமந்திரங்களால் சிவனை ஆவாகனம் செய்து, துவாதசாந்தத்தினின்று கொண்டு வரப்பட்ட அமிருதமாகிற ஹவிஸை அக்னியில் ஹோமம் செய்து, சிவபெருமானைச் சந்தோஷமுடையவராகச் செய்ய வேண்டும்.

36½. வெண்மையான வடிவத்தை உடைய பரமேசுவரரைப் புருவங்களின் நடுவில் இருப்பவராகவும், கோபிக்கப்பட்ட சரத் கால சந்திரனை உடைய பிந்து 2 ரூபமாகவும் தியானிக்கவேண்டும்.

## அர்க்யம் சேகரிக்குமுறை.

37. 38, 39. சுவர்ணம் முதலியவற்றுள் யாதானுமொன்றால் செய்யப்பட்ட பாத்திரத்தை அஸ்திர மந்திரத்தை உச்சரித்துக் கழுவி, அதில் பிந்து ஸ்தானத்தினின்று பெருகுகிற அமிருத ரூபமாகிற சுத்த ஜலத்தை வௌஷடை இறுதியில் உடைய இருதய மந்திரத்தை உச்சரித்து நிரப்பி, அக்ஷதை முதலியவற்றை அதில் போட்டு, ஷடங்க மந்திரங்களால் பூஜித்து, அபிமந்திரிக்க வேண்டும். (ஸம்ஹிதா மந்திரத்தை ஜபிக்க வேண்டும்.) அஸ்திர மந்திரத்தால் ஸம்ரக்ஷணம் செய்து கவசத்தால் அவகுண்டனம் செய்ய வேண்டும். 3 எட்டு அங்கங்களை உடையதாக அர்க்யத்தைக் கற்பித்து தேனுமுத்திரை செய்து அமிருதமாகச் செய்ய வேண்டும்.

---

1 சத்திசம்பந்தமான தேஜஸை என்பது கருத்து.

2 சிவபெருமான் மிக வெண்ணிறமான பிந்துவை அதிட்டிப்பது பற்றி பிந்து ரூபமாகவும் தியானிக்க வேண்டுமென்று கூறப்பட்டது.

3 ஜலம், பால், தர்ப்பை நுனி. அரிசி, புஷ்பம், எள்ளு, யவம், கடுகு ஆகிய இவை அர்க்யத்திற்குரிய எட்டு அங்கங்களாகும்.

## திரவிய சுத்தி.

40. 41. பின்னர் அந்த அர்க்ய ஜலத்திவலையால் 1 தன் சிரஸைப்புரோக்ஷிக்கவேண்டும். அங்குள்ள பூஜா திரவியங்களை அஸ்திரமந்திரத்தை உச்சரித்துப்புரோக்ஷிக்க வேண்டும். இருதய மந்திரத்தால் அபிமந்திரித்து, பாத்திரங்களைக் கவசத்தால் அவகுண்டனம் செய்ய வேண்டும். அமிருத முத்திரை காண்பித்து (தேனு முத்ரையால் அமிருதீகரணம் செய்து)

## ஆத்மபூஜை

42. 42½. தன் ஆஸனத்தில் புஷ்பத்தைச் 2 சமர்ப்பித்து, நெற்றியில் 3 பொட்டிட்டு, மூலமந்திரத்தை உச்சரித்து சிரசில் புஷ்பத்தைத் தரிக்க வேண்டும். ஸ்நானம், தேவபூஜை, ஹோமம், போஜனம், யாகம், (அதாவது தீக்ஷை) யோகாப்யாஸம், மலஜல விஸர்ஜனம், ஜபம் இவை செய்யும் பொழுது தீரனுயுள்ளவன் எப்பொழுதும் மௌனியாக இருக்க வேண்டும்.

## மந்திரசுத்தி·

43. நாதாந்தமாக உச்சரித்தலால் மந்திரத்தைச் 4 சுத்தி செய்ய வேண்டும்.

## லிங்க சுத்தி.

44-44½. முன்தினத்தில் செய்யப்பட்ட பூஜையைக் காயத்திரியை உச்சரித்து அர்ச்சித்து, ஸாமான்யார்க்யத்தால் லிங்கத்

---

1 மற்றத் திரவியங்களைப் போல் ஆன்மாவும் பூஜைக்குச் சாதனமாக இருப்பதால் திரவிய சுத்தியில் அடங்கியிருக்கின்றது.

2 ஓம் ஹாம் ஶிவாஸநாய நம: என்னும் மந்திரத்தால் சமர்ப்பித்து என்பது கருத்து.

3 சந்தனத்தால் பொட்டிட்டு என்று கொள்ளவேண்டும்.

4 பற்கள் அண்ணம் உதடுகள் ஆகிய இவற்றின் தொழிற்பாட்டால் உண்டான மாயாகாரியமான அசுத்தத்தை நீக்குதற்காகவும், ஐசுவரிய ரூபமான அதிகார மலத்தால் மறைக்கப்பட்ட பலனைக் கொடுக்கக் கூடிய சாமர்த்தியத்தை உடைய மந்திரங்களுக்கு, அந்தச்சாமர்த்தியத்தை உண்டு பண்ணுவதற்காகவும், மந்திர சுத்தி செய்ய வேண்டும். பஞ்சப்ரஹ்ம மந்திரங்களைப் பிந்து அளவாகவும், அங்க மந்திரங்களை ப்ரஹ்மரந்திரமளவாகவும், மூலமந்திரத்தைத் துவாதசாந்த அளவாகவும் உச்சரிக்க வேண்டும். இதுவே மந்திர சுத்தி.

த்தைப் புரோக்ஷித்து, பஞ்சப்ரஹ்ம மந்திரத்தை 1 நியாஸம்செய்து லிங்கத்தினின்று நிர்மால்யத்தை 2 எடுத்து, சண்டேசுவரருக்காக ஈசான திக்கில் இருதய மந்திரத்தை உச்சரித்து 3 வைக்க வேண்டும்.

45½. அஸ்திரமந்திரத்தை உச்சரித்து, ஜலத்தால் லிங்கம் பீடம் இவற்றைக் கழுவி, உடன் இருதயமந்திரத்தை உச்சரித்து ஸாமான்யார்க்ய ஜலத்தால் லிங்கத்திற்கு அபிஷேகம் செய்ய வேண்டும். லிங்க சுத்தி இவ்வாருகும்.

46½. இவ்வாறு ஆத்மசுத்தி, ஸ்தானசுத்தி, திரவியசுத்தி, மந்திர சுத்தி, லிங்கசுத்தி ஆகிய இவை செய்யப்பட்ட பின்னர் லிங்கத்தைப் பூஜிக்கவேண்டும். இந்த ஐந்து சுத்திகளையும் செய்யாமல் பூஜிக்கக் கூடாது.

## விநாயகர், லக்ஷ்மீ, குருபரம்பரை இவர்களின் பூஜை.

பீடத்திற்கு வாயுதிக்கில் ஓம் ஹாம் கணபதயே நம:, வட திக்கில் ஓம் ஹாம் ஶ்ரீம் லக்ஷ்ம்யை நம:, ஈசானதிக்கில் ஓம் ஹாம் ஶ்ரீ குருப்யோ நம: என்று பூஜிக்க வேண்டும்.

## சிவாஸன பூஜை.

47½. 4 பின்னர், கூர்மசிலையில், (ஆதார சிலையில்) அமர்ந்திருப்பவளாயும், பாற்கடல் போல் வெண்மையான சரீரத்தையுடையவளாயும், விரையினின்று வெளிப்படும் முளைபோல் (குடிலமான) சொரூபத்தை உடையவளாகவும் இருக்கிற ஆதார சக்தி

1 நைஷ்டிகனுயுள்ளவன், கடைவிரல் முதலிய விரல்களால் ஸத்யோஜாதம் முதலிய சிரசுகளைத் தொடுதலால் முறையே நியாஸம் செய்ய வேண்டும். பௌதிகனுயுள்ளவன் ஈசானம் முதலிய சிரசுகளில் அர்க்யத்தையும், பெருவிரல் முதலிய விரல்களால் நியாசத்தையும்செய்யவேண்டும்

2 அஸ்திரமந்திரத்தை உச்சரித்து பெருவிரல் சுட்டுவிரல் இவற்றால் எடுத்து என்பது கருத்து.

3 „ஓம் ஹாம் சண்டாய வௌஷட்" என்று சொல்லிக்கொண்டு வைக்கவேண்டும்.

4 அத: ஶுத்தாஶுத்தவாஸினாம் என்ற பாடத்தைக் கொண்டால், அத: என்பதற்கு சுத்தா சுத்தங்களான எல்லா உலகங்கட்கும் கீழே என்று பொருள் கொள்ள வேண்டும். இந்தப் பாடமே சிறந்தது,

யை ஓம் ஹாம் ஆதாரஶக்தயே நம: என்று 1 பூஜிக்கவேண்டும்.

48½ முல்லைப்பூ, சந்திரன் இவைபோல் வெண்ணிறமாயும், உயரே நோக்கிய காம்பை உடையதாயும் இருக்கிற தாமரை மொட்டின் சொரூபத்தை உடையதாயும், கூர்ம சிலையின் மீது ஏறியிருப்பதாயும் இருக்கிறசிவனுடையஅனந்தாஸனத்தை ஓம் ஹாம் அனந்தாஸனாய நம:, ஓம் ஹாம் அனந்தாய நம: என்றுசொல்லிப் பூஜிக்க வேண்டும்.

49½ 50½. ஆச்சரியப்படத்தகுந்த சிம்மங்களுக்குச் சமான முள்ளவையாயும்,ஒன்றுக்கொன்று பிருஷ்டத்தைக்காண்பிக்கின்றவையாயும்; க்ருதயுகம் த்ரேதாயுகம், துவாபரயுகம், கலியுகம் ஆகிய இவற்றின் சொரூபத்தை அடைந்து பரமசிவனுடைய ஆஸனக்கால்களாக இருப்பவையாயும் இருக்கும், தர்மம் ஞானம் வைராக்கியம் ஐசுவரியம் ஆகிய இவற்றை, முறையே வெண்மை செம்மை பொன்மை கருமை நிறமுடையவையாகத்தியானித்துப் பூஜிக்க வேண்டும்.

ஓம் ஹாம் தர்மாய நம: என்று அக்னி திக்கிலும், ஓம் ஹாம் ஜ்ஞானாய நம: என்று நிருருதி திக்கிலும், ஓம் ஹாம் வைராக்யாய நம: என்று வாயுதிக்கிலும், ஓம் ஹாம் ஐஶ்வர்யாய நம: என்று ஈசான திக்கிலும் பூஜிக்க வேண்டும்.

51½. கிழக்குத் திக்கில் ஓம் ஹாம் அதர்மாய நம:, தெற்குத் திக்கில் ஓம் ஹாம் அஜ்ஞானாய நம:, மேற்குத் திக்கில் ஓம் ஹாம் அவைராக்யாய நம:, வடக்குத்தில் ஓம் ஹாம் அநைஶ்வர்யாய நம: என்று பூஜித்து, நிருருதி திக்கில் அதச்சதனத்தையும் ஈசான திக்கில் ஊர்த்வச் சதனத்தையும் பூஜிக்க வேண்டும்.

52½. மலர்ந்த எட்டுத் தளங்களை உடையதாயும், வெண்மையாயும் இருக்கிற 2 அதே அனந்தத் தாமரையை, சிம்மங்க

1 பரமேசுவாருடைய பீடத்தின் கீழ்பாகத்தில் நடுவில் பூஜிக்கவேண்டுமென்பது கருத்து.

2 நாற்பத்தெட்டாவது சுலோகத்தினல் எந்த அனந்தாஸனம் பூஜிக்கப்பட வேண்டுமென்று கூறப்பட்டதோ, அதே அனந்தாசனமாகிய தாமரையைப் பூஜிக்க வேண்டுமென்பது கருத்து.

ளின் கூட்டத்திற்கு மேல் பூஜித்து பத்ம முத்ரை காண்பித்து ஓம் ஹாம் பத்மாய நம: என்று பூஜிக்க வேண்டும்.

53½. பின்னர் உருக்கின சொர்ணத்தின் காந்தியை உடையதாயும், 1 ஐம்பது அக்கரங்களாகிய விரைகளுடன் கூடியதாயும், 2 அறுபத்து நான்கு கேஸரங்களுடன் கூடியதாயும் இருக்கிற 3 கர்ணிகையை ஓம் ஹாம் கர்ணிகாயை நம: என்று 4 பூஜிக்கவேண்டும்.

54½-55½-56½. உதயமாகிற சூரியனுக்குச் சமானமான காந்தியை (செம்மை நிறத்தை) உடையவர்களாயும், மூன்று கண்களையும் நான்கு கைகளையுமுடையவர்களாயும், ஜடாமகுடத்தில் அர்த்த சந்திரனால் அலங்கரிக்கப்பட்டவர்களாயும், சாமரத்தைத் தரித்திருப்பவர்களாயும், வரதம் அபயம் இவற்றைக் கையில் உடையவர்களாயும், சிவாஸநத்தில் தாமரை போன்ற ஒருகையை வைத்திருப்பவர்களாயும், கிழக்குத் திக்குமுதல் ஈசான திக்கு ஈறாகவுள்ள தளங்களிலுள்ள கேஸரங்களின் நுனிகளில் முறையாக இருப்பவர்களாயும் இருக்கும் வாமை முதலிய எட்டுச்சத்திகளைப் பூஜித்து நமஸ்காரமுத்திரை காண்பிக்கவேண்டும். பசுவின் பால்போல் வெண்ணிறமான மனோன்மனி சக்தியை கர்ணிகையில் பூஜிக்கவேண்டும்.

ஓம் ஹாம் வாமாயை நம:

ஓம் ஹாம் ஜ்யேஷ்டாயை நம:

---

1 ககாரம் முதற்கொண்டு மகாரம்முடியவுள்ள இருபத்தைந்து அக்ஷரங்களும், அகாரம் முதல் விஸர்க்கம் முடிவாகவுள்ள பதினாறு அக்ஷரங்களும், யகாரம் முதல் க்ஷகாரம்முடியவுள்ள ஒன்பது அக்ஷரங்களும் சேர்ந்து ஐம்பது அக்ஷரங்களாகும்.

2 மகாரம் நீங்கிய ககாரம் முதலிய ஐந்துவர்க்கங்கள், ய ர, ல, வ. ச, ஷ, ஸ ஹ, ஆகிய அக்ஷரங்களை தனித் தனி அகாரம் பிந்து இவற்றுடன் இரண்டு முறை உச்சரித்தலே அறுபத்து நான்கு கேஸரங்கள்.

3 எல்லாச் சொற்களுக்கும் காரணமான ஐம்பது அக்ஷரங்களுடன் கூடின பரமாகாச ரூபமான பரமகுண்டலினீ சத்தியே கர்ணிகை என்பதாம்.

4 ஹ்ருபூஜயேத்ஹ்ருதா என்ற பாடத்தைக் கொண்டால் "ஹ்ருதய பீஜத்தால் பூஜிக்க வேண்டும்" என்னும் பொருளைக் கொள்ளவேண்டும்.

ஓம் ஹாம் ரௌத்ர்யை நம:
ஓம் ஹாம் காள்யை நம:
ஓம் ஹாம் கலவிகரண்யை நம:
ஓம் ஹாம் பலவிகரண்யை நம:
ஓம் ஹாம் பலப்ரமதின்யை நம:
ஓம் ஹாம் ஸர்வபூததமந்யை நம:
ஓம் ஹாம் மநோந்மந்யை நம:

என்னும் மந்திரங்களால் பூஜிக்கவேண்டும்.

57½. பின்னர், பரமேசுவருடைய ஆஸனத்தை, பிருதிவீ தத்துவம் முதல் சுத்தவித்யா தத்துவமீறாகவுள்ள தத்துவங்களை வியாபிக்கிறதாகத் தியானித்து, **ஓம் ஹாம் ஶிவாஸநாய நம:** என்னும் மந்திரத்தால் பூஜிக்கவேண்டும்.

58½-61½. அந்த ஸிம்மாஸனத்தில் பரமேசுவரரை சுத்தமான ஸ்படிகம்போல் நிர்மலராகவும், ஐந்து முகங்களையும் தண்டம் போன்ற பத்துக் கைகளையுமுடையவராகவும், ஒவ்வொரு முகந்தோறும் மூன்று கண்களை உடையவராகவும், ஜடாமகுடத்தின் சோபையால் வியாபிக்கப்பட்டவராகவும், பிரகாசிக்கிற பாதிச் சந்திரனை சிரோபூஷணமாகவுடையவராகவும், வலது பக்கத்திலுள்ள தாமரை போன்ற ஐந்து கைகளில் சக்தி, கட்கம், சூலம், கட்வாங்கம், (யோகாப்யாஸத்திற்குச் சாதனமான தண்டம்) வரம் ஆகிய இவற்றையும், இடது பக்கத்திலுள்ள ஐந்து கைகளில் டமரு, (அதாவது துடி என்னும் சிறிய உடுக்கை) மாதுளம்பழம், ஸர்ப்பம், அக்ஷமாலை, நீலோத்பலம் இவற்றையும் தரித்திருப்பவராகவும், ஸாமுத்திரிகா லக்ஷணப்படி முப்பத்திரண்டு லக்ஷணங்களுடன் கூடியவராகவும், பத்மாஸனமாக அமர்ந்திருப்பவராகவும் தியானித்து, ஸதாசிவரைச் சேர்ந்ததாயும், சிவதத்வமென்னும் வேறு பெயரை உடைய பரபிந்துவை விஷயமாகவுடையதாயும் இருக்கிற சிவமூர்த்தியை **ஓம் ஹாம் ஹம் ஹாம் ஶிவமூர்த்தயே நம:** என்னும் மந்திரத்தால் நியாஸம் செய்து பூஜிக்கவேண்டும்.

## ஆவாஹந முறை,

62-65. எல்லோருக்கும் ஈசுவரராயும், எங்கும் செல்லுபவராயும், பிரபுவாயும், எல்லாவற்றையும் அறிபவராயும், எல்லா

வற்றையும் செய்பவராயும், சித்தனராயும், வியாபகராயும், நிஷ்களராயும், ஸ்வப்ரகாசராயும், இருக்கிற பரமசிவனைத் தியானித்து, பிர்மா முதலிய காரணேசுவரர்களைக் கடந்து (அதாவது பிர்மன் முதலாயினரைச் சொல்லக்கூடிய அகாரம் முதலிய கலைகளின் ஸ்தானங்களான இருதயம் முதலியவற்றைக் நடந்து) மூலமந்திரத்தை துவாதசாந்தம் வரை கொண்டுபோய், பின்னர் அம்மந்திரத்துடன் பரமசிவனை புருவநடுவுக்குக் கொண்டுவந்து, நெற்றியின் மத்தியில் (புருவநடுவில்) இருப்பவராயும், பிரகாசிக்கிற சந்திரனது காந்தியை உடையவராயும், ஷடங்கங்களுடன் கூடியவராயும், பிந்து சொரூபராயும், இருக்கிற பரமசிவனை, புஷ்பாஞ்சலியை அடைந்தவராகத் தியானித்து வித்யாதேகத்தில் சேர்க்க வேண்டும்.

66-67. ஆவாஹன முத்திரை செய்துகொண்டு இருதய மந்திரத்தால் பரமசிவனை ஆவாஹனம் செய்து, ஸ்தாபனமுத்திரையினால் ஸ்தாபனம் செய்து (அதாவது அனுக்ரஹம் செய்வதற்காக ஸதாசிவரது இருதயகமலத்தில் இருக்கச் செய்து) ஸந்நிதான முத்திரையினால் தனக்கு அருகே இருக்கச் செய்து, நிஷ்டுரமுத்திரையினால் நிரோதனம் செய்து, (அதாவது பூஜை முடியும் வரை பரமசிவன் ஸாந்நித்தியம் செய்து அனுக்ரஹிக்கவேண்டும் என்னும் பிரார்த்தனையைச் செய்து) காலகண்ட முத்திரை செய்து கஜ்ஞாய ஹூம் ஃபட் என்னும் மந்திரத்தால் விக்னங்களைப் போக்கி, இருதயமந்திரத்தை உச்சரித்து, லிங்கமுத்திரை நமஸ்காரமுத்திரைகளை பரமசிவனுக்குக் காண்பித்து, அவகுண்டனம் செய்யவேண்டும்.

## ஆவாஹனம் முதலியவற்றின் பொருள்.

68-71. பரமசிவனை ஆதரவுடன் பூஜகருக்கு எதிர்முகமாக இருக்கச்செய்வது இங்கு ஆவாஹனமென்று கூறப்படுகிறது. பூஜகரால்அன்புடன் கூடிய ஒரே மனதுடன் தனக்கு லக்ஷியமான மூர்த்தியினிடத்தில் சிவபெருமானை இருக்கச்செய்தல் ஸ்தாபனமாகும் என்று வித்வான்களால் கூறப்பட்டது. உலகத்திற்கு நாதனே! நான் உம்மைச் சேர்ந்தவன். என்னை அனுக்கிரகிக்க வேண்டும் என்று தன்னை ஆட்கொள்ளுதலைத் தெரிவிப்பது ஸாந்நித்தியமாகும்.

பரமேசுவரருக்கு விபுத்தன்மை (வியாபகத்தன்மை) இருந்த போதிலும் அந்த ஸாந்நித்யமானது 1 விரோதமாகாது. பூஜை முடியும் வரை வேறிடத்திற்குப்போகக் கூடாது; பூஜையை யேற்றருளவேண்டும் என்பது நிரோதமெனப்படும். பரமேசுவரருக்கு வியாபகத் தன்மை இருந்தபோதிலும் இத்தகைய நிரோதமானது பூஜகன் பொருட்டு வேண்டப்படுகிறது. எண்ணிறந்த காரணங்களை உடையவராகவும், சின்மயராகவும், எங்கும் நிறைந்திருப்பவராகவும் இருக்கும் பரமேசுவரரை அபக்தர்களுக்கு அறிவிக்காமல் மறைத்தலே அவகுண்டனமாகும்.

## ஆவாஹனம் முதலியவற்றிற்குப் பின்னர் செய்ய வேண்டுவன.

(72) ஆறு மந்திரங்களாலும் ஸகளீகரணஞ்செய்து, (அதாவது இருதயம் முதல் கை ஈறுகவுள்ள ஸ்தானங்களில் இருதய மந்திரம் முதலிய அங்கமந்திரங்களை நியாஸம் செய்து) அங்கங்களுக்கு அங்கியுடன் வேறுபடாதிருத்தலாகிய 2 ஐக்கியத்தைச் செய்து 3 அமிருதீகரணம் செய்யவேண்டும்.

(73) சூரியன் மிக வெப்பமான கிரணங்களுடன் கூடி எவ்வாறு பிறரால் ஆக்ரமிக்கக்கூடாதவராயும் ஸமர்த்தராயும் இருக்கிறாரோ, அவ்வாறு பரமேசுவரரும், தன்னைச் சேர்ந்த இருதயம் முதலிய அங்கங்களுடன் கூடி, பிறரால் ஆக்ரமிக்கக்கூடாதவராகவும் ஸமர்த்தராகவும் இருப்பதாகத் தியானம் செய்யவேண்டும்.

---

1 பரமசிவன் எங்கும் நிறைந்திருப்பதால் எல்லோருடைய சமீபத்திலும் இருக்கக்கூடும். ஆதலால் ஸந்நிதானம் பொருந்தாதெனின், கூறுதும். இத்தகைய ஸாதாரணமான ஸந்நிதானத்தை ஈண்டுக்கொள்ளுதலால் ஒருவித ப்ரயோஜனமும் இல்லை. பூஜிக்கப்படுவது பூஜிப்பது என்னும் தன்மையுடன் கூடின பூஜகருடைய அன்பிற்கு உரியதான அனுக்ரகம் செய்யப்படுவது அனுக்கிரகம் செய்வது என்னும்ஸம்பந்த ரூபமான ஸந்நிதானத்தை இங்குக்கொள்ளவேண்டும். இக்கருத்துப்பற்றியே மூலத்தில் பரமேசுவரருக்கு வியாபகத்தன்மை இருந்தபோதிலும் அந்தஸாந்நித்யமானது விரோதமாகாது என்று கூறப்பட்டது.

2 மூலமந்திரத்தால் செய்து என்பது கருத்து.

3 அமிருதீகரணமாவது விக்ரகத்தையும் பரமசிவனையும் அபேதமாக எண்ணுதல்.

## இருதயம் முதலிய அங்கங்களின் பொருள்.

(74-75) பரமேசுவரருடைய சித்சத்தியானது இருதயமாகவும், அஷ்டைசுவரியமானது சிரஸாகவும், பிறருக்கு உட்படாத 1 சிவத்தன்மையானது எல்லாவற்றிற்கும் மேலாக இருக்கிற சிகையாகவும், சத்துருக்களின் ஆயுதங்களினுல் பேதிக்கமுடியாத தேஜஸானது கவசமாகவும், (பிறரால்) ஸஹிக்க முடியாத பிரதாபமானது விக்னங்களைப் போக்கக் கூடிய அஸ்திரமாகவும் கூறப்படுகின்றன.

## பாத்யம் முதலியன கொடுத்தல்.

(76_78) ஓம் **ஹாம் ஶிவாய நமஃ** என்று உச்சரித்து பகவானுடைய இரண்டு பாத கமலங்களில் 2 பாத்யத்தையும், ஓம் **ஹாம் ஶிவாயஸ்வதா** என்று உச்சரித்து ஈசானம் முதலிய ஐந்து முகங்களில் ஆசமனீயத்தையும், ஓம் **ஹாம் ஶிவாய ஸ்வாஹா** என்று உச்சரித்து ஐந்துசிரசுகளிலும் அர்க்யத்தையும், ஓம் **ஹாம் ஶிவாய வௌஷட்** என்று உச்சரித்து ஐந்து சிரசுகளிலும் புஷ்பம் அறுகு அக்ஷதை இவற்றையும் சமர்ப்பிக்கவேண்டும். இவ்வாறு பரமேசுவரரை 3 பத்து ஸம்ஸ்காரங்களால் உபசரித்து பின்னர் புஷ்பம் முதலியவற்றைக்கொண்டு 4 ஐந்து உபசாரங்களாலும் முறைப்படி பூஜிக்கவேண்டும்.

---

1 **ஶிவத்வம்** என்ற பாடத்தைக்கொள்ளாமல் **வஶித்வம்** என்பதாகப் பாடபேதத்தைக்கொண்டால் வசப்படுத்தும் தன்மையானது என்ற பொருளைக்கொள்ளவேண்டும்.

2 இங்கு பாத்யம் முதலியவற்றை விசேஷார்க்யஜலத்தால் ஸமர்ப்பிக்கவேண்டும்.

3 ஆவாஹனம், ஸ்தாபனம், ஸாந்நித்யம், ஸந்நிரோதனம், ஸகளீகரணம், ஏகீகரணம், பாத்யம், ஆசமனீயம், அர்க்யம், புஷ்பம் ஸமர்ப்பித்தல் ஆகிய பத்து ஸம்ஸ்காரங்களால் என்பது கருத்து.

4 சந்தனம் புஷ்பம் கிழங்கு வேர் பழம் முதலிய பிருதிவீசம்பந்தமான உபசாரங்கள், ஜலம் பால் ஆடைதயிர் கோமூத்திரம் முதலிய ஜலசம்பந்தமான உபசாரங்கள், சுவர்ணம், இரத்தினம் தீபம் ஆபரணம் முதலிய அக்னிஸம்பந்தமான உபசாரங்கள், சாமரம் தூபம் விசிறி முதலிய வாயுஸம்பந்தமான உபசாரங்கள், கீதம் வாத்யம் மணிசப்தம் முதலிய ஆகாசஸம்பந்தமான உபசாரங்கள் ஆகிய பஞ்சபூதங்களின் ஸம்பந்தமான ஐந்து உபசாரங்களாலும் என்பது கருத்து.

## அபிஷேக முறை.

79. பின்னர், கடுகு நெய்யால் சிவபெருமானுக்கு தைலாபிஷேகம் செய்வித்து, மாக்காப்பு மஞ்சள்காப்புச் சாத்தி, அர்க்ய ஜலத்திவலை புஷ்பம் இவற்றுடன் அபிஷேக கலசத்திலுள்ள தீர்த்தங்களால் மெதுவாக அபிஷேகம் செய்யவேண்டும்.

80-80½. பால் தயிர் நெய் தேன் சர்க்கரை என்னும் இவற்றை, போகத்தில் விருப்பமாயின் ஈசானம் முதலாகவும், முக்தியில் விருப்பமாயின் அதற்கு மாறாகவும் (ஸத்யோஜாதம் முதலாகவும்) மந்திரித்து, (சுத்தி செய்து) இடையிடையே சுத்த ஜலத்தால் அபிஷேகம், தூபம் ஸமர்ப்பித்தல் இவை முதலிய யாவற்றுடன் பரமசிவனுக்கு மூலமந்திரத்தை உச்சரித்து அபிஷேகஞ் செய்யவேண்டும்.

81½. யவமென்னும் தான்யத்தின் மாவைப் பரமேசுவரருக்குச் சாத்தி ஏராளமான குளிர்ந்த தீர்த்தங்களாலும், சக்திக்குத் தக்கவாறு கந்தோதகத்தாலும் பரமசிவனை அபிஷேகம் செய்வித்து,

82½. பரிசுத்தமான ஆடையால் திருவொற்றுடை சாத்தி அர்க்யத்தைச் சமர்ப்பிக்கவேண்டும். 1 கைகளை இரண்டு ஸ்தனங்களுக்கும் கீழாக வைத்துக்கொண்டு முத்திரை செய்யலாகாது. ஈசுவரருக்கு மேலே கையைக் கொண்டுபோய் அர்க்யம் ஸமர்ப்பிக்கலாகாது.

83. ஈசுவரருடைய சிரசு ஒருபொழுதும் புஷ்பம் இல்லாமல் இருக்கக்கூடாது.

## அபிஷேகத்திற்குப்பின் செய்யவேண்டுவன.

84. வாஸனை உள்ள பச்சைக்கர்ப்பூரம் குங்குமப்பூ கலந்த சந்தனத்தைச் சிவபெருமானுக்கு இட்டு சிவமந்திரத்தால் புஷ்பங்களை (புஷ்பமாலைகளை) யும் ஆபரணங்களையும் சாத்தி வஸ்திரந் தரித்தல் வேண்டும்.

---

1 கைகளை இரண்டு ஸ்தனங்களுக்குக் கீழாக வைத்துக்கொண்டு முத்திரை செய்யலாகாது. இருதயத்தின் நேராகக் கைகளை வைத்துக் கொண்டு முத்ரையைக் காண்பிக்கவேண்டும். வலம் இடமாக ஐந்து மூர்த்தாக்களில் அர்க்யத்தைச் சமர்ப்பிக்கவேண்டும். ஈசுவரருக்கு மேலே கையைக் கொண்டுபோய் அர்க்யம் ஸமர்ப்பிக்கக்கூடாது என்று சோமசம்பு பத்ததி வியாக்யானமான ஸ்பஷ்டபோதினியில் கூறப்பட்டிருக்கிறது.

85-86. தூபத்துடன் கூடிய பாத்திரத்தை அஸ்திரமந்திரத்தால் புரோக்ஷித்து, இருதயமந்திரத்தால் அருச்சித்து, மணியை அஸ்திரமந்திரத்தால் பூஜித்து அடித்துக்கொண்டு, குங்கிலியத்தை (தூபபாத்திரத்தணலில் இட்டுத்) தஹித்துச் சிவபெருமானுக்குச் சமர்ப்பித்து, பின் ஸ்வதா சப்தத்தை இறுதியிலுடைய இருதயமந்திரத்தால் ஆசமனம் ஸமர்ப்பிக்கவேண்டும். அவ்வாறே கற்பூர ஆராத்திரிகத்தையும் சமர்ப்பித்து, மீண்டும் ஆசமனம் ஸமர்ப்பிக்கவேண்டும்.

## போகாங்க பூஜை.

86½. சிவபெருமானை வணங்கி உத்தரவு பெற்று போகாங்க பூஜை செய்யவேண்டும்.

87-90. அக்கினிதிக்கு ஈசானதிக்கு நிருருதிதிக்கு வாயுதிக்கு ஆகிய நான்கு திக்குக்களிலும் முறையே இருதயத்தை வெண்ணிறமாகவும், சிரஸைப் பொன்னிறமாகவும், சிகையைச் செந்நிறமாகவும், கவசத்தைக் கருநிறமாகவும் தியானித்து இந்த நான்கு தேவர்களையும் பத்மாஸனத்தில் இருப்பவர்களாகவும், பாதிச் சந்திரனை ஜடாமகுடத்தில் தரித்திருப்பவர்களாகவும், மூன்று கண்களையும் நான்கு கைகளையுமுடையவர்களாகவும், எல்லா ஆபரணங்களாலும் அலங்கரிக்கப்பட்டவர்களாகவும், பரமேசுவரரைப் பார்த்துக்கொண்டு இருப்பவர்களாகவும், சத்தி சூலம் அபயம் வரம் இவற்றுடன் கூடியவர்களாகவும், நான்கு முகங்களை உடையவர்களாகவும், சிவாஸனபத்மத்தின் தளங்களில் இருப்பவர்களாகவும் தியானித்து தத்தம் மந்திரங்களால் [1] பூஜிக்கவேண்டும்.

---

1 ப்ரஹ்மசம்பு பத்ததியில் "இந்த இருதயம் முதலிய தேவர்களை அவரவர்களின் மந்திரங்களைக்கொண்டு ஆவாஹனம் முதலிய ஸம்ஸ்காரங்களால் அர்ச்சிக்கவேண்டும். அவகுண்டனம் அமிருதீகரணம் இவை கிடையாது. இவர்களுக்கு எட்டு ஸம்ஸ்காரங்கள்தான் தனித்தனியாக உண்டென்று விதிக்கப்பட்டிருக்கிறது. ஸ்நபனம் தீபம் தூபம் நைவேத்யம் ஆகிய இவை இந்த நான்கு தேவர்களும் அங்கதேவர்களாய் இருப்பதால் சிவபெருமானினும் வேறாக இவர்கட்குக் கிடையா. பரமசிவனுடைய ஸந்நிதியில் செய்யப்படுவன, இந்த அங்கதேவர்களுக்கும் சேர்ந்தவையாகும்" என்று கூறப்பட்டிருப்பதால் ஆவாஹனம் ஸ்தாபனம் ஸந்நிதானம் ஸந்நிரோதனம் பாத்யம் ஆசமனம் அர்க்யம் புஷ்பம் ஸமர்ப்பித்தல் ஆகிய எட்டு ஸம்ஸ்காரங்களால் பூஜிக்கவேண்டுமென்பது கருத்து.

(91) அஸ்திரத்தை கோரப்பல்லால் பயங்கரமாகவும், மிகவும் உக்ரமாகவும், வஜ்ரத்திற்குச் சமானமான காந்தியை உடையதாகவும், லிங்கத்தைச் சுற்றிக் கிழக்கு முதல் வடக்கு ஈறுகவுள்ள திக்குக்களிலுள்ள நான்கு தளங்களையும் அடைந்திருப்பதாகவும் தியானித்துப் பூஜிக்கவேண்டும்.

92-92½. தூபம், தீபம், நைவேத்யம், பாநீயம், ஆசமனம், கைதுடைத்தல் (சந்தனத்தால் கைதுடைத்தல்) தாம்பூலம், முகவாஸம் (வாஸனையுருண்டை) கண்ணாடி ஆகிய இவற்றை மூலமந்திரத்தை உச்சரித்து பரிவாரங்களுடன் கூடிய பரமசிவனுக்குச் சமர்ப்பிக்கவேண்டும்.

## பவித்திரம் ஸமர்ப்பித்தல்.

93½. அறுகு அக்ஷதைகளுடன் கூடிய பவித்திரத்தை பரமசிவனுடைய சிரஸில் ஆரோகணித்து, பரமசிவனை பிரமன் முதலாயினோரால் ஸ்தோத்ரம் செய்யப்படுகிறவராகவும் ஸந்தோஷமுடையவராகவும் பாவிக்கவேண்டும்.

## ஜபஸமர்ப்பணம்.

94. 1 மனதாலேனும், உதடுஅசைதலாகியஉபாம்சுஸ்வரத்தாலேனும், பிறருக்குக் கேட்கும்படியாகவேனும் ஜபம் செய்யவேண்டும்.

95-97½. மூலமந்திரத்தை நூற்றெட்டு எண்ணுகை வேகமின்றியும் அதிக தாமதமின்றியும் ஜபித்து, ஜபத்தை இருதயத்தால் அபிமந்திரித்து, கவசத்தால் அவகுண்டனஞ் செய்து, அஸ்திரத்தால் ஸம்ரக்ஷனஞ்செய்து, உத்பவமுத்திரை செய்து, தர்ப்பை புஷ்பம் அக்ஷதை இவற்றுடன் 𑌗𑍁𑌹𑍍𑌯𑌾𑌤𑌿𑌗𑍁𑌹𑍍𑌯𑌗𑍋𑌪𑍍𑌤𑌾 𑌤𑍍𑌵𑌂 𑌗𑍃𑌹𑌾𑌣𑌾𑌸𑍍𑌮𑌤𑍍𑌕𑍃𑌤𑌂 𑌜𑌪𑌮𑍍 । 𑌸𑌿𑌦𑍍𑌧𑌿𑌰𑍍𑌭𑌵𑌤𑍁 𑌮𑍇 𑌦𑍇𑌵 𑌤𑍍𑌵𑌤𑍍𑌪𑍍𑌰𑌸𑌾𑌦𑌾𑌤𑍍𑌤𑍍𑌵𑌯𑌿 𑌸𑍍𑌥𑌿𑌤𑍇 ॥ இதன் பொருள் "குஹ்யம் அதிகுஹ்யம்

1 மனதால் செய்யப்படும் ஜபம் ஸாத்துவிகஜபமாகும். உபாம்சுஜபம் ராஜஸஜபமாகும். புஷ்டி வசியம் ஆகிய பலன்களை உத்தேசித்து ஜபம்செய்யின் உபாம்சுவாசஜபம் செய்யவேண்டும். பிறருக்குக் கேட்கும்படியாக ஜபம் செய்வது தாமஸஜபமாகும். இந்த தாமஸஜபத்தை க்ரூரகர்மாவில் தான் உபயோகிக்கவேண்டும் என்பது சோமசம்புபத்ததி வியாக்யானத்தின் கொள்கை.

முதலிய மந்திர தத்துவங்களனைத்தையும் காப்பவர் நீரே. எல்லாவற்றையும் இரக்ஷிக்கிறவராய் இருப்பதால் என்னால் செய்யப்பட்ட ஜபத்தையும் ஏற்றருள வேண்டும். எந்த என் ஜபமானது உம்மிடத்தில் இருக்கிறதோ அதுகொண்டு நம்முடைய அனுக்ரஹத்தால் எங்களுக்கு போகமோக்ஷங்கள் ஸித்திக்கவே செய்யும்" என்பதாம். போகத்தில் விருப்புள்ளவர் இந்த ச்லோகத்தைச் சொல்லிக்கொண்டு மூலமந்திரத்தை உச்சரித்து அர்க்ய ஜலத்துடன் வலது கையால் பரமசிவனுடைய வரதஹஸ்தத்தில் ஸமர்ப்பிக்கவேண்டும்.

98-100. மோக்ஷத்தில் விருப்புள்ளவர் "𑌯𑌤𑍍𑌕𑌿𑌞𑍍𑌚𑌿𑌤𑍍 𑌕𑌰𑍍𑌮 𑌹𑍇 𑌦𑍇𑌵 𑌸𑌦𑌾 𑌸𑍁𑌕𑍃𑌤𑌦𑍁𑌷𑍍𑌕𑍃𑌤𑌮𑍍। 𑌤𑌨𑍍𑌮𑍇 𑌶𑌿𑌵𑌪𑌦𑌸𑍍𑌥𑌸𑍍𑌯 𑌹𑍂𑌂 𑌕𑍍𑌷𑌯 𑌶𑌙𑍍𑌕𑌰॥ 𑌶𑌿𑌵𑍋 𑌦𑌾𑌤𑌾 𑌶𑌿𑌵𑍋 𑌭𑍋𑌕𑍍𑌤𑌾 𑌶𑌿𑌵𑌃 𑌸𑌰𑍍𑌵𑌮𑌿𑌦𑌂 𑌜𑌗𑌤𑍍। 𑌶𑌿𑌵𑍋 𑌯𑌜𑌤𑌿 𑌸𑌰𑍍𑌵𑌤𑍍𑌰 𑌯𑌃 𑌶𑌿𑌵𑌃 𑌸𑍋𑌽𑌹𑌮𑍇𑌵 𑌹𑌿॥" இதன் பொருள் "ஓ ஈச! சிவபதத்தில் இருக்கிற என்னுடைய புண்யரூபமாயுள்ள கன்மத்தை எப்பொழுதும் காப்பாற்றும். பாபரூபமான கன்மத்தை எப்பொழுதும் நாசம் செய்யும். பலன் தருபவன் சிவனே. பலனை அனுபவிப்பவன் சிவனே. எல்லா ஜகத்துக்களும் சிவனே. எல்லாவிடங்களிலும் பூஜிப்பவன் சிவனே. இவ்வாறு சிவன் எல்லாமாய் இருத்தலால் நான் சிவமாய் இருக்கிறேன்" 1 என்பதாம். இவ்வாறு இந்த இரண்டு சுலோகங்களையும் சொல்லிக்கொண்டு பரமசிவனிடம் மனதைச் செலுத்தி முன்போல் ஜபத்தைச் சிவபெருமானுக்குச் சமர்ப்பிக்கவேண்டும்.

101½. பஞ்சப்ரஹ்ம ஷடங்கமந்திரங்களைத் தசாம்சமாக ஜபித்து சிவபெருமானுக்குச் சமர்ப்பித்து அர்க்யம் தூபம் முதலியவற்றைச் சமர்ப்பித்து பலவிதமான ஸ்தோத்திரங்களால் ஸ்தோத்ரம் செய்யவேண்டும்.

102½. பரிவாரங்களுடன் கூடினவராயும், ஸந்தோஷமுள்ளவராயும் இருக்கிற பரமேசுவரரை, 2 பிரதக்ஷிணம் செய்து, அஷ்

---

1 இந்த மூன்று மந்திரசுலோகங்களுக்கும் சிவார்ச்சனா சந்திரிகையில் விரிவாக உரை கூறப்பட்டிருக்கிறபடியால் இங்கு விரிக்கவில்லை.

2. அடிமேல் அடிவைத்துச் செல்லுதல், இருகைகளையும் அசைக்காதிருத்தல், ஸ்தோத்ரம் செய்தல், இருதயத்தில் சிவபெருமானைத் தியானித்தல் ஆகிய நான்கு அங்கங்கள் பிரதக்ஷிணத்திற்கு உள்ளன.

டமூர்த்தியாகிய பரமேசுவரருக்கு அன்புடன் 1 அஷ்டாங்க நமஸ்காரத்தையும் செய்ய வேண்டும்.

103½-104½. 2 ஸமாதி, 3 தபசு, த்யானம், 4 தாரணை, 5 பாவனை, 6 ஜபம் இவற்றால் தன்மூர்த்தி, அதாவது- (தன் சரீரம்) குருமூர்த்தி, புஸ்தகம் (அதாவது வித்யாபீடம்) கும்பத்தில் உள்ள தீர்த்தம், சிவாக்னி, சித்திரம் முதலியன, ஸ்தண்டிலம், (பூமி) லிங்கம் ஆகிய இவற்றில் பரமேசுவரரைப் பூசிப்பது மிகவும் மேலானதாகும். பரமேசுவர பூஜையானது ஆகமங்களில் எவ்வாறு என்னால் அறியப்பட்டதோ, அவ்வாறே இங்கு கூறப்பட்டது.

ஆக சுலோகம்-201½.

## அக்கினிகாரிய விதி.

### அக்கினி குண்டத்திற்குச் செல்லும் முறை

1. பின்னர் ஆசாரியர் சிவபெருமானிடமிருந்து விடை பெற்று, ஸாமான்யார்க்ய பாத்திரத்தைக் கையில் எடுத்துக் கொண்டு, அக்னிகாரியத்திற்கு வேண்டிய சாமான்களுடன், சிவபெருமானைத் தியானித்து, வலமாக அக்னிகுண்டமிருக்கும் இடத்திற்குச் செல்ல வேண்டும்.

2. அக்கினிகாரியத்திற்குரிய எல்லாத்திரவியங்களையும் திவ்ய திருஷ்டியால் பார்வையிட்டுக்கொண்டு குண்டத்தின் நாபியின் முன்பாக வடக்கு முகமாக உட்கார வேண்டும்.

## குண்ட ஸம்ஸ்கார விதி.

3. குண்டத்திற்கு நிரீக்ஷணம், (நிரீக்ஷணமாவது-மூலமந்திரத்தை உச்சரித்து அணிவிரல் பெருவிரல்களால் இருகண்களி

1. சிரசு ஒன்று, கைகள் இரண்டு, காதுகள் இரண்டு, மோவாய் ஒன்று, புஜம் இரண்டு என்னும் இவற்றால் பூமியைப் பரிசித்துச் செய்யப்படும் நமஸ்காரம் அஷ்டாங்க நமஸ்காரமாகும்.

2. ஸமாதியாவது தியானம் செய்யப்படும் பொருள் மாத்திரம்தோன்ற நிஷ்டையிலிருத்தல்.

3. தபஸாவது பிராணாயாமமாகும். 4 தாரணையாவது சித்தத்தைக் கட்டுப்படுத்தல். 5. பாவனையாவது மனத்தின் தொழில். 6. ஜபமாவது தியானம் செய்யப்படும் பொருள் தோற்றுவதற்காக அப்பொருளைச் சொல்லக் கூடிய மந்திரத்தை உச்சரித்தல்.

னும் நியாஸம் செய்து குண்டத்தைப் பார்வையிடுதல்) தர்ப்பை களுடன் கூடிய அர்க்ய ஜலத்தால் அஸ்திர மந்திரத்தை உச்சரித் துப் புரோக்ஷித்தல், அஸ்திர மந்திரத்தை உச்சரித்துத் தாடனம் செய்தல், (தாடனமாவது நீட்டப்பட்ட சுட்டு விரலை உடைய முஷ்டியால் அடித்தல்) கவசமந்திரத்தால் அப்யுக்ஷணம் செய்தல் (அப்யுக்ஷணமாவது கீழே நோக்கிய பதாகை ரூபமான உள்ளங் கையால் அர்க்ய ஜலத்தைத் தெளித்தல்)

4. அஸ்திரமந்திரத்தை உச்சரித்து 1 கனனம் செய்தல், (தோண்டுதல்) உத்தாரணம் செய்தல், (கிளறுதல்) 2 பூர்த்தி செய் தல் (நிரப்புதல்) ஸமமாகச் செய்தல், கவசமந்திரத்தால் நனைத் தல், அஸ்திரமந்திரத்தை உச்சரித்து குட்டனம் செய்தல், (குட் டனமாவது கெட்டிப்படுத்தக் கூடிய ஒரு ஸம்ஸ்காரம்.)

5. ஸம்மார்ஜனம் செய்தல், (புழுதியைப் போக்குதல்) மெ ழுகுதல், கலாரூபமாகச் செய்தல், (அதாவது நடுமேகலை கிழக்கு முதலிய நான்கு திக்குகளிலுள்ள மேகலைகள் ஆகிய இவற்றில் சாந்தியதீதை முதலிய கலைகளை நியாசம் செய்து கலாமயமாக்கு தல்) கவசமந்திரத்தை உச்சரித்து மூன்று நூல்களைச் சுற்றுதல், இருதய மந்திரத்தால் அர்ச்சித்தல், (ஓம் ஹாம் க்ஷாரயோய கூ ணாய நமஃ என்று அர்ச்சித்தல்.)

6. 3 வடக்கு முகமாக மூன்று ரேகைகளையும், கிழக்கு முக மாக ஒரு ரேகையையும், அல்லது கிழக்கு முகமாக மூன்று ரே கைகளையும், வடக்கு முகமாக ஒரு ரேகையையும் சிவமந்திரத்தை உச்சரித்து, தர்ப்பத்தால் செய்தல் .(ரேகையாவது கோடு)

---

1. கனனம் முதலிய இவை மனதாற் செய்யவேண்டுமென்பதுகருதது.

2. ஞான ரத்னாவளியில் ஹூம்பட்டை இறுதியிலுடைய அஸ்திரமந் திரத்தால் கனனம் உத்தாரணம் இவற்றையும், இருதய மந்திரத்தால் நிரப் புதல் ஸமமாகச் செய்தல் இவற்றையும் செய்ய வேண்டுமென்று கூறப்பட் டிருக்கிறது.

3. ஆசாரியர் வடக்கு முகமாக அமர்ந்திருப்பின் வடக்கு முகமாக மூன்று ரேகைகளையும், கிழக்கு முகமாய் அமர்ந்திருப்பின் கிழக்கு முக மாக மூன்று ரேகைகளையும் என்பது கருத்து.

6½. அஸ்திரமந்திரத்தால் வஜ்ரீகரணம்செய்தல், (அடிமுடிகளில் த்ரிசூல ரூபமாயுள்ள மூன்று தர்ப்பங்களால் செய்யப்படுவது வஜ்ரீகரணம் என்னும் ஸம்ஸ்காரமாகும்.) இருதய மந்திரத்தை உச்சரித்து 1 தர்ப்பங்களால் சதுஷ்பதமென்னும் ஸம்ஸ்காரம் செய்தல் ஆகிய பதினெண் ஸம்ஸ்காரங்களையும் குண்டத்திற்குச் செய்ய வேண்டும்.

## வாகீசுவரீ வாகீசுவரர்களை ஆவாஹனம் செய்தல்

7, கவச மந்திரத்தை உச்சரித்து அக்ஷபாடம் செய்து, (அதாவது குண்டத்தின் நடுவிலுள்ள கண்டத்திற்கு மேலே கிழக்கு நுனியாகவும், வடக்கு நுனியாகவும் தர்ப்பங்களைப் பரப்புதல்) இருதய மந்திரத்தை உச்சரித்து தர்ப்பத்தால் செய்யப்பட்ட ஆஸனத்தைச் 2 சமர்ப்பிக்க வேண்டும்.

8. பச்சிலைப்பூவிற்குச் சமானமான காந்தியுடையவளாயும், (அதாவது கருமையான திருமேனியை உடையவளாயும்) நல்ல இலக்கணத்தை உடையவளாயும் இருக்கிற வாகீசுவரியையும், இவ்வாருன இலக்கணங்களையுடைய வாகீசுவரரையும், தர்ப்பத்தாலாகிய கூர்ச்சங்களில் இருதய மந்திரத்தால் ஆவாஹனம் செய்து பூஜிக்க வேண்டும்.

## குண்டத்தில் அக்கினியிடுதல்.

9. சமானமான பற்றுக்கோடுகளிலிருந்து (அரணி, சூரியகாந்தம், வேதியரது கிரஹம் இவற்றுள் யாதானுமொன்றிலிருந்து) கொண்டு வரப்பட்ட அக்னியை சுத்தமான பாத்திரத்தில் வைத்துக்கொண்டு, இராக்ஷஸபாகத்தை (அஸ்திர மந்திரத்தை உச்சரித்து நிருருதி திக்கில்) நீக்கி, நிரீக்ஷணம் முதலிய நான்கு சுத்திகள் செய்ய வேண்டும்.

10. ஜாடராக்கினி, பைந்தவாக்கினி, பௌதிகாக்கினி, இம்மூன்றையும் ஒன்ருகச் செய்து, ஆசாரியர் அக்கினி பீஜத்துடன்

---

1 கிழக்கு நுனியாகவும், வடக்கு நுனியாகவும் போடப்பட்ட இரண்டு தர்ப்பங்களால் என்பது கருத்து.

2 ஓம் ஹாம் வாகீஸ்வரீ வாகீஸ்வராஸநாய நம: என்ற மந்திரத்தால் என்பது கருத்து.

கூடிய ஓம் ஹாம் வஹ்நிசைதந்யாய நம: என்ற மந்திரத்தை உச்சரித்து அக்னிக்குச் சைதன்யத்தை நியாசம்செய்யவேண்டும்.

11. பாத்திரத்திலுள்ள அக்னியை ஸம்ஹிதாமந்திரத்தால் அபிமந்திரித்து, அஸ்திர மந்திரத்தால் ஸம்ரக்ஷணம், கவசமந்திரத்தால் அவகுண்டனம், வௌஷடந்தமான பிராஸாத மந்திரத்தை உச்சரித்து தேனுமுத்திரையால் அமிருதீகரணம் ஆகிய இவற்றைச் செய்ய வேண்டும்.

12-13. குண்டத்திற்கு மேலே வலமாக மூன்று முறை அக்கினியைச் சுற்றி பரமேசுவரருடைய வீர்யமென்று தியானித்து, வாகீசுவரியின் கர்ப்பநாடியில் வாகீசுவரரால் விடப்படுகிறதாகப் பாவித்து, பூமியில் முழங்கால்களை ஊன்றிக் கொண்டு இருதய மந்திரத்தை உச்சரித்து, தனக்கு நேராக அக்கினியை வைக்க வேண்டும்.

## அக்கினியை வைத்த பின்னர் செய்ய வேண்டுவன.

14-15. பின்னர் உள்ளே இருக்கிற பீஜத்தை (அக்னியை) நாபிஸ்தானத்தில் (குண்டத்தின் நடுவில் இருக்கிற பத்மம் போன்ற குண்டத்தின் அவயவத்தில்) 1 சேர்த்தல், வாகீசுவரி வாகீசுவரர்களுக்கு ஆடைகளைத்தரிப்பிவித்தல், இருதய மந்திரத்தை உச்சரித்து சௌசம் ஆசமனம் இவற்றைச் செய்வித்தல், (சௌசம் ஆசமனம் இவற்றிற்காக இருதய மந்திரத்தால் ஜலபிந்துவை வாகீசுவரீ வாகீசுவரர்களுக்குக் கொடுத்தல்) கர்ப்பாக்னியைப் பூஜித்தல், (ஓம் ஹாம் ஹாம் ஹ்ரூம் கர்ப்பாக்நயே நம: என்னும் மந்திரத்தால் கர்ப்பாக்னியைப் பூஜித்தல்) ஆகிய இவற்றைச் செய்து, கர்ப்பாக்கினியை ரக்ஷித்தற்காக அஸ்திர மந்திரத்தால் ஜபிக்கப்பட்ட தர்ப்பத்தால் ஆகிய கங்கணத்தை வாகீசுவரியின் மிருதுவான வலக்கையில் கட்ட வேண்டும்.

### கர்ப்பாதாநம் முதலிய ஸம்ஸ்காரங்கள்-

16. பின்னர், கர்ப்பாதானம் என்னும் ஸம்ஸ்காரம் ஸித்தித்தற்காக அக்னியை ஸத்யோஜாத மந்திரத்தால் அர்ச்சித்து,

1 நாபியில் அக்னியை வைத்தபொழுது நான்கு பக்கங்களிலும் சிதறிய அக்கினியை ஒரே இடத்தில் குவித்தல் என்பது கருத்து.

இருதய மந்திரத்தை உச்சரித்து (எள்ளைக் கொண்டு) மூன்று ஆகுதிகள் செய்யவேண்டும்.

17. மூன்றாவது மாஸத்தில் பும்ஸவனம் என்னும் ஸம்ஸ்காரம் ஸித்தித்தற்காக, வாமதேவ மந்திரத்தால் பூஜித்து, சிரோ மந்திரத்தை உச்சரித்து எள்ளால் மூன்று ஆகுதிகளைக்கொடுத்து ஜலபிந்துவை விடவேண்டும்.

18. ஆறாவது மாஸத்தில் ஸீமந்தோன்னயனம் என்னும் ஸம்ஸ்காரம் ஸித்தித்தற்காக, அகோர மந்திரத்தால் பூஜித்து சிகாமந்திரத்தால் மூன்று ஆகுதிகளைக் கொடுக்க வேண்டும். சிகா மந்திரத்தாலேயே முகம் முதலிய அங்கங்களைக் கற்பித்தல் வாயைத் திறத்தல் வாயைச் சுத்தி செய்தல் இவற்றை மூன்று ஆகுதிகளால் செய்ய வேண்டும்.

### ஜநநமான பின்னர் செய்ய வேண்டுவன.

19. பத்தாவது மாஸத்தில் தத்புருஷ மந்திரத்தால் அருச்சித்து கவசமந்திரத்தால் மூன்று ஆகுதிகள் கொடுத்து ஜாதகர்மமென்னும் ஸம்ஸ்காரத்தைச் செய்ய வேண்டும்.

20. கர்ப்பமலத்தைப் போக்கும் ஸ்நானத்திற்காக அக்னியைத் தர்ப்பம் முதலியவற்றால் ஜ்வாலை செய்து 1 தங்கக்காப்பை தேவி தரித்திருப்பதாகத் தியானித்து இருதய மந்திரத்தால் அர்ச்சிக்க வேண்டும்.

21. உடனே சூதகம் நீங்கும் பொருட்டு குண்டத்தை அஸ்திர மந்திரத்தால் மந்திரிக்கப்பட்ட ஜலத்தால் புரோக்ஷித்து, அஸ்திரமந்திரத்தை உச்சரித்து, தர்ப்பத்தால் குண்டத்திற்கு வெளியில் தாடனம் செய்து கவசமந்திரத்தால் அப்யுக்ஷணம் செய்யவேண்டும்.

22. கிழக்கு முதலிய மேகலைகளில் வெளியில் அஸ்திர மந்திரத்தை உச்சரித்து தர்ப்பங்களை வடக்கு நுனியாகவும் கிழக்கு நுனியாகவும் பரப்பி, அந்த தர்ப்பங்களில் பரிதி விஷ்டரம் ஆகிய இவற்றை இருதய மந்திரத்தால் ஸ்தாபிக்க வேண்டும். (குண்

---

1 தர்ப்பத்தாலாகிய காப்பை அவிழ்த்துவிட்டுத் தங்கத்தாலாகிய காப்பை தேவி தரித்திருப்பதாகத் தியானித்து என்பது பொருள்.

டத்திற்கு பரிஸ்தரணமாகப் போடப்படும் கிளைகள் பரிதி எனவும், தர்ப்பமுஷ்டிகள் விஷ்டரமெனவும் கூறப்படும்.)

23. பின்னர் வாயிலிருந்து வரும் உமிழ்நீரைப் போக்குதற்காக அடிமுடிகளை நெய்யில் தோய்த்த ஐந்து சமித்துக்களை அஸ்திர மந்திரத்தை உச்சரித்து ஹோமம் செய்ய வேண்டும்.

## அக்கினிக் குழந்தையைக் காப்பாற்றும் முறை.

24. கிழக்கு முதல் வடக்கு ஈறுகவுள்ள நான்கு திக்குக்களில் உள்ள பரிதிகளில் 1 பிரமன், ருத்ரர், விஷ்ணு, அனந்தர் இவர்களை முறையே இருதய பீஜத்தோடு பூஜிக்க வேண்டும்.

25. அக்கினிக்கு எதிர்முகமாக இருக்கிறவர்களாயும், விஷ்டரத்தில் இருப்பவர்களாயும், இருக்கிற இந்திரன் முதல் ஈசானர் ஈறுகவுள்ளவர்களை, முறையே தத்தம் திக்குகளில் இருதய பீஜத்தை உச்சரித்துப் 2 பூஜிக்க வேண்டும்.

26. பின்னர் விக்னக் கூட்டத்தை அகற்றி, அக்னிக்குழந்தையை இரக்ஷியுங்கள் என்ற இந்த சிவாக்ஞையை பரிதிவிஷ்டரங்களில் இருக்கும் தேவர்களுக்கு அறிவிக்க வேண்டும்.

## ஸ்ருக் ஸ்ருவம் இவற்றின் ஸம்ஸ்காரம்.

27. ஸ்ருக் ஸ்ருவம் என்னும் இவற்றை முறையே மேல்நோக்கிய முகமாகவும், கீழ்நோக்கிய முகமாகவும் பிடித்துக் கொண்டு,

---

1 கிழக்கு திக்கில் 𑌓𑌂 𑌹𑌾𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌣𑍇 𑌨𑌮𑌃, மேற்குத் திக்கில் 𑌓𑌂 𑌹𑌾𑌂 𑌵𑌿𑌷𑍍𑌣𑌵𑍇 𑌨𑌮𑌃, தெற்குத்திக்கில் 𑌓𑌂 𑌹𑌾𑌂 𑌰𑍁𑌦𑍍𑌰𑌾𑌯 𑌨𑌮𑌃, வடக்குத் திக்கில் 𑌓𑌂 𑌹𑌾𑌂 𑌅𑌨𑌨𑍍𑌤𑌾𑌯 𑌨𑌮𑌃 என்று பூஜிக்க வேண்டும்.

2 பூஜிக்கும் முறை வருமாறு:— "விஷ்டரங்களில் கிழக்கு முதலிய திக்குகளில் 𑌓𑌂 𑌹𑌾𑌂 𑌇𑌨𑍍𑌦𑍍𑌰𑌾𑌯 𑌨𑌮𑌃 𑌓𑌂 𑌹𑌾𑌂 𑌅𑌗𑍍𑌨𑌯𑍇 𑌨𑌮𑌃 𑌓𑌂 𑌹𑌾𑌂 𑌯𑌮𑌾𑌯 𑌨𑌮𑌃 𑌓𑌂 𑌹𑌾𑌂 𑌨𑌿𑌰𑍃𑌤𑌯𑍇 𑌨𑌮𑌃 𑌓𑌂 𑌹𑌾𑌂 𑌵𑌰𑍁𑌣𑌾𑌯 𑌨𑌮𑌃 𑌓𑌂 𑌹𑌾𑌂 𑌵𑌾𑌯𑌵𑍇 𑌨𑌮𑌃 𑌓𑌂 𑌹𑌾𑌂 𑌕𑍁𑌬𑍇𑌰𑌾𑌯 𑌨𑌮𑌃 𑌓𑌂 𑌹𑌾𑌂 𑌈𑌶𑌾𑌨𑌾𑌯 𑌨𑌮𑌃 என்பதாம்.

1 அக்னியிற் காய்ச்சிச்சுற்றி, தர்ப்பங்களின் அடியால் ஸ்ருக் ஸ்ருவம் இவற்றின் அடிகளைத் தொட்டு, மீண்டும் காய்ச்சிச் சுற்றி தர்ப்பங்களின் மத்யத்தால் ஸ்ருக்ஸ்ருவம் இவற்றின் மத்யங்களைத் தொட்டு, மீண்டும் காய்ச்சிச் சுற்றி தர்ப்பங்களின் நுனியால் ஸ்ருக்ஸ்ருவங்களின் நுனிகளைத் தொட்டு இவ்வாறு மூன்று முறை தொடுதல் வேண்டும்.

28. முறையே தர்ப்பங்களால் தொடப்பட்ட ஸ்ருக்ஸ்ருவங்களின் அடி, நடு, நுனிகளில் ஹாம் ஹீம் ஹூம் என்னும் பீஜாக்ஷரங்களுடன், முறையே ஆத்மதத்துவம், வித்யாதத்துவம் சிவதத்துவம் ஆகிய மூன்று தத்துவங்களையும் 2 நியாஸம் செய்ய வேண்டும்.

29-29½. ஸ்ருக்கில் சக்தியையும், ஸ்ருவத்தில் சம்புவையும் இருதய மந்திரத்தால் நியாஸம் செய்து, மூன்று நூற்களால் சுற்றப்பட்ட கழுத்தையுடையனவாயும், புஷ்பங்களால் பூஜிக்கப்பட்டனவாயும் உள்ள ஸ்ருக் ஸ்ருவம் இவற்றைத் தனது 3 வலப் பக்கத்தில் தர்ப்பங்களின் மேல் வைத்துக் கொள்ளவேண்டும்.

## ஆஜ்ய ஸம்ஸ்கார விதி.

30-31. பின்னர் பசுவின் நெய்யை எடுத்து, நிரீக்ஷணம் முதலியவற்றால் சுத்திசெய்து, தன் தேஹத்தைப்பிரமன் ரூபமாக

1 ஸ்ருக்ஸ்ருவங்களுக்கு காஷ்டத்தன்மை நீங்குதற்காக வீக்ஷணம் முதலியவற்றால் சுத்தி செய்து அக்கினியிற் காய்ச்ச வேண்டும்.

2 ௐ ஹாம் ஆத்மதத்த்வாய நம:, ௐ ஹாம் ஆத்மதத்த்வாதிபதயே ப்ரஹ்மணே நம:, ௐ ஹாம் வித்யாதத்த்வாய நம:, ௐ ஹாம் வித்யாதத்த்வாதிபதயே விஷ்ணவே நம:, ௐ ஹாம் சிவதத்த்வாய நம:, ௐ ஹாம் சிவதத்த்வாதிபதயே ருத்ராய நம:, என்று நியாசம் செய்ய வேண்டும். இவ்வாறு நியாசம் செய்தல் முமுக்ஷுக்களுக்கே ஆகும். போகத்தை விரும்புகின்றவர், தர்ப்பத்தின் நுனி நடு அடிகளால் ஸ்ருக்ஸ்ருவங்களின் நுனி நடு அடிகளைத் தொட்டு, ஹூம் ஹீம் ஹாம் என்னும் பீஜாக்ஷரங்களுடன் சிவதத்துவம் வித்யாதத்துவம் ஆத்மதத்துவம் இவற்றை நியாசம் செய்ய வேண்டும்.

3 கீழ் நோக்கிய முகங்களையுடையனவாக வைக்கவேண்டுமென்பது பொருள்.

தியானித்து, அந்த நெய்யை எடுத்துக் குண்டத்திற்கு மேல் [1]மும்முறை சுற்றி அக்கினியிற் காய்ச்சி அக்கினி திக்கில்வைத்துக்கொண்டு, தர்ப்பத்தின் நுனியால் நெய்யின் துளியை எடுத்து, ஓம் ஹாம் ப்ரஹ்மணெ ஸ்வாஹா என்று [2]ஹோமம் செய்யவேண்டும்.

32. மீண்டும் தன் தேகத்தை விஷ்ணுரூபமாகத் தியானித்து, நெய்யை ஈசான்ய திக்கில் ஸ்தாபித்து, எடுத்து, தர்ப்பத்தின் நுனியால் நெய்த்துளியை ஓம் ஹீம் விஷ்ணவெ ஸ்வாஹா என்னும் மந்திரத்தால் விஷ்ணுவின் பொருட்டு [3]ஓமம் செய்ய வேண்டும்.

33. பின்னர், தன் தேகத்தை ருத்ரரூபமாகத் தியானித்து, நெய்யை நாபியில் ஸ்தாபித்து, எடுத்து, ஓம் ஹூம் ருத்ராய ஸ்வாஹா என்னும் மந்திரத்தால் நெய்த் துளியைத் தர்ப்பத்தின் நுனியால் [4]ஹோமம் செய்ய வேண்டும்.

34. ஒட்டை அளவுள்ள இரண்டு தர்ப்பங்களின் நுனிகளால் செய்யப்பட்ட நடுவில் முடிச்சுள்ள (பிர்ம முடிச்சுள்ள) பவித்திரத்தை, [5]பெருவிரல் அணிவிரல்களால் பிடித்துக் கொண்டு, அஸ்திர மந்திரத்தால் நெய்யை அக்கினி முகமாக மூன்று முறை [6]உத்ப்லவனம் செய்ய வேண்டும். (சூக்ஷ்மரூபமாயுள்ள விக்னங்கள் உயரே செல்லுதல் உத்ப்லவனமாகும்.)

35. அவ்வாறே இருதய மந்திரத்தை உச்சரித்து தன்னை நோக்கி ஸம்ப்லவனத்தைச் (ஸம்ப்லவனமாவது சூக்ஷ்ம ரூபமா

---

1 மும்முறை சுற்றுவதால் பர்யக்கினி கரணமென்னும் ஸம்ஸ்காரம் கூறப்பட்டது. 2 இந்த ஹோமத்தால் தாபனமென்னும் ஸம்ஸ்காரம் கூறப்பட்டது. 3. இந்த ஹோமத்தால் அதிச்ரயண ஸம்ஸ்காரம் கூறப்பட்டது.

4 இந்த ஹோமத்தால் உத்வாஸன ஸம்ஸ்காரம் கூறப்பட்டது.

5 இடது கையின் பெருவிரல் அணிவிரல்களால் அடிப்பாகத்தையும், வலது கையின் பெருவிரல் அணிவிரல்களால் நுனிப்பாகத்தையும் பிடித்துக் கொள்ள வேண்டும் என்பது கருத்து.

6 உத்ப்லவனம் செய்த பின்னர் முடிச்சை அவிழ்த்து தர்ப்பங்களை அக்கினியில் போடவேண்டும்.

யுள்ள விக்னங்கள் கீழே செல்லுதல்) செய்ய 1 வேண்டும். பின்னர் இருதய மந்திரத்தால் மந்திரிக்கப்பட்டதாயும் கொளுத்தப்பட்டதாயுமுள்ள தர்ப்பத்தை அஸ்திர மந்திரத்தை உச்சரித்து நெய்யில் போடுதலால் நெய்யைச்சுத்தி 2 செய்யவேண்டும்.

36. வேறொரு தர்ப்பத்தைக் கொளுத்தி 3 நீராஞ்சனம் செய்து, கொளுத்தப்பட்ட மற்றொரு தர்ப்பத்தால் அஸ்திர மந்திரத்தை உச்சரித்து தீபனம் செய்ய வேண்டும். (மற்றொரு தர்ப்பத்தைக் கொளுத்தி அஸ்திரமந்திரத்தால் நெய்யைச் சுற்ற வேண்டும்.) கொளுத்தப்பட்ட தர்ப்பத்தை மீண்டும் அக்கினியிற் போட வேண்டும்.

37. ஒட்டை அளவுள்ள நடுவில் முடிச்சுடைய தர்ப்பங்களை நெய்யில் போட்டு, நெய்யில் 4 சுக்லபக்ஷம் கிருஷ்ணபக்ஷம் இவற்றையும், பிங்களை இடை சுழுமுனை ஆகிய மூன்று நாடிகளையும் கற்பிக்க வேண்டும்.

38. முறையே மூன்று பாகங்களிலிருந்தும் நெய்யை ஸ்ருவத்தால் எடுத்து 5 ஹோமஞ் செய்யவேண்டும். ஸ்வா என்று

---

1 ஸம்ப்லவனத்தைச் செய்தபின்னர் பவித்திர முடிச்சை அவிழ்த்து அக்கினியிற் போடவேண்டும்.

2 சுத்தி செய்த பின்னர் இந்தத் தர்ப்பத்தையும் அஸ்திர மந்திரத்தை உச்சரித்து அக்கினியிற் போடவேண்டும்.

3 கவசமந்திரத்தால் நீராஞ்சனம் செய்து இந்தத்தர்ப்பத்தையும் அக்கினியிலிடவேண்டும் என்பது பொருள்.

4 தனக்கு வலது பக்கமாய் இருக்கும் நெய்யின் பாகத்தை சுக்லபக்ஷமாகவும், இடது பக்கமாயிருக்கும் நெய்யின் பாகத்தை கிருஷ்ண பக்ஷமாகவும், நெய்யில் வலதுபக்கம் இடது பக்கம் நடு ஆகிய இவற்றில் பிங்களை, இடை, சுழுமுனை ஆகிய மூன்று நாடிகளையும் கற்பிக்க வேண்டும்.

5 ஹோமஞ் செய்யும் முறை வருமாறு:— வலது பாகத்திலிருந்து ஸ்ருவத்தால் நெய்யை எடுத்து ஓம் ஹாம் ஸூர்யாய ஸ்வாஹா என்று அக்கினியினுடைய வலது கண்ணிலும், இடது பாகத்திலிருந்து நெய்யை எடுத்து ஓம் ஹாம் ஸோமாய ஸ்வாஹா என்று அக்கினியினுடைய இடது கண்ணிலும், நடுவிலிருந்துநெய்யை எடுத்து ஓம் ஹாம் ஸூர்ய்யேஷாம் ஹ்ராம் ஸ்வாஹா என்று அக்கினியினுடைய நடுக் கண்ணிலும் ஹோமம் செய்ய வேண்டுமென்பதாம்.

அக்கினியில் ஹோமஞ் செய்து, ஹா என்று சொல்லிக்கொண்டு எஞ்சிய நெய்யை அவ்வந்த நெய்யின் பாகத்தில் முறையே விட வேண்டும்.

ஓம் ஹாம் அக்நயெஸ்வாஹா, ஓம் ஹாம் ஸோமாயஸ்வாஹா, ஓம் ஹாம் அக்நீஷோமாப்யாம் ஸ்வாஹா என்றமந்திரங்கள் ஹோமமந்திரங்களாகும்.

39. கண்கள் திறப்பதற்காக அக்கினியின் மூன்று கண்களிலும் முகத்திலும், ஸ்ருவத்தில் நெய்யை நிரப்பி ஓம் ஹாம் அக்நயெ ஸ்விஷ்டக்ருதெ ஸ்வாஹா என்று சொல்லிக்கொண்டு நான்காவது ஆகுதியைச் செய்ய வேண்டும்.

40. பின்னர், நெய்யை ஷடங்க மந்திரங்களால் அபிமந்திரித்து, அஸ்திர மந்திரத்தால் ஸம்ரக்ஷணத்தையும், கவசமந்திரத்தால் அவகுண்டனத்தையும், (மூலமந்திரத்தை உச்சரித்து) தேநு முத்திரை செய்துகொண்டு அமிருதீகரணத்தையும் செய்ய வேண்டும்.

40½. இருதய மந்திரத்தால் நெய்த்துளியைத் தெளித்தலால் மற்ற நெய்களையும் சுத்தி செய்ய வேண்டும்.

41. அக்கினியின் முகங்களுக்கு அபிகாரம் செய்தல், (அபிகாரமாவது ஜ்வலிப்பித்தல்- அல்லது அக்கினியின் முகத்தில் தனித் தனி ஆகுதி கொடுத்தல்) ஸந்தானம் செய்தல், (ஸந்தானமாவது இரண்டு முகங்களுக்கும் சேர்த்து ஒரே ஆகுதி கொடுத்தல்) ஏகீகரணம் செய்தல், (ஏகீகரணமாவது அக்கினிதிக்கு முதற்கொண்டு வாயுதிக்கு முடியவும் நிருருதி திக்கு முதற்கொண்டு ஈசானதிக்கு முடியவும் இடைவிடாமல் நெய்யின் தாரையை ஸத்யோஜாதம் முதலிய ஐந்து முகங்களின் பொருட்டு விடுதல்) ஆகிய இவற்றைச் செய்ய வேண்டும்.

ஓம் ஹாம் ஸத்யோஜாதாய ஸ்வாஹா
ஓம் ஹிம் வாமதேவாய ஸ்வாஹா
ஓம் ஹூம் அகோராய ஸ்வாஹா
ஓம் ஹைம் தத்புருஷாய ஸ்வாஹா
ஓம் ஹௌம் ஈசாநாய ஸ்வாஹா

என்று சொல்லிக்கொண்டு ஒவ்வொரு நெய்யின் ஆகுதியினல் முகங்களுக்கு அபிகாரம் செய்ய வேண்டும்.

ஓம் ஹாம் ஹிம் ஸத்யோஜாதவாமதேவாப்யாம் ஸ்வாஹா ॥
ஓம் ஹிம் ஹூம் வாமதேவாகோராப்யாம் ஸ்வாஹா ॥
ஓம் ஹூம் ஹைம் அகோரதத்புருஷாப்யாம் ஸ்வாஹா ॥
ஓம் ஹைம் ஹௌம் தத்புருஷேஶாநாப்யாம் ஸ்வாஹா ॥

என்று சொல்லிக்கொண்டு இரண்டு முகங்களுக்கும் சேர்த்து ஒரே ஆகுதி செய்து ஸந்தானம் செய்ய வேண்டும்.

ஓம் ஹாம் ஹிம் ஹூம் ஹைம் ஹௌம் ஸத்யோஜாதவாமதேவாகோரதத்புருஷேஶாநேப்ய: ஸ்வாஹா என்று சொல்லிக்கொண்டு அக்கினிமூலை முதற்கொண்டு வாயுமூலை முடியவும், நிருருதி மூலை முதற்கொண்டு ஈசானமூலை முடியவும், நெய்யின் தாரையை விட்டு, இஷ்டமான முகத்தில் மற்ற முகங்களை அடக்குதல் ரூபமான ஏகீகரணத்தைச் செய்ய வேண்டும்.

42. அல்லது, ஈசானம் முதலிய முகங்களுள் எந்த முகம் தனக்கு 1 இஷ்டமாக இருக்கிறதோ, அந்த முகத்தைக் குண்டத்தின் அளவாகக் கற்பித்து, அந்த முகத்தில் மற்ற முகங்களையடங்கச் செய்வது ஏகீகரணமாகும்.

## அக்கினிக் குழந்தைக்குப் பெயரிடுதல்.

43. ஈசான மந்திரத்தால் அக்கினியை அருச்சித்து, அஸ்திரமந்திரத்தால் மூன்று ஆகுதிகள் கொடுத்து, ஓம் ஹாம் ஶிவாஶிவ ஹுதாஶந என்று நாமகரணம் செய்ய வேண்டும்.

## வாகீசுவரீ வாகீசுவரர்களை விஸர்ஜனம் செய்தல்.

44. அக்கினிக் குழந்தையின் மாதாபிதாக்களான வாகீசுவரீ வாகீசுவரர்களை; இருதய மந்திரத்தால் அருச்சித்து விஸர்ஜ

1 மூர்த்தி ஹோமம் ஈசான முகத்திலும், அணிமாதிகளை உத்தேசித்துச் செய்யப்படும் ஹோமம் தத்புருஷ முகத்திலும், பிராயச்சித்த ஹோமமும், க்ரூர கர்மாவைக் குறித்துச் செய்யப்படும் ஹோமமும், அகோர முகத்திலும், வசியம் ஆகர்ஷண ஹோமங்கள் வாமதேவ முகத்திலும், நித்யகர்ம ஹோமம் ஸத்யோஜாத முகத்திலும் செய்யப்படல் வேண்டும் என்று பிருஹத்காலோத்தரத்தில் கூறப்பட்டபடி கர்மானுகுணமாக முகத்தின் ஐக்கியத்தைச் செய்ய வேண்டும்.

னம் செய்து, (இங்கு விஸர்ஜனமாவது விஷ்டர கூர்ச்சத்தை அவிழ்த்து வாகீசுவரீ வாகீசுவரர்களைத் தமதிருப்பிடமேகச்செய்தல்) வௌஷடை இறுதியிலுடைய மூல மந்திரத்தால் நிஷ்க்ராமணம் முதலிய ஸம்ஸ்காரங்களைப் பூர்த்திசெய்கிற பூர்ணாகுதியைக் கிரமப்படி கொடுக்க வேண்டும்.

## அக்கினியில் சிவனைப் பூஜித்தல்.

45-46. பின்னர் அக்கினியிடமிருந்து ஆக்ஞையை (சிவனை ஆவாகனஞ்செய்து பூஜித்தற்கு ஆக்ஞையை) ப் பெற்று, அக்கினியினுடைய இருதயகமலத்தில் பிரகாசிக்கிற பரமேசுவரரை ஆவாஹனஞ் செய்து, முன்போல் ஆஸன பூஜை ஆவரண பூஜை இவற்றுடன் பூஜித்து, பரமேசுவரருக்குத் திருப்தியை உண்டு பண்ண வேண்டும். கும்பம் ஸ்தண்டிலம் இவற்றிலுள்ள சிவனுக்கும், அக்கினியிலுள்ள சிவனுக்கும், தனக்கும், நாடீஸந்தானம் செய்து, சக்திக்குத் தக்கவாறு மூல மந்திரத்தால் ஹோமமும் அங்கமந்திரங்களால் தசாம்ச ஹோமமும் செய்ய வேண்டும்.

## ஹோமம் செய்யப்படும் திரவியங்களின் அளவு.

47-51. நெய், பால், தேன், இவற்றை கால் பலம் அளவாகவும், தயிரை சுக்தி அளவாகவும், (விரல்கள் கொள்ளுமளவு சுக்தி எனப்படும்) பாயஸத்தை பரந்த விரல்களை உடைய உள்ளங்கை அளவாகவும், தின்னும் பண்டங்களைக் கடுக்காய் அளவாகவும், பொரியை ஒரு முஷ்டி அளவாகவும், வேர்களை மூன்று துண்டுகளாகவும், பழங்களை அந்தப் பழங்களின் அளவாகவும், (துண்டுபடுத்தாமலும்) அன்னத்தைப் பாதிகவள அளவாகவும், எள்ளு மாவு முதலிய ஐந்து சூக்குமதிரவியங்களை மிருகி முத்திரை அளவாகவும், கரும்பைக்கணுவளவாகவும், கொடிகளை இரண்டு அங்குலவளவாகவும், பூ இலை, இவற்றை அவை எவ்விதமிருக்குமோ அவ்வித அளவாகவும், ஸமித்துக்களைப் பத்து அங்குல அளவாகவும், பச்சைக் கற்பூரம், சந்தனம், குங்குமப்பூ, கஸ்தூரி, யக்ஷகர்த்தமம், (பச்சைக் கர்ப்பூரம், அகில், கஸ்தூரி, தக்கோலம், குங்குமப்பூ, இவற்றை ஒன்றாகச் சேர்த்து செய்யப்படும் கந்தம் யக்ஷகர்த்தமமெனப்படும்.) இவற்றைத் துவரை அளவாகவும், குங்கிலியத்தை இலந்தைக் கொட்டை அளவாகவும்,

கிழங்குகளை எட்டில் ஒரு பாகமாகவும், விதிப்படி ஓமம் செய்ய வேண்டும்.

51½. இவ்வாறான அளவுடன் 1 பஞ்சப்ரஹ்ம மந்திரங்களுக்குரிய பீஜாக்கரங்களை முன்னிட்டு பத மந்திரங்களால் ஹோமம் செய்ய வேண்டும்.

## பூர்ணாஹுதி செய்யும்முறை.

52-56. நெய்யால் நிரம்பப் பெற்ற ஸ்ருக்கில், ஸ்ருவத்தைக் கீழ்நோக்கிய முகமாக வைத்துக் கொண்டு, ஸ்ருக்கின் நுனியில் புஷ்பத்தைச் சாத்தி, ஸ்ருக் ஸ்ருவங்களின் பின் பாகத்தை இடது கையாலும், முன்பாகத்தை வலது கையாலும் பற்றிக்கொண்டு, சங்க முத்திரையுடன் அவற்றை எடுத்து, நிமிர்ந்த சரீரம் தலை கழுத்து இவற்றுடன் கால்களைச் சமமாக வைத்து நின்றுகொண்டு, நாபியில் ஸ்ருக்ஸ்ருவங்களின் அடியை வைத்துக் கொண்டு ஸ்ருக்கின் நுனியைப் பார்த்துக் கொண்டு பிரமன் முதலிய காரணேசுவரர்களைக் கடந்து, சுழுமுனை நாடி வழியாக வெளிவந்து இடது ஸ்தனம் வரை ஸ்ருக்ஸ்ருவங்களின் அடியைக் கொண்டுவந்து, ஒரே மனதுடன் வௌஷடை இறுதியில் உடைய மூல மந்திரத்தை மிக ஸ்பஷ்டமாக உச்சரித்து, யவமென்னும் வால் நெல்லளவான தாரையுடன் நெய்யை அக்கினியில் ஹோமம் செய்ய வேண்டும்.

57. பின்னர், அக்கினியில் எழுந்தருளியுள்ள சிவபெருமானுக்கு ஆசமனம், சந்தனம், தாம்பூலம் என்னும் இவற்றைச் சமர்ப்பித்து, அன்புடன் அவரது விபூதியை நெற்றியிலணிந்து மௌன நமஸ்காரஞ் செய்ய வேண்டும்.

---

1 ஈசானம் முதலிய பஞ்சப்ரம்ம மந்திரங்களைப் பிரயோகம் செய்யும் பொழுது முன் பிரணவத்தையும், பின்னர் அவற்றின் பீஜாக்கரங்களையும் உச்சரித்து, அதன் பின் ஈசானமூர்த்தாய என்பது முதலான வ்யோம வ்யாபி பதங்களின் நடுவில் படிக்கப்பட்ட மந்திரங்களை உச்சரித்து ஹோமம் செய்ய வேண்டுமென்பது கருத்து.

## அக்கினியிலிருக்கும் சிவபெருமானை விஸர்ஜனம் செய்தல்.

58-59. பின்னர், அக்கினியில் எழுந்தருளியிருக்கும் பரம சிவனைப் 1 பூஜித்து சஹ்ராய ஹாஉத்பூட் என்னும் மந்திரத்தால் பஞ்சப்ரஹ்ம ஷடங்க மந்திரங்களை ஸம்ஹார முத்திரையினால் எழுப்பி, சிவபெருமானிடம் சேர்த்து, சிவபெருமானைப் பொறுத்துக்கொள்ள வேண்டும் என்று 2 பிரார்த்தித்து, பரிதியில் இருப்பவர்களான பிரமன் முதலியவர்கள், விஷ்டரத்தில் இருப்பவர்களான இந்திரன் முதலியவர்கள் ஆகிய இந்தக் கணதேவதைகளையும், இருதய மந்திரத்தால் பூரகஞ் செய்து ஸம்ஹாரமுத்திரை செய்து எழுப்பி மிக்கச் சிரத்தையுடன் தன்னுடைய இருதய கமலத்தில் ஸ்தாபிக்க வேண்டும்.

## அந்தர்ப்பலி பஹிர்ப்பலிகள் கொடுக்கும் முறை.

60. குண்டத்தின் அருகில் அக்கினிதிக்கில் இரண்டு மண்டலமிட்டு, பாகஞ்செய்த முழு அன்னத்தின் முதல் பாகத்தை எடுத்து, அந்தர்ப்பலி பஹிர்ப்பலி இவற்றைக்கொடுக்கவேண்டும்.

முதலாவது மண்டலத்தில் கிழக்குத்திக்கில் ஓம் ஹாம் ருத்ரேப்யஸ்ஸ்வாஹா என்றும், தெற்குத் திக்கில் ஓம் ஹாம் மாத்ருப்யஸ்ஸ்வாஹா என்றும், மேற்குத்திக்கில் ஓம் ஹாம் கணேப்யஸ்ஸ்வாஹா என்றும், வடக்குத்திக்கில் ஓம் ஹாம் யக்ஷேப்யஸ்ஸ்வாஹா என்றும், ஈசான திக்கில் ஓம் ஹாம் க்ரஹேப்யஸ்ஸ்வாஹா என்றும்,

---

1 அஷ்ட புஷ்பங்களாலும் ஸம்ஹிதாமந்திரங்களாலும் பூஜித்து, பாத்யம் ஆசமனம் பராங்முகார்ச்யம் இவற்றைக் கொடுக்க வேண்டும் என்பது கருத்து.

2 ,,ஸ்வாமிந் க்ஷாமயே த்வாஹம் மந்தபக்த்யா மயா ।
க்ஷயிஷ்ணுநா க்ருதம் யத்து க்ஷந்தவ்யம் தத் க்ஷமஸ்வ மே ॥ ஓ சுவாமி, அழுக்கடைந்த புத்தியுள்ளவனும், அற்பனுமுள்ள அடியேனால் செய்யப்பட்ட சிறிய பக்தியால் தேவரீர் சிரமமுற்றிருக்கின்றீர். அவ்வபராதங்களைப் பொறுத்துக் கொள்ள வேண்டும்'' என்பதாகப் பிரார்த்தித்து என்பது கருத்து.

அக்கினி திக்கில் ஓம் ஹாம் சுவாஹேஸவ்யஸ்வாஹா என்றும், நிருருதி திக்கில் ஓம் ஹாம் 1 ராக்ஷஸேப்யஸ்வாஹா என்றும், வாயு திக்கில் ஓம் ஹாம் நாகேப்யஸ்வாஹா என்றும், மண்டலமத்தியத்தின் ஈசான திக்கில் ஓம் ஹாம் நக்ஷத்ரேப்யஸ்வாஹா என்றும், அக்கினி திக்கில் ஓம் ஹாம் ராசிப்யஸ்வாஹா என்றும், நிருருதி திக்கில் ஓம் ஹாம் விச்வேப்யஸ்வாஹா என்றும், வருணதிக்கு வாயுதிக்கு இவற்றின் நடுவில் ஓம் ஹாம் க்ஷேத்ரபாலாயஸ்வாஹா என்றும், இவ்வாறு அந்தர்ப்பலி சமர்ப்பிக்க வேண்டும்.

பின்னர் இரண்டாவது மண்டலத்தில் கிழக்கு முதல் ஈசானம் முடியவுள்ள திக்குக்களில் ஓம் ஹாம் இந்த்ராயஸ்வாஹா, ஓம் ஹாம் அக்நயேஸ்வாஹா, ஓம் ஹாம் யமாயஸ்வாஹா, ஓம் ஹாம் நிருதயேஸ்வாஹா, ஓம் ஹாம் வருணாயஸ்வாஹா, ஓம் ஹாம் வாயவேஸ்வாஹா, ஓம் ஹாம் ஸோமாயஸ்வாஹா, ஓம் ஹாம் ஈசானாயஸ்வாஹா என்றும், மேல்பாகத்தைக் குறித்து ஈசான திக்கில் ஓம் ஹாம் ப்ரஹ்மணேஸ்வாஹா என்றும், கீழ்பாகத்தைக் குறித்து நிருருதி திக்கில் ஓம் ஹாம் விஷ்ணவேஸ்வாஹா என்றும், இவற்றின் நடுவில் ஓம் ஹாம் க்ஷேத்ரபாலாயஸ்வாஹா என்றும் இரண்டு மண்டலங்களுக்கு வெளியில் ஓம் ஹாம் வாயஸாதிப்ய ஸ்ரயேஹேதிப்யஸ்வாஹா என்றும், இவ்வாறு பஹிர்ப்பலியை சமர்ப்பிக்க வேண்டும்.

பஹிர்ப்பலியை யாகமண்டபத்திற்கு வெளியிலாவது (உள்ளாவது) கொடுக்க வேண்டும். பிறகு அந்தர்ப்பலி பஹிர்ப்பலி இவற்றிற்குரிய மந்திரங்களை ஸம்ஹார முத்திரையால் எழுப்பித் தன்னுடைய இருதய கமலத்தில் ஸ்தாபிக்க வேண்டும்.

---

1 ரக்ஷோப்யஸ்வாஹா என்றும் பாடமுண்டு.

## லீலாவதி என்னும் நூலில் கூறப்பட்ட சுருக்கமான அக்கினிகாரியம்.

61-62-62½. லீலாவதி என்னும் சிவாகமத்தில், சுருக்கமாகக் கூறப்பட்ட குண்டத்திலேனும், ஸ்தண்டிலத்திலேனும் செய்யப்படும் அக்கினிகாரியமானது, இனிக் கூறப்படுகிறது. இராக்ஷத பாகத்தை விலக்கி, பெருவிரல் அணிவிரல்களால் நியாசம் செய்யப்பட்ட மூலமந்திரத்தையுடைய இரண்டு கண்களாலும் அக்கினியை நிரீக்ஷணம் செய்து, ஃஹ்ராய ஹூம்ஃபட் என்னும் மந்திரத்தால் புரோக்ஷணம் தாடனம் இவற்றைச் செய்து, கவச மந்திரத்தால் அப்யுக்ஷணஞ் செய்து, ஓம் ஹாம் ஹம் ஹாம் வஹ்னி மூர்த்தயே நமஃ என்று மூர்த்தி மந்திரத்தால் குண்டத்திலேனும் ஸ்தண்டிலத்திலேனும் அக்கினியை வைக்க வேண்டும்.

63-64-64½. ஓம் ஹாம் ஹம் ஹாம் வஹ்னி மூர்த்தயே நமஃ என்ற மந்திரத்தை உச்சரித்து, ஸம்ஹார முத்திரை செய்து, அக்கினியை எடுத்து, பூரகம் செய்து இழுத்து, கும்பகத்தால் பைந்தவாக்கினியுடனும், ஜாடராக்கினியுடனும் சேர்த்து, ரேசகத்தால் ஓம் ஹாம் ஹ்ரூம் ஹாம் வஹ்னி சைதந்யாய நமஃ என்னும் மந்திரத்தை உச்சரித்து, தீபக்கூட்டத்துக்குச் சமமான அக்கினிபீஜத்தை உத்பவ முத்திரை செய்து, குண்டத்திலுள்ள அக்கினியினிடத்திற் கலந்து, ஸத்யோஜாதம் முதலிய பஞ்சப்பிரமமந்திரங்களால் பூஜை செய்ய வேண்டும்.

65. அதன் பின், மூலமந்திரத்தை ஸ்வாஹாந்தமாக உச்சரித்து ஐந்து ஆகுதிகள் செய்ய வேண்டும்.

66-66½. ஓம் ஹாம் ஶிவாக்நிஸ்த்வம் ஹூம் நாமாஸி என்று அக்கினிக் குழந்தைக்கு நாமகரணம் செய்து, குண்டத்திற்கு வெளியில் கிழக்கு மேற்கு தெற்கு வடக்கு ஆகிய திக்குக்களில், முறையே அயன் ருத்திரர் விஷ்ணு அநந்தர் ஆகிய இவர்களை முறையே இருதய பீஜத்தோடு பூஜிக்கவேண்டும்.

67-67½. பின்னர், அக்கினியின் இருதய கமலத்தில் பரமசிவனை முன்போல் ஆதாரசக்தி முதல் பவித்திரம் சாத்துதல் முடிவாகப் பூஜித்து, மூலமந்திரத்தால் சக்திக்குத் தக்கவாறு

ஹோமம் செய்து, அங்க மந்திரங்களால் தாம்சஹோமமும் செய்ய வேண்டும்.

68-69-69½. அக்கினியில் எழுந்தருளியிருக்கும் பரமசிவனை விஸர்ஜனஞ்செய்து ஓம் ஹௌஷ்வௌஷாஹா ஓம் ஹாம் வௌஷாஹா ஓம் ஹாம் வௌஷாஹா ஓம் ஹௌம் ஹூம் வௌஷ் வௌஷாஹா என்று நான்கு ஆகுதிகள் செய்து, 1 ஹௌம் ஹூம் ஹ்ரீம் ஶிவாய நமஃ என்று சொல்லிக் கொண்டு அக்கினியை விஸர்ஜனம் செய்ய வேண்டும். லீலாவதி என்னும் நூலின் கொள்கை இவ்வாருகும்.

## சிவபூஜையின் முடிவு.

70-71-71½. பின்னர் லிங்கத்தில் எழுந்தருளியிருக்கும் பரமசிவனுடைய சமீபத்திற்குச் சென்று, ஓ சுவாமி! என்னுடைய பூஜை ஹோமம் இவற்ருல் உண்டாகும் புண்ய பலத்தை ஏற்றருள வேண்டுமென்று விண்ணப்பித்து, உத்பவ முத்திரை செய்து கொண்டு 2 இருதயபீஜத்தை முன்னிட்ட மூலமந்திரத்தை உச்சரித்து, அர்க்கிய ஜலத்துடன் பரமேசுவரரின் பொருட்டு ஸ்திரமான சித்தத்துடன் புண்ணிய பலத்தை நிவேதனம் செய்ய வேண்டும்.

72-73-73½. பின்னர் முன்போல் சிவபெருமானை அஷ்டபுஷ்பங்களால் பூஜித்து, ஸ்தோத்திரங்களால் ஸ்தோத்திரம் செய்து, வணங்கி, பராங்முகார்க்கியம் கொடுத்து, பொறுத்தருள வேண்டுமென்று பிரார்த்தித்து, நாராச முத்திரைசெய்துகொண்டு ஸ்வாஹாயஹூம்பட் என்னும் மந்திரத்தால் மந்திரங்களை உபஸம்ஹாரஞ் செய்து, திவ்ய முத்திரை செய்துகொண்டு லிங்கத்தில் மூர்த்தி மந்திரத்தால் சேர்க்க வேண்டும்.

74-74½. ஸ்தண்டிலத்தில் பரமேசுவரர் பூஜிக்கப்பட்டபின், மந்திரங்களைத் தன்னுடைய இருதய கமலத்திற் சேர்த்து ஆகமங்களிற் கூறப்பட்ட முறைப்படி சண்டேசுவர பூஜை செய்ய வேண்டும்.

ஆகச் சுலோகம் 275½.

---

1 ஓம் ஹாம் ஹௌம் ஹ்ருதயாய நமஃ என்று ப்ரதியில் இருக்கின்றது.

2 ஓம் ஹாம் ஶிவாய நமஃ என்னும் மந்திரத்தை என்பது கருத்து.

## சண்டேசுவர பூஜை.

1. இனி, பூஜை செய்யுமிடத்திற்கு ஈசான திக்கில், சாணத்தால் மெழுகப்பட்ட பூமியிலேனும், ஆடையால் மறைக்கப்பட்ட பீடத்திலேனும், சண்டேசுவரரைப் பூஜை செய்ய வேண்டிய முறை கூறப்படுகிறது.

ஓம் சண்டாஸநாய நம:, ஓம் சண்டமூர்த்தயே நம:, ஓம் த்வநிசண்டேச்வராய ஹும் பட் ஸ்வாஹா என்னும் மந்திரங்களால் ஆவாஹனம் செய்து, ஓம் சண்டஹ்ருதயாய ஹும் பட் நம:, ஓம் சண்டசிரஸே ஹும் பட் நம:, ஓம் சண்டசிகாயை ஹும் பட் நம:, ஓம் சண்டகவசாய ஹும் பட் நம:, ஓம் சண்டநேத்ரேப்யோ ஹும் பட் நம:, ஓம் சண்டாஸ்த்ராய ஹும் பட் நம:, என்று சொல்லிக் கொண்டு, 1 ஸகளீகரணஞ் செய்து சண்டரைத் தியானிக்கவேண்டும்.

2-3-4-5. ருத்திரருடைய கோபத்திலிருந்து உண்டானவராகவும், கருமை நிறமுடையவராகவும், பயங்கரராகவும், சூலம் டங்கமிவற்றைத் தரித்திருப்பவராகவும், ருத்திராம்சமுள்ளவராகவும், நான்கு முகங்கள் நான்கு கைகளை உடையவராகவும், முகத்திலிருந்து கிளம்பிய பெரிதான சுவாலையை உடையவராகவும், செம்மையான பன்னிருகண்களை உடையவராகவும், ஜடாமகுடத்தில் அர்த்தசந்திரனால் அலங்கரிக்கப்பட்டவராகவும், ஸர்ப்பத்தை வளையலாக அணிந்தவராகவும், ஸர்ப்பத்தைப் பூணூலாக உடையவராகவும், அக்ஷமாலை கமண்டலு இவற்றைத் தரித்திருப்பவராகவும், வெண்மையான பத்மாசனத்தின் மீது அமர்ந்திருப்பவராகவும், அன்புடன் வணங்குவோரின் பீடைகளை அகற்றுபவராகவும், சண்டேசுவரரைத் தியானித்து, அர்த்தசந்திர மண்டலத்திலேனும், டங்கவடிவான மண்டலத்திலேனும், சண்டேசுவரரைப் பூஜிக்க வேண்டும்.

$5\frac{1}{2}$, மூலமந்திரத்தைச் சத்திக்குத் தக்கவாறு ஜபித்து, அங்கமந்திரங்களை தசாம்சமாக ஜபிக்கவேண்டும்.

$6\text{-}6\frac{1}{2}$ (சுவாமிக்குச் சமர்ப்பிக்கப்பட்ட) பசு, பூமி, பொன், ஆடை, இவற்றையும் இரத்தினம், சுவர்ணம் இவற்றாலாகிய ஆப

1 மூலத்தில் கையில் அஸ்திரம் என்றிருக்கிறது.

ரணங்களையும் நீக்கி, ஏனைய நிர்மாலியங்களை ஓம் யூ ஶிவ ணொஶூராய ஹூம்ஃபட் ஸ்வாஹா என்று சொல்லி சண்டேசுவரருக்கு ஸமர்ப்பிக்க வேண்டும்.

7-8-8½. அவ்வாறே பிறநூல்களில் கூறப்பட்டிருக்கிறது. அது வருமாறு:— "நக்கக் கூடிய தேன் முதலியனவும், பருகக் கூடிய இளநீர் முதலியனவும், உண்ணக் கூடிய அன்னம் முதலியனவும், பானகம் முதலியனவும், தாம்பூலம் மாலை சந்தனம் முதலியனவும் ஆகிய நிர்மாலிய போஜனமானது, சிவனது ஆணையால் தேவரீருக்கு என்னால் கொடுக்கப்பட்டன, ஓ சண்டரே! இந்த எல்லாக் கிரியைகளின் கூட்டமானது உம்முடைய ஆணையால் என்னால் செய்யப்பட்டது. அறியாமையால் அதிகமாகவேனும் குறைவாகவேனும் செய்திருப்பினும், எல்லாக் கர்மாக்களும் எனக்குப் பூர்ணமானதாகவே ஆக வேண்டும்" என்பதாம்.

9-10. இவ்வாறு சண்டேசுவரருக்கு விக்ஞாபனம் செய்து சண்டேசுவர மூலமந்திரத்தால் பராங்முகார்க்கியம் சமர்ப்பித்து, ஓம் வணூ ஶிக்ஷுயெ நமஃ என்னும் மந்திரத்தால் ஸம்ஹார முத்திரை செய்துகொண்டு மெதுவாக உபஸம்ஹாரம் செய்து, பூரகம் செய்து மூலமந்திரத்தை உச்சரித்து மந்திரங்களைத் தன்னுடைய ஹ்ருதய கமலத்தில் சேர்க்க வேண்டும்.

11-11½. நிர்மாலியம் வைத்திருந்த இடத்தைச் சாணத்தால் மெழுகி, அஸ்திர ஜலத்தால் புரோக்ஷித்து, அர்க்கிய பாத்திரத்திலுள்ள மந்திரங்களை உத்தாபனம் செய்து, கை முதலியன கழுவி, ஆசமனம் செய்து, முறைப்படி ஸகளீகரணம் செய்ய வேண்டும்.

ஆகச் சுலோகம் 286½.

## கபில பூஜை.

ஓம் கவிலெ நமெ நமஃ, ஓம் கவிலெ ஹமெ நமஃ, ஓம் கவிலெ ஸுஶீலெ நமஃ, ஓம் கவிலெ ஸுரமெ நமஃ, ஓம் கவிலெ ஸுமநஸெ நமஃ, என்று சொல்லிக்கொண்டு கபிலையை அருசித்து,

1-1½. ஓம், ஸௌரபெயி ஜமந்நாதா தெவாநாஂ ப்ரதஷூதெ ।
ஶ்ரூஹாண வரதெ ஶ்ராஸஂவிஷ்தாயஷ்ஷ தெஹி மெ ॥

இதன் பொருள்.- ஓ காமதேனுவின் குழந்தாய்! உலகத்திற்கு அன்னையே! தேவர்களுக்கு அமிருதமளிப்பவளே! வரத்தைக் கொடுப்பவளே! கவளத்தைக் கிரகித்துக் கொள். எனக்கு இஷ்டமான பொருளைக் கொடு என்பதாம். இவ்வாறு சொல்லிக் கொண்டு கவளத்தைப் பசுவிற்குக் கொடுத்து, மீண்டும்,

2-3-4-4½-𑌵𑌨𑍍𑌦𑌿𑌤𑌾𑌽𑌸𑌿 𑌵𑌸𑌿𑌷𑍍𑌠𑍇𑌨 𑌵𑌿𑌶𑍍𑌵𑌾𑌮𑌿𑌤𑍍𑌰𑍇𑌣 𑌜𑌹𑍍𑌨𑍁𑌨𑌾 ।
𑌕𑌪𑌿𑌲𑍇 𑌹𑌰 𑌮𑍇 𑌪𑌾𑌪𑌂 𑌯𑌨𑍍𑌮𑌯𑌾 𑌦𑍁𑌷𑍍𑌕𑍃𑌤𑌂 𑌕𑍃𑌤𑌮𑍍 ॥
𑌗𑌾𑌵𑍋 𑌮𑍇𑌽𑌗𑍍𑌰𑌤𑍋 𑌨𑌿𑌤𑍍𑌯𑌂 𑌗𑌾𑌵𑌃 𑌪𑍃𑌷𑍍𑌠𑌤 𑌏𑌵 𑌮𑍇 ।
𑌗𑌾𑌵𑍋 𑌮𑍇 𑌹𑍃𑌦𑌯𑍇 𑌵𑌾𑌪𑌿 𑌗𑌵𑌾𑌂 𑌮𑌧𑍍𑌯𑍇 𑌵𑌸𑌾𑌮𑍍𑌯𑌹𑌮𑍍 ॥
𑌇𑌦𑌂 𑌯𑍋 𑌜𑌪𑍇𑌨𑍍𑌨𑌿𑌤𑍍𑌯𑌂 𑌤𑍍𑌰𑌿𑌸𑌨𑍍𑌧𑍍𑌯𑌂 𑌨𑌿𑌯𑌤𑌶𑍍𑌶𑍁𑌚𑌿𑌃 ।
𑌵𑌿𑌮𑍁𑌕𑍍𑌤𑌸𑍍𑌸𑌰𑍍𑌵𑌪𑌾𑌪𑍇𑌭𑍍𑌯𑌶𑍍𑌶𑌿𑌵𑌲𑍋𑌕𑌂 𑌸 𑌗𑌚𑍍𑌛𑌤𑌿 ॥

இ-ள். ஓ கபிலையே! "நீ வஸிஷ்டர், விசுவாமித்திரர், ஜஹ்நு முதலிய முனிவர்களால் வணங்கப்பட்டவளாக இருக்கிறாய். என்னால் செய்யப்பட்ட பாபத்தைப் போக்க வேண்டும். என்னுடைய முன் பக்கம் பின்பக்கம் இருதயம் வாக்கு ஆகிய இவற்றில் எப்பொழுதும் பசுக்கள் இருக்கின்றன. நான் பசுக்களின் நடுவில் வஸிக்கிறேன். இந்த மந்திரத்தை எவன் நியமத்துடனும் சுத்தியுடனும் முக்காலங்களிலும் ஜபிக்கின்றானோ அவன் எல்லா பாபங்களினின்றும் விடுபட்டுச் சிவலோகத்தை அடைகிறான்." என்பதாம். இவ்வாறு சொல்லிக்கொண்டு தேனுவைப் பிரார்த்திக்க வேண்டும்.

அல்லது

5-5½. 𑌅𑌮𑍃𑌤𑌮𑌥𑌨𑍋𑌦𑍍𑌭𑌵𑍇 𑌸𑍁𑌰𑌭𑍇 𑌲𑍋𑌕𑌧𑌾𑌰𑌿𑌣𑌿 । 𑌇𑌮𑌂 𑌗𑍍𑌰𑌾𑌸𑌂 𑌗𑍃𑌹𑌾𑌣 𑌤𑍍𑌵𑌂 𑌮𑍇 𑌵𑍍𑌰𑌤𑌮𑍁𑌤𑍍𑌤𑌮𑌮𑍍 ॥

இ-ள். அமிருதம் கடையும் பொழுது உண்டானவளே! காமதேனுவே! உலகத்தைத் தரிப்பவளே! இந்தக் கவளத்தை ஏற்று அருள்செய். இது எனக்கு மேலான விரதம் என்பதாம். இவ்வாறு சொல்லிக் கொண்டு பசுவிற்குக் கவளத்தைக் கொடுத்துப் பிரார்த்திக்கவேண்டும்.

6-6½. பசுக்களுக்கு எவ்வாறு கவளம் கொடுக்க வேண்டுமோ, அவ்வாறே விருஷபத்திற்கும் கவளம் கொடுக்க வேண்டும்.

விருஷபத்திற்குக் கவளம் கொடுத்தலாலுண்டாகும் பலன், பசுவிற்குக் கவளம் கொடுத்தலாலுண்டாகும் பலத்துடன் சமமாகுமென நூல்களில் காணப்படுகிறது. ஆனால் மந்திரம் வெவ்வேறு வகைப்படும்.

7-7½ सर्वलोकधरा ह्येते जीवितान्नप्रदायिनः । ग्रासं गृह्णन्तु हृष्टास्ते ह्येतन्मे व्रतमुत्तमम् ॥

இ-ள், "இந்த விருஷபங்கள் எல்லாவுலகங்களையும் தாங்குகிறவையாயும், உயிர் அன்னம் இவற்றைத் தருவனவாயும் இருக்கின்றன. இந்த விருஷபங்கள் சந்தோஷத்துடன் கவளத்தைக் கிரகித்துக்கொள்ளட்டும். இது எனக்கு மேலான விரதமாகும் என்பதாம். இந்த மந்திரத்தைச்சொல்லி விருஷபத்திற்குக்கவளம் கொடுக்கவேண்டும்.

8-8½, தினந்தோறும் கடுமையான இவ்விரதத்தைக் கைக்கொண்டு, பிறருடைய பசுவிற்கே கவளம் கொடுக்க வேண்டும். இந்தப் பசுக்களும் விருஷபங்களும் கொடுமையான பயத்தினின்றும் இரக்ஷிக்கின்றன. இவற்றை ஸ்பரிசித்தால் பாவங்கள் நீங்கும்.

## வித்யாபீடம் குருபரம்பரை இவர்களைப் பூசித்தல்.

9-10. பின்னர், வித்யாபீடத்தை, புஷ்பம் தூபம் மாலைகளால் அருச்சித்து, தன்னுடைய ஆசாரியரது பாதகமலங்களைப் பக்தியுடன் நன்றாகப் பூசிக்க வேண்டும். மத்யாஹ்னகாலம்வரும் வரை ஸம்ஹிதைகளுள் தமக்கு விருப்பமான சிவசாஸ்திரத்தை அத்யயனம் செய்ய வேண்டும்.

ஆகச் சுலோகம் 296½

## மத்தியாஹ்னகாலத்தில் செய்ய வேண்டுவன.

1-1½. முன்போல் ஸ்நானம் முதலியன செய்து, பரமேசுவரரைப் பூஜிக்க வேண்டும். அல்லது முன் பூஜிக்கப்பட்ட சிவபெருமானை அஷ்டபுஷ்பங்களால் பூஜிக்க வேண்டும். பீடம், மூர்த்தி, சிவன், 1 அங்கங்கள் இவற்றைப் பூசித்தல் அஷ்ட புஷ்பங்களால் பூசித்தலாகும்.

1 அங்கங்கள்- சிரசு, முகம், இருதயம், குஹ்யம், பாதம், என ஐந்து. அல்லது, இருதயம், சிரசு, சிகை, கவசம், அஸ்திரம் என்னும் ஐந்து.

## போஜனம் செய்யுமிடத்தில் செய்ய வேண்டுவன.

2-2½. மத்யாஹ்னகாலத்தில் செய்ய வேண்டிய பூஜையைச் செய்த பின்னர். அழகாயும், பரிசுத்தமாயும், கோமயத்தால் மெழுகப்பட்டதாயும், தனிப்படுத்தப்பட்டதாயும், உள்ள போஜனம் செய்யுமிடத்தில், பக்குவம் செய்த சுத்தமான அன்னத்தைக் கொண்டு வர வேண்டும்.

3-3½. பின்னர் வௌஷடை இறுதியிலுடைய மிருத்யுஞ்ஜயமந்திரத்தாலேயே ஏழு முறை ஜபிக்கப்பட்டவையாயும், தர்ப்பத்துடன் கூடிய கையில் இருக்கிறவையாயுமுள்ள ஜலத்திவலைகளால், அந்த அன்னத்தைப் புரோக்ஷிக்க வேண்டும்.

4-4½. பாகம் செய்த முழு அன்னத்தின் முதல் பாதிபாகத்தை எடுத்து, பரமசிவனுக்கு நிவேதனம் செய்ய வேண்டும். பின்னுல் உள்ள பாதிப் பாகத்தை சுல்லீ ஹோமம் செய்வதற்காக எடுத்து வைக்க வேண்டும்.

ஆகச்சுலோகம் 300½

## சுல்லீ ஹோமம் செய்யுமுறை.

1-2-2½. அடுப்பை நிரீக்ஷணம் முதலான நான்கு சுத்திகளால் சுத்திசெய்து, அதிலுள்ள அக்கினியைப் பூரகஞ்செய்து எடுத்து, நாபியிலுள்ள அக்கினியுடனும் பைந்தவாக்கினியுடனும் கும்பகத்தால் ஸமரஸமாகச் செய்து, பின்னர் ஹ்ரூம் என்னும் அக்கினி பீஜத்தை உச்சரித்துக் கொண்டு, ரேசக வாயுவால் பிரமன் முதலியவர்களின் ஸ்தானங்களைக் கடந்து, நீ, சிவாக்கினியாக இருக்கிறுய் என்று தியானித்து அடுப்பிலுள்ள அக்கினியினிடத்தில் சேர்க்க வேண்டும்.

ஓம் ஹாம் அக்நயே நம:, ஓம் ஹாம் ஸோமாய நம:, ஓம் ஹாம் ஸூர்யாய நம:, ஓம் ஹாம் ப்ருஹஸ்பதயே நம:, ஓம் ஹாம் ப்ரஜாபதயே நம:, ஓம் ஹாம் ஸர்வேப்யோ தேவேப்யோ நம:, ஓம் ஹாம் ஸர்வேப்யோ விச்வேப்யோ நம:, ஓம் ஹாம் அக்நயே ஸ்விஷ்டக்ருதே நம:, என்று அடுப்பிலுள்ள அக்கினியை அருசித்து,

(3–3½) அதன்பின், அக்கினிதிக்குமுதல் கிழக்குத் திக்கு முடிவாகவுள்ள திக்கிலுள்ள அக்கினி முதல் இந்திரன் ஈறானவர்களை அக்கினியில் முறையே பூஜித்து, ஸ்வாஹாசப்தத்தை இறுதியிலுடையனவாக அவ்வவ மந்திரங்களை உச்சரித்து ஆகுதிகள் கொடுத்து, அவர்களைப்பொறுத்துக்கொள்ளும்படி பிரார்த்தித்து பின்னர் விஸர்ஜனம் செய்ய வேண்டும்.

ஆகச் சுலோகம் 304.

## வாஸ்துபலியிடுமுறை.

பின்னர் அடுப்பின் வலது கையில் (பாகத்தில்) ஓம் ஹாம் தர்மாய நம: என்றும், இடதுகையில் (பாகத்தில்) ஓம் ஹாம் அதர்மாய நம: என்றும், காடி கழுநீர் வைக்கக்கூடிய பாத்திரங்களில் ஓம் ஹாம் [illegible] நம: என்றும், ஜலம் வைக்கக்கூடிய பாத்திரங்களில் ஓம் ஹாம் ஜலாஶ்ரயாய வருணாய நம: என்றும், வீட்டின் முக்கியமான வாயிலில் ஓம் ஹாம் [illegible] விக்நராஜாய நம: என்றும், அரைக்கக்கூடிய அம்மி ஆட்டுக்கல் முதலியவிடங்களில் ஓம் ஹாம் [illegible] நம: என்றும், உரலில் ஓம் ஹாம் [illegible] நம: என்றும், உலக்கையில் ஓம் ஹாம் [illegible] நம: என்றும், வாருகோலில் ஓம் ஹாம் [illegible] நம: என்றும், படுக்கையின் தலைப்பக்கத்தில் ஓம் ஹாம் [illegible] நம: என்றும், வீட்டின் மத்தியில் உள்ள தூணிற்குக் கீழே ஓம் ஹாம் [illegible] நம: என்றும் சொல்லிக்கொண்டு வாஸ்துபலி கொடுக்கவேண்டும்.

## 1 ஸாந்தானிக பிக்ஷா போஜன விதி.

1-2-2½ கால்களைக்கழுவி, ஆசமனம் செய்து, முன் கூறப்பட்ட போஜனஸ்தானத்தை அடைந்து, சிவபக்தர்களாயும், நல்லொழுக்கமுடையவர்களாயும், சுத்த சைவர்களாயும், தபஸையே

1 சைவ பரம்பரையிலுதித்த சிஷ்யர்களால் கொடுக்கப்படும் திரவியங்களைக் கொண்டு செய்யப்படும் ஆசாரியரது போஜனம் ஸாந்தானிக பிக்ஷா போஜனமெனப்படும்.

தனமாகவுடையவர்களாயும், ஒருவருக்கொருவர் ஸ்பரிசித்துக் கொள்ளாதவர்களாயும், மேலானவர்களாயும், வியாகுலமற்றவர்களாயும், ஒரே ஜாதியாக உள்ளவர்களாயும் இருப்பவர்களுடன், ஒரே பந்தியில் மனதை வேறிடத்திற் செலுத்தாமல் தபஸ்வியானவன் போஜனம் செய்ய வேண்டும்.

3-4. தனக்கு முன்னல் பஸ்ம 1 ரேகையால் நான்கு பக்கங்களையும் அலங்கரித்து, 2 அவரவர்க்குரிய திக்கைப் பார்த்துக் கொண்டு, ஆசாரியன் சுத்தஞ்செய்த சுவர்ண பாத்திரத்திலும், ஸாதகன் வெள்ளிப் பாத்திரத்திலும், புத்திரகன் தாம்பிர பாத்திரத்திலும், ஸமய தீக்ஷையுடையவன் வெண்கலப் பாத்திரத்திலும் மௌனமாக இருந்து போஜனம் செய்ய வேண்டும்.

4½-5-5½. சுவர்ணம் வெள்ளி இவற்றுலாகிய பாத்திரங்கள் இடைபாவிடில், நால்வருக்கும் உரியதான தாம்பிரத்தாலாகிய பாத்திரத்திலேனும், ஏழு முறை பஸ்மத்தாற் சுத்தம் செய்யப்பட்டதாயும், ஏழுமுறை அகோரமந்திரத்தால் அபிமந்திரிக்கப்பட்டதாயுமுள்ள வெண்கலப் பாத்திரத்திலேனும் போஜனம் செய்ய வேண்டும்.

6-6½. அவையுங்கிடைக்கவில்லையானல் புரசு, தாமரை, மா, இலுப்பை, வாழை, இவற்றின் இலைகளிலும், இவ்விலைகளுக்குச் சமமான விலக்கப்படாத பிற இலைகளிலும், போஜனம் செய்ய வேண்டும்.

7-7½. ஆல், அரசு, எருக்கு, ஆமணக்கு, ஸாலமரம், சம்பகம் ஆகியமரங்களின் இலைகளிலும், இவை போன்ற விலக்கப்பட்ட பிற இலைகளிலும் போஜனம் செய்யக்கூடாது.

8-9-9½. முழங்கால்களின் இடையில் கைகளை வைத்துக் கொண்டேனும், வீராஸனத்திலமர்ந்தேனும், இடது கையால் போஜன பாத்திரத்தை ஸ்பரிசித்துக்கொண்டு, முன்போல் வௌஷடை இறுதியிலுடையமிருத்யுஞ்ஜய மந்திரத்தால் அன்னத்தை ஏழு முறை அபிமந்திரித்து, அஸ்திர மந்திரத்தால் ஜாடராக்கினி

1 ஆசாரியர் முதலிய நால்வருக்கும் முறையே நான்கு மூன்று இரண்டு ஒன்று ஆகிய ரேகைகள் உண்டு.

2 ஆசாரியர் முதலியவர் முறையே கிழக்கு, தெற்கு, மேற்கு, வடக்கு ஆகிய திக்குக்களைப் பார்த்துக் கொண்டு என்பது கருத்து.

யை ஜ்வாலையுடன் கூடியதாகத் தியானித்து, பருப்பு, நெய், இவற்றுடன் கூடியதாயும், பரிசுத்தமாயுமுள்ள அன்னத்தை 1 ஆசாரியர் முதலிய நால்வரும் போஜனம் செய்ய வேண்டும்.

10-10½. போஜனம் செய்வதற்கு முன்னர் ஆபோசனத்தைப் பருகி, பிரணவத்தை ஆதியிலும் ஸ்வாஹாபதத்தை இறுதியிலும் உடைய ப்ராணாய என்பது முதலிய மந்திரங்களால் ஐந்து ஆகுதிகள் கொடுத்து, ஜாடராக்கினியை ஜ்வலிப்பிக்க வேண்டும்.

அது எவ்வாறெனில், "(பூமியில் சிறிது அன்னமிட்டு) நாம கூ-ு8ூகூ்யகா௱ஷெவடிதய நம: ஜயெஹ்வ உவப்ராணவாய ஹ்வ ஸ்வாஹா என்று சொல்லிக் கொண்டு ஆபோசன ஜலத்தால் அந்த அன்னம் முதலியவற்றை நிவேதனம் செய்து, எஞ்சிய நீரை அம்ருதோபஸ்தரணமஸி என்னும் மந்திரத்தை உச்சரித்துப் பருகி ஓம் ப்ராணாய ஸ்வாஹா, ஓம் அபானாய ஸ்வாஹா, ஓம் வ்யானாய ஸ்வாஹா, ஓம் உதானாய ஸ்வாஹா, ஓம் ஸமானாய ஸ்வாஹா, என்று சொல்லிக்கொண்டு, பிராணாகுதிகளைக் கொடுத்து, விதிப்படிபுஜித்து ஓம் அம்ருதாபிதானமஸி என்னும் மந்திரத்தை உச்சரித்து கழுவப்படாத கையினால் உள்ளங்கையில் நீரைக் கிரகித்து அருந்தி கைகால்களைக் கழுவி ஆசமனம் செய்ய வேண்டும்" என்றவாறும்.

11-11½. வயிற்றின் இரண்டு பாகங்களை அளவிடப்பட்ட அன்ன கவளங்களாலும், மற்றொரு பாகத்தைத் தீர்த்தத்தாலும் நிரப்பவேண்டும். பிறிதொரு பாகத்தைப் பிராணவாயு சஞ்சரிப்பதற்காக நிரப்பாமலிருக்க வேண்டும்.

12-13. தேத்தாங்கொட்டை, கள்ளு, முருங்கை, நீருள்ளி, வெள்ளைப் பூண்டு, மாம்ஸம், கையினால் பரிமாறப் பெற்ற 2 விய

1 வியாக்கியானத்தில் மௌநீ என்று பாடங் கொள்ளப்பட்டிருக்கிறது. அந்தப் பாடத்தைக் கொண்டால் மௌனமாய் இருந்து என்று பொருள் கொள்ள வேண்டும்.

2 க்ருஞ்ஜநமென்ற பாடத்தைக் கொண்டால் வெள்ளுள்ளி என்பது பொருள்.

ஞ்சனங்கள் உப்பு ஆகியவற்றை விலக்க வேண்டும். போஜன மத்தியில் உப்பு நெய் இவற்றை உபயோகப்படுத்தலாகாது.

14-14½. போஜனம் செய்யும் பொழுது தலையை ஆடையால் மறைத்தல், வணக்கமின்றி இருத்தல், நிந்தித்தல், கொட்டாவி விடுதல் இவற்றை விலக்க வேண்டும். போஜனத்திற்கு இடையிலும், கழுவப்பட்ட கையினாலும், வாயைப் பிளந்துகொண்டும், போஜனத்திற்கு முன்னரும், மனதை வேறிடத்திற் செலுத்திக் கொண்டும், ஜலத்தை அருந்தலாகாது.

15-15½ ஈ, நகம், மயிர் ஆகிய இவை அன்னத்தில் அகப்பட்டால், அகப்பட்ட இடத்திலுள்ள சிறிது அன்னத்தைவிலக்கி கையைக் கழுவி, பஸ்மத்தை ஸ்பரிசித்து எஞ்சிய அன்னத்தைப் புஜிக்க வேண்டும்.

16-17-17½. போஜனம் செய்தபின்னர், (1 கை கால்களைக் கழுவி) ஆசமனம் செய்து, தன் வலது கையின் பெருவிரலின் நுனியிலிருந்து பெருகிய நீரால் வலது கால் பெருவிரலை ஷுத்ரா ஙெ்வெஷகஷிணொவாஙெ் வாராத்வரகஙொ விஹாரஃ। தஸ்மை ஸிஷிணாசியொஹம் ஸ்ஞாஷ்யாஙெ் வ்யவஷிதஃ ॥ மேலானவற்றிற்கும் மேலானதாயும் வியாபகமாயுமுள்ள எந்த ஆத்மாவானது வலது கால் பெருவிரலின் நுனியில் இருக்கின்றதோ அந்த ஆத்மாவிற்கு அபிஷேகம் செய்கிறேன்.) என்னும் மந்திரத்தைச் சொல்லிக்கொண்டு நனைக்கவேண்டும்.

18-18½, பின்னர் முன்போல் ஸகளீகரணஞ் செய்து, போஜனத்தில் நேரிட்ட தோஷம் நீங்குவதற்காக, நாபி முதல் மூக்கு ஈறாக பரிகை என்னும் முத்திரையைச் செய்யவேண்டும்.

ஆகச் சுலோகம் 322.

## அயாசித பிக்ஷாடனம் செய்யுமுறை.

1. யாசிக்காதவன் பொருட்டு, அன்னம் முதல் பூமி ஈறாகவுள்ள எந்த வஸ்துவானது, அன்புடன் கொணர்ந்து கொடுக்கப்படுகின்றதோ, அது அயாசித பிக்ஷையாகும்.

1 கை கால்களைக் கழுவி என்பது மூலத்திலில்லை.

2. 1 பதிதன், நாவிதன், சிற்பி, பரஸ்திரீகமனம் பிரம்ம ஹத்தி முதலிய தோஷங்களால் தூஷிக்கப்பட்டவன் ஆகிய இவர்களிடமிருந்து பிக்ஷையைப் பெறலாகாது. தர்மம் விருத்தியாவதில் விருப்பத்துடன், அந்த அயாசித பிக்ஷையை பிக்ஷுவானவன் (ஸந்யாஸியானவன்) ஸ்வீகரிக்க வேண்டும்.

3. வண்டானது புஷ்பத்திலிருந்து தேனை ஸ்வீகரித்தபோதிலும், புஷ்பத்தை எவ்வாறு பாதிக்கிறதில்லையோ, அவ்வாறே கிரகஸ்தனிடத்திலிருந்து மாதூகரி பிக்ஷையைக் கிரகிக்கவேண்டும்.

4. பிக்ஷை பெறுதற்காகக் கிரகத்தில் பிரவேசித்தவன் பொருட்டும், தானாகவே சஞ்சரிப்பவன் பொருட்டும், கிரகஸ்தனால் எந்தப் பிக்ஷையானது கொணர்ந்து கொடுக்கப்பட்டதோ, அந்தப் பிக்ஷையானது பரிக்ரகமற்ற பிக்ஷையாகும். (பரிக்ரகம்-ஏற்றல்.)

5. போக மோக்ஷ பலன்களை விரும்புகிறவர்களால், இந்தப் 2 பிக்ஷைகள் ஸோம 3 லதை போல் ஸ்வீகரிக்கத்தக்கன. இவற்றுள் மாதூகரி பிக்ஷையானது மேலானது. ஒருவனுடைய அன்னத்தை எப்பொழுதும் விலக்க வேண்டும். (பலருடைய அன்னமாயிருக்கவேண்டுமென்பது கருத்து.)

6. பிரஹஸ்பதிக்குச் சமனான யதியானவன், 4 மிலேச்சர்களிடத்திற் கூட மாதூகரிபிக்ஷையை ஸ்வீகரிக்கலாம். ஒருவனுடைய அன்னத்தைப் புஜிக்கக் கூடாது.

---

1 தன்னுடைய ஆசிரமம் ஆசாரம் இவற்றினின்றும் நழுவினவன் பதிதனாவன்.

2 மாதூகரி பிக்ஷை, ஸ்வயம் தத்தபிக்ஷை, ஸாந்தானிக பிக்ஷை, அயாசித பிக்ஷை என்று பிக்ஷை நான்கு வகைப்படும். மூன்றாவது நான்காவது சுலோகங்களாலும், முதல் சுலோகத்தாலும், ஸாந்தானிக பிக்ஷா போஜன விதி என்ற தலையங்கத்தின் டிப்பணத்தாலும், இவற்றின் பொருள் அறியக்கிடக்கின்றன.

3 ஸோமலதைகளை விதிக்கப்பட்ட காலத்தில் பெற்றுக் கொண்டால் அவை பரிசுத்தமாகும். இல்லையேல் அவை பரிசுத்தமல்ல. அதுபோல் இந்தப்பிக்ஷைகளையும் உரியகாலத்தில் பெற்றுக்கொண்டாற்றான் பரிசுத்தமாகும்என்பதுகருத்து.

4 இந்த வாக்யம் ஒருவனுடையதாகியஅன்னத்தைப் புஜிக்கக்கூடாது என்பதை வற்புறுத்துகின்றது.

7. இந்த நான்கு வகைப் பிக்ஷைகளினும் வேருயும், வேண்டுதல் முதலிய தடையால் ஸாதிக்கத்தக்கதாயும் உள்ள நிரோதம் என்னும் அதம பிக்ஷையை, ஸந்யாசியானவன் விலக்கவேண்டும்.

8. தாமிரம், உலோகம், (வெண்கலம்) இவற்ருல் செய்யப்பட்டதாயும், 1 பிரமவிருக்ஷம் முதலியவற்ருலாக்கப் பெற்றதாயும் உள்ள பிக்ஷா பாத்திரமானது போகத்தில் விருப்பமுள்ள புபுக்ஷுவுக்கும், சங்கு முதலியவற்ருலாக்கப் பெற்ற பிக்ஷாபாத்திரமானது முத்தியில் விருப்பமுள்ள முமுக்ஷுவுக்கும் விதிக்கப்பட்டிருக்கின்றன.

9-10-11. சுத்தமான திருநீற்ருல் ஸ்நானஞ்செய்து, வேறு கௌபீனம் உத்தரீயம் இவற்றைத் தரித்துக்கொண்டு, ஆசமனஞ் செய்து, மௌனமாக இருந்து, சிவன் குரு இவர்களைத்தியானித்து, பஞ்சப்பிரமமந்திரம் அகோரமந்திரம் இவற்ருல் அபிமந்திரிக்கப்பட்டதாயும், கவச மந்திரத்தால் மந்திரிக்கப்பட்ட செம்மையாயும் சுத்தமாயுமுள்ள வஸ்திரத்தால் மூடப்பட்டதாயுமுள்ள பிக்ஷாபாத்திரத்தையும், அஸ்திரமந்திரத்தால் அபிமந்திரிக்கப்பட்ட தண்டத்தையும் குடையையும் கையிலேந்தி, பரமசிவன் குரு ஆகிய இவர்களின் ஆணையைப் பெற்று, நல்ல அனுஷ்டானமுடையவர்களது கிரகங்களில்பிக்ஷைபெறச்செல்லவேண்டும்.

12. அப்பொழுது எவரையேனும் வணங்குதல், துப்புதல், எவரையேனும் தொடுதல், கெட்டபாதையிற் செல்லுதல், நிந்தித்தல் இவற்றைச் செய்யக் கூடாது. நாய் முதலிய ஜந்துக்களின் கூட்டத்திலிருந்து விலகிச் செல்ல வேண்டும்.

13-14- சன்னியாசியானவன் சுத்தர்களான பிராமணர் முதலிய நான்கு ஜாதியாரின் கிருகத்தின் அங்கணத்தை (முற்றத்தை) அடைந்து **பிக்ஷாம் தேஹி** (பிக்ஷையைக் கொடு) என்று கூறி கால் பெருவிரலின் நுனியில் பார்வையைச் செலுத்தி, பசுவானது கன்றின் சேர்க்கையால் எவ்வளவுக்குள்ளாகப் பாலைச்சொரியுமோ, அவ்வளவு நேரம் எதிர்பார்க்க வேண்டும். அதன்பின் வேறிடத்திற்குச் செல்ல வேண்டும்.

---

1 புரசு, மா முதலிய மரங்களின் இலைகளால் செய்யப்பட்டதாயும் என்பது கருத்து.

15. சென்றுகொண்டிருக்கும்பொழுது அழைத்தால், சென்றுகொண்டிருந்த அந்த இடத்திலிருந்தும் திரும்பிவரக் கூடாது. யஜமானனால் கொண்டுவரப்பட்ட பிக்ஷையைச்சென்று கொண்டிருந்த அந்த இடத்திலிருந்து கொண்டே கிரகிக்க வேண்டும்.

16. கரண்டி, கை, வெண்கலம் இவற்றால் கொண்டு வரப் பட்டதாயும், 1 தாஸீ, கர்ப்பிணீ, அழுக்குஆடைதரித்திருப்ப வர் ஆகிய இவர்களால் கொண்டுவரப்பட்டதாயும் உள்ள பிக்ஷை யைக் கிரகிக்கலாகாது.

17. பிக்ஷான்னத்தால் பாத்திரம் நிரம்பும் வரை இவ்வாறு பிக்ஷை எடுத்து, அதன் பின் ஜனங்களின் க்ஷேமத்தைக் கோரிக் கொண்டு, தன்னுடைய ஆச்ரமத்திற்குச் செல்ல வேண்டும்.

ஆகச் சுலோகம் 339,

## பிக்ஷை எடுத்தபின் செய்ய வேண்டுவன

1. பிக்ஷா பாத்திரத்தைச் சுத்தமான இடத்தில் வைத்து, ஆசமனம் செய்து, முன்போல் உத்தூளனம் ஸகளீகரணம் இவற் றைச் செய்து, அந்தப் பிக்ஷான்னத்தை அஸ்திரமந்திரத்தால் புரோக்ஷித்து 2 தீபனம் செய்ய வேண்டும்.

2-3. ஸன்னியாசியானவன் மூன்று அக்ஷரங்களை உடைய மிருத்யுஞ்ஜய மந்திரத்தால், அந்தப் பிக்ஷான்னத்தை அமிருதீகர ணஞ் செய்து, மூன்று பாகமிட்டு, ஒரு பாகத்தைப் பரமசிவ னுக்கு நிவேதித்து, இரண்டாவது பாகத்தைத் தன் குருவுக்கு ஸமர்ப்பித்து, மூன்றுவது பாகத்தைப் பிராணனைக் காப்பதற் காக முன் ஸாந்தானிக பிக்ஷா போஜன விதியிற் கூறப்பட்டவாறு

---

1 வ்ருஷலீ என்று மூலப்ரதியிலும் ஸித்தாந்த சேகரத்திலும் பா டம் இருக்கின்றது. இந்தப் பாடத்தைக் கொண்டால் அஸத் சூத்திரர் களின் ஸ்திரீ என்ற அர்த்தத்தைக் கொள்ள வேண்டும். வ்ருஷாணீ என்ற ஸ்பஷ்ட போதினீ வியாக்யான பாடத்தை அனுசரித்து தாஸீ என்ற பொருள் எழுதப்பட்டிருக்கிறது.

2 தீபனம்-பிரகாசிக்கச் செய்தல். அதாவது, சுத்த முடையதாகச் செய்தல்.

புஜிக்க வேண்டும். ஸித்தாந்த சாஸ்திரத்தில் இந்தப் போஜன விதியானது சுருக்கமாகக் கூறப்பட்டது.

## ஸாயங்காலத்தில் செய்ய வேண்டுவன.

4. போஜனத்திற்குப் பின்னர், சாயங்காலம் வரை, ஸம்ஹிதைகளுள் யாதானுமோர் சிவ சாஸ்திரத்தை அத்யயனஞ் செய்து, ஸாயங்காலத்தில், ஸ்நானம், ஸந்த்யோபாஸனே, சிவ பூஜை இவற்றைச் செய்து,

## சயனவிதி.

5. சுத்தமான பூப்ரதேசத்தை உடையதாயும், புற்கள் பரப்பப் பெற்றதாயும் இருக்கும் சுத்தமான இடத்தில், மான் தோலேயேனும் புலித்தோலேயேனும் பரப்பி விரிக்க வேண்டும்.

6. மந்திரங்களே அறிந்தவன், சரீரத்தில் மந்திரங்களே நியாஸஞ் செய்து, இருதய கமலத்தில் இருக்கும் அக்ஷர வடிவினராகிய பரமேசுவரரைச் சிந்தித்துக் கொண்டு யோக நித்திரையுடன் படுத்து,

## அர்த்தராத்திரியில் செய்ய வேண்டுவன.

7. பின்னர், பகலிற் கொண்டு வரப்பட்டதாயும், ஆடையால் வடிகட்டப் பெற்றதாயும் இருக்கிற ஜலத்தால், அர்த்த ராத்திரியிலும் முன்போல் ஸந்த்யோபாஸனே சிவ பூஜை இவற்றைச் செய்ய வேண்டும்.

## நித்தியவிதியின் முடிவு.

8. மீண்டும் நித்திரை செய்து, வைகறையில் எழுந்து, சிவபெருமானேச் சிந்தித்து, கூறப்பட்ட எல்லா ஆஹ்னிகக் கிரியைகளேயும் நாடோறும் அனுட்டிக்க வேண்டும்.

9. பரோபகாரம் செய்வதை ஸ்வபாவமாகவுடையவரான ஸ்ரீ ஸோமசம்புவால் கிரியாகாண்ட க்ரமாவளீ என்னும் நூலில் நித்தியவிதியின் முறையானது கூறப்பட்டது.

ஆகச் சுலோகம் 348.

**கிரியாகாண்ட க்ரமாவளீ என்னும் ஸோமசம்பு பத்ததியில் நித்தியவிதி முற்றிற்று.**

---

# நைமித்திக விதி.

## பவித்திர லக்ஷணவிதி.

1. 1 எல்லாப்பூஜாவிதிகளின் குறைகளை நீக்கி, அந்தப் பூஜைகள் பூர்த்தி ஆகும் பொருட்டு, 2 பவித்திரம் சாத்த வேண்டும். இல்லையேல் ஸமயி முதல் ஆசாரியர் ஈறுகிய யாவரும் போக மோக்ஷ ரூபமான ஸித்தியினின்றும் நழுவுதலை அடைவர்.

2. ஆடி மாதத்தில் பூர்வபக்ஷத்துச் சதுர்த்தசியிலும், ஆவணி புரட்டாசி மாதங்களில் 3 சுக்ல பக்ஷம் கிருஷ்ணபக்ஷம் ஆகிய இரண்டிலும் வரும் சதுர்த்தசி அஷ்டமீ ஆகிய இரண்டிலும் பவித்திரம் சாத்த வேண்டும்.

3. உத்தமம், மத்யமம், அதமம் என்னும் முறையால் இந்த மூன்று மாதங்களிலும் சிவபெருமானுக்குப் பவித்திரம் விதிக்கப்பட்டிருக்கிறது. இந்த மூன்று மாதங்களை அதிக்ரமிப்பின் தோஷத்தைச் செய்யும்.

4. ஆடி முதலிய மூன்று மாதங்களிற்றான் 4 விஷ்ணு ஸ்வாப காலத்திற்றான், இவ்வாறு பவித்திரம் சாத்த வேண்டும்.

---

1 நித்தியம் நைமித்திகம் காமியம் என்னும் வேறுபாட்டால் வெவ்வேறு வகைப்பட்டவையாயும், பவித்திரம் சாத்துவதற்கு முன் அனுட்டிக்கப்பட்டவையாயும், அங்கம் உபாங்கம் இவற்றுடன் கூடியவையாயும் இருக்கிற பூஜாவிதிகளின் பூர்த்தியாகாமை முதலிய ரூபமான இடையூறுகளை நீக்கி பூஜைகள் முடிவு பெறும் பொருட்டு என்பது கருத்து.

2 பூஜைகளின் குறைவை நீக்கிப் பரிசுத்தம் செய்வதால் பவித்திரம் எனப்பட்டது.

3 போகியானவன் சுக்கிலபக்ஷத்திலும், முமுக்ஷுவானவன் இரண்டு பக்ஷங்களிலும் செய்யவேண்டும்.

4 சூரியன் மிதுனராசியை அடைந்தபொழுது விஷ்ணுவானவர் சுக்லபட்சத்தில் தமது திதியாகிய துவாதசியில் நித்திரை செய்கிறார், விஷ்ணு நித்திரை செய்ய ஆரம்பித்த பின்னர் மூன்று மாதங்களில் பவித்திரம் சாத்த வேண்டும். மேஷம் முதலிய ஆறு மாதங்களுள் யாதானுமொரு மாதத்தில் இரண்டு அமாவாஸ்யைகள் நேரிட்டால் அந்த வருஷத்தில் விஷ்ணு கடகமாதத்தில் நித்திரை செய்கிறார். கடக மாதத்தில் இரண்டு அமாவாஸ்யைகள் வருமாயின் அப்போது சிம்மமாதத்தில் பவித்ரோத்ஸவம் செய்ய வேண்டுமென்னும் கருத்தை உள்ளடக்கி மூலகாரர் விஷ்ணுஸ்வாபகாலத்திற்றான் என்று கூறியுள்ளார். ஸ்வாபமாவது-நித்திரை.

சாஸ்திரத்தில் இந்தப் பவித்திர நியமமானது மூன்றுவிதமாகக் கூறப்பட்டிருக்கிறது.

5. ஸூத்திரம் சாத்துதலாகிய இந்தப்பவித்திர விதியானது நாடோறும் அனுட்டிக்கப்படாமையால், இந்தப் பவித்ரோத்ஸவத்தை நித்யவிதியாகக் கொள்ளக் கூடாது. இந்தப் பவித்திரமானது காலத்தைக் குறிப்பிட்டு விதிக்கப்பட்டிருப்பதால் இதனைப் பிராயச்சித்தமாகவும் கொள்ளக் கூடாது.

6. ஆகையால், ஆஷாடம் (ஆடி) முதலிய மாதங்களைக் குறிப்பிட்டு விதிக்கப்பட்டிருப்பது கொண்டு வருஷந்தோறும் செய்யப்படும் இந்தப் பவித்திராரோபணமானது, நைமித்திகமாகக் கொள்ளப்பட்டது. இடையூற்றை அகற்றுதல், பூஜைகளைப் பூர்த்தி செய்தல் ஆகிய இவை இந்தப் பவித்ராரோபணத்திற்குப் பலமாகக் கூறப்படுகின்றன.

7. மோஹசூரோத்தரமென்னும் சிவாகமத்தில் இந்தப்பலமானது எம்மால் காணப்பட்டது. ஆகையால் ஸூத்ரம் சாத்துதலாகிய இந்தப் பவித்திரமானது 1 நைமித்திகமாகுமென்பது வெளிப்படை.

---

1 ஸூத்திரம் சாத்துதலாகிய இந்தப் பவித்ரோத்ஸவத்தை "காலத்தைக் குறிப்பிட்டு விதிக்கப்பட்டிருப்பதால்" என்னும் ஹேதுவைக்கொண்டு நைமித்திகமாகக் கொள்ளக் கூடாது. நைமித்திகமாகக் கொள்ளப்பட்ட தீக்ஷை ப்ரதிட்டை இரண்டிலும் குறித்த லட்சணம் இல்லாமையால் அவ்யாப்தியும், காலை முதலிய காலங்களில் செய்யப்படும் நித்தியமாகக் கொள்ளப்பட்ட ஸந்த்யா வந்தனம் முதலியவற்றில் குறித்த லட்சணம் இருப்பதால் அதிவ்யாப்தியும் நேரிடுவதால், காலோத்தரப் பிரமாணத்தை அனுசரித்து நித்யாங்கமாக இந்த வார்ஷிக பவித்ராரோப்ணத்தைக் கொள்ளவேண்டும் என்று பிரபா வியாக்கியானத்திலும் ஸ்பஷ்டபோதினீ வியாக்கியானத்திலும் கூறப்பட்டிருக்கிறது. இக் கூற்று "வார்ஷிக பவித்திராரோபணமானது நைமித்திகமாகும்" என்ற ஸோமசம்பு சிவாசாரியரின்கூற்றைக் கண்டிக்கிறபடியால் ஸோமசம்பு சிவாசாரியரின் கூற்றை வலியுறுத்துதற்காக மூலத்து டிப்பணத்தில் காரணாகம ப்ரமாணமானது காண்பிக்கப்பட்டிருக்கிறது. காரணாகமப்ரமாண சுலோகங்களின் பொருளாவன-எல்லாத்தோஷங்களையும் அகற்றும் பவித்ராரோபணத்தை நான் கூறுகிறேன். பவித்ராரோபணமானது நித்தியம் நைமித்திகம் காமியம் என மூவகைப்படும். அருகு அக்ஷதை வில்வதளம் இவற்றை மூலமந்திரத்தை உச்சரித்து

8. நித்திய பவித்திரத்தையோவெனின், நைமித்திககாமிய காலங்களிலும் நாடோறும் பத்திரம் புஷ்பம் தர்ப்பம் இவற்ருல் நித்திய பூஜையில் சிவபெருமானுக்குச் சாத்த வேண்டும்.

9-10. அக்கினி, பிரமன், அம்பிகை, விநாயகர், நாகம், சுப்பிரமணியர், சூரியன், சூலி, (சிவன்) துர்க்கை, யமன், இந்திரன், விஷ்ணு, மன்மதன், சம்பு, தேவர்கள் ஆகிய இந்த எல்லாத் தேவர்களுக்கும், பிரதமை முதற்கொண்டு பஞ்சதசிவரை பவித்திரம் சாத்துதலைச் செய்யவேண்டும்.

11. கிருதயுகத்தில் சுவர்ணத்தாலாகிய பவித்திரமும், திரேதாயுகத்தில் வெள்ளியாலாகிய பவித்திரமும், துவாபரயுகத்தில் தாமிரத்தாலாகிய பவித்திரமும், கலியுகத்தில் சக்திக்குத் தக்கவாறு பருத்தி நூலாலேனுமாகிய பவித்திரமும் விதிக்கப்பட்டிருக்கிறது.

12. நூலானது பிராமண கன்னிகைகளால் நூற்கப்பெற்று, மும்மூன்றென்பதாக மடிக்கப்பட்டதாயும், சுத்தமாயும், வெளுப்பாயும், மங்களகரமாயுமிருக்க வேண்டுமென்று சாஸ்திரங்களில் கூறப்பட்டிருக்கிறது.

13. பட்டு நூல், மரவுரி, தாமரை நூல், வெண்பட்டுநூல், தர்ப்பம், சணல் நார், முஞ்சம்புல் ஆகிய இவையும் பவித்திரம் செய்ய உபயோகப்படுகின்றன.

14. பிரணவம், சந்திரன், அக்கினி, பிரமன், நாகம், குஹர், சூரியன், ஸாதாக்யர் ஸர்வதேவர்கள், ஆகிய இவர்கள், முறையே ஒன்பது நூல்களில் 1 நியாஸம் செய்யப்படல் வேண்டும்.

---

நாடோறும் பூஜையில் சிவ பெருமானுக்குச் சமர்ப்பித்தலாகிய இந்தப்பவித்ரம் நித்தியமெனப்படும். ஒவ்வொரு வருஷத்திலும் ஆடி முதலிய மூன்று மாதங்களில் செய்யப்படும் பவித்ராரோபணம் நைமித்திகம் எனப்படும். ஆஷாடம் முதலிய மூன்று மாதங்களின் மாத நக்ஷத்திரங்களிலும், கர்த்தாவின் ஜன்ம நக்ஷத்திரங்களிலும், யாதானும் ஒன்றன் விருப்பத்தால் செய்யப்படும் பவித்ராரோபணமானது தனக்கு விருப்பமான பலத்தையும், போக மோக்ஷ பலன்களையும் தருதலால் காமியமெனப்படும் என்பதாம்.

1 சூத்திரங்களின் எண்ணிற்குத் தக்கவாறு திரும்பத் திரும்ப நியாஸம் செய்க என்பது கருத்து.

15-16. உத்தமம் மத்யமம் அதமம் என்னும் கிரமத்தால் நூற்றெட்டு, ஐம்பத்து நான்கு, இருபத்தேழு ஆகிய நூல்களைக் கொண்டு, ஆன்ம பவித்திரம் வித்தியா பவித்திரம் சிவபவித்திரம் ஆகிய மூன்று பவித்திரங்களைச் செய்ய வேண்டும். எண்பத்தொன்று, அல்லது முப்பத்தெட்டு, அல்லது ஐம்பது நூற்களாலும், நூற்களின் எண்ணிற்குரிய முடிச்சு, இடைவெளி, இவற்றுடன் பவித்திரம் செய்யலாம்.

17. 1 பன்னிரண்டு அங்குலம் நீளமுள்ளவையாகவேனும், எட்டு அங்குலம் நீளமுள்ளவையாகவேனும், 2 லிங்கத்தின் விஸ்தாரத்திற்குத் தக்கவையாகவேனும், நான்கு அங்குலம் நீளமுள்ளவையாகவேனும் பவித்திரங்களைச் செய்ய வேண்டும்.

18. அவ்வாறே எல்லாத் தேவதைகளுக்கும் சந்தோஷத்தைச் செய்யும், நான்காவதாகிய கங்காவதாரகமென்னும் பவித்திரத்தை, மிகவும் அழகாகவும், பீடத்தைத் தொடுகிறதாகவும் (அதாவது பீடம்வரையில்நீண்டிருப்பதாகவும்) செய்யவேண்டும்.

19. ஸத்யோஜாத மந்திரத்தை உச்சரித்து நீரால் கழுவப்பட்டதாயும், வாமதேவமந்திரத்தை உச்சரித்துத்தொடுக்கப்பட்டதாயும், அகோரமந்திரத்தை உச்சரித்துச் சுத்தம் செய்யப்பட்டதாயும் உள்ள பவித்திரத்தை, தத்புருஷமந்திரத்தை உச்சரித்துப் பூசவேண்டும்.

20. (எதனால் பூச வேண்டுமெனின்) செஞ்சந்தனம், குங்குமப்பூ, கஸ்தூரி, பச்சைக் கற்பூரம், கோரோசனை; மஞ்சள், மலைகளில் விளையும் விசேஷ தாதுக்கள் ஆகிய இவற்றுள், யாதானுமொன்றால், அந்தப் பவித்திரத்தைப் பூச வேண்டும்.

21. பவித்திரத்துக்குப் பத்து முடிச்சுக்களேனும், அல்லது நூல்களின் எண்ணிற்குரியவாறு அதிகமாகவேனும், அழ

---

1 பன்னிரண்டு, அல்லது எட்டு, அல்லது நான்கு ஆகிய அங்குலங்கள், உத்தம மத்யம அதமங்களான ஸ்தண்டிலம் முதலிய லிங்கங்களுக்கு ஆகும் என்பதும்,

2 லிங்கத்தின் விஸ்தாரத்திற்குத் தக்கவையாக வேனும் என்பது, பாணம் முதலிய லிங்கங்களைக் குறித்தது என்பதும், வியாக்யான கர்த்தாவின் கொள்கை.

குக்குத் தக்கவாறு, ஒன்று இரண்டு [1] நான்கு அங்குலம் இடை வெளி உடையனவாகச் செய்யப்படல் வேண்டும்.

22-23. பிரகிருதி, பௌருஷீ, வீரா, அபராஜிதா, ஜயா, விஜயா, அஜிதா, ஸதாசிவா, மனோன்மனி, ஸர்வதோமுகி ஆகிய் பத்துச் சத்திகளும், பத்து முடிச்சுக்களுக்கு [2] அதிதேவதைகள். அழகுக்குத் தக்கவாறு ஸமானங்களான அநேகம் முடிச்சுக்களையேனும் செய்யலாம்.

24. இரத்தின லிங்கம், ஸ்தண்டிலலிங்கம், பாணலிங்கம், சலலிங்கம், லோஹலிங்கம், ஸ்வயம்புலிங்கம் ஆகிய இவற்றிற்கு (மேலே) கூறப்பட்ட பவித்திரங்களுள் யாதானுமொன்றை அழகாகச் செய்யவேண்டும்.

25. சூத்திரம் அதிகமாக இருந்தால் சண்டேசுவரர் சூரியன் அக்கினி இவர்களுக்கு, சிவபெருமானுக்குச் சாத்துவது போலவே பவித்திரங்களைச் சாத்தவேண்டும். இல்லையேல் இவர்களுக்கு ஒவ்வொரு பவித்திரம் சாத்தவேண்டும்.

26. தனது சரீரம், கணபதி, குரு, இருதயம் முதலிய அங்கங்கள், ஸித்தாந்த புஸ்தகம், துவாரபால கலசம், திக்பால கலசம் ஆகிய இவற்றிற்கு ஒவ்வொரு பவித்திரம் சாத்த வேண்டும்.

27. ஒரு முழம் முதல் ஒன்பது முழம் ஈறுகவுள்ள லிங்கங்களுக்கு, பவித்திரமானது முறையே இருபத்தெட்டு நூல்களிலிருந்தும், பத்துப் பத்து நூல்களின் விருத்தியாலாகும்.

28. லிங்கத்தின் விஸ்தாரத்திற்கு ஒத்ததாக, இரண்டு அங்குலம் முதல் முறையே ஒவ்வொரு அங்குலம் அதிகமான இடைவெளியுள்ள முடிச்சுக்கள், இந்தப் பவித்திரங்களுக்கு அளவையாகும்.

---

1 வியாக்யானத்தில் ஒன்று இரண்டு மூன்று நான்கு அங்குலம் என்று படிக்கப்பட்டிருக்கிறது.

2 ஒன்பதுமுடிச்சுக்களாயின் மனோன்மனி ஈறுகவுள்ள சக்திகளையும், பத்து முடிச்சுக்களாயின் ஸர்வதோமுகி ஈறுகவுள்ள சக்திகளையும் முடிச்சுக்களில் நியாஸஞ் செய்யவேண்டும். முடிச்சுக்கள் அதிகமாயின், இந்தச் சத்திகளையே திரும்பத் திரும்ப நியாஸஞ் செய்யவேண்டும். அல்லது ஸர்வதோமுகி சத்தியையே எல்லா முடிச்சுக்களிலும் நியாஸஞ்செய்யலாம்.

## பவித்திர அதிவாஸ விதி.

### பவித்திர மண்டப பூஜை.

29. ஸப்தமி அல்லது திரயோதசியில், சுத்தனாய் நித்யக்கிரியைகளை முடித்து, சாயங்காலத்தில், புஷ்பம் வஸ்திரம் முதலிய வற்றால், யாக கிருஹத்தை அலங்கரிக்க வேண்டும்.

30. பவித்திராரோபண நிமித்தமாகச் செய்யவேண்டிய ஸந்தியையும், விசேஷ தர்ப்பணத்தையும் செய்து, பவித்திரோத்ஸவத்திற்காகக் கொள்ளப்பட்ட பூமியில், நூல் சுற்றப்பட்ட குடத்தில் சூரியனைப் பூஜிக்க வேண்டும்.

### துவாரபால பூஜை.

31. ஆசாரியர், ஆசமனம் ஸகளீகாணம் இவற்றைச் செய்து, ஸாமான்யார்க்யத்தைக் கையில் ஏந்தி, துவாரங்களை அஸ்திரமந்திரத்தை உச்சரித்துப் புரோக்ஷித்து, கிழக்கு முதலாக அருச்சிக்க வேண்டும்.

கிழக்கு வாயிலில ௐ ஹாம் ஶாந்திகலா த்வாராய நம: என்றும், தெற்கு வாயிலில் ௐ ஹாம் வித்யாகலா த்வாராய நம: என்றும், மேற்கு வாயிலில் ௐ ஹாம் நிவ்ருத்திகலா த்வாராய நம: என்றும், வடக்கு வாயிலில் ௐ ஹாம் ப்ரதிஷ்டாகலா த்வாராய நம: என்றும் சொல்லிக்கொண்டு அருச்சித்து, அவ்வாறேகிழக்கு முதலிய திக்குக்களிலுள்ள வாயில்களில் தனக்கு வலது இடது பக்கங்களிலுள்ள சாகைகளில் ௐ ஹாம் நந்திநே நம:, ௐ ஹாம் மஹாகாலாய நம:, என்றும், ௐ ஹாம் ப்ருங்கிணே நம:, ௐ ஹாம் விநாயகாய நம: என்றும், ௐ ஹாம் வ்ருஷபாய நம:, ௐ ஹாம் ஸ்கந்தாய நம: என்றும், ௐ ஹாம் தேவ்யை நம:, ௐ ஹாம் சண்டேஶ்வராய நம: என்றும், சொல்லிக்கொண்டு, ஒவ்வொரு வாயில்களிலும் இருக்கும் கலசங்களில் இரண்டு இரண்டு பேர்களைப் பூஜிக்க வேண்டும்.

32. தினம் போல் துவாரபாலர் முதலியவர்களை விதிப்படி அருச்சித்து, பின்னர் மேற்கு வாயிலில் புகுந்து வாஸ்துப் பிரமனைப் 1 பூஜிக்க வேண்டும்.

---

1 ௐ ஹாம் வாஸ்த்வதிபதயே ப்ரஹ்மணே நம: என்னும் மந்திரத்தை உச்சரித்து நிருருதிதிக்கில் புஷ்பத்தை ஸமர்ப்பிக்கவேண்டும் என்பது கருத்து.

33. பூத 1 சுத்தி, விசேஷார்க்கியம், தன்னுடைய சிரசில் 2 புரோக்ஷித்தல் 3 முதலியன செய்து, யாகத்திற்குரியபொருள் களை முன்போல் 4 அபிமந்திரிக்க வேண்டும்.

34. 5 தர்ப்பம், அருகு, அக்ஷதை, புஷ்பம், சந்தனம் ஆகிய இவற்றால், இருதய பீஜத்தை ஆதியாக உடைய மந்திரங் களை உச்சரித்து சிவஹஸ்தஞ் செய்து, தன்னுடைய சிரசில் ஆரோபணம் செய்து கொள்ள வேண்டும்.

35. ஆசாரியர் ஞானகட்கத்தைக் கையில் ஏந்தி, அனந்தர் முதலியவர்களுக்கு ஆதியாயும், ஸர்வக்ஞனுமுள்ள சிவனாக நான் இருக்கிறேன். எனக்கு யாகத்தில் பிராதான்யம் இருக்கின் றது என்று இவ்வாறு சிவாத்வைதத்தை மிகவும் பாவனை செய்ய வேண்டும்.

36. யாகமண்டபத்தின் நிருருதி திக்கை அடைந்து, வட க்கு முகமாக இருந்துகொண்டு, பஞ்சகவ்யம் அர்க்யஜலம் இவற் றால் யாக மண்டபத்தையும் சுற்றிலும் புரோக்ஷிக்க வேண்டும்.

37-38. வீக்ஷணம்முதல் சதுஷ்பதம் ஈறுகவுள்ள ஸம்ஸ் காரங்களால் சுத்தம் செய்யப் பெற்ற அந்த யாகமண்டபத்தில் விகிரத் திரவியங்களை இறைத்து, தர்ப்பங்களாலாகிய கூர்ச்சியால் (கோலால்) திரட்டி, அவற்றை ஈசான திக்கில் வர்த்தனிக்கு ஆசன

---

1 பூதசுத்தி என்பதால் கலாநியாஸம் அங்க நியாஸம் இவற்றையும் கொள்ள வேண்டும்.

2 விசேஷார்க்ய ஜலத்தால் புரோக்ஷித்தல் என்பது கருத்து.

3 முதலியன என்பதால் அஸ்திர மந்திரத்தை உச்சரித்து விசேஷார் கிய ஜலத்தால் யாகத்திரவியங்களைப் புரோக்ஷித்தல், ஆத்மபூஜை, மந்திர சுத்தி, பஞ்சகவ்யம் செய்தல், ஞானகட்கம் செய்தல் ஆகிய இவை கொள் ளத் தக்கன.

4 அபிமந்திரிக்க வேண்டும் என்பதால் கவசமந்திரத்தால் அப்யுக்ஷ ணம், இருதய மந்திரத்தால் அபிமந்திரணம் அவகுண்டனம் அமிருதீகா ணம் இவற்றைக் கொள்ள வேண்டும்.

5 இடது கைப் பெருவிரலால், வலது உள்ளங்கையில் சந்தனத்தைச் சாத்தி, அருகு அக்ஷதை இவற்றால் ஆஸனமூர்த்தி மூல மந்திரங்களாலும் ஸம்ஹிதா மந்திரங்களாலும் பூஜை செய்து, சிவஹஸ்தம் கற்பிக்க வேண்டு மென்பது கருத்து.

மாருதற்காகக் கற்பிக்க வேண்டும். நிருருதி திக்கில் வாஸ்து நாதரையும், மேற்குத் துவாரத்தில் லக்ஷ்மியையும் பூஜிக்க வேண்டும்.

39-40. கும்பத்தை மேற்கு முகமாகவும், எல்லாத் தான்யங்களின் மீது இருப்பதாகவும், பிரணவத்தோடு விருஷபத்[1]தின் மீது அமர்ந்ததாகவும், பின்னர், வர்த்தனியை ஸிம்மத்தின் மீது அமர்ந்ததாகவும் செய்து, கும்பத்தில் அங்கங்களுடன் கூடிய சிவபெருமானையும், வர்த்தனியில் [2]அஸ்திரத்தையும், மண்டபத்தின் உள்ளிருக்கும் திக்குக்களில் இந்திரன் முதல் விஷ்ணு பிரமன் ஈறாகவுள்ள [3]திக்பாலர்களையும் பூஜிக்க வேண்டும்.

41-42. ஸமயி முதல் ஆசாரியர் ஈறாகிய எவரேனும், வர்த்தனியை முன்னரும் சிவகும்பத்தைப் பின்னருமாக எடுத்துச்

---

1 பின்னர்க் கூறப்படும் யாக மண்டபப் பிரதக்ஷிணத்திற்காக, இங்கு சிவ கும்பம் வர்த்தனி கும்பம் இவற்றிற்குச் சலாஸன பூஜை கூறப்பட்டது.

2 ஓம் ஸுவாஸநாய ஹும் ஃபட் நம:, ஓம் ஜ்வஸ்த்ர ... ஹும் ஃபட் நம:, ஓம் ஶ்லீம் பஶும் ஹும் ஃபட் அஸ்த்ராய ஹும் ஃபட் நம:, ஓம் ஹ்ருதயாய ஹும் ஃபட் நம:, ஓம் ஶ்லீம் ஶிரஸே ஹும் ஃபட் நம:, ஓம் வம் ஶிகாயை ஹும் ஃபட் நம:, ஓம் ஶும் கவசாய ஹும் ஃபட் நம:, ஓம் ஹும் நேத்ரத்ரயாய ஹும் ஃபட் நம:, ஓம் அஸ்த்ராய ஹும் ஃபட் நம: என்று சொல்லிக்கொண்டு பாசுபதாஸ்திரத்தைப் பூஜிக்க வேண்டும்.

3 கிழக்கு முதலிய திக்குக்களிலுள்ள கும்பங்களில், மஹாகாளர், சூரியன் இவர்களுக்கு நடுவில், ஓம் ஹாம் இந்த்ராய நம:, ஓம் ஹாம் அக்நயே நம:, ஓம் ஹாம் யமாய நம: என்றும், விக்னேசுவருக்கு மேற்கிலுள்ள கும்பங்களில் ஓம் ஹாம் நிர்ருதயே நம:, ஓம் ஹாம் வருணாய நம:, என்றும், சுப்ரமண்யருக்கு வடக்கிலுள்ள கும்பங்களில் ஓம் ஹாம் வாயவே நம:, ஓம் ஹாம் குபேராய நம:, என்றும், சண்டேசுவருக்குக் கிழக்கிலுள்ள கும்பங்களில் ஓம் ஹாம் ஈஶாநாய நம: என்றும், அவ்விடத்திலேயே ஈசான கும்பத்திற்குத் தெற்கில் ஓம் ஹாம் ப்ரஹ்மணே நம: என்றும், நிருருதிதிக்கில் நிருருதிகும்பத்திற்கு வடக்கில் ஓம் ஹாம் விஷ்ணவே நம: என்றும் பூஜிக்க வேண்டும்.

சென்று 1 ஹோ ஹோ ஶக்ர த்வயா ஸ்வஸ்யாம் திஶி விக்நப்ரஶாந்தயே । ஸாவதாநேந யாகாந்தம் யாவத்ஸ்தேயம் ஶிவாஜ்ஞயா ॥ இதன் பொருள்- ஓ இந்திரனே! உன்னால் தன்னுடைய திக்கில் விக்னங்கள் நீங்கும் பொருட்டு சிவாக்ஞையால் கவனத்துடன் யாகம் முடியும் வரை இருக்கத் தக்கது என்பதாம். இவ்வாறான கிழக்கு முதல் ஈசானம் ஈறாகவுள்ள திக்குக்களை விஷயமாக உடைய சிவாக்ஞையைத் திக்பாலர்களுக்கு அறிவிக்க வேண்டும்.

43. மூலமந்திரத்தை உச்சரித்துக் கொண்டு, இடைவிடாத நீர்ப் பெருக்கை உடையதாயும், அஸ்திரங்களின் சொரூபமாயும் உள்ள இந்த வர்த்தனியை, கிழக்குத் திக்கு முதல் கிழக்குத் திக்கு வரை நான்கு புறத்திலும் இரக்ஷைக்காகச் சுற்ற வேண்டும்.

44. சிவகும்பத்தின் 2 ஸ்தானத்தில் முதலாவது கலசத்தையும், அதற்கு இடப்புறமாக அஸ்திர ரூபமாயுள்ள வர்த்தனியையும் ஸ்தாபித்து, ஆதார சக்தி முதலாகிய ஆஸனங்களின் பூஜைகளைப் பெற்ற சிவகும்பத்தில், சிவபெருமானுக்கு ஸ்திராஸன பூஜை செய்ய வேண்டும்.

45. பின்னர், பிரணவாஸனத்தில் வீற்றிருக்கும் வர்த்தனியினிடத்து, அஸ்திரத்தைப் பூஜித்து, லிங்க முத்திரை செய்து கொண்டு, சிவகும்பம் வர்த்தனி கும்பம் இவற்றிற்கு, பகம் லிங்கம் இவற்றின் சேர்க்கையைச் 3 செய்யவேண்டும்.

46. சிவகும்பத்தினிடத்தில் ஞான கட்கத்தை ஸமர்ப்பித்து மூலமந்திர ஜபஞ் செய்து, அவ்வாறே அதனுடைய தசாம்ச

---

1 அக்னியை வஹ்நே என்றும், யமனை யம என்றும், நிருருதியை ஹோ நிர்ருதே என்றும், வருணனை பாஶிந் என்றும், வாயுவை வாயோ என்றும், குபேரனை ஹோ குபேர என்றும், ஈசானரை ஹோ ஈஶாந என்றும் ஸம்போதனஞ் செய்ய வேண்டும்.

2 சிவகும்பத்தின் ஸ்தானத்தில் என்பது மூலத்திலில்லை. அர்த்தத்தை அனுசரித்துச் சேர்க்கப்பட்டது.

3 ஓம் ஹௌம் ஹ்ரௌம் ஶிவஶக்திப்யாம் நம: என்னும்மந்திரத்தை உச்சரித்துச் செய்ய வேண்டும் என்பது கருத்து.

மாக வர்த்தனியிடத்தில் அஸ்திரத்தை ஜபித்து, 1 ரக்ஷையை விஞ்ஞாபனம் செய்ய வேண்டும்.

47-47½. வாயுதிக்கில் நான்கு கைகளையும், தாமரை இலைக்குச்சமமான நிறத்தையும், ஆயுதங்களையுமுடையவராயும், இடையூற்றை அகற்றுபவராயும் இருக்கிற விக்னேசுவரரைப் பூஜித்து, வித்வானானவன் ஈசானதிக்கில்குருவையும் 2 ஸ்தாபிக்கவேண்டும்.

48-48½. வித்வானானவன் பஞ்சாமிருதம் முதலியவற்றால் தன்னுடைய இஷ்ட லிங்கத்தில் உள்ள சிவபெருமானுக்கு விதிப்படி அபிஷேகம் செய்து, முற்கூறிய விதிப்படி பஞ்சோபசாரத்தால் பூஜிக்க வேண்டும்.

49-50- 50½. குண்டத்திற்குச் செய்ய வேண்டிய ஸம்ஸ்காரங்களைச் செய்து, சிவாக்கினியைப்பூஜித்து, விதிப்படிசருவைப் பாகஞ்செய்து, சருவை 3 ஸம்பாத ஹோமத்தால் சுத்திசெய்து, சிவபெருமான் அக்கினி தான் ஆகிய மூவருக்கும் அந்தச் சருவைக் கரண்டியால் மூன்று பாகஞ் செய்ய வேண்டும் பரமசிவன் அக்கினி ஆகிய இவர்களுக்கு இரண்டு பாகங்களைச் சமர்ப்பித்து, தன்னுடைய பாகத்தை இரக்ஷித்துவைத்துக் கொள்ள வேண்டும்.

## விரதபோகாங்கத் திரவியங்களைச் சமர்ப்பிக்கு முறை.

51-51½, ஈசுவரருக்கு 4 கிழக்குத் திக்கில், பாலுள்ளமரத்தாலாக்கப் பெற்றதாயும், பன்னிரண்டு அங்குலம் நீட்சியுடைய

---

1 அவபிருத ஸ்நானம் முடியும் வரை இவ்விடத்திலேயே தேவரீர் அமர்ந்து ரக்ஷித்தருள வேண்டுமென்பது கருத்து.

2 ஸ்தாபித்துப் பூஜித்து விடைபெற்றுக்கொள்ள வேண்டும் என்பது கருத்து.

3 மந்திரங்களால் ஹோமஞ் செய்யுமுறையில் ஸ்வாஹா சப்தத்தை உச்சரிக்கும்போது, ஸ்வா என்று சொல்லி அக்கினியில் ஹோமஞ் செய்து எஞ்சிய நெய்யை, ஹா என்று சொல்லி ஸம்ஸ்கரிக்கப்படும் திரவியத்தின் மேல் தெளித்தல் ஸம்பாதஹோமமாகும்.

4 ஈசுவரருடைய சமீபத்திற்குச் சென்று, தன்னுடைய ஆஸனத்திலமர்ந்து பூஜை செய்து என்பவற்றைச் சேர்த்துக் கொள்ள வேண்டும்.

தாயும் இருக்கிற 1 தந்த காஷ்டத்தை, தத்புருஷ மந்திரத்தாலே னும் கவசமந்திரத்தாலேனும் ஸமர்ப்பிக்க வேண்டும்.

52-53-54-55. தெற்குத் திக்கில், அகோர மந்திரத்தாலே னும் சிகாமந்திரத்தாலேனும் திருநீற்றை ஸமர்ப்பிக்க வேண்டும், மேற்குத் திக்கில், ஸத்யோஜாத மந்திரத்தாலேனும் இருதயமந் திரத்தாலேனும் மிருத்திகையையும், வடக்குத்திக்கில் வாமதேவ மந்திரத்தாலேனும், சிரோமந்திரத்தாலேனும், நெல்லிக்கனி, சுத்தமான ஜலம் இவற்றையும் சமர்ப்பிக்க வேண்டும். 2 ஈசான திக்கிலாவது ஈசானமந்திரத்தாலேனும் மூலமந்திரத்தாலேனும் ஜலத்தையும் பலாச இலையாலாகிய தொன்னையில் வாஸனையுள்ள பஞ்சகவ்யத்தையும், புஷ்பத்தையும், அக்கினி திக்கில் கோரோ சனையையும் ஸமர்ப்பிக்க வேண்டும்.

56. நிருருதி திக்கில் 3 அகிலையும், வாயுதிக்கில் சந்தனம், அகில், பச்சைக் கர்ப்பூரம், குங்குமப்பூ இவற்றையும், மேற்குத் திக்கில் தர்ப்பங்களுடன் எல்லா ஹோமத்திரவியங்களையும் ஸமர் ப்பிக்க வேண்டும்.

57-57½. தண்டம், அக்ஷமாலை, கௌபீனம், பிக்ஷாபாத்தி ரம் இவற்றைத் தெற்குத் திக்கில் அகோர மந்திரத்தால் ஸமர்ப் பிக்க வேண்டும். வடக்குத் திக்கில் மை, குங்குமம், தைலம், சலாகை, (மையிடும் கோல்) சீப்பு, தாம்பூலம், கண்ணுடி, கோரோ சனை இவற்றைச் 4 சமர்ப்பிக்க வேண்டும்.

58-58½. ஈசானதிக்கில் ஈசுவரர் சந்தோஷத்தை அடை தற்காக, ஈசான மந்திரத்தை உச்சரித்து, ஆஸனம், பாதரக்ஷ

1 இவ்விடத்திற் கூறப்படும் தந்தகாஷ்டம், மிருத்திகை, திருநீறு ஜலம், பஞ்சகவ்யம், ஹோமத்திரவியம், தண்டம், அக்ஷமாலை ஆகிய இவை விரதம் விருத்தி அடைவதற்காகக் கொடுக்கப்படல் வேண்டும். கோரோ சனை, குங்குமப்பூ, தாம்பூலம் முதலிய இவை போகவிருத்தியின் பொரு ட்டுக் கொடுக்கப்படல் வேண்டும்.

2 ஜலத்திற்கு ஸ்தானபேதமும் மந்திர பேதமும் இதனுல் அறிவிக் கப்பட்டது.

3 இருதய மந்திரத்தால் என்பதைச் சேர்த்துக் கொள்ள வேண்டும்.

4 வாமதேவ மந்திரத்தால் என்பதைச் சேர்க்குக.

கள், பாத்திரம், யோகபட்டம், குடை இவற்றைச் சமர்ப்பிக்க வேண்டும்.

59-59½. கிழக்குத் திக்கில், நெய்யுடன் கூடிய சருவையும், கைத் துடைத்தற்குரிய கருவி, முகவாஸம் இவற்றையும், தத்புருஷ மந்திரத்தால் சமர்ப்பிக்க வேண்டும். இவற்றுள் எது சேகரிக்கப்படவில்லையோ அதை மனதால் கற்பித்துக்கொள்ள வேண்டும்.

## அதிவாஸதினத்தில் பவித்திரங்களுக்குச் செய்ய வேண்டுவன.

60-61-62-62½, 1 பவித்திரங்களை எடுத்து அக்கினியின் அருகில் கொண்டுபோய் அஸ்திரமந்திரத்தை உச்சரித்து, ஜலத்தால் 2 புரோக்ஷித்து, ஸம்ஹிதா மந்திரத்தால் அபிமந்திரித்துப் பரிசுத்த மாக்கி, கிருஷ்ணாஜினம் முதலியவற்றால் மூடி, 3 ஸம்வத்ஸர ரூபியாயும், 4 எல்லாக் கர்மாக்களையும் அறிபவராயும் 5 இரக்ஷிப்பவராயும், நாசமற்றவராயும் இருக்கிற சிவபெருமானைச் சிந்தித்து, ஸம்ஹிதாமந்திரங்களை உச்சரித்து இருபத்தொரு முறை ஸம்பாத ஹோமத்தால் பவித்திரங்களைச் 6 சுத்தி செய்ய வேண்டும்.

## கந்த பவித்திரம் சாத்துகிற முறை.

63:63½. யாக கிருஹம், விருஷபஸ்தானம், பிராஸாதம், (மேடை) அக்கினி கிருஹம், பூஜாதிரவியங்கள், ஆகிய இவற்றைக் கவச மந்திரத்தை உச்சரித்து 7 நூலாற் சுற்ற வேண்டும்.

---

1 சுத்தமான பாத்திரத்தில் இருக்கிற என்பதைச் சேர்க்க வேண்டும்.

2 குண்டத்திற்கு மேற்கில் தர்ப்பத்துடன் கூடிய பிரணவாஸன மண்டலத்தில் வைத்து என்பதைச் சேர்த்துக் கொள்ள வேண்டும்.

3 பவித்திரம் சாத்தின தினம் முதற்கொண்டு அன்று வரை உள்ள ஒரு ஸம்வத்ஸர ரூபமாயுள்ளவராயும் என்பது கருத்து.

4 ஒரு வருஷத்திலுள்ள எல்லாக் கர்மாக்களையும் என்பது பொருள்.

5 எல்லாக் கர்மாக்களையும் இரக்ஷிப்பவராயும் என்பது கருத்து.

6 சுத்தஞ்செய்த பின்னர் அஸ்திரமந்திரத்தால் ஸம்ரக்ஷணம், கவசமந்திரத்தால் அவகுண்டனம், அமிருதீகரணம் இவற்றைச் செய்து, கும்பத்தின் சமீபத்தில் வைக்க வேண்டும்.

7 மூன்று நூல்கொண்டு சுற்றவேண்டும் என்பது கருத்து.

64-64½. பின்னர், அருச்சிக்கப்பட்ட சூரியனுக்கு 1 கந்த பவித்திரஞ் சாத்தி, சிவபெருமானுடைய யாககிருஹத்துட் சென்று, வாஸ்துப்பிரமனுக்கும் கந்த பவித்திரஞ் சாத்த வேண்டும்.

65-66-66½. அஸ்திரங்களுடன் (அவரவர்களுடைய ஆயுதங்களுடன்) கூடியலோகபாலர்கள், சிவகும்பம், வர்த்தனீகும்பம், விநாயகர், மண்டலேசுவரர், குரு ஆகிய இவர்களுக்கு, தத்தம் பெயர் கொண்டர்ச்சித்து, கந்த பவித்திரஞ்சாத்தி, தன்னையும் கந்த பவித்திரத்தால் அலங்கரித்துக் கொள்ள வேண்டும்.

67-68-68½. பின்னர் எல்லா ஓஷதிகளாலும் பூசப்பெற்றதாயும், அதிகமும் குறைவுமில்லாத அளவுள்ளதாயும், தூபமிடப்பெற்றதாயும், ஒரு முடிச்சையும் சில நூல்களையுமே உடையதாயும், தர்மம் அர்த்தம் காமம் மோக்ஷம் இவற்றைஅடைதற்கு உபாயமாயும் இருக்கிற ஆமந்திரண பவித்திரத்தை, புஷ்பங்கள் அருகு இவற்றுடன் அஞ்சலி மத்தியில் வைத்துக் கொண்டு 2 ஆமந்திரணத்தை அறிவிக்கும் மந்திர சுலோகத்தைப்படிக்க வேண்டும். அதாவது:—

69-70-71-72-72½. [illegible] அல்லது, [illegible]

(3 எல்லாப் பூஜாவிதிகளின் குறைகளை நீக்கி அவற்றைப் பூர்த்தி செய்வதில் ஸமர்த்தரான ஓ பிரபுவே! உம்முடைய

---

1 கருஅகில், பச்சைக் கர்ப்பூரம், கஸ்தூரி, வெண்ணெய், விலாமஜ்ஜம் வேர், சந்தனம் இவற்றால் வாஸிக்கப்பட்டதாயும், ஒரு முடிச்சும் சில நூல்களையும் உடையதாயுமுள்ள பவித்திரம் கந்த பவித்திரமெனப்படும்.

2 ஆமந்திரணமாவது— வேண்டிக் கொள்ளுதல்.

3 இதன் பொருள் பவித்திர லக்ஷண விதியிலுள்ள முதல் சுலோகத்தின் டிப்பணத்தில் குறிக்கப்பட்டிருக்கிறது.

ஆணையால் அடையப்பட்ட ஸாதனங்களை உடைய நான் யாகத்தைக் குறித்து உம்மை 1 வேண்டிக்கொள்ளுகிறேன். சித்து அசித்து இவற்றிற்குப் பதியாயுள்ளவரே! யாகம் செய்யும் எனக்குப் பவித்திர கர்மாவின் பலனைத் தந்தருள வேண்டும். உமக்கு நமஸ்காரம். எப்பொழுதும் எல்லா வழியாலும் எனக்கு அனுக்கிரஹம் செய்தருள வேண்டும்.) அல்லது,

(அம்பிகை, கணபதி, மந்திரேசுவரர், லோகபாலர்கள், பரிவாரம் இவர்களுடன்கூடிய தேவரீர், வேண்டப்பட்டவராக இருக்கிறீர். விடியற்காலத்தில் நான் தேவரீருக்குப் பவித்திரத்தை நிவேதனம் செய்கிறேன். ஓ பரமேசுவரரே! உம்முடைய ஆக்ஞையால் நியமத்தையும் செய்யப் போகிறேன்.)

73-73½. இவ்வாறான இரண்டு முறைகளுள், யாதானுமொரு முறையை அனுசரித்து, ஈசுவரரை ஆமந்திரணஞ் செய்து ரேசகத்தால் பவித்திரத்தை அமிருதீகரணஞ் செய்து, மூலமந்திரத்தை துவாதசாந்தம் வரை உச்சரித்துப் பவித்திரத்தைச் சிவபெருமானுக்குச் சமர்ப்பிக்க வேண்டும்.

74. ஜபம், ஸ்தோத்திரம், நமஸ்காரம், இவற்றைச்செய்து ஈசுவரரைப் பொறுத்துக் கொள்ளும்படி பிரார்த்திக்க வேண்டும்.

## அக்கினியிலுள்ள சிவபெருமானுக்குச் செய்ய வேண்டுவன.

75. சருவின் 2 மூன்றாவது பாகத்தை அக்கினியிலுள்ள சிவனுக்கு ஹோமஞ் செய்து, அக்கினியில் எழுந்தருளிய சிவ

1 பூஜையைப் பெற்றருள வேண்டுகிறேன் என்பது கருத்து.

2 இந்தப் பவித்ர விதியில் ஐம்பதாவது சுலோகத்தில், சருவை மூன்று பாகஞ் செய்து, பரமசிவன் அக்கினி இவர்களுக்கு இரண்டு பாகமும், தனக்கு ஒரு பாகமுமாகப் பிரிக்க வேண்டு மென்று கூறப்பட்டிருக்கின்றது. சிவபெருமானுக்குக் கொடுக்கப்பட்ட ஒரு பாகத்தை ஐந்து பாகங்களாகச் செய்து, வெகும்பம் வர்த்தனீகும்பம் மண்டலேசுவரர் இஷ்டலிங்கம் இவர்களுக்கு நான்கு பாகங்களையும் எஞ்சிய ஒரு பாகத்தை விருதாங்கங்களை ஸமர்ப்பிக்கும்பொழுதும்நிவேதனம்செய்யவேண்டும். அக்கினிக்காகப் பிரிக்கப்பட்ட ஒரு பாகத்தை நான்கு பாகங்களாகச் செய்து முதல் பாகத்தைச் சருவை நிவேதனம் செய்தபின்னர் ஹோமம் செய்து, இரண்டாவது பாகத்தை அந்தர்ப்பலியிட்டு, மூன்றாவது பாகத்

பெருமானுக்குப் பவித்திரம் சாத்த வேண்டும். ஓம் வாஸ்த்வாதி திக்பாலேப்யோ ருத்ர க்ஷேத்ரபாலாதிப்ய: ஸ்வாஹா என்று சொல்லிக் கொண்டு அந்தர்ப்பலியையும், திக்குக்கள் பெயர்கள் இவற்றுடன் பஹிர்ப்பலியையும், எல்லாத் திக்குக்களிலும் 1 கொடுக்க வேண்டும்.

76. சிலர் வாயுதிக்கில் க்ஷேத்திரபாலருக்குப் பலியிட வேண்டுமென்று கூறுகின்றனர். பின்னர் ஆசமனஞ் செய்து ந்யூனம் (குறைதல்) முதலிய தோஷங்களை நீக்கிக் கர்மாவைப்பூர்த்தி செய்கிற 2 ஹோமத்தை விதிப்படி செய்ய வேண்டும்.

76½, பூர்ணாஹுதி, வியாஹிருதிஹோமம், இவற்றைச் செய்து, அக்கினியை நிரோதனஞ் செய்ய வேண்டும்.

பின்னர், ஓம் ஹாம் அக்னயே ஸ்வாஹா, ஓம் ஹாம் ஸோமாய ஸ்வாஹா, ஓம் ஹாம் அக்னீஷோமாப்யாம் ஸ்வாஹா, ஓம் ஹாம் அக்னயே ஸ்விஷ்டக்ருதே ஸ்வாஹா என்று நான்கு ஆகுதிகளைக்கொடுக்க வேண்டும்.

77-77½. பிறகு அக்கினிகுண்டத்தில் அருச்சிக்கப்பட்ட சிவபெருமானை, மண்டலத்தில் அருச்சிக்கப்பட்ட சிவபெருமானிடத்தில் நாடீஸந்தான ரூபமான முறையால் சேர்க்க வேண்டும்.

## ஸம்ஸ்கரிக்கப்பட்ட பவித்திரங்களை இரக்ஷித்தல்.

78-78½. பரிசுத்தமான மூங்கில் முதலியவற்றுலாக்கப் பெற்ற பாத்திரத்தில் அஸ்திர கவச இருதய மந்திரங்களை நியாஸஞ் செய்து, பின்னர் அந்தப் பாத்திரத்தில் பவித்திரங்களை வைக்கவேண்டும்.

---

தை அக்கினிக்குப் பவித்திரம் சாத்தும் பொழுது ஹோமம் செய்து, நான்காவது பாகத்தைப் பலியிட வேண்டும். தனக்காகப் பிரித்து வைக்கப்பட்ட ஒரு பாகத்தை சிஷ்யனுக்கும் தனக்குமாகப் பிரித்து' இறுதியில் போஜனம் செய்ய வேண்டும் இது அநுஷ்டானமுறைஆகும்.

1 அந்தர்ப் பலி, பஹிர்ப்பலிக் குரிய தேவர்களுக்குப் பவித்திரமும் சாத்த வேண்டும்.

2 மூலமந்திரத்தை உச்சரித்து நூற்றெட்டு முறை ஹோமம் செய்ய வேண்டும் என்பது கருத்து.

79-79½. கலாமந்திரங்களாலேனும், ஷடங்க மந்திரங்களாலேனும், பஞ்சப்பிரும மந்திரங்களாலேனும், மூலமந்திரத்தாலேனும்; பவித்திரங்களை வைக்க வேண்டும்.

80-80½. பவித்திரங்களுக்கு மேல் இருதய மந்திரம் கவச மந்திரம் அஸ்திர மந்திரங்களை நியாஸஞ்செய்து, 1 இவ்வாறு ஸம்புடீகரணஞ் செய்து, வேறு பாத்திரத்தால் மூட வேண்டும்.

81-81½. கவசமந்திரத்தை உச்சரித்து நூல் சுற்றி, அங்க மந்திரங்களால் பூஜித்து, கலசத்தில் எழுந்தருளியிருக்கும் சிவபெருமானிடத்தில், பக்தியால் வணங்கி, இரக்ஷித்தற்காக அந்தப் பாத்திரத்தைச் சமர்ப்பிக்க வேண்டும்.

## ஸித்தாந்த சாஸ்திரம் குரு இவர்களைப் பூஜித்தல் முதலியன.

82-82½. புஷ்பம் தூபம் முதலியவற்றால் அருச்சிக்கப்பட்ட ஸித்தாந்த புஸ்தகத்திலும் பவித்திரஞ் சாத்தி குருவின் பாதங்களின் அருகிற் சென்று அன்புடன் பவித்திரத்தைச் சமர்ப்பிக்க வேண்டும்.

83-83½. வெளியில் வந்து, ஆசமனஞ் செய்து, கோமயத்தால் மெழுகப் பெற்ற மூன்று மண்டலங்களில் முறையே பஞ்சகவ்யம், சரு, தந்தகாஷ்டம் இவற்றை 2 ஸேவிக்க வேண்டும்.

84-85-85½. பின்னர் ஆசமனம் செய்து 3 மந்திரங்களால் கவசம் பூட்டிக்கொண்டவனாய், சங்கீதத்தால் சிவபெருமானுக்கு ஜாகரணத்தை (விழிப்பை)ச் செய்து, பரமேசுவரரைச்சிந்தித்துக் கொண்டு தர்ப்பங்களாலாக்கப்பெற்ற படுக்கையில் புபுக்ஷுவானவன் நித்திரை செய்ய வேண்டும். இவ்வாறே முமுக்ஷுவும் தனித் திருநீற்றாலாக்கப் பெற்ற படுக்கையில், உபவாசத்துடனும் ஒரே மனதுடனும் நித்திரை செய்ய வேண்டும்.

பவித்திர அதிவாஸ விதி முற்றிற்று.

---

1 இருதய கவச அஸ்திர மந்திரங்களைக் கீழும் மேலுமாக.

2 இதன் விரிவான பொருள் நிர்வாண தீக்ஷாப் பிரகரணத்தில் பின்னர்க் கூறப்படுகிறது.

3 ஸகளீகரணம் செய்து திலங்கள் கொண்டு மூன்று ப்ராகாரம் செய்து கொள்ளுதலால் ரக்ஷை செய்து என்பது பொருள்.

## பவித்திர அதிவாஸ தினத்திற்கு மறுநாளில் பவித்திரம் சாத்துதற்கு முன்னர் செய்ய வேண்டுவன.

86-87-88. பின்னர் ஆசாரியர் வைகறையில் எழுந்து, ஸ்நாநம் ஸந்த்யோபாஸனை முதலியன செய்து, யாகமண்டபம்சென்று சிவபெருமானை விஸர்ஜனம் செய்யாது 1 பவித்திரங்களை எடுத்து ஈசான திக்கில் செய்யப் பெற்ற மண்டலத்தில் சுத்தமான பாத்திரத்தில் வைக்க வேண்டும். அஷ்டபுஷ்பங்களால் சிவ்பெருமானைப் பூஜித்து விஸர்ஜனஞ் செய்து நிர்மாலியத்தை நீக்க வேண்டும்.

89-89½. சுத்தமான பூமியில் முன்போல், காலை உச்சிப் பொழுது ஆகிய காலங்களில் செய்ய வேண்டிய கர்மாக்களை முடித்து, சூரியன், துவாரபாலர், திக்பாலர், 2 சிவகும்பம், வர்த்தநீ கும்பம், மண்டலம், இஷ்டலிங்கம் இவற்றிலுள்ள சிவபெருமான், அக்கினி ஆகிய இவர்களுக்கு விசேஷமாக விரிவுடன் நைமித்திக பூஜையைச் செய்ய வேண்டும்.

90-90½. மந்திரங்களுக்கு ஸாமான்ய விசேஷ தர்ப்பணங்களைச் செய்து, அஸ்திர மந்திரத்தை உச்சரித்து நூற்றெட்டு 3 ப்ராயச்சித்தாகுதிகளையும் செய்து, மெதுவாகப் பூர்ணாஹுதியையும் கொடுக்க வேண்டும்.

## மண்டபத்திலுள்ள தேவர்களுக்குப் பவித்திரம் சாத்துமுறை.

91-91½. சூரியனுக்குப் பவித்திரம் சாத்தி, ஆசமனம் சகளீகரணங்களைச்செய்து, துவாரங்கள், 4 துவாரபாலர்முதலியவர், திக்பாலர், சிவகும்பம், வர்த்தனீ கும்பம் இவற்றிற்கும் பவித்திரஞ் சாத்தவேண்டும்.

---

1 பஞ்சகவ்யம், சரு, நீங்கலான விரதாங்கங்களையும் கொள்ளவேண்டும்.

2 வாஸ்துப்பிரமன், லக்ஷ்மீ, கணபதி, குரு, மண்டலேசுவரர், இவர்களுக்கும் பூஜை செய்ய வேண்டும்.

3 கெட்ட ஸ்வப்னங்கள் நாசமடையும் பொருட்டு என்பது கருத்து.

4 முதலியவர் என்னும் பதத்தால் லக்ஷ்மீ வாஸ்துப்பிரமன் இவர்களைக் கொள்ள வேண்டும்.

92-92½. பின்னர், சிவபெருமானுடைய ஸந்நிதியில், தன்னுடைய ஆஸனத்திலமர்ந்து, தனக்குப் பவித்திரஞ் சாத்திக்கொண்டு, கணபதி, வரிசையாயுள்ள குருபரம்பரை இவர்களுக்கும் பவித்திரஞ் சாத்த வேண்டும்.

## பரமசிவனுக்குப் பவித்திரம் சாத்து முறை.

93-93½. 1 பின்னர், பவித்திரத்தை எடுத்துக் கொண்டு சிறிது கலசத்தை நோக்கி, 2 காலரூபியாகிய சிவபெருமானைச் சிந்தித்துக்கொண்டு இவ்வாறு கூறவேண்டும்.

94-95-95½. ஓம் காலாத்மநா த்வயா தேவ யத்த்ருஷ்டம் மாமகே விதௌ । க்ருதம் க்லிஷ்டம் ஸமுத்ஸ்ருஷ்டம் ஹ்ருதச்சித்ரம் க்ருதம் ச யத் ॥ ததஸ்து க்லிஷ்டமக்லிஷ்டம் க்ருதம் ஸர்வம் க்ருதம் ச யத் । ஸர்வாத்மநா மஹேஶேந பவித்ரேண தவேச்சயா ॥ (ஓ பகவானே! நான் செய்யும் பூஜாவியாபாரத்தில், காலரூபியான உம்மால் அறியப்பட்ட யாதொரு பூர்த்தியாகாதவாறு அனுட்டிக்கப்பட்ட என்னுடைய கர்மா உண்டோ! அது பூர்த்தியுற்றதாக ஆகட்டும். அக்ஞானம் முதலியவற்ருல் ஸம்ஸ்காரத்தை உபேக்ஷித்துச் செய்யப்பட்டதாகவேனும், அல்லது அனுட்டிக்கப் படாததாகவேனும் இருக்கிறதாயும், பூஜா ஸம்பந்தமின்றிச் செய்யப்பட்ட தனது சொந்தக் காரியத்தை உடையதாயும், தனலோபம் முதலியவற்ருல் மறைக்கப்பட்டதாயும் இருக்கிற நன்ருகச் செய்யப்படாத என்னுடைய கர்மாவானது நன்ருகச் செய்யப்பட்டதாக ஆகட்டும். சிவபெருமானே! 3 ஸர்வ வியாபகமான இந்தப் பவித்திரத்தால் உம்முடைய இச்சையினுல் எல்லாக் குறைகளையும் பூர்த்தி செய்ய வேண்டும்.)

---

1 போகாங்கத் திரவியங்களை நிவேதநஞ்செய்த பின்னர்.

2 த்ருடி, லவம், நிமேஷம், காஷ்டை, கலை, முஹூர்த்தம், கடிகை, (நாழிகை) யாமம், அஹோராத்ரம், பக்ஷம், மாஸம், ருது, அயனம், ஸம்வத்ஸரம், யுகம், மந்வந்தரம், கற்பம், மஹாகற்பம் ஆகிய பதினெண் அவயவங்களை உடைய காலரூபியான என்பது கருத்து.

3 ஆத்மதத்துவ வித்யாதத்துவ சிவதத்துவரூபமாயிருப்பது பற்றி ஸர்வ வியாபகமெனப்பட்டது.

96-96½. ஓம் வஜ்ராய வஜ்ராய 1 ஈவ்வ்ரதியஷேவராய ஸ்வாஹா என்று சொல்லிக் கொண்டு மாயை ஈருகிய தத்துவங்களை வியாபிக்கிறதாயும், காரணேசுவரரான பிரமனால் இரக்ஷிக்கப்பட்டதாயும் இருக்கிற ஆத்ம தத்துவத்தில் இருக்கும் சிவபெருமானுக்கு, மூலமந்திரத்தை 2 மாயாந்தமாக உச்சரித்து ஆத்ம பவித்திரஞ் சாத்த வேண்டும்.

97-97½. சுத்த வித்தையீருகிய தத்துவங்களை வியாபிக்கிறதாயும், காரணேசுவரரான விஷ்ணுவால் இரக்ஷிக்கப்பட்டதாயும் உள்ள வித்தியாதத்துவத்தில் இருக்கும் சிவபெருமானுக்கு மூலமந்திரத்தை 3 மகேசுவரதத்துவமீருக உச்சரித்து வித்யா பவித்திரம் சாத்த வேண்டும்.

98-98½. பின்னர் சிவதத்துவமீருன தத்துவங்களை வியாபிக்கிறதாயும், காரணேசுவரரான ருத்திரால் இரக்ஷிக்கப்பட்டதாயும் இருக்கிற சிவதத்துவத்தில் இருக்கும் சிவபெருமானுக்கு, மூலமந்திரத்தைச் 4 சிவதத்துவமீருக உச்சரித்துச் சிவ பவித்திரஞ் சாத்தவேண்டும்.

99-99½. நல்ல விரதத்தை உடையவன், காரணேசுவரர்களான பிரமன் முதலிய ஐவரால் இரக்ஷிக்கப்பட்ட எல்லாத் தத்துவங்களிலும் இருப்பவரான சிவபெருமானுக்கு, மூலமந்திரத்தைத் துவாதசாந்த மீருக உச்சரித்து, கங்காவதாரக மென்னும் பவித்திரத்தைச் சாத்தவேண்டும்.

---

1 யாகம், கிருஷ்ணஷ்டமீ முதலிய விரத தினங்கள், கோபமின்மை முதலிய நியமம், என்னும் இவற்றிற்கு ஈசுவரரான சிவபெருமானுக்குத் தன்னை நிவேதனஞ் செய்கிறேன் என்பது மந்திரத்தின் கருத்து.

2 மாயா தத்துவமீருக வியாபிக்கிறதாயும், தாமரைபோலுள்ள அண்ணங்களில் பிரகாசிக்கிறதாயும் உள்ள ருத்திரரைக் குறிக்கிற, மகாரமீருக உச்சரிக்க வேண்டும் என்பது கருத்து.

3 ஈசுவர தத்துவமீருக வியாபிக்கிறதாயும், புருவநடுவில் பிரகாசிக்கிறதாயும் இருக்கிற ஈசுவரரைக் குறிக்கும் பிந்து ஈருக உச்சரிக்க வேண்டும் என்பது கருத்து.

4 பிரமரந்திரத்தின் முடிவில் பிரகாசிக்கிறதாயும், ஸதாசிவரைக் குறிக்கிறதாயும், அர்த்த சந்திரன் நிரோதி இவற்றுடன் கூடியதாயுமுள்ள நாத மீருக என்பது பொருள்.

100-100½. மோக்ஷத்தில் விருப்பமுள்ளவர்களுக்கு, முறையே ஆத்மவித்யா சிவதத்துவங்களாலும், போகத்தில் விருப்பமுள்ளவர்களுக்கு, சிவ வித்யாத்ம தத்துவங்களாலும் பவித்திரம் விதிக்கப்பட்டிருக்கின்றது.

101-101½. ஆசாரியர், மூலமந்திரத்தை ஸ்வாஹா சப்தத்தை இறுதியிலுடையதாகவேனும், நம: என்னும் சப்தத்தை இறுதியிலுடையதாகவேனும் உச்சரித்துக்கொண்டு, இந்த எல்லாத் தேவர்களுக்கும் பவித்திரஞ் சாத்தவேண்டும்.

## பவித்திரங்கள் சாத்துதற்குரிய மூலமந்திரங்கள்.

102. ஓம் ஹௌம் ஆத்மதத்த்வாதிபதயே ஶிவாய ஸ்வாஹா, ஓம் ஹௌம் வித்யாதத்த்வாதிபதயே ஶிவாய ஸ்வாஹா, ஓம் ஹௌம் ஶிவதத்த்வாதிபதயே ஶிவாய ஸ்வாஹா, என்று சொல்லிக்கொண்டு முறையே மூன்று பவித்திரங்களையும் சாத்தி, பின்னர் ஓம் ஹௌம் ஸர்வதத்த்வாதிபதயே ஶிவாயஸ்வாஹா என்னும் மந்திரத்தை உச்சரித்து, கங்காவதாரகமென்னும் பவித்திரத்தைச் சாத்தவேண்டும்.

## சிவபெருமானுக்கு விக்ஞாபனஞ் செய்தல்.

102½. அஞ்சலியில் புஷ்பங்களை வைத்துக்கொண்டு, அன்புடன் சிவபெருமானிடம் விக்ஞாபனம் செய்யவேண்டும்.

## விக்ஞாபனஞ் செய்யுமுறை

103-107½. அந்தஸ்ஸ்த ஸர்வபூதாநாம் ஸம்ஸ்திதஸ்த்வம் சராசரே। அந்தஶ்சாரேண பூதாநாம் த்ரஷ்டா த்வம் பரமேஶ்வர॥ கர்மணா மநஸா வாசா த்வத்தோ நாந்யா கதிர்மம। மந்த்ரஹீநம் க்ரியாஹீநம் த்ரவ்யஹீநஞ்ச யத்க்ருதம்॥ ஜபஹோமார்ச்சநாஹீநம் க்ருதம் நித்யம் மயா தவ। அக்ருதம் வாக்யஹீநஞ்ச தத்பூரய மஹேஶ்வர॥ ஸுபூஜிதஸ்த்வம் ஸுரேஶாந பவித்ரம் பாபநாஶநம்। த்வயா பவித்ரிதம் ஸர்வம் ஜகத்ஸ்தாவரஜங்கமம்॥ கண்டிதம் யந்மயா தேவ வ்ரதம் வைகல்யயோகதஃ। ஏகீபவது தத்ஸர்வம் தவாஜ்ஞாஸூத்ரகும்பிதம்॥

இ-ள்:— தேவரீர் ஸமஸ்தமான ஜந்துக்களுக்கும் முத்தி ரூபமான கதியாக இருக்கிறீர். தேவரீர் ஸ்தாவர ஜங்கமங்களை அதிட்டித்திருக்கிறீர். ஓ பரமேசுவரரே! தேவரீர் எல்லாப் பூதங்களிடத்திலும் அந்தர்யாமியாக இருந்து சுபாசுப கர்மாக்களை அறிபவராக இருக்கிறீர். என்னுடைய சரீரவியாபாரம் மனம் வாக்கு ஆகிய இவற்றிற்கு உம்மைத் தவிர வேறொன்றும் விஷயமில்லை. ஓ பரமேசுவரரே! தினந்தோறும் என்னால் உமக்கு மந்திரஹீனமாகவும், கிரியாஹீனமாகவும், திரவியஹீனமாகவும், எந்தக் கர்மாவானது செய்யப்பட்டதோ, ஜபம், ஹோமம், பூஜை இவையற்றதாக எந்தக்கர்மாவானது செய்யப்பட்டதோ, அந்த எல்லாக் கர்மாக்களையும், ஸந்த்யோபாஸனை முதலியன செய்யாதிருத்தல், நல்வரவு கூறாமை முதலிய எல்லாக் கர்மாக்களையும், பூர்த்திசெய்து வைக்கவேண்டும். ஓ தேவர்களுக்கு நாயகரே! தேவரீர் அநாதி நின்மலராக இருக்கிறீர். பவித்திரரூபமாயும், மலம் முதலியவற்றை நாசஞ்செய்யும் பொருளாயும் இருக்கிறீர். உம்மால் ஸ்தாவர ஜங்கம ரூபங்களான எல்லா உலகங்களும் சுத்தமாகச் செய்யப்பட்டன. ஓ தேவரே! என்னால் எந்த விரதமானது யாதானுமொன்றின் குறைவால் நாசம் செய்யப்பட்டதோ, அந்த எல்லா விரதங்களும் உம்முடைய ஆணையாகிய நூலாற் கோக்கப்பட்டு ஒன்றாக இருக்கட்டும்.

## விக்ஞாபநம் செய்தபின்னர்ச் செய்யவேண்டுவன.

108-108½. பின்னர், ஜபம் செய்து அதனைச் சிவபெருமானுக்கு நிவேதனஞ் செய்து, அன்புடன் ஸ்தோத்திரஞ்செய்து, நின்மலமான சித்தத்துடன் வணங்கிச் சிவபெருமானைத் திருப்தியுடையவராகப் பாவிக்கவேண்டும்.

109-110-110½. நான்கு மூன்று இரண்டு மாதங்களேனும், அல்லது ஒரு மாதமேனும், பதினைந்து தினங்களேனும், எழுநாட்களேனும், ஐந்து நாட்களேனும், மூன்று நாட்களேனும் ஒரு நாளேனும், குருவால் எவ்வாறு குறிக்கப்பட்டிருக்கிறதோ, அவ்வாறு 1 நியமத்தை ஸ்வீகரித்து அதன் பின் சிவபெருமானை

---

1 பவித்திரத்தை விஸர்ஜனம் செய்தற்கு முன் பிற தேசம் செல்லாமை, ஒவ்வொரு இரவிலும் ஸங்கீதம் ஸ்தோத்திரம் செய்தல், இவற்றால்

வணங்கி, பரமசிவனைப் பொறுத்துக் கொள்ளும்படி வேண்டிக் குண்டத்தினருகிற் செல்லவேண்டும்.

## அக்கினி காரியவிதி.

111-112. இவ்வாறே, அக்கினியில் எழுந்தருளியிருக்கும் சிவபெருமானுக்கும் நான்கு பவித்திரங்கள் சாத்தி, புஷ்பம் அருகு அக்ஷதை முதலியவற்றால் அருச்சித்து, ருத்திரர் முதலாயினோர்க்குஅந்தர்ப்பலிபவித்திரம்இவற்றைச்சமர்ப்பிக்கவேண்டும்.

113-114-115. பரமசிவனுடைய யாக கிரஹத்திற்குச் சென்று, சிவபெருமானை வணக்கத்துடன் ஸ்தோத்திரம் செய்து பொறுத்துக் கொள்ளும்படி வேண்டிக் கொள்ளவேண்டும். பிறகு, பிராயச்சித்த ஹோமஞ் செய்து, சருவை ஹோமம் செய்து, வியாஹிருதி ஹோமம் செய்து, நிஷ்டுரமுத்திரையால் அக்கினியை நிரோதனம் செய்யவேண்டும். பின்னர், அக்கினி முதலாயினோர்க்கு நான்கு ஆகுதிகள் கொடுத்து, பின்னர் திக்பாலர்களுக்குப் பவித்திரத்துடன் பஹிர்ப்பலி ஸமர்ப்பித்து, ஸித்தாந்த புஸ்தகத்திற்கும் வணக்கத்துடன் பவித்திரம் சாத்தவேண்டும்.

## ஹோம மந்திரங்களாவன.

ஓம் ஹாம் பூ: ஸ்வாஹா, ஓம் ஹாம் புவ: ஸ்வாஹா, ஓம் ஹாம் ஸுவ: ஸ்வாஹா, ஓம் ஹாம் பூர்ப்புவஸ்ஸுவ: ஸ்வாஹா என்பன வியாஹிருதி ஹோம மந்திரங்களாகும். ஓம் ஹாம் அக்நயே ஸ்வாஹா, ஓம் ஹாம் ஸோமாய ஸ்வாஹா, ஓம் ஹாம் அக்நீஷோமாப்யாம் ஸ்வாஹா, ஓம் ஹாம் அக்நயே ஸ்விஷ்டக்ருதே ஸ்வாஹா என்றுசொல்லிக்கொண்டு நான்குஆகுதிகளைக்கொடுக்கவேண்டும்.

## ஆசாரிய பூஜை.

116. குருவைச் சிவபெருமானைப் போல் ஆடை தனம் ஆபரணங்களால் பூஜிக்கவேண்டும். சந்தோஷத்தை அடைந்த ஆசாரியரால் சிவபெருமான் சந்தோஷத்தை அடைகிறார்.

---

விழித்தல், உப்புச் சேராத அன்னத்தை உண்ணுதல், வபனம் செய்யாதிருத்தல், ஸ்திரீசம்போகமின்மை, சத்திக்குத் தக்கவாறு தனம் தான்யம் அன்னம் முதலியவற்றைக் கொடுத்தல் முதலியன நியமம்.

117. எவனுடைய ஆசாரியர் சந்தோஷமுள்ளவராக இருக்கிறாரோ, அவனுடைய ஒரு வருஷத்தில் செய்யப்பட்ட எல்லாக் கிரியைகளும் பலமுடையனவாக இருக்கின்றனவென்று சிவபெருமான் கூறியுள்ளார்.

117½. இவ்வாறு பூஜித்து, இருதய மந்திரத்தால் அபிமந்திரித்த பவித்திரத்தைக் குருவுக்குச் சாத்தவேண்டும்.

118-119. சிவதீக்ஷையுடையார், வேதியர், குருடர், தரித்திரர் ஆகிய இவர்களை அன்புடன் போஜனஞ் செய்விக்கவேண்டும். ஆடை, தக்ஷிணை இவற்றால் சத்திக்குத் தக்கவாறு உபசரித்து, "என்னுடைய இக்கொடையால் தேவர்களுக்கு ஈசரான ஸதாசிவர் பிரீதியுள்ளவராகஇருக்கட்டும்" என்று கூறவேண்டும்.

## ஏகதின பூஜையில் மறுதினம் செய்ய வேண்டுவன.

120. காலையில் ஸ்நானம் முதலியன செய்து, சிவபெருமானிடமிருந்து பவித்திரங்களை எடுக்கவேண்டும். அஷ்டபுஷ்பங்களால் சிவபெருமானைப் பூஜித்து விஸர்ஜனம் செய்யவேண்டும்.

121. முன் தினம் போல், நித்திய நைமித்திக கர்மாக்களை விரிவாகச் செய்து, சிவபெருமானுக்குப் பவித்திரங்கள் சாத்தி, அக்கினியில் எழுந்தருளியுள்ள சிவபெருமானை வணங்கிப் பூஜிக்கவேண்டும்.

121½. பின்னர், அஸ்திர மந்திரத்தால் பிராயச்சித்த ஹோமம் செய்து, பூர்ணாகுதி கொடுக்கவேண்டும்.

122-122½. பின்னர் போகத்தில் விருப்பமுள்ளவர் "த்வத்ப்ரஸாதேந கர்மேதம் மமாஸ்து பலஸாதகம் ||" இ-ள். உம்முடைய அனுக்கிரஹத்தால் இந்தக் கர்மாவானது எனக்குப் பலத்தை ஸாதித்துத் தருவதாக இருக்கட்டும். என்று சொல்லிக்கொண்டும், முத்தியில் விருப்பமுள்ளவர் "த்வத்ப்ரஸாதேந கர்மேதம் மமாஸ்து ந பந்தகம்" இ-ள். உம்முடைய அனுக்கிரஹத்தால் இந்தக் கர்மாவானது எனக்குப் பந்தத்தைச் செய்வதாக இருக்கவேண்டாம். என்று சொல்லிக்கொண்டும், சிவபெருமானின் பொருட்டு கர்ம ஸமர்ப்பணம் செய்யவேண்டும்.

123-123½. நாடீஸந்தானத்தால், அக்கினியில் எழுந்தருளியுள்ள சிவபெருமானை மண்டலத்திலெழுந்தருளியுள்ள சிவபெருமானிடத்தில் சேர்க்க வேண்டும். அக்கினியினிடத்திலிருந்து மந்திரங்களை ஆகர்ஷணஞ் செய்து, தன்னுடைய இருதயத்தில் நியஸித்து, அக்கினியையும் விஸர்ஜனஞ் செய்யவேண்டும்.

124-124½. ஆசமனஞ் செய்து, உள்ளே சென்று, சிவகும்பம் வர்த்தனீகும்பம் இவற்றினுள்ள மந்திரங்களைச் சிவபெருமானிடம் சேர்த்துப் பொறுத்துக் கொள்ளும்படி வேண்டி, 1 ஸாபேக்ஷ விஸர்ஜனஞ் செய்யவேண்டும். இவ்வாறே லோகபாலர்களையும் விஸர்ஜனஞ் செய்யவேண்டும்.

## பவித்திர சண்டேசுவர பூஜை.

125-126. சிவபெருமானுடைய பவித்திரங்களை எடுத்துச் சண்டேசுவர விக்ரஹம் இருக்குமாயின், பூஜை செய்து, சண்டேசுவருக்காகக் கற்பிக்கப்பட்ட பவித்திரத்தைச் சாத்திச் சிவபெருமானுடைய நிர்மால்ய பவித்திரம் முதலிய நிர்மாலியங்களைச் சண்டேசுவருக்குச் சமர்ப்பிக்கவேண்டும்.

126½. அல்லது, சண்டேசுவரரை, ஸ்தண்டிலத்திலேனும் பீடத்திலேனும் முன்போல் பூஜிக்கவேண்டும்.

## சண்டேசுவரப் பிரார்த்தனை.

127-130. ஓ சண்டேசுவரரே! என்னால் குறைவாகவேனும், அதிகமாகவேனும், யாதொரு பவித்ரோத்ஸவகர்மாவானது, சிறிது செய்யப்பட்டதோ, அந்தக் கர்மாவானது உம்முடைய ஆணையால் பரிபூர்ணமாக இருக்கட்டும். ஓ சண்டேசுவரரே! தேவர்களுக்கும் தேவரான ஸதாசிவர், உம்முடைய அனுக்கிரஹத்தால் எனக்கு அனுக்கிரஹம் செய்பவராக இருக்கட்டும். சிவபெருமானுடைய முகத்திலிருந்தும் தோன்றியவரே! என்னைக் காப்பாற்றும். ஸமயம் ஆசாரம் இவற்றை விட்டவர்களான அநாதர்களுக்குத் தேவரீர் ரக்ஷகராக இருக்கிறீர். ஓ சண்டே

---

1 ஸாபேக்ஷ விஸர்ஜனமாவது:— விஸர்ஜனம் செய்தாலும், கும்ப ஜலம் அபிஷேகம் செய்யப்படும் வரை கும்பத்தில் இருக்கவேண்டுமென்ற பிரார்த்தனையுடன் கூடிய விஸர்ஜனமாகும்.

சுவரரே ! ஆசாரமற்றவனும் பதிதனும் உள்ள என்னை இர க்ஷித்தருளும். இவ்வாறு விக்ஞாபனஞ் செய்து, நமஸ்காரம் ஸ்தோத்திரம் இவற்றைச்செய்து சண்டேசுவரரை விஸர்ஜனஞ் செய்யவேண்டும்.

## விக்ஞாபனம் செய்தபின்னர்ச் செய்ய வேண்டுவன.

131-132-133. பாழுங்கிணறு, அல்லது ஜலம் இவற்றில் சண்டரின் நிர்மாலியம் முதலியவற்றைப் போடவேண்டும். இவ்வாறு சண்டேசுவரரைப் பூஜித்துச் சாணத்துடன் கூடிய நீரால் பூமியைச் சுத்தஞ்செய்து, 1 சுத்த தேகனாய் இருந்து, சிவபெருமானுக்கு அபிஷேகஞ் செய்து 2 பூஜை செய்யவேண்டும். சிஷ்யன் ஐந்து யோஜனை தூரத்தில் இருந்தபோதிலும், குருவின் ஸந்நிதியிலேயே பவித்திர கர்மாவை இந்த முறைப்படி செய்ய வேண்டும். சிஷ்யன் விரும்பிய பயனை அடைகிறான். இந்த எல்லாக் கர்மாக்களும் தீக்ஷைபெற்ற ஆதி சைவர்களுக்குச் சிவ பெருமானால் கூறப்பட்டது.

134. பரோபகாரம் செய்வதை ஸ்வபாவமாக உடையவரான ஸ்ரீ ஸோமசம்புவால் க்ரியாகாண்டக்ரமாவளீ என்னும் நூலில் பவித்திர விதி கூறப்பட்டது.

ஆகச் சுலோகம் 482.

---

## 3 தமநபூஜா விதி

## மருக்கொழுந்தின் முன் வரலாறும், அதனால் பூஜை செய்வதின் இன்றியமையாமையும்.

1. முற்காலத்தில் சிவபெருமானுடைய 4 கோபத்திலிருந்து தமனர் என்னும் பெயருடைய பைரவர் உண்டானார். அந்

1 பஞ்சகவ்யப்ராசனஞ் செய்ய வேண்டுமென்பது கருத்து. இந்தச் சமயத்தில் சிஷ்யன் சிவகும்பம் வர்த்தனீ கும்பம் இவற்றின் தீர்த்தத்தால் அவபிருத ஸ்நானத்தைச் செய்யவேண்டும்.

2 தினம்போல் பூஜை செய்ய வேண்டும் என்பது கருத்து.

3 தமனம் என்பது மருக்கொழுந்து.

4 அடிக்கடி நேரும் தேவாசுரயுத்தத்தால் உலகம் நாசமடைவதே சிவபெருமானுடைய கோபத்திற்குக் காரணம்,

தப் பைரவரால், எல்லாத் தேவர்களும், மிக்க பலமுள்ள அசுரர்களும் அடக்கப்பட்டனர்.

2-3-4. பின்னர், சந்தோஷமுடையவரான சிவபெருமானால், தமனரென்னும் பைரவர் "நீ பூமியில் செடியாகத் தோன்றுக. நீ அந்தச் செடி சரீரத்தை அடைந்து, என்னுடைய அனுபோகத்திற்காக ஆகப்போகிறாய். எவர்கள், தேவரான என்னை உன்னுடைய தளிர் முதலியவற்றால் பூஜிக்கின்றனரோ, அவர்கள் உன்னுடைய அனுக்கிரஹத்தால் மேலான ஸ்தானத்தை அடையப் போகின்றனர். எந்த மனிதர்கள், மருக்கொழுந்தாலாகிய பர்வோத்ஸவத்தைச் செய்கிறார்களில்லையோ, அவர்களுடைய சித்திரை மாஸத்திற் செய்த பூஜாபலனானது என்னால் உனக்குக் கொடுக்கப்பட்டது," என்று கூறப்பட்டார்.

5. இந்தத்தமன பூஜையானது, ஸ்வச்சந்தபைரவமென்னும் நூலிற் கூறப்பட்டதாயினும், 1 ஸமானமாய் இருப்பதால், இந்த ஸித்தாந்த சாஸ்திரத்திலும் உபயோகப்படுகிறது.

6. ஸப்தமீ, அல்லது த்ரயோதசியில், தமனச் செடியின் பக்கத்திற் சென்று, அதை அஸ்திர மந்திரத்தால் சுத்தி செய்து ஸம்ஹிதா மந்திரங்களால் பூஜிக்கவேண்டும்.

7-7½. பின்னர், மந்திரத்தை அறிந்தவன் 𑌹𑌰𑌪𑍍𑌰𑌸𑌾𑌦 𑌸𑌂𑌭𑍂𑌤 𑌤𑍍𑌵𑌮𑌤𑍍𑌰 𑌸𑌂𑌨𑌿𑌧𑍀𑌭𑌵 । 𑌶𑌿𑌵𑌕𑌾𑌰𑍍𑌯𑌂 𑌸𑌮𑍁𑌦𑍍𑌦𑌿𑌶𑍍𑌯 𑌨𑍇𑌤𑌵𑍍𑌯𑍋𑌽𑌸𑌿 𑌶𑌿𑌵𑌾𑌜𑍍𑌞𑌯𑌾 ॥ இ-ள் "பரமேசுவருடைய அநுக்கிரஹத்திலிருந்துமுண்டான ஓ தமன! நீ இங்கு ஸாந்நித்யமுடையவனாக இரு. சிவகாரியத்தைக் குறித்து சிவாஞ்ஞையால் கொண்டு போதற்குரியவனாக இருக்கிறாய்" என்ற இந்த ஈசுவர வாக்கியத்தால் தமனச்செடியை 2 ஸம்போதனஞ்செய்யவேண்டும்.

8-9-9½. இவ்வாறு தமனச்செடியை அழைத்து, ஸம்ரக்ஷணஞ்செய்து, வீட்டிற்குச் செல்லவேண்டும். வீடு தூரத்தில் இருந்தால் மிருத்துடன் சேர்த்து வேரோடு அதை எடுத்து,

1 புராணம் எல்லோருக்கும் பொதுவாய் இருப்பதால் என்பது கருத்து.

2. ஸம்போதனமாவது- அழைத்தல்.

மண்ணால் நிரம்பப் பெற்ற பாத்திரத்தில் மீண்டும் நட்டு நீரால் நனைத்து, வித்வானானவன் முன் கூறப்பட்ட முறையாக வீட்டிலும் ஆமந்திரணம் (அழைத்தலை) செய்யலாம்.

## அதிவாஸ விதி.

10-11. சாயங்கால ஸமயமானது வந்தவுடன் அதிவாஸம் செய்யவேண்டும். ஸ்நானம் முதலிய ஸத்கர்மாக்களை முடித்து, யாகத்திரவியங்களைக் கொணர்ந்து, 1 முறைப்படி சூரியன் 2 சங்கரர், அக்கினி, இவர்களைப் பூஜிக்கவேண்டும்.

## விரதாங்கத் திரவியங்களை நிவேதநம் செய்யும் முறை.

12. தேவதேவரான பரமேசுவரருக்கு மேற்குத் திக்கில், மிருத்திகையுடன் தமனச் செடியின் வேரை, ஸத்யோஜாத மந்திரத்தாலேனும் இருதய மந்திரத்தாலேனும் ஸமர்ப்பிக்கவேண்டும்.

13. வடக்குத் திக்கில், தமனச்செடியின் தண்டு, நெல்லிக்கனி, இவற்றை வாமதேவ மந்திரத்தாலேனும், சிரோமந்திரத்தாலேனும், ஸமர்ப்பிக்கவேண்டும். தெற்குத் திக்கில், திருநீற்றையும், தமனச்செடியின் இலையையும், சிகாமந்திரத்தாலேனும், அகோரமந்திரத்தாலேனும் ஸமர்ப்பிக்கவேண்டும்.

14. கிழக்குத் திக்கில், தமனச்செடியின் பூவுடன், தந்தகாஷ்டத்தை, தத்புருஷ மந்திரத்தாலேனும், கவசமந்திரத்தாலேனும் ஸமர்ப்பிக்கவேண்டும். ஈசான திக்கில், தமனச்செடியின் பழத்தை, சந்தனத்துடன் மூலமந்திரத்தாலேனும், காயத்திரியாலேனும் ஸமர்ப்பிக்கவேண்டும்.

---

1 இந்தத்தமனோத்ஸவத்திலும், மண்டப பூஜை, துவார பூஜை, துவாரபாலர் பூஜை, திக்பாலர் பூஜை, சிவஹஸ்தஞ் செய்தல் முதலியன முன் போல் செய்யப்படல்வேண்டும்.

2 சங்கரர் என்னும் பதத்தால் கும்பத்திலுள்ள சிவபெருமான், மண்டலத்திலுள்ள சிவபெருமான், தன்னுடைய இஷ்டலிங்கத்திலுள்ள சிவபெருமான் ஆகிய மூவர்களையும் கொள்ளவேண்டும். இவர்களைப் பூஜித்த பின்னர், மருக்கொழுந்திற்கு அதிவாஸதினத்தில் ஸம்பாத ஸம்ஸ்காரத்தைச் செய்யவேண்டும்.

### கந்த தமநஞ் சாத்துதல்.

15. புஷ்பம் அக்ஷதை இவற்றுடன், 1 ஐந்து அங்கங்களை யுடைய தமனத்தை அஞ்சலியில் வைத்துக்கொண்டு, உலகநாத ரான சிவபெருமானிடத்தில் தமனஞ் சாத்துதலைப்பற்றி விக்ஞா பனம் செய்யவேண்டும்.

16. ஞூ³ஜ்ஜி ெதாzவிெஒெவஶ வூாதஃகாெஒ³யா வூ ஹோ। கூதஃவ்ஞாு யயூாஜாஹஂ வகூிண௦ வவஃ தவாzz ஜூயா ॥ இ-ள். „தேவர்களுக்கு ஈசனுன சிவபெருமானே! பிரபுவே! விடியற்காலத்தில் என்னுல் அழைக்கப்பட்டவராக இருக்கிறீர். திரவியங்கள் கிடைத்தற்குத் தக்கவாறு செய்யவே ண்டிய இந்தத் தமனேத்ஸவமானது உம்முடைய ஆணையால் பரி பூர்ணமாக இருக்கட்டும்.”

17. இவ்வாறு விக்ஞாபனஞ் செய்து, சிவபெருமானு டைய சிரசில் மூலமந்திரத்தால் புஷ்பாஞ்சலியைச்சேர்த்து, ஜபம் 2 முதலியவற்றை செய்யவேண்டும்.

### சுத்தஞ் செய்யப்பட்ட எஞ்சிய தமநங்களை இரக்ஷித்தல்.

18. எஞ்சிய தமனங்களைப் 3 பாத்திரத்தில் வைத்து, வேறு பாத்திரத்தால் அதனை மூடி, பவித்திர விதியிற் கூறப் பட்டபடி கவசமந்திரத்தால் அவகுண்டனஞ் செய்யவேண்டும்.

18½. இவ்வாறு இரக்ஷிக்கப்பட்டவையாகச் செய்து 4 சிவ பெருமானிடத்தில் வைக்கவேண்டும்.

### இரக்ஷித்த பின்னர்ச் செய்ய வேண்டுவன.

19-19½. ஹவிஸ் அன்னத்தைப் புசிக்கவேண்டும். காற் றைப் புசிப்பவனுகவேனும் இருக்கலாம். சிவபெருமானுடைய

---

1 வேர், தண்டு, இலை, புஷ்பம், பழம், ஆகிய ஐந்தும் ஐந்து அங்கங்க ளாகும்.

2 முதலியவற்றை என்னும் பதத்தால் பிரதக்ஷிணம் நமஸ்காரம் இவ ற்றைக்கொள்ள வேண்டும்.

3 முன்போல் மூங்கில் முதலியவற்றுலாக்கப் பெற்ற பாத்திரத்தில் என்பது கருத்து.

4 கலசத்தில் இருக்கும் சிவபெருமானிடத்தில் என்பது கருத்து.

சந்நிதியில், தியானம், கானம், ஜபம் முதலியவற்றால் விழிக்க வேண்டும்.

## அதிவாஸ தினத்திற்கு மறுநாள் தமனஞ்சாத்தமுறை.

20-21. காலையில் ஸ்நானம் செய்து, உலகநாதரான 1 சிவ பெருமானை, அஷ்டபுஷ்பங்களாலருச்சித்து, விஸர்ஜனம் செய்ய வேண்டும். நித்திய பூஜையைச் செய்து, நைமித்திக பூஜையை விசேஷமாகச் செய்து, பிளவுபடாதவையாயும், ஐந்து அங்கங்களையுடையனவாயுமுள்ள தமனங்களால், சிவபெருமானைப் பூஜிக்க வேண்டும்.

22-23. அருகு, சந்தனம், அக்ஷதை, இவற்றுடன் எஞ்சிய தமனங்களை அஞ்சலியால் எடுத்து, ஐந்து முகங்களையுடைய ஸதா சிவரைத் தனக்கு நேரில் இருப்பவராகத் தியானித்துக்கொண்டு, மூலமந்திரம், ஈசுவர சப்தம், இவற்றை இறுதியிலுடைய ஆத்ம தத்துவம் வித்யாதத்துவம் சிவதத்துவம் இவற்றால், பவித்திர முறைப்படி முறையே சிவபெருமானை அருச்சிக்க வேண்டும்.

### தமனஞ்சாத்துதற்குரிய மந்திரங்கள்.

ஓம் 2 ஹாம் ஆத்மதத்த்வேச்வராய சிவாய நம:
ஓம் ஹாம் வித்யாதத்த்வேச்வராய சிவாய நம:
ஓம் ஹாம் சிவதத்த்வேச்வராய சிவாய நம:

பின்னர், நான்காவது அஞ்சலி சாத்துதற்குரிய மந்திரம், ஓம் ஹாம் ஸர்வதத்த்வேச்வராய சிவாய நம: என்பதாகும். ஓம் ஹோம் மஹேச்வராய [illegible] நம: என்று சொல்லிக்கொள்க.

24. கிரியைகளை அறிந்தவன், சிவபெருமானை அருச்சித்து, வணங்கி, அக்கினியையும் அருச்சித்து, விரும்பிய பொருட்பயனை அளிப்பவரான சிவபெருமானிடம் அன்புடன் (கீழ்க் கண்டவாறு) விக்ஞாபனஞ் செய்து கொள்ளவேண்டும்.

25. [illegible]ரிக்தம் வா ஹீநம் வா யந்மயா க்ருதம் ।
ஸர்வம் தத் [illegible] பூர்ணம் ஸர்வம் [illegible] ॥

---

1 தனது இஷ்டலிங்கத்திலுள்ள சிவபெருமானை என்பது பொருள்.
2 ஹௌம் என்றும் பாடபேதம் உண்டு.

இ-ள். ஹே சுவாமின்! அதிகமாகவேனும், குறைவாக வேனும், யாதொரு கர்மாவானது என்னால் செய்யப்பட்டதோ, அந்த என்னுடைய தமன சம்பந்தமான எல்லாக் கர்மாக்களும் பரிபூர்ணமாக இருக்கவேண்டும்.

## ஆசிரியர் வேதியர் இவர்களைப் பூஜித்தல்.

26. இவ்வாறு தமனோத்ஸவத்தைச் செய்து சந்தோஷத்தைச் செய்யும் குரு பூஜையைச் செய்யவேண்டும். பின்னர்ச் சிவபெருமானைச் சந்தோஷமுடையராகச் செய்து, வேதியர் முதலியவர்களையும் திருப்தி செய்விக்கவேண்டும்.

27. பிரமசாரியேனும், கிரஹஸ்தரேனும், எவன் இந்தத் தமன பூஜையைச் செய்கிறானோ, அவனுடைய சித்திரை மாதத்திலுள்ள ஜபம் பூஜை முதலியன பயனுடன் கூடியனவாக ஆகும்.

28. பரோபகாரம் செய்வதை ஸ்வபாவமாகவுடையவரான ஸ்ரீ சோமசம்புவால் கிரியாகாண்டக்கிரமாவளியில் தமன பூஜா விதியானது கூறப்பெற்றது.

ஆகச் சுலோகம் 510.

---

## பிராயச்சித்த விதி.

1. 1 மனிதன், தன்னுடைய ஆசாரம் நசிப்பதாகிய யாதொரு காரணத்தால் கீழே செல்லுகிறானோ, அது கொண்டு அவன் மேலே செல்ல வேண்டுமென்ற விருப்பத்தினால் சிறந்து பிராயச்சித்தம் கூறவேண்டுவது இன்றியமையாதது.

2. தேகமானது அதிகமான வியாதியுடன் இருக்கும்பொழுதும், அரசபயம், திருட்டுப்பயம் 2 முதலியன நேரும்பொழுதும், குருவின் காரியம் ஈசுவரகாரியம் 3 அக்கினி ஸம்பந்தமான

---

1 சிவமந்திரங்களால் ஸம்ஸ்கரிக்கப்பட்ட மனிதனை இங்குக்கொள்ள வேண்டும். ஸாதாரணமான பாமரர்களுக்குப் பிராயச்சித்தத்தில் அதிகாரமின்மையால் என்க.

2 முதலியன என்பதால் அக்கினியால் நேரும் பயத்தைக் கொள்ள வேண்டும்.

3. குண்டஞ் செய்தல் முதலியன அக்கினிஸம்பந்தமான காரியமாகும்.

காரியம் இவை நேரும்பொழுதும், நித்திய விதியைக் குறைத்த லானது தோஷத்தைச் செய்யமாட்டாது.

3. 1 கிரஹஸ்தர் பிர்ம்மசாரி ஆகிய இருவர்களும், பிராயச் சித்தத்தை இரண்டு விதமாக அனுட்டிக்கவேண்டும். அந்த இரண்டு விதங்களும் காமனையுடன் செய்தல், 2 காமனையில்லாது செய்தல் என்னும் வேறுபாட்டால் இரண்டு விதங்களாகக் கூறப் பட்டன.

4 காமனையில்லாமற் செய்யப்படும் பாபத்தைக் காட்டி லும், காமனையாற் செய்யப்பட்ட பாபத்திற்கு, இரட்டிப்பான பிராயச்சித்தத்தை விதிக்கவேண்டும். கிரஹஸ்தனிலும் நைஷ்டி கனிடத்தில் பிராயச்சித்தமானது இரட்டிப்பாக அறியத் தக்கது.

5. எண்பது வயது முற்றுப்பெற்ற கிழவர்களும், பதினை ந்து வயதுள்ள பாலர்களும், பெண்களும், நோயால் துன்புற்றவர் களும், பாதிப் பிராயச்சித்தத்திற்குரியராகின்றனர்.

6. அவர்கள் விஷயத்திலுப், சிரமத்தை அறிந்து பிராயச் சித்தத்தைக் காற்பாகமாகக் கற்பிக்கவேண்டும். கடோரமான காரியத்தைத் தாமாகச் செய்வதற்குச் சக்தி முதலிய குணங்களை யுடையராகாராதலால் என்க.

7. இடம், காலம், வயது, திறமை, ஜாதி, பக்தி, கிரியைக ளின் முறை இவற்றை நன்கு ஆராய்ந்து பிராயச்சித்தம் விதிக்க வேண்டும். நோயாளியிடத்தில் உபவாஸத்தை விதிக்கக்கூடாது.

8. பிராயச்சித்தத்தை அனுட்டிக்க இயலாதவனுடைய பிராயச்சித்தமானது, பிதா சகோதரர் முதலிய பந்துக்களால் பிரித்துச் செய்யத் தக்கது. பந்துக்களல்லாத மற்ற ஜனங்க ளால் இரட்டிப்பாகச் செய்யத்தக்கது.

---

1 கிரஹஸ்தர் என்னும் பதத்தால் கிரஹஸ்தனுடன் வானப்ரஸ்தனை யும், பிரம்மசாரி என்னும் பதத்தால் பிரம்மசாரியுடன் ஸந்நியாஸியையும் கொள்ளவேண்டும்.

2 அறியாமை, திருட்டுப்பயம், அரசபயம், இவற்றால் செய்யப்படும் காரி யம் அகாமனையாகச் செய்யப்படும் காரியமாகும். இதற்கு மாறுபாடாகவுள் ளது காமனையாகச் செய்யப்படும் காரியமாகும்.

9. வேதங்களில் எவ்வாறு விதிக்கப்பட்டிருக்கின்றதோ, சிஷ்டாசாரத்தில் எவ்வாறு காணப்பட்டிருக்கின்றதோ, ஆசிரியர்களால் எவ்வாறு குறிக்கப்பட்டிருக்கின்றதோ, அவ்வாறு தம்முடைய சித்தாந்தத்திற்கு விரோதப்படாமல், வேதம் முதலிய ஸாமான்ய சாஸ்திரங்களைக் 1 கடந்து செல்லவேண்டும்.

10-11-11½. 2 சந்திரோபராகம், காமியஸித்தி, பிரதோஷகாலம், சிவராத்திரி, இவையல்லாத ஏனைய காலங்களில், இரவில், போகத்தில் விருப்பமுள்ளவன் சிவ பூஜை, தானம், இவற்றை விலக்கவேண்டும். மறதியால் பூஜைசெய்தால் நூற்றெட்டு முறை காயத்ரியை ஜபிக்கவேண்டும். மோக்ஷத்தில் விருப்பமுள்ளவனுக்குச் சிவ பூஜையானது எக்காலத்திலும் விதிக்கப்பட்டிருக்கிறது. நிஷேதிக்கப்படுகிறதில்லை.

## அனுட்டான லோபத்திற்குப் பிராயச்சித்தம்.

12-12½. ஒருகால ஸந்தியோபாஸனை லோபத்தை அடைந்தால் ஸத்யோஜாத மந்திரத்தை நூறுமுறை ஜபிக்கவேண்டும். மூன்று காலங்களிற் செய்யவேண்டிய ஸந்தியோபாஸனைகள் லோபத்தை அடைந்தால், மூன்றுமடங்கு அதிகமாக (முன்னூறு முறை) ஜபிக்கவேண்டும். ஸந்தியோபாஸனையானது காமனையால் லோபத்தை அடைந்தால் உபவாஸத்துடன் இரட்டிப்பாக ஜபிக்க வேண்டும்.

## பூஜாலோபத்திற்குப் பிராயச்சித்தம்.

13-14-15-15½. ஒருகாலபூஜை அகாமனையால் லோபத்தை அடைந்தால், அகோர மந்திரத்தை ஆயிரம் முறை ஜபிக்கவேண்டும். ஒரு காலத்திலேனும், இரண்டு காலங்களிலேனும், மூன்று காலங்களிலேனும், அர்த்த ராத்திரியிலேனும், காமனையால் கர்மலோபம் ஏற்பட்டால், முன் கூறப்பட்டபடி உபவாஸமிருந்து அகோர மந்திரத்தை இரண்டாயிரம் முறை ஜபிக்கவேண்டும். மூன்றுகாலபூஜை உள்ளவர்களுக்கும், ஒருகாலபூஜை உள்ளவர்களுக்கும், பிராயச்சித்தம் சமமாகும். குறைவாகவும் அதிகமாகவும் அவர்களுக்குப் பிராயச்சித்தமில்லை.

---

1 சித்தாந்த சாஸ்திரத்திற்கு விரோதப்பட்ட இடத்தில் கடந்து என்பது கருத்து. 2 உபராகம் — கிரகணம்.

16-17.17½. 1 இரண்டாவது தினம் முதற்கொண்டு பூஜா லோபம் ஏற்பட்டால் ஆயிரம் அகோரமந்திரத்தையும், நாடோறும் முன்னூறால் அதிகமாகச் செய்து ஜபிக்கவேண்டும்: ஒரு 2 பக்ஷம் பூஜாலோபம் ஏற்பட்டால் இருபதாயிரம் முறை அகோரமந்திரத்தை ஜபிக்கவேண்டும். அதற்கு மேலும் பூஜாலோபம் ஏற்பட்டால் ஒரு வருஷம் வரை ஒவ்வொரு மாஸத்திலும் இருபதாயிரத்தாலதிகமாகச் செய்து ஜபிக்கவேண்டும்.

## சிவலிங்கத்திற்குத் தோஷங்கள் ஏற்படின் பிராயச்சித்தம்

18-19-19½. தன்னுடைய இஷ்டலிங்கமானது 3 நழுவிப்போனாலும், 4 நசித்துப்போனாலும், முற்றிலும் 5 பொசுக்கப்பட்டாலும், 6 அபஹரிக்கப்பட்டாலும், காகம், நாய், குரங்கு, மூஷகம், (எலி) முதலியவற்றால் கொண்டுபோகப்பட்டாலும், லக்ஷம் முறை அகோரமந்திரத்தை ஜபித்து, விதிப்படி வேறு லிங்கத்தைப் பிரதிஷ்டை செய்தலால் சுத்தி உண்டாம். பீடத்திற்கும் இவ்வாறே சுத்தி உண்டாகும்.

---

1 ஸித்தாந்தசேகரத்தில், "இரண்டாவது தினம் முதற்கொண்டு பூஜை லோபத்தை அடைந்தால் ஒவ்வொரு நாளும் அகோரமந்திரத்தை ஆயிரத்துடன் முன்னூறை அதிகமாக்கி ஜபிக்கவேண்டும். ஒரு பக்ஷம் பூஜாலோபத்தை அடைந்தால், இருபதினாயிரம் முறை ஜபிக்க வேண்டும், ஒரு மாதம் பூஜாலோபம் ஏற்பட்டால், முப்பதினாயிரம் முறை ஜபிக்கவேண்டும். அதற்கு மேல் ஒரு வருஷம் வரை மாதந்தோறும் முப்பதினாயிரத்தால் அதிகமாக்கி ஜபிக்கவேண்டும். ஒரு வருஷத்திற்கு மேலும் பூஜாலோபம் ஏற்பட்டால், மீண்டும் தீக்ஷையாலேயே சுத்தியுண்டாகு"மென்று கூறப்பட்டிருக்கின்றது.

2 பிறநூல்களை அனுஸரித்து வஷட்பவ ஜாயா: என்பதை வக்ஷவஜாயா: என்று திருத்தி மொழிபெயர்க்கப்பட்டிருக்கிறது.

3 தேசக்குழப்பம் உண்டான காலத்தில் லிங்கத்தையிரக்ஷிப்பதற்காக யாதானுமோரிடத்தில் வைத்துப் பின்னர் இன்ன இடத்தில் லிங்கத்தை வைத்தோமென்று தெரியாமல் நழுவிப்போனாலும் என்பது கருத்து.

4 கல் செங்கல் முதலியன விழுந்து நசித்துப்போனாலுமென்பதுகருத்து.

5. 37-வது சுலோகத்தில் சிறிது பொசுக்கப்பட்டதற்குப் பிராயச்சித்தம் கூறப்போகிறபடியால் இங்கு முற்றிலும் என்று மொழிபெயர்க்கப்பட்டது.

6. திருடர் முதலியவர்களால் என்பது கருத்து.

20-21-21½, லிங்கமானது அலைக்கப்பட்டால், அகோரமந்திரத்தை ஆயிரம் முறை ஜபிக்கவேண்டும். மேல் கீழ் மாறுதலாகச் சுற்றப்பட்டால், அகோர மந்திரத்தை இரண்டாயிரமுறை ஜபித்தலால் சுத்தி உண்டாகும். பீடத்தின் 1 குழியினின்று லிங்கம் நழுவினால், அகோர மந்திரத்தை லக்ஷம் முறை ஜபித்தலால் சுத்தி உண்டாகும். லிங்கமானது மூன்று நான்கு முறை அலைக்கப்பட்டால், அகோரமந்திரத்தைப் பதினாயிரம் முறை ஜபித்தலால் சுத்தி உண்டாகும். ஸ்நபன கலசம் முதலியன நன்றாகத் தாக்கப்பட்டால், இருபதினாயிரம் முறை அகோர மந்திர ஜபத்தால் சுத்தி உண்டாகும். அவை மெதுவாகத் தாக்கப்பட்டால் பதினாயிரம் முறை அகோரமந்திரத்தை ஜபித்தலாற் சுத்தி உண்டாகும்.

22-22½. லிங்கமானது 2 பற்றுக்கோடில் விழுந்தால், ஒவ்வொரு ஒட்டை அளவு தூரத்திற்கு அகோரமந்திரத்தைப் பதினாயிரம் வீதம் ஜபிக்கவேண்டும். பற்றுக்கோடல்லாத இடத்தில் விழுந்தால் இருபதினாயிரம் வீதம் அகோரமந்திரத்தை ஜபிக்கவேண்டும். இவ்விஷயத்தில் ஏற்றத்தாழ்வைக் கற்பிக்கவேண்டும்.

23-23½. எப்பொழுது லிங்கமானது அகாமனையால் ஒரு புருஷப்ரமாணத்திலிருந்து நழுவி முழுதும் உடைந்து சிதறிவிட்டதோ, அப்பொழுது அதற்குப் பிராயச்சித்தங்கிடையாது.

24-24½. பிராயச்சித்தங் கிடையாது என்பதற்குப் பொருள் இது. லிங்கமானது உடைந்தால் பெரிதும் பாவமுண்டாகும். ஆகையால் இவ்விஷயத்தில் ஒருபொழுதும் மறதியானது செய்யத்தக்கதன்று.

25-25½. அகோரமந்திரத்தினும் மகாபாவங்களைப் போக்கக் கூடிய மந்திரம் வேறு கிடையாது. ஆகையால் மஹாபாவங்

---

1 அனேகம் முறை அலைதல், மேலும் கீழுமாகப் புரளுதல், இவை முதலியவற்றாலும், அஷ்டபந்தனம் ஜீர்ணமாகப் போதலாலும், பீடத்தின் குழியினின்று லிங்கம் நழுவினால் என்பது கருத்து.

2 பற்றுக்கோடு— உலோகங்களினாலாவது மரத்தினாலாவது செய்யப்பட்ட ஆசனம்.

கள் நசிக்கும் பொருட்டு அகோரமந்திரத்தை மூன்று லக்ஷம் ஜபிக்கவேண்டும்.

26-26½. எப்பொழுது லிங்கமானது காமணியால் உடைந்து நான்கு பக்கங்களிலும் சிதறிவிட்டதோ, அப்பொழுது அதற்குப் பிராயச்சித்தம் கிடையாது. இக்கூற்று உண்மை.

27-27½. லிங்கமானது காலால் தீண்டப்பட்டாலும், தாண்டப்பட்டாலும், அகோர மந்திரத்தை இருபதினாயிரம் முறை ஜபிக்க வேண்டும். காலில் சம்பந்தித்த 1 ஜலத்தால் தீண்டப்பட்டால், பதினாயிரம் முறை அகோரமந்திரத்தை ஜபிக்க வேண்டும்.

28-28½. லிங்கமானது கோழையால் கெடுக்கப்பட்டால் அகோர மந்திரத்தை முப்பதினாயிரம் முறை ஜபிக்கவேண்டும். கோழை நீரால் கெடுக்கப்பட்டால் அகோரமந்திரத்தைப் 2 பதினாயிரம் முறை ஜபிக்கவேண்டும்.

29. மூத்திரத்துடன் கூடிய நீரால் லிங்கமானது பரிசிக்கப்பட்டால் முப்பதினாயிரம் முறை அகோரமந்திரத்தை ஜபிக்க வேண்டும்.

30. உதிரம், மூத்திரம், தூரஸ்திரியின் ரக்தம், இந்திரியம், இவற்றால் லிங்கத்திற்கு அசுத்தி உண்டானால், ஐம்பதினாயிரம் முறை அகோரமந்திரத்தை ஜபிக்கவேண்டும். இவற்றுடன் கூடிய நீரால் லிங்கத்திற்குப் பரிசம் நேரிட்டால், ஐம்பதினாயிரம் எண்ணில் கால் பங்கு குறைத்து ஜபிக்கவேண்டும்.

31. லிங்கமானது விஷ்டையால் (மலத்தால்) பரிசிக்கபட்டால், அகோரமந்திரத்தை லக்ஷம் முறை ஜபிக்கவேண்டும். மலத்துடன் கூடிய நீரால் பரிசிக்கப்பட்டால், லக்ஷம் எண்ணில்

---

1 பாதோத்தரஜஸ்ப்ருஷ்டே என்னும் பாடத்தைக்கொண்டால் "கால்களில் சம்பந்தித்த புழுதியால் லிங்கமானதுபடியப்பட்டால் என்னும் பொருள் கொள்ளவேண்டும்."

2 இருபதினாயிரம் என்று ஸித்தாந்த சேகரம் அசிந்திய விசுவம் முதலிய நூல்களிற் காணப்படுகிறது.

கால்பங்கு குறைவாக ஜபிக்கவேண்டும். லிங்கமானது நிர்மால்யக் கிடங்கில் விழுந்தாலும், இவ்வாறே ஜபிக்கச் சுத்தியுண்டாகும்.

32-33. லிங்கமானது மலக்கிடங்கில் விழுந்தால், அகோர மந்திரத்தை ஒன்றரை லக்ஷம் ஜபிக்கவேண்டும். லிங்கமானது சிவதீக்ஷையற்ற வேதியர் 1 முதலாயினோரால் பரிசிக்கப்பட்டால் முறையே, நூறு இருநூறு முன்னூறு நானூறு என்னும் முறையாக அகோரமந்திரத்தை ஜபிக்கவேண்டும். நட்டுவன் செம்படவன் முதலியவர்களால் லிங்கமானது பரிசிக்கப்பட்டால் அகோர மந்திரத்தைப் பதினாயிரம் முறை ஜபிக்கவேண்டும்.

34-35. லிங்கமானது காகம் முதலியவற்றால் பரிசிக்கப் பட்டால், இருபதினாயிரம் முறை அகோரமந்திரத்தை ஜபிக்க வேண்டும். சண்டாளன் முதலியவர்களால் லிங்கமானது பார்க் கப்பட்டால், அகோரமந்திரத்தை ஐம்பதினாயிரம் முறை ஜபிக்க வேண்டும். சண்டாளர் முதலியவர்களால் லிங்கமானது தொடப் பட்டால், லக்ஷம் அகோரமந்திர ஜபத்தால் சுத்தி உண்டாகும். வாமமார்க்கம் தக்ஷிணமார்க்கங்களை 2 அனுசரிப்பவர்களால், லிங் கமானது பரிசிக்கப்பட்டால், அகோரமந்திரத்தைப் பதினாயிரம் முறை ஜபிக்கவேண்டும்.

36. நல்ல ஸாந்நித்யம் இருக்கும் வரை லிங்கத்தைச் சலனஞ் செய்யக்கூடாது. ஸ்திரமான லிங்கத்தைப் 3 பிடுங்கி அதையே ஸ்தாபித்தால், அகோர மந்திரத்தை லக்ஷம் முறை ஜபிக்க வேண்டும்.

37-38. லிங்கமானது எப்பொழுது அங்கங்களற்றதாகவேனும், அக்கினியால் எரிக்கப்பட்டு எஞ்சியதால் காந்தியற்றதாக வேனும், சண்டாளர் முதலியவர்களால் ஸேவிக்கப்பட்டதாகவேனும், பயங்கரமான கிடங்கு முதலியவற்றில் விழுந்ததாகவேனும்,

1 முதலாயினோரால் என்னும் பதத்தால் க்ஷத்திரியர் வைசியர் சூத்திரர் இவர்களைக் கொள்ளவேண்டும்.

2 காபாலர், பைரவர், மஹாவிரதர், பாசுபதர் ஆகிய மதஸ்தர்களால் என்பது கருத்து.

3 தேச க்ஷோபம் உண்டாகும் காலத்தில் இரக்ஷிப்பதற்காக லிங்கத்தைப் பிடுங்கி என்பது கருத்து.

அரசர் முதலியோரால் அபஹரிக்கப்பட்டதாகவேனும் பவிக்கின்றதோ, அப்பொழுது அந்த லிங்கத்தை நீக்கிவிட வேண்டும். லக்ஷம் முறை அகோரமந்திரத்தை ஜபித்து, வேறு லிங்கத்தைப் பிரதிஷ்டை செய்தலால் சுத்தியை அடைகிறான்.

## சிவாக்கினி அணைந்தால் பிராயச்சித்தம்.

39-40. சிவாக்கினியானது அணைந்தால், மூன்று நாட்கள் உபாவாஸமிருந்து, 1 பதினாயிரம் முறை அகோரமந்திரத்தை ஜபிக்கவேண்டும். ஹோமமானது லோபத்தை அடைந்தால், நித்திய கர்மம் லோபத்தை அடைந்தால் எந்த ப்ராயச்சித்தத்தைச் செய்யவேண்டுமோ, அதே ப்ராயச்சித்தத்தைச் செய்யவேண்டும். சிவாக்கினியானது அணைந்து பின்னர் ரக்ஷிக்கப்பட்டால், அந்தத் தோஷம் நிவிருத்தியடையும் பொருட்டு ஒரு நாள் உபவாஸமிருந்துஅகோரமந்திரத்தை ஆயிரம் முறை ஜபிக்கவேண்டும்.

41. மூன்று காலங்களிலும் ஸந்தியோபாஸனையை உரிய காலங்களிற் செய்யத் தவறினவன், பஞ்சப்ரஹ்மஷடங்கமாகிய ஸம்ஹிதாமந்திரத்தைமூன்றுமுறைஜபித்தலாற்சுத்தியை அடைகிறான். ஜலஸ்நானம் செய்யாதவனும் இவ்வாறே ஜபிக்கவேண்டும்.

42. பர்வாக்களில் சிவபெருமான், குரு, அக்கினி, இவர்களை அன்புடன் பூஜிக்காமலிருந்தாலும், பலி சமர்ப்பிக்காமலிருந்தாலும், மூலமந்திரத்தை நூற்றெட்டு முறை ஜபிக்கவேண்டும்.

43. 2 விரதம், 3 கிரியைகள், 4 நியமம், இவற்றை அனுட்டிக்காவிட்டால், சிவகாயத்திரியை நூற்றெட்டு முறை ஜபித்தலாற் சுத்தியை அடைகிறான்.

---

1 ஜவெஷ்ஸஹஸ்ராணி என்ற பாடத்தை விடுத்து வ்ரஜ வெதிஸஹஸ்ராணி என்பதாகப் பாடத்தைக் கொண்டால் மூவாயிரம் முறை என்பதாகப் பொருள் கொள்ளவேண்டும்.

2 கிருஷ்ணாஷ்டமி முதலிய விரததினங்கள் என்பது கருத்து.

3 பிரதக்ஷிணம் நமஸ்காரம் முதலிய கிரியைகள்.

4 தானாகக் கற்பித்துக்கொண்ட எண்ணெய் தேய்த்து ஸ்நானம் செய்யாதிருத்தல் வெற்றிலை உட்கொள்ளாதிருத்தல் முதலிய நியமம்.

44. சதுர்த்தசி முதலிய பர்வதினங்களில் நித்திய பூஜை லோபத்தை அடைந்தால், சிவபெருமானல் நான்கு மடங்கு அதிகமாக ப்ராயச்சித்தம் விதிக்கப்பட்டிருக்கிறது.

45. ஆஷாடம் முதலிய மூன்று மாதங்களில் தைவ வசத்தால் பவித்திரஞ்சாத்தாமலிருந்தால், அகோரமந்திரத்தை இரண்டு லக்ஷம் ஜபித்து சாந்திராயண விரதத்தை அனுட்டிக்க வேண்டும்.

46. பூஜாபாத்திரமானது கீழே விழுந்தால், அகோரமந்திரத்தை இருநூறு முறையும், உடைந்துபோனல் ஆயிரம் முறையும், உருண்டுபோனல் ஐநூறு முறையும், ஜபித்தலாற் சுத்தி உண்டாகிறது.

47. உருத்திராக்கமாலைக்குத் 1 தோஷம் ஸம்பவித்தால் லிங்கத்திற்குக் கூறப்பட்ட பிராயச்சித்தத்தில் கால்பங்குப் பிராயச்சித்தத்தைச் செய்யவேண்டும். பின்னர்ச் சிவாகமங்களில் விசேஷமாகக் காணப்பட்டப் பிராயச்சித்தம் (எம்மால்) கூறப்படுகிறது.

48. புதிய 2 நூலானது அறுந்துபோனல், அகோரமந்திரத்தை ஆயிரம் முறை ஜபிக்கவேண்டும். நூல் ஜீர்ணமாகப் போனலும், கையிலிருந்து நழுவினலும், அகோரமந்திரத்தை நூறுமுறை ஜபிக்கவேண்டும்.

49. கையிலிருந்து நழுவிய ருத்ராக்ஷமாலையைவாசனையுள்ள நீரால் கழுவ வேண்டும். நூறுமுறை காயத்திரியை ஜபித்தலாற் சுத்தி உண்டாகும். இந்த விதியானது 3 எங்கும் கூறப்பட்டிருக்கிறது.

50. கண்டைக்கு (மணிக்கு)த் தோஷம் ஸம்பவித்தால், லிங்கத்திற்குக் கூறப்பட்ட பிராயச்சித்தத்தில் எட்டில் ஒரு பங்கு பிராயச்சித்தத்தைச் செய்ய வேண்டும். ஆகமங்களை

---

1. 20-வது சுலோகத்திற் கூறிய லிங்கதோஷங்கள் ருத்ராக்ஷமாலைக்கு ஸம்பவித்தால் என்பது கருத்து.

2 ருத்திராக்ஷத்தைக் கோக்கும் கயிறனது என்பது பொருள்.

3. ஸவ–த்ரா என்னும் பதத்தை ஸவி–த்ரா என்பதாகப் பாடபேதத்தை அனுசரித்துக் கொள்ளின் "சூரியனல்" என்ற பொருளைக் கொள்க.

அறிந்தவர்களுக்குச் சிவபெருமானால் பிராயச்சித்தமானது கூறப் பட்டிருக்கிறது.

51. பீடம் முதலிய பூஜாப்தார்த்தங்களைக் காலாற் சிறிது பரிசித்தால், அகோரமந்திரத்தை இருநூறு முறை ஜபிக்க வேண் டும். காமனையால் பரிசித்தால் பதினாயிரம் முறை ஜபிக்க வேண்டும்.

52. குழந்தைகள், ஸ்திரீகள், கிழவர், நோயாளிகள் ஆகிய இவர்கள் ஸதாசிவரிடத்தில் அன்புடையவர்களாயின், காற்பங்கு பிராயச்சித்தத்தை விதிக்கவேண்டும்.

53. சிவபெருமான் ஒருவரிடத்திலேயே செலுத்தப்பட்ட சித்தத்தை 1 உடையவர்களுக்கும் (யோகிகளுக்கும்) ஆசாரியர்க ளுக்கும் எப்பொழுதும் உலக வியவகாரத்திற்காகப் பிராயச்சித் தம் கூறப்பட்டது.

54. ரோமம், மாம்ஸம், எலும்பு, புழு முதலியவற்றால் கெ டுக்கப்பட்ட நைவேத்தியத்தைக் காமனையால் நிவேதனஞ் செய் தால், அகோர மந்திரத்தைப் பதினாயிரம் முறை ஜபிக்கவேண்டும். அகாமனையால் நிவேதனஞ் செய்தால் நூறுமுறை ஜபிக்க வேண்டும்.

55. நாடோறும் செய்யப்படும் நைவேத்தியத்தின் அளவு குறைந்தால், அகோரமந்திரத்தை இருநூறு முறை ஜபிக்கவேண் டும். சிவபெருமானுக்கு பிராணிகளின் 2 அங்கத்துடன் கூடிய தூபத்தைச் சமர்ப்பித்தால் ஈசானமந்திரத்தை நூறு முறை ஜபிக்கவேண்டும்.

56. குரு, சிவபெருமான், சிவாகமம், இவர்களைக் காலால் அகாமனையால் பரிசித்தால், அகோரமந்திரத்தை இருபதினாயிரம் முறை ஜபிக்கவேண்டும், காமனையால் பரிசித்தால் ஆறு பங்கு அதிகமாக ஜபிக்கவேண்டும்.

---

1 யோகிகளுக்குப் பாப சம்பந்தம் நேரிடாதாயினும் உலக வியவகார த்திற்காகக் கூறப்பட்டது.

2 தூபத்திரவியத்தில் அறியாது கலந்திருந்த ஈ, எறும்பு, முதலிய பிராணிகளின் அங்கமென்பது கருத்து.

57. சிவபெருமான், குரு, சண்டர், இவர்களின் ஆணையை மீறினால், அகோரமந்திரத்தை லக்ஷம் முறை ஜபிக்கவேண்டும். இவர்களுக்காகச் சேகரிக்கப்பட்ட திரவியங்களை அனுபவித்தால் லக்ஷத்தில் கால்பங்கு குறைவாக அகோர மந்திரத்தைஜபிக்க வேண்டும்.

58. சண்டத்திரவியமாகிய நிர்மால்யத்தைப் பக்ஷித்தால் அகோரமந்திரத்தை லக்ஷமுறை ஜபித்தலாற் சுத்தி அடைகிறான். சண்டருக்கு அர்ப்பணஞ் செய்த நிர்மாலியத்தைத் தானஞ் செய்தல், பக்ஷித்தலுடன் ஒக்கும். உபேக்ஷித்தால் ஐம்பதினாயிரம் முறை அகோரமந்திரத்தை ஜபிக்கவேண்டும்.

59. அல்லது, நிர்மாலியத்தை அகாமனையால் பக்ஷித்தால் பஞ்சப்பிரமமந்திரத்தை ஆயிரத்துஐநூறுமுறைஜபிக்கவேண்டும். காமனையால் பக்ஷித்தால் தீக்ஷையால் சுத்தி உண்டாகும்.

60. நிர்மாலியத்தைத் தாண்டினால், அகோரமந்திரத்தைப் பதினாயிரம் முறை ஜபிக்கவேண்டும். நிர்மாலியத்தைத் தொடுதலானது நிர்மாலியத்தைத் தாண்டுதலுடன் ஒக்கும். நிர்மாலியத்தை உண்ணுதல் 1 விற்பனை செய்தல் இவை சமமாகும்.

61. தேவஸ்வம், தேவத்திரவியம், நைவேத்தியம், நிவேதிதம், சண்டத்திரவியம், நிர்மாலியம் என நிர்மாலியம் ஆறு வகையாகக் கூறப்பட்டிருக்கின்றது.

62-63. சிவபெருமானுடைய கிராமம்முதலியன தேவஸ்வமெனவும், ஆடை முதலியன தேவத்திரவியமெனவும், சிவபெருமானுக்குக் 2 கற்பிக்கப்பட்டது நைவேத்தியமெனவும், சிவபெருமானுடைய 3 உச்சிஷ்டம் நிவேதிதமெனவும், சண்டருக்குச் சமர்ப்பிக்கப்பட்டது சண்டத்திரவியமெனவும், வெளியில் போடப்பட்டவை நிர்மாலியமெனவும் கூறப்படும். பிண்டிகை

---

1 நிர்மாலியத்தை விற்றால், உண்டால் செய்ய வேண்டிய பிராயச்சித்தத்தைச் செய்யவேண்டும் என்பது கருத்து.

2 பாகஞ் செய்யப்பட்டதென்பது கருத்து.

3 சூக்குமரூபமான ரஸம் ஏற்றுக் கொள்ளப்பட்டு, எஞ்சியிருக்கும் தூல ரூபமான பொருள்கள் உச்சிஷ்டமெனப்பட்டன.

யில் (பீடத்தில்) பற்றிய நிர்மாலியத்தை ஆலயத்திற்கு வெளியிற் ருன் விஸர்ஜனஞ் செய்யவேண்டும்

64-65. நிர்மாலியத்தைப் பிறருக்குக் கொடுத்தலால் நரியாகவும், (தான்) பக்ஷித்தலால் யானையாகவும் ஜனிக்கிறுன். நிர்மாலியத்தைத் தாண்டினுல் காரியத்தின் ஸித்திக்கு ஹானிஉண்டாகும். நிர்மாலியத்தின் வாசனையை முகர்ந்தால் செந்நாயாகி ஜனிக்கிறுன். நிர்மாலியத்தை முறைப்படி தகனஞ் செய்யாவிட்டால் சண்டாளனுகவும் விற்ருல் வேடனுகவும் பிறப்பான். நிர்மாலியத்தைத் தொட்டால் பெண் தன்மை உண்டாகிறது. சந்தேகமில்லை.

66. யாதொன்று நிர்மாலியத்தால் பரிசிக்கப்பட்டதோ அதனுடனுவது, நிர்மாலியத்தைப் புசிக்கிறவனுடனுவது, தொடுதல், தாண்டுதல், புசித்தல், இவை நேர்ந்தால், நிர்மாலியத்தைத்தொடுதல் தாண்டுதல் புசித்தற்குக் கூறப்பட்ட பிராயச்சித்தத்தில் கால் பங்கு குறைவாக அனுஷ்டிக்கவேண்டும்.

67. லிங்கம் முதலியவற்றின் கர்ப்பக் கிருகங்களில், மறதியால் சந்தனம் முதலியன, (பிறிதொன்றன்) தொடர்ச்சியால் தொடப்பட்டால் நிர்மாலியத்திற்குக்கூறிய பிராயச்சித்தத்தில் நான்கில் ஒரு பங்கைச் செய்யவேண்டும்.

68. குரு பரம்பரை, ஸித்தாந்த சாஸ்திரம், நாகம், அக்கினி, இருடிகள், அம்பாள், யக்ஷர்கள், எழு மாதாக்கள், ஆகிய இவர்களுக்கு நிவேதிதமானவை, 1 ஸகளலிங்கத்திற்கு நிவேதிதமானவை நிர்மாலிய மாகாதவாறுபோல நிர்மாலியமாகா.

69. இரத்தினம் சுவர்ணம் முதலியவற்ருலாகிய லிங்கங்களிலும், சலலிங்கம், சித்திரலிங்கம், க்ஷணிகலிங்கம், குருபரம்பரை 2 வியாக்கியான நிமித்தமான ப்ரதிமைகள் இவைகளிலும் நிவேதிதமானவை நிர்மாலியமாகமாட்டா.

70. பூஜை செய்யும்பொழுது, அன்னம், தூபம், முதலியவற்றின் வாசனையும், தீபத்தின் பிரகாசமும், நதிப்பிரவாகத்

1 நடராஜவடிவமுதலிய உருவத்திருமேனிகள், ஸகளலிங்கமெனப்படும்.

2 இன்னபொருளையுடையதென்று காட்டக் கூடிய நடராஜவடிவ முதலிய திருமேனிகள்.

தால் வரும் நிர்மாலியமும், ஒருபொழுதும் தோஷத்தைச் செய்யா.

71. சலலிங்கமேனும், அசல லிங்கமேனும், ஜீர்ணமானவுடன் பிரதிஷ்டை செய்யப்பட்டால், நான்காவது கர்மாவரையில் [சண்டேசுவரரைக் கற்பிக்கும் வரை) நிர்மாலிய தோஷம் கிடையாது.

72-73. புசிப்பதற்காகக் கற்பிக்கப்பட்ட பத்திரம், புஷ்பம், பழம், ஜலம், அன்னம், பானகம் முதலியன, மருந்து ஆகிய இவற்றைச் சிவபெருமானுக்கு நிவேதனஞ் செய்யாமல் புசிக்கக் கூடாது. நிவேதனம் செய்யாமல் புசிப்பவன் பிராயச்சித்தத்துக்குரியவனுகப் பவிப்பான். சிவமந்திரத்தை நூற்றெட்டு முறை ஜபித்தலாலும் சிவபூஜையாலும் சுத்தி அடைகிருன்.

74. தேவதைகளின் பிரதிட்டைகளிலும், 1 தடாகம், உத்தியானவனம், பர்வதினங்கள் இவற்றிலும் போஜனம் செய்தால் ஈசானமந்திரத்தை ஐநூறுமுறை ஜபித்தலால் சுத்தி அடைகிருன்.

75. 2 பும்ஸவனத்திலும், (அந்தக்கிரியை நடக்கிற வீட்டிலும், சதுர்த்தி தினத்திலும் போஜனஞ்செய்தால், வாமதேவ மந்திரத்தை நூறுமுறை ஜபிக்கவேண்டும். ஸபிண்டீகரணம், ஏகோத்திஷ்டம், இவை நடக்கும் வீடுகளில் புசித்தால், அகோரமந்திரத்தை முன்னூறு முறை ஜபிக்கவேண்டும்.

76. 3 கணர்களின் அன்னம், 4 கணகையின் அன்னம், ஸந்யாஸியின் அன்னம், புருஷன் இறந்த பின் சோரஸ்திரீயிடத்

---

1 அசிந்திய விசுவஸாதாக்கியம் என்னும் ஆகமத்தில், "தெவதாநாம் ப்ரதிஷ்டாஸு தடாகாராமயொஸ்ததா" என்றிருக்கிறது. இவ்வாறு பாடத்தைக் கொண்டால் 'தேவதைகளின் பிரதிஷ்டை, தடாகம் உத்தியானவனம் இவற்றின் பிரதிஷ்டை ஆகிய இவற்றில்" எனப் பொருள்கொள்க.

2 கர்ப்பாதானம், ஸீமந்தம், முதலியவற்றையும் கொள்ளவேண்டும்.

3 பசுக்கள் சுவர்ணம் முதலியவற்றைத் திருடியும், பிராமணரின் சொத்தைஅபஹரித்தும் ஜீவனம் செய்கிற பிராமணர் கணர் எனப்படுவர்.

4 பர்த்தா இறந்துபோன பின்னர், திருட்டுத்தனத்தால் உண்டாகிய தர்ப்பத்தைப் போக்குகிறவள் கணகை எனப்படுவள்,

தில் உண்டானவனின் அன்னம், இவற்றை உண்டால், சாந்திராயண விரதத்தை அநுட்டிக்கவேண்டும்.

77. பாகயக்ஞம் முதலிய யாகங்கள், கோதானம், சௌளம், விவாஹம், விரதங்கள் ஆகியவைகளில் தனக்குச் சமமான ஒழுக்கம் ஜாதி இவற்றை உடையவர்களின் அன்னத்தை உண்ணுபவன் தோஷத்தை அடையமாட்டான்.

78. 1 தீக்ஷை பெற்ற எவன், போஜனத்திற்கு அழைக்கப்பட்டு, எந்த வர்ணத்தினரின் அன்னத்தை உண்ணவில்லையோ அவன் 2 அந்த ஜாதிக்கு அதிதேவதையாகிய மந்திரத்தையும், தன் ஜாதிக்கு அதிதேவதையாகிய மந்திரத்தையும், ஒரே முறை 3 ஜபித்துச் சுத்தி அடைகிறான்.

79. க்ஷத்திரியர், வைசியர், சூத்திரர், ஆகிய இவர்களின் அன்னத்தைப் பிராமணர் புசித்தால் சுத்தியின்பொருட்டு முன் கூறிய ஜபத்தின் முறையுடன் ஒன்று இரண்டு மூன்று தினங்கள் உபவாஸமிருக்க வேண்டும்.

80. ஜீர்ணலிங்கத்தினிடத்தில் அபிஷேகம், பூஜை, ஜபம், ஹோமம் இவற்றை விலக்கவேண்டும். ஜீர்ணலிங்கத்தைக் கண்டால், ஸ்நானஞ்செய்து சிவகாயத்திரியை நூற்றெட்டு முறை ஜபிக்கவேண்டும்.

81. உச்சிஷ்டத்தை உடைய தீக்ஷைபெற்ற ஸமானஜாதியான எவனால், தீக்ஷை பெற்ற ஸமான ஜாதியான எவன் 4 உச்சிஷ்டத்தால் பரிசிக்கப்பட்டானோ, அவன் ஆசமனஞ் செய்து,

---

1 தீக்ஷைபெற்ற எவன் போஜனத்திற்கு அழைக்கப்படாமல் எந்த வர்ணத்தினரின் அன்னத்தை உண்ணுகிறானோ என்னும் பொருளும் கொள்ளலாம்.

2 கூறப்போகும் 89-வது சுலோகத்தில் இதன் விளக்கத்தைக்காண்க

3 நூற்றெட்டு முறை ஜபித்து என்பதுபொருள்.

4 உச்சிட்டத்தால் பரிசிக்கப்பட்டவுடன் போஜனத்தை நீக்கி என்பதைச் சேர்த்துக் கொள்ளவேண்டும். காலோத்தரத்திலும் "எல்லா ஸமான ஜாதியருக்குள் உச்சிஷ்ட ஸ்பரிசம் நேர்ந்தால் போஜனத்தை நீக்கி ஆசமனஞ் செய்து தன்னுடைய ஜாதிக்கு அதிதேவதையான மந்திரத்தை நூறு முறை ஜபிக்கவேண்டும்' என்று கூறப்பட்டிருக்கின்றது.

தன்னுடைய ஜாதிக்கு அதிதேவதையான மந்திரத்தை நூறு முறை ஜபிக்கவேண்டும்.

82. தீக்ஷை உடைய ஸமானஜாதியான அவன் தீக்ஷை பெருதவனுல் பரிசிக்கப்பட்டால், ஸ்நானம் செய்து ஆசமனம் செய்து இருநூறு முறை ஜபிக்கவேண்டும். தனக்கு 1 நெருங்கிய ஜாதியரான தீக்ஷையுடையவர்களால் பரிசிக்கப்பட்டால், அவ்வாறே இருநூறு முறைஜபிக்கவேண்டும். தீக்ஷை பெருத நெருங்கிய ஜாதியரால் பரிசிக்கப்பட்டால் உபவாஸமுமிருக்கவேண்டும்.

83. பிராமணனுனவன், வைசியர் சூத்திரர்களைத் தொட்டால் முறையே இரண்டு மூன்று தினங்கள் உபவாஸமிருந்து, அவனுடைய ஜாதிக்கு அதிதேவதையான மந்திரத்தையும், தன்னுடைய ஜாதிக்கு அதிதேவதையான மந்திரத்தையும், ஒரே பிரயோகத்தில் 2 முறையே ஜபிக்கவேண்டும்.

84. க்ஷத்திரியனுனவன், சூத்திரஸ்பர்சம் ஏற்பட்டால், இரண்டு நாட்கள் உபவாஸமிருந்து, தன்னுடைய ஜாதிக்கு அதிதேவதையான மந்திரத்தையும், அவனுடைய ஜாதிக்கு அதிதேவதையான மந்திரத்தையும், ஜபிக்கவேண்டும். அதீக்ஷிதர்களான 3 இவர்களைத்தொட்டால் முன் கூறப்பட்ட மந்திரத்தை இரண்டுமடங்கு அதிகமாக ஜபிக்கவேண்டும்.

85. 4 க்ஷத்திரியர், பிராமணரைப் பரிசித்தால் கால்பங்கு குறைவாகவும், வைசியர் அரைப்பங்கு குறைவாகவும், சூத்திரர்

---

1 பிராமணருக்குக்ஷத்திரியரும், க்ஷத்திரியருக்கு வைசியரும், வைசியருக்குச் சூத்திரரும் நெருங்கிய ஜாதியராவர்.

2 நானூறு எண் முதலாக என்பது பொருள்.

3 பிராமணருக்கு க்ஷத்திரியர் நீங்கலாகக் கூறப்பட்ட வைசியர் சூத்திரர்களேயும், க்ஷத்திரியருக்கு வைசியர் நீங்கலாகக் கூறப்பட்ட சூத்திரரையும், இவர்களே என்னும் பதத்தால் கொள்ளவேண்டும்.

4 பிராமணருக்கு தீக்ஷை பெற்ற பிராமண ஜாதியரின் பரிசம் சேர்ந்தால் நூறு முறையும், அதீக்ஷிதர்களான பிராமண ஜாதியரின் பரிசம் சேர்ந்தால் இருநூறு முறையும் ஜபிக்கவேண்டுமென்று யாதொரு பிராயச்சித்தம் கூறப்பட்டதோ, அந்தப் பிராயச்சித்தத்தில் கால்பங்கு குறைவாக (அதாவது தீக்ஷை பெற்ற பிராமணரின் பரிசவி... எழுபத்தைந்தும், தீக்ஷை பெருத பிராமணரின் பரிசவி...

முக்கால்பங்கு குறைவாகவும், அதே பிராயச்சித்தத்தை அனுஷ்டிக்கவேண்டும்.

86. சூத்திரன், க்ஷத்திரியரைப் பரிசித்தால் க்ஷத்திரியருக்குக் கூறப்பட்ட பிராயச்சித்தத்தில் பாதிப்பிராயச்சித்தத்தால் சுத்தி அடைகிறான், வித்வானானவன் வேறிடத்தும் இவ்வாறே ஆலோசித்துப் பிராயச்சித்தத்தைக் கூறவேண்டும்.

87. வண்ணான் முதலிய கீழ் ஜாதியருடன் பரிசம் நேரிட்டால் மனிதனானவன் மூன்று தினங்கள் உபவாஸமிருந்து, தன்னுடைய ஜாதிக்கு அதிதேவதையான மந்திரத்தைப் பதினாயிரம் முறை ஜபிப்பதலால் சுத்தி அடைகிறான்.

88. சண்டாளனுடைய பரிசம் நேரிட்டால், அகோரமந்திரத்தை முப்பதினாயிரம் முறை ஜபித்து கிருச்சிரத்தை அனுஷ்டித்தலால் எல்லாப் பாவங்களேயும் நாசஞ் செய்கிறான்.

89. பிராமணர் முதலிய நான்கு ஜாதியரிடத்தில் தத்புருஷமந்திரம், அகோரமந்திரம், வாமதேவமந்திரம், ஸத்யோஜாத மந்திரம் ஆகிய மந்திரங்கள் (முறையே) ஜாதிகளுக்கு அதிதேவதைகளாக இருக்கின்றன. அகோரமந்திரம் ஈசானமந்திரம் ஆகிய இவை எல்லோருக்கும் பொதுவாகும்.

90. தன்னுடைய ஜாதியரின் உச்சிஷ்டத்தைப் புசித்தால் உபவாஸமிருக்கவேண்டும். தனக்கு நெருங்கிய ஜாதியரின் உச்சிட்டத்தைப் புசித்தால் தன்னுடைய ஜாதிக்கு அதிதேவதையான மந்திரத்தை ஆயிரம் முறை ஜபிக்கவேண்டும்.

91. வைசியர், சூத்திரர் ஆகிய இவர்களின் உச்சிட்டத்தைப் பிராமணர் புசித்தால், முறையே இரண்டு மூன்று தினங்கள் உபவாஸமிருக்கவேண்டும். அவ்வாறே அகோர மந்திரத்தைப் பதினாயிரம் முறை ஜபிக்கவேண்டும்.

---

றைம்பதுமாக) க்ஷத்திரியர், பிராமணரை பரிசித்தால் ஜபிக்க வேண்டும். வைசியர்கள், தீக்ஷைபெற்ற பிராமணரைப் பரிசித்தால் ஐம்பது முறையும், தீக்ஷைபெறாத பிராமணரைப் பரிசித்தால் நூறு முறையும் ஜபிக்கவேண் ... சூத்திரர், தீக்ஷைபெற்ற பிராமணரை ஸ்பரிசித்தால் இருபத்தைந்து ... க்ஷைபெறாத பிராமணரை ஸ்பரிசித்சால் ஐம்பது முறையும் ... இந்தச் சுலோகத்தின் பொருள்.

92. பிறத்தல் இறத்தலாகிய இருவகைகளால் நேரிடும் சூதகமுள்ளவரின் அன்னத்தைப் புசித்தால், உபவாஸமிருந்து வாமதேவ மந்திரத்தை ஆயிரம் முறை ஜபித்தலாற் சுத்தி அடைகிறான். காமனையால் புசித்தால் இந்தப் பிராயச்சித்தத்தை இரண்டுபங்கு அதிகமாகச் செய்யவேண்டும்.

93. தனக்குச் சம்பந்தமாகவுள்ள அந்தச் சூதகர்களின் அன்னத்தை புஜித்தால், அகோரமந்திரத்தை, ஒருநாள் உபவாசமிருந்து, ஆயிரம் முறை ஜபிக்கவேண்டும். காமனையால் புஜித்தால் மூன்று தினங்கள் உபவாஸமிருந்து இரண்டுபங்கு அதிகமாக ஜபிக்கவேண்டும்.

94. 1 காரு, தாஸிகள், அரசர், இவர்களுக்குச் சூதகம் கிடையாது. தனிமையாக ஆக்கப்பெற்ற பாகத்தைப் புசிக்கும் நிர்வாண தீக்ஷைபெற்றவர்களுக்கும் அந்தச் சூதகம் கிடையாது.

95. மீன், நண்டு, சிறு 2 சங்கம், நகம், சோவி இவற்றைப் புசித்தாலும், 3 புதிய ஜலத்தைஅருந்தினாலும், உபவாஸமிருந்து பஞ்சகவ்வியத்தை அருந்துதலால் சுத்தி அடைகிறான்.

96. அருந்தி எஞ்சிய நீரை மறதியால் எவன் அருந்துவானோ, அவன் ஒரு இரவு உபவாஸமிருந்து பஞ்சகவ்வியமருந்துவதாற் சுத்தி அடைகிறான்.

97. ஜலத்தை அருந்தும்பொழுது, அந்த ஜலம் அன்னத்தில் சம்பந்தித்து, அந்த அன்னத்தை உண்ணுபவன், அகோர மந்திரத்தை ஆயிரம் முறை ஜபித்துப் பஞ்சகவ்விய மருந்துவதாற் சுத்தி அடைகிறான்.

98. போஜனம் செய்துகொண்டிருக்கும் பொழுது, குதஸ்தானத்திலிருந்து மலம் நழுவினாலும், இந்திரியம் நழுவினாலும், சௌசம் ஸ்நானம் இவற்றைச் செய்து 4 இரண்டு முறை ஆசமனஞ் செய்யவேண்டும். போஜனஞ் செய்யாமல் அகோரமந்திரத்தை ஆயிரம் முறை ஜபிக்கவேண்டும்.

---

1 கம்மாளர், சேணியர், நாபிதன், வண்ணான் ஆகிய இவர்களை, காரு என்னும் பதத்தாற் கொள்ள வேண்டும்.

2 சங்கம்போலுள்ள க்ஷுத்ர சங்கு என்பது பொருள்.

3 புதிதான கிணற்றிலிருந்து உண்டான ஜலம் என்பது பொருள்.

4 சௌசஸ்நானஞ் செய்த பின்னர் ஒரு ஆசமனமும், மீண்டும் ஸ்நானஞ் செய்த பின்னர் ஒரு ஆசமனமும் செய்யவேண்டும்.

99. ஜலத்தை அருந்திய பின்னரும், அன்னத்தைத உண்ட பின்னரும், மூத்திர விஸர்ஜனஞ் செய்த பின்னரும், ஆசமனஞ் செய்யவில்லையாயின் உபவாஸமிருந்து, ஆயிரம் முறை அகோர மந்திரத்தை ஜபித்து, பஞ்சகவ்விய மருந்துவதாற் சுத்தி அடைகிறுன்.

100. பூணூலின்றி ஜலத்தை அருந்துவானேயானல், அல்லது போஜனஞ் செய்வானேயானல், அப்பொழுது உபவாஸமிருந்து, அகோரமந்திரத்தை ஆயிரம் முறை ஜபித்து பஞ்சகவ்வியத்தை அருந்த வேண்டும.

101. எல்லா 1 ஸாங்கரியங்களிலும், சித்த சுத்திக்குக் காரண்மான அகோரமந்திரத்தை, சித்தத்திற்குத் 2 தெளிவு உண்டாகும் வரை ஜபிக்கவேண்டும்.

102. சாஸ்திரவிதியை அதிக்ரமிக்காமல் நாடோறும் எவன் சிவாகமங்களை அத்யயனம் செய்கிறுனே, அவன் எல்லாப் பாவங்களையும் சூரியன் இருட் கூட்டத்தை (நாசஞ்செய்வது) போல் நாசஞ் செய்கிறுன்.

103. பிராயச்சித்த ஜபத்தில் ஒவ்வொரு பத்தாயிரத்துக்கும் இரண்டு உபவாசங்கள் அனுட்டிக்க வேண்டும். பத்தில் ஒரு பங்கு ஹோமம் செய்ய வேண்டும். இருபதில் ஒரு பங்கு அபிஷேக கலசங்கள் வைத்து ஜபிக்கவேண்டும்.

104. பிராயச்சித்தம் முடியும் வரை பூமியில் படுப்பவனுகவும், பிரமசாரியாகவும், எண்ணெய் தேய்த்து ஸ்நானம் செய்யாதவனுகவும், உண்மை உரைப்பவனுகவும், இரவில் ஹவிஸ்ஸைப் புசிப்பவனுகவும் இருக்கவேண்டும்.

## பஞ்சகவ்வியஞ் சேகரிக்குமுறை

105. நடு, கிழக்கு, தெற்கு, மேற்கு, வடக்கு, ஆகிய திக்குக்களிலுள்ள ஐந்து கோஷ்டங்களிலும், சிவ தத்துவம், ஸதா

1 பூஜை பிரதிட்டை போஜனம் முதலியவைகளில் நேரும் கலப்புத் தோஷங்களில் என்பது கருத்து.

2 மிகச் சிறிய தோஷங்களுக்குப் பத்து முதல் நூறு வரையும், சிறிய தோஷங்களுக்கு இருநூறு முதல் ஆயிரம் வரையும், பெரிய தோஷங்களுக்கு லக்ஷம் வரையும், ஜபிக்கவேண்டும் என்பது கருத்து.

சிவதத்துவம், வித்தியா தத்துவம், காலதத்துவம், புருஷதத்துவம் ஆகிய தத்துவங்களை முறையே நியாஸஞ் செய்யவேண்டும்.

106. சுப்ரதிஷ்ட பாத்திரம், சுசரீந்தபாத்ரம், தேஜோவத் பாத்திரம், அமிருதாத்மகபாத்திரம், இரத்னோதக பாத்திரம், என்னும் ஐந்து பாத்திரங்களையும் வைக்கவேண்டும்.

107. மேற்கு. வடக்கு,தெற்கு, கிழக்கு,நடு ஆகிய திக்குக் களிலிருக்கும் பாத்திரங்களில், முறையே கோமயம், கோஜலம், நெய்; தயிர், பால் இவ்வைந்தையும் இடவேண்டும்.

108. கோமயம் முதலியவற்றை, முறையே ஸத்யோஜாதம், வாமதேவம், அகோரம், தத்புருஷம், ஈசானம் ஆகிய மந்திரங்களால் மந்திரிக்கவேண்டும். (கோமயத்தை ஸத்யோஜாத மந்திரத்தால் ஐந்து முறையும், கோஜலத்தை வாமதேவ மந்திரத்தால் நான்கு முறையும், நெய்யை அகோர மந்திரத்தால் மூன்று முறையும், தயிரை தத்புருட மந்திரத்தால் இரண்டு முறையும், பாலை ஈசான மந்திரத்தால் ஒரு முறையும், தர்ப்பை முஷ்டியால் தொட்டு அபிமந்திரணஞ் செய்யவேண்டும்.)

109. கோமயத்தை கோஜலத்திலும், கோஜலத்தை நெய்யிலும், நெய்யைத் தயிரிலும், தயிரைப்பாலிலும், மூலமந்திரத்தை உச்சரித்துச் சேர்த்து, அவற்றோடு குசோதகத்தை, காயத்ரியாலேனும் ஸம்ஹிதா மந்திரத்தாலேனும் சேர்க்கவேண்டும்.

110. 111. மஹாபாபங்களைப் போக்கக்கூடிய பஞ்சகவ்வியம் இவ்வாறு கூறப்பட்டது. கோமயம் பாதிப்பெருவிரல் அளவுள்ளதாகவும்,கோமூத்திரம் ஒரு பலநிறையுள்ளதாகவும்,நெய் இரண்டு பல நிறையுள்ளதாகவும், தயிர் மூன்று பல நிறையுள்ளதாகவும், பால் ஐந்து பல நிறையுள்ளதாகவும், குசோதகம் ஒரு பல நிறையுள்ளதாகவும் இருக்கவேண்டும்.

112. கரு நிறமுள்ள பசுவினிடமிருந்து கோமயத்தையும், நீல நிறமுடைய பசுவினிடமிருந்து கோஜலத்தையும், கபில நிறமுடைய (கோரோசனை போலுள்ள நிறமுடைய) பசுவினிடமிருந்து நெய்யையும், வெண்நிறமுடைய பசுவினிடமிருந்து தயிரையும், தாம்பிர நிறமுடைய பசுவினிடமிருந்து பாலையும் கிரகிக்க வேண்டும்.

113. எல்லா நிறமுடைய பசுக்கள் கிடையாவிடில், கபில நிறமுடைய ஒரு பசுவே சிலாகிக்கப்படுகிறது. சுவர்ணம், வெள்ளி, இலை, தாம்பிரம் ஆகிய இவற்றாலாக்கப் பெற்ற பாத்திரம் மங்களத்தைத் தரக் கூடியது.

114. பஞ்சகவ்வியம் சேகரிக்கும் முறையால் இப்பஞ்சகவ்வியம் சிவகூர்ச்சமென்று கூறப்பட்டது. ஒரே பாத்திரத்திற் சேர்க்கப்பட்டதாயும், நூற்றெட்டு முறை மூலமந்திரத்தால் ஜபிக்கப் பெற்றதாயும் இருக்கிற பஞ்சகவ்வியத்தை அருந்த வேண்டும்.

115. ஜ்வலிக்கப் பெற்ற காட்டுத் தீயானது, பஞ்சுக்கூட்டத்தைப் போல், சிவகூர்ச்சமானது (பஞ்சகவ்வியமானது) மிகப் பெரிய பாவங்களையும் விரைவில் பொசுக்குகிறது.

116. சாஸ்திரங்களிற் கூறப்பட்டவாறு, வித்துவானானவன் பிராயச்சித்தத்தைக் கூறவேண்டும். ஆசாரியன் குறைவாகவேனும், அதிகமாகவேனும், பிராயச்சித்தத்தை விதித்தலால் நரகத்தை அடைவான்.

117. கிரியாகாண்டக்ரமாவளீ என்னும் நூலில் ஸ்ரீ சோமசம்புவால் பிராயச்சித்த விதியானது பெரிய சக்தியையுடையதாயினும் சுருக்கிக் கூறப்பெற்றது.

ஆகச் சுலோகம் 627.

பிராயச்சித்த விதி முற்றிற்று.

---

## ஸமய தீக்ஷாவிதி.

1. பின்னர், போகம் மோட்சம் இவற்றை அடைவதற்காக, தீக்ஷா சொரூபத்தின் விளக்கமானது, ஆகமங்களை அனுசரித்து அறிவிற்குத் தக்கவாறு சுருக்கமாகக் கூறப்படுகிறது.

### தீக்ஷையின் சொரூபம்.

2. எதனால் மலம் மாயை முதலிய பாசங்கட்கு நாசமுண்டாகின்றதோ, எதனால் சிஷ்யனிடத்து ஞானமுமுண்டாகின்றதோ, அது தீக்ஷையெனக் கூறப்படுகின்றது.

## தீக்ஷையால நுக்கிரகிக்கப்படும் ஆன்மாக்களின் வகை.

3. விஞ்ஞானகலர் என்று ஒரு கூட்டத்தாரும், இரண்டாவ்து பிரளயாகலர் என்றும், மூன்றுவது சகலர்என்றும் இவ்வாறு அநுக்கிரகிக்கப்படும் ஆன்மாக்கள் சித்தாந்த சாஸ்திரத்தில் மூன்று வகையாகக் கொள்ளப்பட்டன.

4. அவர்களுள் முதலாவது கூறப்பட்ட விஞ்ஞானகலர், ஆணவமலம் ஒன்றுடன் மாத்திரம் கூடியவர். பிரளயாகலர் ஆணவமலம் கன்மமலம் இவற்றுடன் கூடியவர். ஸகலர் (மேலே, கூறப்பட்ட இரண்டு மலங்களுடன்) கலை முதல் பூமியீறுகிய தத்துவங்களுடனும் (மாயையுடனும்) கூடியவர்.

## தீக்ஷையின் பேதம்.

5. தீக்ஷையானது, நிராதார தீக்ஷை ஸாதாரதீக்ஷை என்று இருவகைப்படும். கூறப்பட்ட ஆன்மவர்க்கங்களுள் முதல் இருவர்க்கங்களுக்கு நிராதார தீக்ஷையும், ஸகலருக்கு ஸாதாரதீக்ஷையும் கொள்ளப்பட்டன.

6. ஆசாரியரை அதிட்டிக்காமல், பரமேசுவரராலேயே, தீவிரமான சத்திநிபாதத்தால் எந்தத் தீக்ஷையானது செய்யப்படுகிறதோ, அது நிராதார தீக்ஷை என்று கூறப்பட்டது.

7. சிவபெருமான், ஆசாரியருடைய சரீரத்தை அதிஷ்டித்து, மந்தம் தீவிரம் முதலிய வேறுபாடுடைய சத்திநிபாதத்தால் எந்தத்தீக்ஷையைச் செய்கிறுரோ,அது ஸாதாரதீக்ஷைஎன்று கூறப்படுகின்றது.

8. இந்த ஸாதாரதீக்ஷையானது, ஸபீஜம், நிர்ப்பீஜம், ஸாதிகாரை, நிரதிகாரை, என்று நான்கு விதமாகக் கூறப்பட்டது. இந்தத் தீக்ஷையானது இனி கிரமமாகக் கூறப்படுகிறது.

9. ஸமயம் ஆசாரம் இவற்றுடன்கூடியதாக ஸபீஜதீக்ஷை மனிதர்களுக்குக் கூறப்படுகிறது. நிர்ப்பீஜதீக்ஷையோவென்றுல் ஸமயம் ஆசாரம் என்னும் இவையின்றி 1 சக்தியற்றவர்களுக்குக் கூறப்படுகிறது.

---

1 பெண்கள் குழந்தைகள் இவர்களுக்கு என்பது கருத்து.

10. நித்தியம், நைமித்திகம், காமியம் ஆகிய கர்மங்களில் எவனுக்கு அதிகாரியாயிருக்கும் தன்மை இருக்கின்றதோ, அவனுக்கு ஸாதிகாரதீக்ஷை ஸித்திக்கும். ஆதலால் ஸாதகர் ஆசாரியர் இவர்களுக்கு ஸாதிகார தீக்ஷை ஸித்திக்கிறது.

11. நிர்ப்பீஜதீக்ஷை பெற்றவர்களுக்கும் அவ்வாறே சமய தீக்ஷை விசேஷதீக்ஷை உடையவர்களுக்கும் நித்திய கர்மங்களில் மாத்திரம் அதிகாரியாயிருக்கும் தன்மை பெறப்படுவது கொண்டு, நிரதிகார தீக்ஷை ஸித்திக்கிறது.

12. 13. இரண்டுவிதமான சாதிகாரம் நிரதிகாரமென்னும் இந்தத் தீக்ஷையானது, தனித்தனி கிரியாவதி ஞானவதி என்னும் இரண்டு ரூபங்களாக விளங்குகின்றது. அவற்றுள் ஒன்று குண்டமண்டலங்களை முன்னிட்டு கிரியைகளை உடையது. மற்றொன்று மனோவியாபாரத்தால் மாத்திரம் எந்தத் தீக்ஷை சித்திக்கிறதோ அந்த ஞானவதீ தீக்ஷாரூபமாகவுள்ளது. இவ்வாறு அதிகாரம் பெற்ற ஆசாரியரால் தீக்ஷையானது செய்விக்கப்படுகிறது.

## ஆசாரிய இலக்கணம்.

14. அந்த ஆசாரியர் நல்ல 1 தேசத்தில் பிறந்தவராகவும், அழகானவடிவத்தை உடையவராகவும், ஆகமங்களைக் கேட்டல் 2 நல்ல ஸ்வபாவம் இவற்றையுடையவராகவும், 3 ஞானம் ஒழுக்கம் 4 குணம் இவற்றுடன் கூடியவராகவும், பொறுமையுள்ளவராகவும், சுத்தமான சித்தத்தை உடையவராகவும், உத்தமராகவும் இருக்கவேண்டும்.

---

1 "இயற்கையாகவே கிருஷ்ணஸாரமிருகங்கள் எந்த இடத்தில் சஞ்சரிக்கின்றனவோ, தேவர்கள் இருக்கின்றார்களோ, வேதங்களும் இருக்கின்றனவோ, அந்தத் தேசத்தை ஆர்யாவர்த்தம் என்று பண்டிதர்கள் கூறுகின்றனர். அந்தத் தேசத்தில் நல்ல குலத்தில் பிறந்த ஆசாரியன் சாஸ்திரங்களால் ஒப்புக்கொள்ளப்பட்டவன்.

2 துஷ்டத்தனம் முதலியன இல்லாதிருத்தல்.

3 ஞானமாவது தத்துவங்களின் ஞானம்.

4 குணமாவது ஸாத்விக குணம். அதாவது "ஞானம், ஸத்தியம், தயை, தைரியம், விநயம், ஸ்திரமாயிருக்கும் தன்மை ஆகிய இவை ஸாத்விக குணமாகும். இந்தக் குணங்கள் செயற்கையால் உண்டாகக் கூடியன" என்று பெரியோர்கள் கூறுகின்றனர்.

## சிஷ்ய இலக்கணம்.

15. நல்லதேசத்தில் உதித்தவனும், நல்ல ஸ்வபாவம், குணங்கள் (ஸாத்விக குணங்கள்) ஒழுக்கம், குருபக்தி இவற்றுடன் கூடினவனும், சிவத்யானமுள்ளவனும், விரக்தனுமுள்ள சிஷ்யன் சிலாகிக்கப்படுகிறான்.

## துவாரபாலபூஜை முதலியன.

16-17, பின்னர் இரண்டு ஸந்திகளிலும் செய்யவேண்டிய கர்மாக்களைச் செய்த ஆசாரியர், தாமரைபோன்ற கையில் சாமான்யார்க்யத்தை ஏந்தி, துவாரபூஜை துவாரபாலர் பூஜை இவற்றைச் செய்து, விக்னங்களைப் போக்கி, உதும்பரத்தில் (நடையில்) அஸ்திரத்தை நியாஸஞ் செய்து, தன்னுடைய ஆஸனத்திலமர்ந்து, முன் கூறப்பட்டபடி பூத சுத்தி அந்தரியாகம் இவற்றைச் செய்யவேண்டும்.

18-19. எள்ளு, அரிசி வெண் கடுகு, தர்ப்பம், அறுகுநுனி, யவம் என்னும் தான்யம், பால், ஜலம், இவற்றுடன் கூடியதாக விசேஷார்க்கியத்தைக் கற்பித்து, பின்னர் அந்த ஜலத்தினல் திரவியசுத்தி செய்து, நெற்றியில் பொட்டிட்டு, தனக்கும் தன்னுடைய இருதயத்தில் ஆசனத்துடன் கூடிய சிவபெருமானுக்கும் பூஜை செய்து, மந்திரசுத்தி செய்து, லிங்கத்திற்குக் கிழக்குத் திக்கில் பஞ்சகவ்வியத்தையும் கற்பிக்கவேண்டும்.

20-21, பொரி, சந்தனம், வெண்கடுகு, திருநீறு, அறுகு, அக்ஷதை, தர்ப்பம் ஆகிய விகிரத்திரவியங்களையேனும், தனிப் பொரிகளையேனும், ஏழு முறை அஸ்திரமந்திரத்தால் அபிமந்திரிக்கப்பட்டவையாகவும், அஸ்திர ஜலத்தால் புரோக்ஷிக்கப்பட்டவையாகவும், கவசமந்திரத்தால் அவகுண்டனஞ் செய்யப்பட்டவையாகவும் செய்து, இவற்றைப் பலவித ஆயுதங்களின் சொரூபங்களாகவும், விக்னக் கூட்டத்தைப் போக்குபவையாகவும், பாவிக்கவேண்டும்.

22. முப்பத்தாறு தர்ப்பங்களைக் கொண்டு ஓட்டை அளவாகச் செய்யப்பட்டதாயும், உத்தமமாயுமிருக்கும் ஞானகட்க ரூபமான வேணியை (பின்னலை) பாசுபதாஸ்திரத்தால் ஏழு முறை ஜபிக்கப் பெற்றதாகச் செய்க.

23. தன்னிடத்தில் ஸிருஷ்டிக்கிரமமாக இஷ்டமான அத்துவாவை நியாஸஞ் செய்து, நிஷ்களரான சிவபெருமானையும் நியஸித்து "ஶிவொऽஹம்" (சிவம் நான்) என்று பாவனை செய்யவேண்டும்.

24. மூலமந்திரத்தால் மந்திரிக்கப் பெற்ற வெண்மையான தலைப்பாகையை சிரஸில் வைத்துக்கொள்ள வேண்டும். தன் தேகத்தை சந்தனம், ஆடை, ஆபரணம் இவற்றால் அலங்கரிக்க வேண்டும்.

25. தன்னுடைய வலது கையில் சந்தனத்தால் மண்டலத்தைச் செய்யவேண்டும். இந்த மண்டலத்தில் விதிப்படி சிவபெருமானை அருச்சிக்கவேண்டும். இவ்வாறு செய்வது சிவஹஸ்தமாகும்.

26. பிரகாசிக்கிற அந்தச் சிவஹஸ்தத்தைத் தன்னுடைய சிரஸில் சிவமந்திரத்தை உச்சரித்து நியஸித்துத் தன்னைச் சிவபெருமானினும் வேறுபடாத கருத்தராகப் பாவிக்கவேண்டும்.

27-28. அது எவ்வாறெனில், மண்டலத்தில் கர்மஸாக்ஷியாயும், கலசத்தில் யாகத்தை இரக்ஷிப்பவராயும், அக்கினியில் ஹோமத்திற்குப் பற்றுக்கோடாயும், சிஷ்யனிடத்தில் பாசத்தை விடுவிப்பவராயும், தன்னிடத்தில் அனுக்கிரகிப்பவராயும், இவ்வாறு ஐந்து பற்றுக்கோடுகளையுடைய யாதொரு சிவபெருமானுண்டோ, அவரே நான் என்ற மிக ஸ்திரமான கொள்கையை ஆசாரியர் கொள்ளவேண்டும்.

29-29½. ஞான கட்கத்தைக் கையிலேந்தி, நிருருதி திக்கில் வடக்கு முகமாக இருந்துகொண்டு, அர்க்யஜலம், பஞ்சகவ்வியம் இவற்றால் யாகக்கிருஹத்தைப் புரோக்ஷித்து, நிரீக்ஷணம் முதல் சதுஷ்பதமீறான ஸம்ஸ்காரங்களால் ஸம்ஸ்கரிக்கவேண்டும்

30-30½. அந்த யாககிருஹத்தில் இறைக்கும் திரவியங்களை இறைத்து, தர்ப்பங்களாலாக்கிய கூர்ச்சியால் (கோலால்) ஒருங்கு சேர்க்கவேண்டும். ஒருங்கு சேர்க்கப்பெற்ற அவற்றை, ஈசான திக்கில் வர்த்தனிக்கு ஆஸனமாதற்குக் கற்பிக்கவேண்டும்.

31. நிருருதி திக்கில் வாஸ்துப்பிரமனையும், மேற்கு வாயிலின் வடக்குப் பக்கத்திலுள்ள கும்பத்தில் லக்ஷ்மியையும் பூஜிக்க வேண்டும்.

32. நல்ல முகத்தையுடையவளாயும், இரத்தினங்களால் யாகக் கிருஹத்தை நிரப்புகிறவளாயும், லக்ஷ்மியைத் தியானித்து, ஆவாஹனஞ் செய்து, இருதய மந்திரத்தாலருச்சித்து, யாகமண்டப சொரூபியாகத் தியானிக்கவேண்டும்.

33-34. பின்னர், 1 இரத்தினங்கள், 2 ஒஷதிகள், இவற்றுடன்கூடிய தீர்த்தத்தால் நிரம்பப்பெற்றதாயும், சந்தனம் பூசப்பெற்றதாயும், மாந்தளிர்களை முகத்தில் உடையதாயும் 3 பிரணவத்துடன் சலாஸனபூஜைசெய்யப்பெற்றதாயும், ஈசான திக்கில் 4 எல்லாத் தான்யங்களுக்கு மேல் இருக்கிறதாயும், மேற்கு முகமாய் இருப்பதாயும், ஆடை சுவர்ணம் இவற்றால் அலங்கரிக்கப் பெற்றதாயும் இருக்கிற கலசத்தில் சிவபெருமானை ஸாங்கமாகப் பூசிக்கவேண்டும்.

35. கும்பத்தின் வலது பக்கத்தில் 5 சமீபத்தில் இருப்பதாயும், மேற்கு முகமாய் இருப்பதாயும், நல்ல இலக்ஷணமுடையதாயும், 6 ஸிம்மாசனத்தின் மீது வீற்றிருப்பதாயும், அஸ்திர சொரூபியாயுமிருக்கிற வர்த்தனியை பாசுபதாஸ்திரத்தால்பூஜிக்கவேண்டும்.

---

1 மாணிக்கம், இந்திரநீலம், வைடூர்யம், பவளம், நல்முத்து, வஜ்ரமணி, புஷ்யராகம், ஸ்படிகம், மரகதப்பச்சைக்கல் ஆகிய ஒன்பது இரத்தினங்கள் என்பது கருத்து.

2 ஸீதேவியார்செங்கழுநீர், ஓரிலைத்தாமரை, குமிழ், நறுமுறுக்கை, விஷ்ணுக்ராந்தி ஆகிய ஐந்தும் ஐந்து ஒஷதிகள் ஆகும்.

3 ஓம் ஹாம் வ்ருஷபாஸநாய நம: என்று பூசிக்கப் பெற்றதாயும்.

4 எள்ளு, கடுகு, பயறு, உழுந்து, மொச்சை, கொள்ளு, நெல் முதலியன எல்லாத் தான்யங்களாகும்.

5 சிவகும்பம் வர்த்தனீகும்பம் இவற்றின் இடையில், இடைவெளி ஒரு முஷ்டி அளவு இருக்கவேண்டுமென்பது கருத்து.

6 ஓம் ஹாம் ஸிம்ஹாஸநாய நம: என்று வர்த்தனியின் கீழே பூஜிக்கவேண்டுமென்பது கருத்து.

36-37. 1 திக்குக்களில் 2 வாஹனம், 3 ஆயுதம், இவற்றுடன் கூடிய இந்திரன் முதல் பிரமன் விஷ்ணு ஈருன * திக்பாலர்களை இருதயமந்திரத்துடன் 4 தம் பெயர்களால் அருச்சித்து, 5 வர்த்தனியை முதலாவது எடுத்துக் கொண்டு, கும்பத்திற்கு முன்னுல் செல்லுகிறதாயும், இடைவிடாத நீர்ப்பெருக்கையுடையதாயும் இருக்கிற அந்த வர்த்தனியை வலமாகச் சுற்ற வேண்டும்.

38. மூலமந்திரத்தை உச்சரித்துக் கொண்டு "தத்தம் பாகங்களைக் காப்பாற்றுங்கள்" என்னும் சிவாக்ஞையை அந்த உலக பாலர்களுக்கு அறிவிக்கவேண்டும். பின்னர் யதாஸ்தானத்தில் சிவகும்பத்தை ஸ்தாபித்து, அதன் பின் வர்த்தனியையும் ஸ்தாபிக்க வேண்டும்.

39. பின்னர் சிவகும்பத்தில் 6 ஸ்திராஸன பூஜை செய்து 7 சுத்தி செய்தற்குரிய அத்துவாவை நியஸித்து, ஸாங்கமாகச் சிவபெருமானைப் பூசித்து, வர்த்தனியினிடத்திலும், அஸ்திரத்தை அருச்சிக்க வேண்டும்.

## அருச்சித்தற்குரிய மந்திரம்.

ஓம் ஹாம் அஸ்த்ராஸநாய ஹும் ப²ட் நம:, ஓம் ஹாம் அஸ்த்ரமூர்த்தயே ஹும் ப²ட் நம:, ஓம் ஶ்லூம் பஶும் ஹும் ப²ட் அஸ்த்ராய ஹும் ப²ட் நம:, ஓம் ஹாம் ஹ்ருதயாய ஹும் ப²ட் நம:, ஓம் ஶ்லூம் ஶிரஸே ஹும் ப²ட் நம:, ஓம் வம் ஶிகாயை ஹும் ப²ட் நம:, ஓம் ஶும் கவசாய ஹும் ப²ட் நம:, ஓம் ஹௌம் நேத்ரத்ரயாய ஹும் ப²ட் நம:, ஓம் ப²ட் அஸ்த்ராய ஹும் ப²ட் நம: ॥

---

1 மண்டபத்தின் உள்ளேயுள்ள கிழக்கு முதலிய திக்குக்களில்.

2 ஐராவதம் முதலிய வாஹனம்.

3 வஜ்ரம் முதலிய ஆயுதம்.

* கடத்தில் ஆவாஹனம் செய்யப்பெற்ற திக்பாலர்களை.

4 ஓம் ஹாம் இம் இந்த்ராய நம: என்பது முதலாக என்பது பொருள்.

5 ஆசாரியர் வர்த்தனியைப் பிறிதொருவரால் தூக்கிக்கொள்ளச் செய்து தான் சிவகும்பத்தை ஓம் நம: ஸர்வார்த்தகாய என்று படித்து, மூலமந்திரத்தை உச்சரித்துச் சுற்றிவர வேண்டும் என்பது கருத்து.

6 ஆதார சக்தி முதல் போகாங்கமீருன பூஜையைச் செய்து.

7 தீக்ஷையில் சுத்தி செய்தற்குரிய அத்துவாவை என்பது கருத்து.

40-41. கோடி சூரியனுக்குச் சமமான காந்தியையுடையதாயும், பிரளயகாலத்து மேகத்தின் சத்தத்தை ஒத்த சப்தத்தை உடையதாயும், ஸர்ப்பத்தைப் பூணூலாக அணிந்ததாயும், நான்கு முகங்களையும் ஒவ்வொரு முகத்தில் மூன்று கண்களையுமுடையதாயும், நான்குகைகளையுடையதாயும், பிரகாசிக்கும் கடைப்பற்களையுடையதாயும், பிரகாசிக்கிற புருவங்கள், மீசை, கேசம், இவற்றையுடையதாயும், சக்தி, முத்கரம், (இருப்புலக்கை) சூலம் கத்தி இவற்றைக் கைகளில் உடையதாயும், பாதிச்சந்திரனை சிரோபூஷணமாகவுடையதாயும், 1 பாசுபத அஸ்திரத்தைத் தியானிக்க.

42. 2 லிங்கமுத்திரை செய்துகொண்டு பகம் 3 லிங்கம் இவற்றின் சேர்க்கையைச் செய்யவேண்டும். போகத்தின் பொருட்டு பெருவிரலால் கும்பத்தைப் பரிசித்து, முஷ்டியால் வர்த்தனியைப் பரிசிக்கவேண்டும்.

43. மோக்ஷத்தின்பொருட்டோவெனின், முதலாவது முஷ்டியால் வர்த்தனியைப் பரிசிக்கவேண்டும். யாகத்தை இரக்ஷித்தற்காகக் கும்பத்தினிடத்து ஞானகட்கத்தைச் சமர்ப்பிக்கவேண்டும்.

44-45. மூலமந்திரத்தை நூற்றெட்டு முறை ஜபித்து கும்பத்தினிடத்து (அந்த ஜபத்தை) நிவேதனஞ் செய்ய வேண்டும்.

---

1 (அஸ்திரத்தைத் தியானிக்க) என்னும் இந்த வாக்கியம் மூலத்தில் இல்லை. அர்த்தத்தை அனுசரித்துச் சேர்க்கப்பட்டது. ஶக்திமுத்கர ஶூலாஸிஹஸ்தம் ஸம்ஹாரரூபிணம் என்ற சுலோகத்திற்குப் பின்னர் "ஸாங்கம் பாஶுபதம் ஶஸ்த்ரம் வர்த்தநீமத்யகம் யஜேத்" என்று ஸித்தாந்த சேகரத்தில் இருக்கின்றது. இதன் பொருள் "அங்கங்களோடு கூடினதாயும், வர்த்தனியின் நடுவை அடைந்ததாயும், இருக்கிற பாசுபதாஸ்திரத்தைப் பூஜிக்கவேண்டும்" என்பதாம். இந்தப் பாதி சுலோகமிருந்தால் அர்த்தம் முடிவுபெறும்.

2 ஓம் ஹௌம் ஹ்ரௌம் ஶிவஶக்திப்யாம் நம: என்று சொல்லிக்கொண்டு லிங்க முத்திரை செய்யவேண்டும்.

3 பகரூபியான உமாதேவியாருக்கும் லிங்கரூபியான சிவபெருமானுக்கும் சேர்க்கையைச் செய்ய வேண்டுமென்பது பொருள்.

அதன் பின், அந்த மூலமந்திரஜபத்தில் பத்தில் 1 ஒரு பங்கு ஜபித்து வர்த்தனியினிடத்தில் (அந்த ஜபத்தை) நிவேதனஞ் செய்ய வேண்டும். பிறகு "யஜ்ஞேஶ க்ருதயத்நேந ஸர்வஜ்ஞ ஶிவஶங்கர । ரக்ஷணீயம் ஜகந்நாத ஸர்வதா யாகமக்ஷயா ॥ இ-ள் "எல்லா யாகங்களிலும் சிரேஷ்டராயும், உலகங்களுக்கு நாதராயும் உள்ள ஓ பகவானே! செய்யப்பட்ட முயற்சியை உடையவரான உம்மால் இந்த யாகக் கிருஹமானது இரக்ஷிக்கத் தக்கது" இவ்வாறு இரக்ஷித்தலை அறிவிக்க வேண்டும்.

## மண்டலேசுவர பூஜை.

46-46½. பிரணவாஸனத்தில் வீற்றிருப்பவராயும், நான்கு கைகளை உடையவராயும் இருக்கிற விநாயகரை, 2 வாயுதிக்கில் பூஜித்து, சந்தனத்துடன் கூடிய நீரால் செய்யப்பெற்ற மண்டலத்தின் நடுவில் ஸ்தண்டிலேசுவரரை முன் கூறப்பெற்ற முறையாக விரிவாய்ப் பூஜிக்கவேண்டும்.

47. 3 உத்தரவுபெற்று, மந்திரங்களுக்குத் 4 திருப்தி செய்தற் பொருட்டு, அர்க்யபாத்திரத்துடன் குண்டத்தின் சமீபத்திற்குச் செல்லவேண்டும்.

48-49. விதிப்படி குண்டத்தின் அருகில் அமர்ந்து, இடது பக்கத்தில் அர்க்யம் சந்தனம் நெய் முதலியவற்றையும், வலது பக்கத்தில் சமித்து, தர்ப்பம், எள்ளு முதலியவற்றையும் வைத்துக்கொண்டு, குண்டம் அக்கினி ஸ்ருக் ஸ்ருவம் நெய் இவற்றை முன்போல் ஸம்ஸ்கரித்து, ஊர்த்வ முகத்திற்கு 5 முக்கியத்தன்மையைப் பாவிக்கவேண்டும். அக்கினியினுடைய இருதயத்தில் சிவபெருமானைப் பூஜிக்கவேண்டும்.

---

1 அஸ்திரமந்திரத்தை பத்திலொருபங்கு ஜபித்து என்பது பொருள்.

2 வாயுதிக்கில் உள்ள கும்பத்திற்குக் கிழக்குக் கோஷ்டத்தில் இருக்கும் கும்பத்தில் விநாயகரையும், ஈசான கும்பத்திற்கும் குபேர கும்பத்திற்கும் நடுவிலுள்ள கும்பத்தில் சப்த குருக்களையும் பூசித்து.

3 சிவபெருமானிடமிருந்து உத்தரவுபெற்று.

4 திருப்தியாவது ஹோமஞ் செய்தலாகும்.

5 அக்கினியின் எந்த முகத்தால் எந்தக் கர்மாவானது விரும்பப்பட்டதோ, அந்த முகத்தை ஊர்த்வ முகமாகப் பாவிக்கவேண்டும்.

50. தன்னுடைய சரீரம், சிவகும்பம், ஸ்தண்டிலேசர், அக்கினி, சிஷ்யன் ஆகிய இவர்களிடத்தில் சிருஷ்டிக் கிரமமாக முறையே சோதித்தற்குரிய அத்துவாவை நியாஸஞ்செய்க.

## விருப்பத்தின் வேற்றுமைக்குத்தக்கவாறுஓமம்செய்தல்

51. காம்ய விதியைக் கூறுமிடங்களில் அறியப்பட்ட அக்கினியின் முகங்கள், நாக்கள், ஜ்வாலைகள் ஆகிய இவற்றை விளக்குதலானது ஸந்தர்ப்பத்தைக் கருதிக் கூறப்படுகிறது.

52. தனக்கு விருப்பமான குண்டத்தின் அளவை முகமாகக் கற்பித்து, இருதயமந்திரத்தை உச்சரித்து, ஆகுதிகளால் மேற்கு முகத்தில் சிஷ்ய ஸம்ஸ்காரமில்லாத நித்திய ஹோமத்தைச் செய்யவேண்டும்.

53. வசியம், ஆகர்ஷணம், ஸௌபாக்கியம், புஷ்டி, பாக்கியம், 1 அதிரோகணம், சாந்தி, பாசங்களைச் சுத்தி செய்தல் ஆகிய விருப்பங்களில் வடக்கு முகத்தில் ஓமம் செய்தல் சிலாகிக்கப்படுகிறது.

54. குளிகை, மை, கத்தி, கால்பூச்சு, ஜயிப்பதில் விருப்பம் ஆகிய விருப்பங்களிலும், சிஷ்யனுடைய ஜனன நிமித்தமாகவும் கிழக்கு முகத்தில் ஓமம் செய்க.

55. மாரணம், உச்சாடனம், துவேஷம், ஸ்தம்பனம் ஆகிய காரியங்களில் தெற்கு முகத்தில் ஓமம் செய்யவேண்டும். பிராயச்சித்த ஹோமமும் அந்த முகத்திலேயே செய்யவேண்டும். முக்தியின் பொருட்டு ஈசான முகத்தில் ஓமம் செய்யவேண்டும்.

56. அக்கினிக்கு ஹிரண்யை, கனகை, இரக்தை, கிருஷ்ணை, சுப்ரபை, அதிரக்தை என்ற நாக்களும், ஏழாவதாக பகுரூபை என்ற நாவும் உண்டு.

57-57½. ஈசான திக்கு, கிழக்குத்திக்கு, அக்கினிதிக்கு, நிருருதி திக்கு, மேற்குத் திக்கு, வாயுதிக்கு ஆகிய இவற்றில் முறையே ஹிரண்யை முதலிய ஆறு நாக்கள் குறிப்பிடப்பட்டன. நடுவில் பகுரூபை என்னும் நாவானது தெற்கு வடக்காக இருக்கின்றது.

---

1 அதிரோகணம்- மேலும் மேலும் விருத்தியடைதல்.

58-59-59½. ஹிரண்யை என்னும் நா, உருக்கிய சுவர்ணத்தின் காந்தியை உடையதாகவும், கநகை வஜ்ரமணிக்குச்சமமான காந்தியையுடையதாகவும், 1 இரக்தை செம்மையான காந்தியையுடையதாகவும், கிருஷ்ணை நீலரத்தினத்தின் காந்தியையுடையதாகவும், சுப்ரபை நல்முத்தின் காந்தியையுடையதாகவும், அதிரக்தை பத்மராகக்கல்லின் காந்தியையுடையதாகவும், பகுரூபையானது சந்திரகாந்தக்கல், சரத்கால சந்திரன் இவற்றின் காந்திபோன்ற காந்தியையுடையதாகவும் இருக்கின்றன. இந்த நாக்களுக்கு முறையே விருப்பத்தின் வேற்றுமையால் பலமானது கூறப்படுகிறது.

60-61-61½. வசியம், ஆகர்ஷணம் ஆகிய விருப்பங்களில் ஹிரண்யை என்னும் நாவும், சத்துருவை ஸ்தம்பிக்கச்செய்வதில் கனகை என்னும் நாவும், துவேஷம் மோகம் ஆகிய விருப்பங்களில் ரக்தை என்னும் நாவும், மாரண (கொலை) த் தொழிலில் கிருஷ்ணை என்னும் நாவும், சாந்திகம் பௌஷ்டிகம் ஆகிய கர்மாக்களில் சுப்ரபை என்னும் நாவும், உச்சாடன கர்மாவில் சுரக்தை என்னும் நாவும் உரியன. பகுரூபை என்ற ஒரு நாவே எல்லா விருப்பங்களின் பலன்களையுமளிக்கிறதாக இருக்கின்றது.

62-63-63½. இஷ்டமான முகத்தில் அந்த நாக்களுக்கு முறையே ஏழு பீஜாக்கரங்கள் ஹோமத்திற்காகக் கூறப்படுகின்றன. அவையாவன:- ரேபம் இல்லாதவையாயும், ய என்னுமக்ஷரம் முதல் ஹ என்னுமக்ஷரமீருகவுள்ளனவாயும், ஊகாரம் ரேபம் இவற்றுடன் கூடியவையாயும், இந்து பிந்துக்களால் அலங்கரிக்கப்பட்டனவாயுமுள்ள 2 அக்கரங்கள் முறையே நாக்களின் பீஜாக்கரங்களாகும்.

64. சாந்திகம், பௌஷ்டிகம் ஆகிய கர்மாக்களில், பால் முதலிய மதுரமான திரவியங்களால் ஹோமஞ் செய்யவேண்டும்.

---

1 இரக்தை கிருஷ்ணை ஆகிய நாக்களுக்கு பிரதியில் நிறம் கூறப்படவில்லை. "ரக்தா ஸ்வர்ணஸமாபாஸா க்ருஷ்ணா நீலமணிப்ரபா:।" என்று அசிந்திய விசுவஸாதாக்யத்தில் சுலோகம் இருப்பதால் அதனை ஆதாரமாகக்கொண்டு பொருள் எழுதப்பட்டது.

2 ஓம் ய்ரூம், ஓம் ல்ரூம், ஓம் வ்ரூம், ஓம் ஶ்ரூம், ஓம் ஷ்ரூம், ஓம் ஸ்ரூம், ஓம் ஹ்ரூம் என்னும் ஏழு அக்கரங்கள்.

65-65½. ஆபிசார கர்மாவில், பிண்ணுக்கு, மாவு, சங்கு, தாடி, உப்பு, கருப்புக் கடுகு, மோர், உறைப்பெண்ணெய், முட்கள், கோணல்களான ஸமித்துக்கள், இவற்றைக்கொண்டு கோபத்துடன் மந்திரங்களைப் பிறருக்குக் கேட்கும்படி உச்சரித்து ஹோமஞ் செய்யவேண்டும்.

66-66½, பச்சைக் கற்பூரம், அகில், இவற்றை வித்யாதரனாய் இருக்கும் தன்மை பெறும்பொருட்டு ஹோமஞ் செய்யவேண்டும். அல்லது உத்தமனான ஸாதகன், நாககேஸரமென்னும் மரத்தின் புஷ்பங்களை ஹோமஞ் செய்யவேண்டும்.

67. கடம்பவிருக்ஷத்தின் மொட்டுக்களை ஹோமஞ் செய்தலால், யக்ஷிணியானது நிச்சயமாய் சித்திக்கிறது.

68. உச்சித்திலகமென்ற மரத்தின் பூக்கள், பலாசத்தின் பூக்கள், இவற்றை வசியம் ஆகர்ஷணம் இவை ஸித்திக்கும் பொருட்டு ஹோமஞ் செய்யவேண்டும். ராஜ்யத்தைப் பெறும்பொருட்டு வில்வத்தை ஹோமம் செய்க. காந்தியை அடையும் பொருட்டு பாடலம்பூ, (பாதிரிப்பூ) சண்பகம் இவற்றை ஹோமஞ் செய்யவேண்டும்.

69.69½. சக்ரவர்த்தித் தன்மையை அடையும்பொருட்டு, தாமரைப் புஷ்பங்களை ஹோமஞ் செய்யவேண்டும். ஐசுவர்யங்களின் பொருட்டு, தின்னக்கூடிய பண்டங்களையும், உண்ணக்கூடியவைகளையும், ஹோமஞ் செய்யவேண்டும். மனக்கவலை, நோய் இவை நீங்குதற்கு அறுகை ஓமம் செய்யவேண்டும். வித்துவானானவன் எல்லாச் [1] சத்துருக்களையும் வசமாக்குதற்கு, ப்ரியங்கு (ஞாழல் மரத்தின்) புஷ்பம், வாழைப்பூ இவற்றைஓமம் செய்யவேண்டும்.

70. பயங்கரமான சுரத்தைப்போக்குதற்கு அப்பொழுது நெய்யில் தோய்க்கப் பெற்ற மாவிலைகளை மிருத்யுஞ்ஜய மந்திரத்துடன் ஓமஞ் செய்யவேண்டும்.

---

1. ஸவ_ஜஸக்ஷ என்பதாகப் பாடத்தைக் கொண்டால் எல்லாப் பிராணிகளையும் என்று பொருள் கொள்ளவேண்டும்.

71. ப்லுத சுவரத்துடன்கூடிய மிருத்யுஞ்ஜய மந்திரம் எவ்வாறெனில், காலகஸ்ய ஜ்வரம் நாசய நாசய ஓம் ஜூம் ஸ꞉ வௌஷட் என்பதாம்.

72. மீன்களுடன்கூடிய ஜலத்தில் வருணனை அருச்சித்து வருணமந்திரத்தையேனும், வாமதேவ மந்திரத்தையேனும் உச்சரித்து எள்ளுகளை மழை பெய்தற்கு ஹோமஞ்செய்யவேண்டும்.

73. எல்லாத் திக்குக்களின் முடிவுகளையுடைய பூப்பிரதேசத்தை நனைத்த மேகங்களை, பாசுபதாஸ்திரத்தை உச்சரித்து திலஹோமஞ் செய்வதால் விரைவாக விரட்டவேண்டும். ஓம் ஶ்ரூம் ஶ்ரூம் வஶம் ஹூம் ஃபட் தேவாநாஶ்வாய ச்ருஷ்வாய ஹ்ரூம் ஃபட் 1

74. எல்லாக் கஷ்டங்களும் நீங்கும்பொருட்டு 2 ருத்ர சாந்திமந்திரத்தை உச்சரித்து, விதிப்படி எள்ளு முதலியவற்றால் ஹோமஞ் செய்யவேண்டும். இனி ப்ராக்ருத விஷயமானது கூறப்படுகிறது.

75. மூலமந்திரத்திற்கு நூற்றெட்டு ஹோமங்களாலும் அங்க மந்திரங்களுக்கு தசாம்சஹோமத்தாலும் தர்ப்பணஞ் செய்து, மூலமந்திரத்தை ப்லுதமாக உச்சரித்து, முன்போல் பூர்ணாகுதி கொடுக்கவேண்டும்.

76. அவ்வாறே சிஷ்யனுடைய பிரவேசத்திற்காக ஒவ்வொரு சிஷ்யனுக்கும் நூறு முறை ஹோமஞ் செய்யவேண்டும். நல்ல தேசம் நல்ல காலம் சித்திப்பதற்காக இருநூறு முறை ஹோமஞ் செய்யவேண்டும்.

77. கெட்ட சகுனங்கள் நீங்குதற்காகவும், நல்ல சகுனங்கள் ஸித்திப்பதற்காகவும், மூலமந்திரத்தை உச்சரித்து முன்போல் இருநூறு முறை ஹோமஞ் செய்யவேண்டும்.

78. மூலமந்திரம் முதல் அஸ்திரமந்திரமீறான மந்திரங்களுக்கு, ஸ்வாஹாந்தமான ஒவ்வொரு ஆகுதிகளால் ஒரு முறை தர்ப்பணத்தையும், சிகாபீஜாக்கரத்தால் ஸம்புடம் செய்யப்பெற்றவையாயும், ஹூம்ஃபட் என்பதை இறுதியாகவுடையனவாயுமுள்ள பீஜாக்கரங்களால் தீபனத்தையும் செய்யவேண்டும்.

---

1 மழையை நிறுத்துதற்கு ஜபிக்கவேண்டிய மந்திரம் இதுவாகும்.

2 காலோத்தரம் முதலிய ஆகமங்களில் ருத்ரசாந்தி மந்திரம் விரிவாகக் கூறப்பட்டிருக்கிறது.

தர்ப்பணத்தில் ஓம் ஹாம் 1 ஶிவாய ஸ்வாஹா என்பது முதலாகவும், தீபனத்தில் ஓம் 2 ஹூம் ஹௌம் ஹூம் ஶிவாய ஹும் ஃபட் என்பது முதலாகவுமுச்சரிக்கவேண்டும்.

## ஸ்தாலீபாக விதி.

79-79½. பின்னர் சிவதீர்த்தத்தால் கழுவப்பெற்றதாயும், கவசமந்திரத்தால் அவகுண்டனம் செய்யப் பெற்றதாயும், சந்தனம் முதலியவற்றால் பூசப்பெற்றதாயும் இருக்கிற ஸ்தாலியின் கழுத்தை கவசமந்திரம் அஸ்திர மந்திரங்களால் ஜபிக்கப் பெற்ற மூன்று நூல்களாலும், தர்ப்பங்களாலும், சரு (அன்னம்) சித்திக்கும்பொருட்டுக் கட்ட வேண்டும்.

---

1 ஓம் ஹாம் ஹௌம் ஶிவாய ஸ்வாஹா, ஓம் ஹைம் ஈஶாநமூர்த்தாய ஸ்வாஹா, ஓம் ஹேம் தத்புருஷவக்த்ராய ஸ்வாஹா, ஓம் ஹும் அகோரஹ்ருதயாய ஸ்வாஹா, ஓம் ஹிம் வாமதேவகுஹ்யாய ஸ்வாஹா, ஓம் ஹம் ஸத்யோஜாதமூர்த்தயே ஸ்வாஹா, ஓம் ஹாம் ஹ்ருதயாய ஸ்வாஹா, ஓம் ஹீம் ஶிரஸே ஸ்வாஹா, ஓம் ஹூம் ஶிகாயை ஸ்வாஹா, ஓம் ஹைம் கவசாய ஸ்வாஹா, ஓம் ஹௌம் நேத்ரத்ரயாய ஸ்வாஹா, ஓம் ஹ: அஸ்த்ராய ஸ்வாஹா என்பது தர்ப்பண மந்திரங்களின் முறை.

2 ஓம் ஹூம் ஹௌம் ஹூம் ஶிவாய ஹும் ஃபட்। ஓம் ஹூம் ஹைம் ஹூம்॥ ஈஶாநமூர்த்தாய ஹும் ஃபட்। ஓம் ஹூம் ஹேம் ஹூம் தத்புருஷவக்த்ராய ஹும் ஃபட்। ஓம் ஹூம் ஹும் ஹூம் அகோரஹ்ருதயாய ஹும் ஃபட்। ஓம் ஹூம் ஹிம் ஹூம் வாமதேவகுஹ்யாய ஹும் ஃபட்। ஓம் ஹூம் ஹம் ஹூம் ஸத்யோஜாதமூர்த்தயே ஹும் ஃபட்॥ ஓம் ஹூம் ஹாம் ஹூம் ஹ்ருதயாய ஹும் ஃபட்। ஓம் ஹூம் ஹீம் ஹூம் ஶிரஸே ஹும் ஃபட்। ஓம் ஹூம் ஹூம் ஹூம் ஶிகாயை ஹும் ஃபட்। ஓம் ஹூம் ஹைம் ஹூம் கவசாய ஹும் ஃபட்। ஓம் ஹூம் ஹௌம் ஹூம் நேத்ரத்ரயாய ஹும் ஃபட்। ஓம் ஹூம் ஹ: ஹூம் அஸ்த்ராய ஹும் ஃபட் என்பது தீபன மந்திரங்களின் முறை.

80-81, 1 தர்மம் முதலியவற்ருல் ஆஸன பூஜை செய்யப்பெற்ற 2 சுத்தமானதாயும், அஸ்திரமந்திரத்தால் 3 செய்யப்பெற்றதாயுமுள்ள மண்டலத்தில் வைக்கப்பட்டதாயும், அவயவத்துடன் கூடியதாயும், வஸ்திரத்தால் சுற்றப்பட்ட முகத்தை உடையதாயுமுள்ள ஸ்தாலியில், 4 அன்பு ரூபமான புஷ்பங்களாலும், மரஞ்செடி முதலியவற்றினின்றுமுண்டான புஷ்பங்களாலும், சிவபெருமானைப் பூஜிக்கவேண்டும்.

82-83. குண்டத்திற்குத் தெற்குத் திக்கில் வைக்கப்பட்டதாயும், மேற்கு முகமாயிருப்பதாயும், நிரீக்ஷணம் முதலிய ஸம்ஸ்காரங்களால் சுத்தஞ் செய்யப் பெற்றதாயும், நியாஸஞ் செய்யப்பெற்ற ஹுங்கார பீஜத்தை உடையதாயும், 5 தர்மம் அதர்மம் இவற்றைச் சரீரமாகவுடையதாயும், அஸ்திர மந்திரத்தால் ஜபிக்கப் பெற்றதாயும் உள்ள அடுப்பில் அஸ்திரமந்திரத்தால் ஜபிக்கப்பட்ட ஆவின் நெய்யால் சுத்தஞ் செய்யப்பட்ட ஸ்தாலியை ஏற்றவேண்டும்.

84. அஸ்திரமந்திரத்தால் சுத்தஞ் செய்யப்பெற்ற பசுவின்பால், சிவமந்திரத்தால் நூறுமுறை மந்திரிக்கப்பட்ட சியாமாகம் முதலிய தான்யங்களுள் யாதானுமொன்றின் அரிசி இவற்றை அந்த ஸ்தாலியில் போடவேண்டும். அது எவ்வாறெனில்,

85, ஒரு சிஷ்யனுக்கு, குவிக்கப்பெற்ற ஐந்து கை அளவான அரிசியை ஸ்தாலியில் போடவேண்டும். இரண்டு சிஷ்யர்கள்

---

1 𑌓𑌂 𑌹𑌾𑌂 𑌆𑌧𑌾𑌰𑌶𑌕𑍍𑌤𑌯𑍇 𑌨𑌮𑌃 || 𑌓𑌂 𑌹𑌾𑌂 𑌅𑌨𑌨𑍍𑌤𑌾𑌯 𑌨𑌮𑌃|| 𑌓𑌂 𑌹𑌾𑌂 𑌧𑌰𑍍𑌮𑌾𑌯 𑌨𑌮𑌃|| 𑌓𑌂 𑌹𑌾𑌂 𑌜𑍍𑌞𑌾𑌨𑌾𑌯 𑌨𑌮𑌃|| 𑌓𑌂 𑌹𑌾𑌂 𑌵𑍈𑌰𑌾𑌗𑍍𑌯𑌾𑌯 𑌨𑌮𑌃 || 𑌓𑌂 𑌹𑌾𑌂 𑌐𑌶𑍍𑌵𑌰𑍍𑌯𑌾𑌯 𑌨𑌮𑌃 || 𑌓𑌂 𑌹𑌾𑌂 𑌪𑌦𑍍𑌮𑌾𑌯 𑌨𑌮𑌃 என்று ஷடுத்தாஸன பூஜை செய்யப்பெற்ற என்பது பொருள்.

2 கோமயத்தால் மெழுகப் பெற்றதாயும் என்பது பொருள்.

3 அஸ்திரமந்திரத்தால் புரோக்ஷிக்கப்பட்டு அஸ்திரமந்திரத்தால் தர்ப்பங்கள் பரப்பப்பெற்றதாயுமுள்ள மண்டலத்தில் என்பது பொருள்.

4 கொல்லாமை, இந்திரிய நிக்ரகம் பொறுமை, தானம், ஞானம், தபசு, சத்தியம், அன்பு ஆகிய புஷ்பங்களாலும்.

5 தர்மம் அதர்மம் இவற்றின் ரூபங்களான வலது இடது கைகளாகிற அவயவத்தை உடையதாயுமென்பது பொருள்.

முதல் முன்றயாக ஒவ்வொரு குவிக்கப் பெற்ற கை அளவை அதிகமாகச் செய்யவேண்டும்.

86. அஸ்திரமந்திரத்தால் அகப்பைகொண்டு கிளறி, கவசமந்திரத்தால் மூடி, மூலமந்திரத்தை உச்சரித்துக் கிழக்கு முகமாக இருந்து சிவாக்கினியில் சருவைப் பாகஞ் செய்யவேண்டும்.

87. அந்த அடுப்பில் சரு பாகமான பின், நெய்யால் ஸ்ருவத்தை நிரப்பி, ஸம்ஹிதாமந்திரங்களை ஸ்வாஹாந்தமாக உச்சரித்து, 1 தப்தாபிகாரஞ் செய்யவேண்டும்.

88-89. அஸ்திர மந்திரத்தால் ஜபிக்கப் பெற்றதாயும், தர்ப்பங்களுடன் கூடியதாயுமுள்ள 2 மண்டலத்தில், ஸ்தாலியை இறக்கி, ப்ரணவத்தால் ஸ்தாலியில் உல்லேகத்தைச் செய்து ஹிருதய மந்திரத்தால் லேபனத்தைத், (துடைத்தலைச்) செய்யவேண்டும். "ஸுசீதோ பவ (நன்றாய்க் குளிர்ந்ததா கப்பவி) என்று (சருவை) வேண்டிக்கொண்டு, ஸம்ஹிதாமந்திரத்தை வௌஷடந்தமாக உச்சரித்து, ஒவ்வொரு முறை (சருவில்) சீதாபிகாரஞ் செய்யவேண்டும். (அபிகாரம்—நெய்யைச் சொரிதல்)

90. ஷடுத்தாஸன பூஜை செய்யப்பெற்ற குண்டத்திற்கு மேற்குத் திக்கிலுள்ள மண்டலத்தில் ஸ்தாலியை வைத்து, அவ்வாறே ஸம்ஹிதா மந்திரங்களால் ஸ்ருவத்தை அசைத்துக்கொண்டு (சருவுக்கு) 3 ஸம்பாதஹோமஞ் செய்யவேண்டும்.

---

1 அடுப்பிலிருந்து சருவை இறக்குதற்கு முன்னர் சருவை "ஸுஸ்வின்னோ பவ" (நன்றாய் பக்குவமாக இரு) என்று கூறி, ஸம்ஹிதாமந்திரத்தை உச்சரித்து, கொதிக்கும் ஹவிஸில் நெய்யைச் சொரிதல் தப்தாபிகாரமெனப்படும்.

2 முன்போல் சாணத்தால் மெழுகி ஷடுத்தாஸன பூஜை செய்யப்பெற்ற என்பது கருத்து.

3 ஸம்ஹிதா மந்திரங்களை உச்சரித்து ஸ்வா என்று அக்கினியில் ஹோமஞ்செய்து ஹா என்று உச்சரித்து, எஞ்சிய சிறிது நெய்யை, ஸ்ருவத்தை உதறி இவ்விடத்தில் ஸம்ஸ்கரிக்கப்படும் பொருளான சருவின் மேல் தெளித்தல் ஸம்பாத ஹோமமாகும்.

91. சருவை, வௌஷடை இறுதியிலுடைய ஸம்ஹிதா மந்திரத்தாலேயே ஒரு முறை அபிமந்திரித்து, தேநுமுத்திரையால் அமிருதீகரணஞ் செய்து, ஸ்தண்டிலேசுவருடைய சமீபத்திற்குக் 1 கொண்டு போகவேண்டும்.

92-92½. தனக்கும் சிஷ்யர்களுக்கும் சேர்த்து நெய்யுடன் கூடிய ஒருபாகமாகவும், சிவபெருமான், அக்கினி ஆகிய இவர்களுக்கு (நெய் தேன் இவற்றுடன் கூடிய) இரண்டு பாகங்களாகவும், ஆக அந்தச் சருவை மூன்று பாகங்களாகச் செய்யவேண்டும். தேன் நெய் இவற்றுடன்கூடிய இந்தப் பாகங்களை 2 லோகபாலர்களின் பொருட்டு ஹிருதய மந்திரத்தை நமோந்தமாக உச்சரித்து ஸமர்ப்பித்து, அதே மந்திரத்தால் ஆசமநீயத்தையும் ஸமர்ப்பிக்க வேண்டும்.

93. அஸ்திரமந்திரத்தை உச்சரித்து, 3 நூற்றெட்டுமுறை ஹோமஞ் செய்து, கிரமப்படி பூர்ணாகுதியைக்கொடுக்கவேண்டும்.

94. குண்டத்திற்குக் கிழக்கிலுள்ள மண்டலத்திலேனும், மண்டலேசுவரர் சிவகும்பம் இவற்றின் நடுவிலேனும், ருத்ரர், மாதிருக்கள், கணர்கள் முதலியவர்களுக்கு இருதயமந்திரத்தை உச்சரித்து அந்தர்ப்பலியைச் செய்யவேண்டும்.

---

1 "ஸித்தஶ்சரு:" (சரு பக்குவமாயிற்று) என்று சொல்லிக்கொண்டு மண்டலேசுவருக்கு அறிவிக்க வேண்டும் என்பது கருத்து. "தேநாஸ்த்ராஷ்டசதம் ஹுத்வா ஸாந்த்யர்த்தம் ஊநீஜம் நயேச்ச" என்ற அசிந்திய விசுவஸாதாக்ய வசனத்தைக்கவனித்தால் ஊநீஜ ஸாதிகம், என்று இரண்டு பதங்களாகப் பிரித்து சரு பக்குவமாகாதிருத்தல், அதிகமாகப் பக்குவமாதலாகிய தோஷங்கள் நீங்குவதற்காக அஸ்திரமந்திரத்தால் நூற்றெட்டு ஹோமங்கள் செய்தலாகிய சாந்தியைச் செய்யவேண்டுமென்னும் பொருள் கொள்ளவேண்டும்.

2 மண்டலம் கும்பம் சிவாக்கினி இவற்றில் எழுந்தருளிய சிவபெருமானுக்கு என்பது கருத்து.

3 பிராயச்சித்தத்திற்காக என்பது பொருள்.

95-96. சிவபெருமானைப் 1 பிரார்த்தித்து 2 உத்தரவு பெற்று, சிவாத்துவைத பாவனை செய்து, நான் ஸர்வக்ஞத் தன்மை முதலிய குணங்களுடன் கூடியவன்; எல்லா அத்துவாக்களுக்கும் மேல் இருப்பவன்; பெரிதான யாகங்களில் ஆசாரியஸ்தானத்தை வஹிப்பவன் எவனோ அவன் என்னுடைய அம்சமாவன்; நான் சிவன் என்னும் அகங்காரத்துடன் (பெருமையுடன்) யாக மண்டபத்தினின்றும் வெளியில் செல்ல வேண்டும்.

97-98-99. கிழக்கு நுனியாகப் பரப்பப்பெற்ற நல்ல தர்ப்பங்களை உடையதாயும், அஸ்திர மந்திரத்தாற் செய்யப்பட்ட மண்டலத்தை உடையதாயும் உள்ள பிரணவாஸனத்தில், ஸ்நானஞ் செய்யப் பெற்றவனையும், வெண்ணிறமுள்ள வஸ்திரம் உத்தரீயம் இவற்றைத் தரித்திருப்பவனையும் உள்ள சிஷ்யனை, முத்தியில் விருப்பமாயின் வடக்குமுகமாகவும், புத்தியில் (போகத்தில்) விருப்பமாயின் கிழக்கு முகமாகவும், நிமிர்ந்த சரீரமுடையவனாக இருக்கச் செய்து, 3 ஆசாரியர் கிழக்கு முகமாக இருந்து, முத்தியில் விருப்பமாயின் பாதம் முதல் சிரஸ் முடிவாகவும், புத்தியில் விருப்பமாயின் இதற்கு மாறாகவும், சிவசம்பந்தமான சோதியை வெளிப்படுத்துவதாயும், அனுக்ரகத்துடன் கூடியதாதாயுமுள்ள கண்ணால் சிஷ்யனைப் பார்க்கவேண்டும்.

---

1 பிரார்த்திக்கும் முறை வருமாறு- சிவபெருமானே! ஆசார்யராகிய பற்றுக்கோட்டைச் சார்ந்த உம்மாலேயே நான், "குற்றமற்ற சிஷ்யர்கள் உன்னால் சாஸ்திரப்படி அனுக்ரகிக்கத்தக்கவர்கள்" என்று உத்தரவு செய்யப்பெற்றேன். சிஷ்ய இலக்கணம் அமைந்த இந்தச் சிஷ்யர்கள் என் சமீபத்திற்குக் கொண்டு வரப்பட்டிருக்கின்றனர்: ஆகையால் என்னை அதிஷ்டித்த எந்த உன்னால், நான் இந்தச் சிஷ்யர்களை உம்முடைய சரணங்களை ஸ்மரிப்பதற்கு யோக்யதை உடையவர்களாகச் செய்வேனோ! அவ்வாறு தேவரீர் அனுக்ரகிக்க வேண்டும் என்பதாம்.

2 அப்படியே ஆகட்டுமென்று சிவபெருமானால் கூறப்பட்டதாகப் பாவித்து என்பது பொருள்.

3 சிஷ்யன் வடக்கு முகமாக இருக்கும்பொழுது ஆசிரியன் கிழக்கு முகமாகவும் சிஷ்யன்கிழக்குமுகமாக இருக்கும்பொழுதுஆசிரியன்வடக்கு முகமாகவும் இருந்து பார்க்க வேண்டுமென்று அகோரசிவாசாரியர் பத்ததியில் கூறப்பட்டிருக்கிறது.

100–100½. மந்திரத்துடன்கூடிய தீர்த்தஸ்நானம் சித்திப்பதற்கு, அஸ்திரமந்திரத்தை உச்சரித்து, தீர்த்தத்தால் புரோக்ஷித்து, பஸ்மஸ்நானத்தின் பொருட்டும், விக்னங்கள் சாந்தி அடையும்பொருட்டும், பாசரீக்கத்தின் பொருட்டும், பௌதிகனுயின் ஸிருஷ்டிக்ரமமாகவும், நைட்டிகனுயின் ஸம்ஹாரக்ரமமாகவும், (சிஷ்யனுடைய சிரசில்) அஸ்திரமந்திரத்தை உச்சரித்துத் திருநீற்றுல் தாடனஞ்செய்ய வேண்டும்.

101-102. ஸகளீகரணம் சித்திப்பதற்காக, சிஷ்யனை மீண்டும் அஸ்திரதீர்த்தத்தால் புரோக்ஷித்து,மார்ஜநத்தின் பொருட்டு தர்ப்பை நுனியால் அஸ்திரமந்திரத்தை உச்சரித்து நாபிக்கு மேலும், அகமர்ஷத்தின் பொருட்டுத் தர்ப்பங்களின் அடிகளால் 1 நாபிக்குக் கீழும் மூன்று முறை பரிசிக்கவேண்டும்.

103. பாசச் சேதத்திற்காக அஸ்திரமந்திரத்தை உச்சரித்து இருதயத்தையும் தொடவேண்டும். அதன் பின் சிஷ்யனுடைய சரீரத்தில் அங்கங்களுடன் கூடியவராயும் ஆஸனத்துடன் கூடியவராயுமுள்ள சிவபெருமானை நியாஸஞ் செய்யவேண்டும்.

104-105. புஷ்பம், (அஷ்டபுஷ்பம்) முதலியவற்றுல் பூஜிக்கப்பட்ட சிஷ்யனுடைய கண்களை, நேத்திர மந்திரத்தாலேனும் இருதயமந்திரத்தாலேனும், வெண்மையாயும் மெல்லியதாயுமுள்ள மந்திரிக்கப்பட்ட ஆடைகொண்டு 2 கட்டி, பிரதக்ஷிணமாகச் சிஷ்யனைச் சிவபெருமானுடைய வலது பக்கத்தில் கொண்டுபோய் ஷடுத்தாஸன பூஜை செய்து, ஜாதிக்குத் தக்கவாறு இருக்கச் செய்யவேண்டும்.

---

1 நைஷ்டிகனுக்கு முதலாவது நாபிக்குக் கீழும் பிறகு நாபிக்கு மேலும் பரிசிக்கவேண்டும்.

2 "ஆடைகொண்டு கட்டி சிஷ்யனுடைய இரண்டுகைகளிலும் முக்தியில் விருப்பமாயின் வெண்ணிறமான புஷ்பங்களையும், புக்தியில் விருப்பமாயின் செம்மை நிறமுள்ள புஷ்பங்களையும் கொடுக்க வேண்டும். புஷ்பங்கள் நிரம்பிய அஞ்சலியுடன் சிஷ்யன், ஆசாரியரது முன்னுல் பிரதக்ஷிணமாகச் செல்லவேண்டும்." இவ்வாறு அசிந்திய விசுவஸாதாக்யாகமத்தில் கூறப்பட்டிருக்கிறது.

106. ஸம்ஹார முத்திரை செய்துகொண்டு, சிஷ்யனுடைய ஆன்மாவை * உபஸம்ஹாரம் செய்து, 1 மூர்த்தி மந்திரத்தால் சிஷ்யனுடைய இருதயகமலத்தில் நிரோதனஞ்செய்து, 2 சுத்தம் செய்யப்பட்ட சிஷ்யனுடைய சரீரத்தில் ஸகளீகரணஞ் செய்து (மீண்டும்) சிஷ்யனை அருச்சிக்க வேண்டும்.

107. கிழக்கு நோக்கிய முகத்தை உடைய சிஷ்யனுடைய மஸ்தகத்தில் மூலமந்திரத்தை உச்சரித்து ருத்ரபதத்தை அளிக்கும் சிவஹஸ்தத்தைச் சாத்தவேண்டும்.

108. சிவபெருமானைச் சேவிப்பதற்கு முதன்மையாகிய உபாயமான சிவஹஸ்தமானது கொடுக்கப்பட்டவுடன், இருளை நீக்கி (கண்களை மூடிய வஸ்திரத்தை நீக்கி) சிவமந்திரத்தை உச்சரித்துச் சிவபெருமானிடத்தில் புஷ்பத்தைப்போடச் செய்ய வேண்டும்.

109. 3 அந்தப் புஷ்பம் விழும் இடத்திலுள்ள மந்திரத்தை ஆதியிலும் முறையே சிவன் தேவன் கணன் என்னும் பதங்களை இறுதியிலும் உடைய பெயரை ஆசாரியரானவர் பிராமணர் முதலாயினர்க்கு இடவேண்டும். தன்னிஷ்டப்படியும் பெயரிடலாம்.

---

* உபசம்ஹாரமாவது— சரீரமுற்றும் நிறைந்திருக்கிற ஆன்மாவை ஓரிடத்தில் நிலைக்கச் செய்தற்காகத் திரட்டுதல்.

1 ஓம் ஹாம் ஹம் ஹாம் [illegible] என்னும்மந்திரத்தால்

2 பூதசுத்தியால் சுத்தஞ்செய்யப்பட்ட என்பது கருத்து.

3 புஷ்பமானது மண்டலத்திலிருக்கும் சிவபெருமானுடைய ஈசான முகத்தில் விழுந்தால் பிராமணருக்குஈசானசிவன்என்றும், க்ஷத்திரியனுக்கு ஈசான தேவன் என்றும், வைசிய சூத்திரர்களுக்கு ஈசானகணன் என்றும் பெயரிடவேண்டும். தத்புருஷம் முதலிய முகங்களில் விழுந்தால், தத்புருஷ சிவன் முதலாகிய பெயர்களைப்பிராமணர் முதலாயினர்க்கிடவேண்டும். இருதயம் முதலியவற்றில் விழுந்தால், இருதய சிவன் முதலிய பெயர்களையிட வேண்டும். ஸ்திரீகளுக்கு சக்தியை ஈறாகவுள்ள பெயர்களை இடவேண்டும். அதாவது ஈசான முகத்தில் விழுந்தால், பிராமணஸ்திரீக்கு ஈசான சிவசக்தி என்றும், க்ஷத்திரியப் பெண்ணுக்கு ஈசான தேவசக்தி என்றும் இவ்வாறாகப் பெயர்களிடவேண்டும்.

110. கும்பம் வர்த்தனி இவற்றிற்கு நமஸ்காரஞ் செய் வித்து, குண்டத்தின் அருகில் தனக்கு வலது பக்கமாக ஆஸ னத்தில் முன்போல்வடக்குமுகமாக 1 உட்காரச்செய்யவேண்டும்.

111-112-113-114. 2 மந்திரிக்கப்பட்ட தர்ப்பத்தின் நுனி யை, சிஷ்யனுடைய வலது கையில் வைத்து, தர்ப்பத்தின் அடி யைத் தன்னுடைய 3 முழங்காலில் வைத்துக்கொண்டு, அல்லது தர்ப்பத்தின் அடியை சிஷ்யனுடைய கையில் கொடுத்து, தர்ப் பத்தின் நுனியைத் தன்னுடைய முழங்காலில் வைத்துக்கொள்ள லாமென்பதும் ஒரு பக்ஷம். தர்ப்பத்தின் வழியாக சுழுமுனை நாடியைச் சிஷ்யனுடைய தேகத்திலிருந்து வெளிக்கிளம்பினதாக வும், தன்னுடைய தேகத்தில் பிரவேசித்தது போலவும் தியா னிக்க வேண்டும். (பின்னர்) சிவமந்திரத்தை உச்சரித்து ரேச கஞ்செய்து, (அந்த சுழுமுனைநாடி) வெளிக்கிளம்பி சிஷ்யனு டைய இருதயத்தில் பூரகத்தினுல் பிரவேசித்து, (மீண்டும் ரேச கத்தினுல்) வெளியில் வந்து தன்னுடைய இருதயகமலத்தில் (பூரகத்தினுல்) பிரவேசித்ததுபோல் சிந்திக்க வேண்டும். இப் பேர்ப்பட்ட நாடீஸந்தானத்தை (நாடிகளின் சேர்க்கையை) சிவா க்கினியுடனும் செய்து, நாடீஸந்தானத்தின் ஸாந்நித்தியத்திற் காக, இருதய மந்திரத்தை உச்சரித்து மூன்று ஆகுதிகள் ஹோ மஞ்செய்யவேண்டும்.

115. சிவஹஸ்தம் ஸ்திரமாதற்பொருட்டு, மூலமந்திரத் தை உச்சரித்து நூறுமுறை ஹோமஞ் செய்யவேண்டும். இவ் வாறு ஸமய தீக்ஷை சித்தித்ததும் சிவபூஜைக் குரியனுகின்ருன்.

ஸமயதீக்ஷை முற்றிற்று.

ஆகச் சுலோகம் 742.

---

1 உட்காரச்செய்து "சிஷ்யனுடைய வலது காதில் மூலமந்திரத்தை உபதேசஞ் செய்து, இடது காதில் ஸதாசிவரையும், முகத்தில் எல்லாப்பா பங்களையும் போக்கும் மகேசுவரரையும், சுழுமுனுநாடியின் மத்தியில் மூல மந்திரத்தையும், இடது நாடியில் ஸதாசிவரையும், பிங்களையில் மகேசுவா ரையும், சிஷ்யனுடைய தேகத்தில் தியானிக்க வேண்டும்." இவ்வாறு அசிந்திய விசுவஸாதாக்கியத்தில் கூறப்பட்டிருக்கிறது.

2 மூலமந்திரத்தால். 3 முழங்கால் சந்தில்.

## விசேஷதீக்ஷாவிதி.

1. பின்னர், ஸம்ஸ்கார தீக்ஷை (விசேஷதீக்ஷை) யின் முறை கூறப்படுகிறது. அக்கினியில் எழுந்தருளிய சிவபெருமானுடைய இருதயத்தில் வாகீசுவரீ வாகீசுவரர்களை ஆவாஹநஞ் செய்யவேண்டும்.

2 சேர்ந்தவர்களான வாகீசுவரீ வாகீசுவரர்களை இருதயமந்திரத்தால்அருச்சித்து, ஸந்தர்ப்பணஞ்செய்து, (அக்கினியில் ஓமஞ் செய்து)ஸாந்நித்தியத்திற்காக அதேமந்திரத்தை உச்சரித்து அவ்விருவர்களுக்கும் (தனித்தனி) ஐந்து ஆகுதிகளைக் கொடுக்கவேண்டும்.

## ருத்ராம்சம் ஸித்திப்பதற்காக சிஷ்யாத்மாவை வாகீசுவரியின் கர்ப்பத்தில் வைக்குமுறை.

3. அஸ்திரமந்திரத்தால் ஜபிக்கப்பட்ட புஷ்பத்தால், 1 புத்ரகனை சிஷ்யனுடைய இருதயத்தில் தாடனஞ் செய்யவேண்டும். அந்தச் சிஷ்யனுடைய இருதயத்தில், பிரகாசிக்கிற நக்ஷத்திர வடிவான சைதன்யத்தைப் பாவிக்கவேண்டும்.

4. சிஷ்யனுடைய இருதயகமலத்தில் ஹுங்காரத்துடன் கூடிய ரேசகச் சேர்க்கையால் (ஆசிரியன்) பிரவேசித்து, ஸம்ஹாரமுத்திரை செய்துகொண்டு, சிஷ்யனுடைய சைதன்யத்தை இழுத்து, பூரகத்தினல் தன்னுடைய இருதயத்தில் வைக்கவேண்டும்.

5. பின்னர், உத்பவமுத்திரை செய்துகொண்டு, இருதயமந்திரங்களால் சம்புடம் செய்யப்பட்ட ஆத்ம மந்திரத்தை உச்சரித்து, ரேசகத்தினல் வாகீசுவரியின் யோனியில் சிஷ்யனுடைய சைதன்யத்தை வைக்கவேண்டும்.

---

1 பின்னல் வாகீசவரியின் கர்ப்பத்திலிருந்து உதித்து புத்ரனைப் பவிக்கப்போவதை உத்தேசித்து, முதலாவதே புத்ரகனென்னும் பொருளை விளக்கும் சிசும் என்னும் பதத்தை மூலத்தில் பிரயோகஞ் செய்திருக்கின்ருர்.

𑍐 𑌹𑌾𑌂 𑌹𑌂 𑌹𑌾𑌂 𑌆𑌤𑍍𑌮𑌨𑍇 𑌨𑌮𑌃 என்பது ஆத்ம மந்திரமாகும். (ஹாம் இருதய பீஜம். ஹம் ஆத்ம பீஜம்.)

## அக்கினியில் ஹோமஞ் செய்யவேண்டிய காலம்.

6. அக்கினியானது நன்ருக ஜ்வலிக்கும்போதும், புகையற்றிருக்கும்போதும், இஷ்டசித்தியின்பொருட்டு ஹோமஞ் செய்யவேண்டும். ஜ்வலிக்காமலும் புகையுடனும் அக்கினியிருக்கும்பொழுது ஹோமஞ் செய்பவன் ஸித்தியை அடையமாட்டான்.

7. பளபளப்பு, வலமான சுழல் இவற்றையுடையதாயும், நல்ல வாசனையுடையதாயுமுள்ள அக்கினி சிலாகிக்கப்படுகிறது. விபரீதமான பொறிகளையுடையதாயும், பூமியைத் தொடுகிறதாயுமுள்ள அக்கினி சிலாகிக்கப்படுகிறதில்லை.

## அக்கினியின் அடையாளங்களால் ஊஹிக்கப்படும் பாபங்களாவன.

8-9-10. சிஷ்யனல் செய்யப்பட்ட பாபத்தை அக்கினியினது அடையாளங்களால் அறிந்து கொள்ளவேண்டும். அக்கினியானது, அமேத்யத்தின் வாஸனையுடையதாயிருப்பின், சிஷ்யன் பிறருடைய பூமியை அபகரித்தவனுகவும், பிராமணனைக் கொன்றவனுகவும், ஆசாரியரது மனைவியைப் புணர்ந்தவனுகவும், கட்குடித்தவனுகவும், ஆசாரியரைக் கொன்றவனுகவும், பசுவைக் கொன்றவனுகவும், செய்நன்றி மறந்தவனுகவும், இருப்பவனுகக் கொள்ளவேண்டும். அக்கினியானது, கருமை நிறமுடையதாயும், பிணநாற்றமுடையதாயுமிருப்பின் கர்ப்பிணியைச் சங்கரித்தவனுகக் கொள்ளவேண்டும். சிஷ்யன் பெண்டிரைக் கொன்றிருப்பின், அக்கினியானது சுற்றுகிறதாயிருக்கும். சொர்ணத்தை அபகரித்தவனுக சிஷ்யனிருப்பின் அக்கினி நடுங்குகிறதாயிருக்கும். குழந்தையைக் கொன்றிருப்பின், அக்கினி வெடிக்கும். கர்ப்பத்தைச் சங்கரித்திருப்பின், அக்கினியானது காந்தியற்றதாகவிருக்கும்.

11. இவ்வாருன அடையாளங்களைக் கொண்டு, சிஷ்யனது பாபத்தைத்தெரிந்து, பாபபக்ஷண ஹோமத்தாலேனும், 1 நவாத்ம மந்திரத்தாலேனும், அந்தப்பாபத்தைப் பொசுக்கவேண்டும்.

---

1 𑍐 𑌹𑌸𑌕𑍍𑌷𑌮𑌲𑌵𑌰𑌯 𑌊𑌂 𑌨𑌵𑌾𑌤𑍍𑌮𑌨𑍇 𑌶𑌿𑌵𑌾𑌯 𑌨𑌮𑌃 என்பது நவாத்ம மந்திரம்.

12-13. 1 த்விஜத்தன்மையை உண்டுபண்ணுதற்காகவும், 2 உருத்திராம்சமாக்குதற் பொருட்டும், 3 உணவு 4 பீஜம், இவற்றின் சுத்தியின் பொருட்டும், கர்ப்பாதானம் பும்ஸவனம் ஸீமந்தம் ஜாதகர்மம் நாமகரணம் இவற்றின் பொருட்டும், மூலமந்திரத்தை உச்சரித்து ஐந்நூறுமுறை ஹோமஞ் செய்யவேண்டும் சௌளம் முதலியன ஸித்தித்தற்காக தசாம்சமாக ஹோமஞ் செய்க.

## கர்ப்பாதானம் முதலிய ஸம்ஸ்காரங்களின் பொருளாராய்ச்சி.

14. சிதிலமாசப் பவித்த பாசங்களையுடைய (பாசக்கட்டு நீங்கப் பெற்ற) சிஷ்யனது ஆத்மாவை, உருத்திரரது புத்திரனாகும் நிமித்தம் சத்தி கர்ப்பத்தில் சேர்த்தல் கர்ப்பாதானமெனக் கூறப்படுகிறது.

15. 5 ஸ்வாதந்திரியமான ஆத்மகுணத்தின் தோற்றமானது, இவ்விடத்தில் பும்ஸவனமென்று கொள்ளப்பட்டது. மாயை ஆன்மா இவற்றின் ஆராய்ச்சியால் உண்டாகும் ஞானம் சீமந்தமாகும்.

---

1 வைதிகமான த்விஜத்தன்மை சிஷ்யனுக்கு இருப்பினும், அது சரீரத்திற்கேயன்றி ஆன்மாவிற்கு ஆகாமையாலும், இந்த த்விஜத்தன்மை ஆன்மாவிற்குச் சித்திப்பதாலும், இந்த த்விஜத்தன்மை பிராமணருக்கும் ஆவசியகமென்று கண்டு கொள்க.

2 வாகீசுவரியின் கர்ப்பத்திற் சேர்த்தலுக்கு உரியனாதற்பொருட்டு என்பது.

3 விலக்கப்பட்ட அன்னத்தைப் புசித்ததனால் உண்டான தோஷம் நீங்குதற்காகச் சுத்தி செய்ய வேண்டுவது அவசியமாயிற்று.

4 சிஷ்யன் கர்ப்பத்தில் இருக்கும்பொழுது தாய் தந்தையரால் செய்யப்பட்ட கெட்ட காரியத்தால் உண்டான தோஷத்தைக் கொள்க.

5 நின்மலமான என்பது பொருள். மலத்தின் மறைப்பு இருக்கும் வரை ஆத்மகுணங்களுக்கு சுவாதந்திரியம் இல்லையாதலால் இவ்வாறு கொள்க.

16. சிவம் முதலிய சுத்தமாயும் ஸத்தாயுமுள்ள வஸ்துவை ஸ்வீகரித்தலே ஜனனமாகும். 1 சிவத்தன்மையால் அறிவித்தலே சிவத்தன்மைக் குரியவனுக்குப் 2 பெயராகும்.

## ஹோமஞ் செய்தபின் செய்ய வேண்டுவன.

17. பிரகாசிக்கிற நெருப்புப் பொறிக்குச் சமமான சிஷ்யனுடைய ஆத்மாவை, ஸம்ஹாரமுத்திரை செய்துகொண்டு எடுத்து, தன்னுடைய ஹிருதயகமலத்தில் வைக்கவேண்டும்.

18. பின்னர் கும்பகஞ் செய்து, மூலமந்திரத்தை உச்சரித்துக்கொண்டு இருதயத்தில் அந்தச் சிஷ்யனுடைய ஆத்மாவையும் சிவபெருமானையும் ஸமரஸமாகச் செய்யவேண்டும்.

19-20. ஆன்மாவை ரேசகம் செய்து முறையே பிரமன் முதலிய காரணேசுவரர்களைக் கடந்து சிவதத்துவம்வரைகொண்டுபோய், உத்பவமுத்திரை செய்துகொண்டு எடுத்து, இருதய மந்திரங்களால் ஸம்புடஞ் செய்யப்பட்ட ஆன்மமந்திரத்தை உச்சரித்து ரேசகஞ்செய்து, செய்யவேண்டியவற்றை அறிந்த ஆசாரி

---

1 அதாவது நீ சிவனுய் இருக்கிறுய் என்று சொல்லுவதால் என்பது கருத்து.

2 இன்னும் சில ஸம்ஸ்காரங்களுக்குஅசிர் திய விசுவஸாதாக்யாகமத்தில் சைவபரமாகப் பொருள்கள் விளக்கப்பட்டுள்ளன. அப்பொருள்கள் மூலத்தில் விடுபட்டிருக்கவேண்டும். அவையாவன:—

1 சிவத்தன்மையின் பிரவேசம் நிஷ்கிராமணம் என்னும் ஸம்ஸ்காரமாகக் கூறப்படுகிறது. பரமானந்தத்தை அனுபவிக்கும் தன்மை அன்னப்ராசனமாகக் கூறப்படுகிறது.

2 சிவபெருமானுடைய யாதொரு அனுக்ரஹத்தின் மேம்பாடு உண்டோ, அது சௌளம் எனப்படும். நிர்வாண தீக்ஷையால் உண்டாகும் ஞானமாகிற நூலுடன் உண்டாகும் சம்பந்தமே உபநயனமாகும்.

3 இந்திரியங்களின் வியாபாரத்தைத் தடுத்தல் விரதமெனப்படும். மறு பிறவியின் நீக்கம் கோதானமாகும்.

4 யாவற்றிலும் பற்றற்றிருத்தல் ஸ்நானமாகும். எண்ணிறந்த சத்திகளுடன் சேருதல் விவாஹமாகும். எண்ணிறந்த சக்திகளின் நீக்கம் வானப்ரஸ்தமாகும். தனிச் சிவமாக இருத்தல் ஸந்யாஸமாகும்.

யன் சிஷ்யனுடைய இருதயகமலத்தின் கர்ணிகையில் வைக்க வேண்டும்.

21. சிவபெருமான் அக்கினி இவர்களுக்கு அப்பொழுது உசிதமான பூஜையைச் சிஷ்யனைக்கொண்டு செய்வித்து, தனக்கு நமஸ்காரத்தையும் செய்வித்து, சைவாசாரங்களைக் கேட்கச் செய்யவேண்டும். அவையாவன:–

22. உலகத்திற்குக் கருத்தரான சிவபெருமானைத் தூஷிக்கக்கூடாது. அவரால் கூறப்பட்ட சாஸ்திரத்தை நிந்திக்கக் கூடாது. ஆசாரியர் ஸாதகர் இவர்களையும் நிந்திக்கக் கூடாது. லிங்கத்தின் நிழலைத் தாண்டக் கூடாது.

23. 1 நிர்மால்யத்தைப் புசிக்கக்கூடாது. தாண்டவுங்கூடாது. 2 சிவதீக்ஷைபெற்றவனை நிந்திக்கக் கூடாது. ஆயுள் வரை சிவபெருமான் அக்கினி ஆசாரியர் இவர்களுக்குப்பூஜை செய்யத்தக்கது.

24. 3 பாலர்கள், அறிவிலிகள், கிழவர், பெண்கள், அரசர், ரோகிகள், ஆகியவர்களுக்கு இந்தச் சைவ ஸமய ஒழுக்கங்களைச் சக்திக்குத்தக்கவாறு செய்யும்படி உபதேசிக்க வேண்டும். சத்தியுள்ளவனுக்குப் பூர்ணமான ஸமய ஒழுக்கங்களைச் செய்யும்படி உபதேசிக்க வேண்டும்.

## பிரமசரியாசிரமத்தை ஸ்வீகரிக்க விரும்புவோருக்குக் கொடுக்க வேண்டிய விரதாங்கங்கள்.

25-26. ஜடை, திருநீறு, தண்டம், கௌபீனம், சிகையிலேனும் ஜடையிலேனும் கட்டப்படும் உருத்ராக்ஷமணி ஆகிய விரதாங்கங்களை ஈசானம் முதலிய மந்திரங்களாலேனும், ஹிருதயம் முதலிய மந்திரங்களாலேனும் முறையே ஜபித்து, முன்போல்

1 இங்கே நிர்மாலியமென்றது சண்ட நிர்மாலியத்தை.

2 ந தத்³ராவிஶேக்ஷிதே என்ற பாடத்தைக் கொண்டால் "சிவதீக்ஷை பெற்றவனிடத்தில் வெளியிலெறியப் பெறும் நிர்மாலியத்தைக் கொடுக்கக் கூடாதென்னும் பொருளைக் கொள்ளவேண்டும்.

3. உபநயனம் மாத்திரஞ் செய்விக்கப்பெற்ற பதினறு வயதுக்குள் பட்ட பாலர்களை இவ்விடத்தில் கொள்ளவேண்டும்.

பாத்திரங்களில் ஏற்றி ஸ்வாஹா என்னும் பதத்தை இறுதியினுடைய ஸம்ஹிதாமந்திரங்களால் ஸம்பாதஹோமஞ் செய்யப்பட்டவையாகச் செய்து, ஸ்தண்டிலேசுவரருக்கு நிவேதனஞ் செய்யவேண்டும்.

27. இரக்ஷித்தற்காகச் சிறிது நேரம் சிவகும்பத்திற்குக் கீழே வைத்து, சிவபெருமானிடத்தினின்றும் உத்தரவைப் பெற்று, விரதத்தை உடைய சிஷ்யனுக்கு விரதாங்கங்களை ஆசாரியர் கொடுக்கவேண்டும்.

28. இவ்வாறு விசேஷமான ஸமயதீக்ஷை ஸித்தித்தவுடன் புத்ரகன் அக்கினிகாரியம், சிவாகமங்களை அறிதல் இவற்றிற்கு விசேஷயோக்கியதை உள்ளவனாக ஆகிறான்.

விசேஷ தீக்ஷை முற்றிற்று.

ஆகச் சுலோகம் 770.

---

## நிர்வாண தீக்ஷாவிதி.

1-2. பின்னர் நிர்வாண தீக்ஷையில் மூலமந்திரம் 1 முதலிய மந்திரங்களுக்குப் பாசத்தைப் பந்திப்பதில் சக்தி உண்டாதற்காகவும், பாசங்கட்குத் தாடனம் 2 முதலியன செய்தற்காகவும், ஒவ்வொரு நெய்யாகுதியாலேனும், ஒவ்வொரு மந்திரத்திற்கும் தனித்தனி மூன்று ஆகுதிகளாலேனும், பீஜாக்கரத்தை நடுவிலும், சிகாபீஜங்களை இருபக்கங்களிலும் ஹூம்பட் என்னும் பதத்தை இறுதியிலும், பிரணவத்தை முதலிலும் உடைய மந்திரத்தை உச்சரித்துத் தீபனஞ் செய்யவேண்டும்.

ஓம் ஹூம் ஹௌம் ஹூம் ஶிவாய ஹூம்ஃபட் என்பது தீபனஞ் செய்தற்குரிய மூலமந்திரம்.

ஓம் ஹூம் ஹாம் ஹூம் ஹ்ருதயாய ஹூம்ஃபட் என்பது தீப

---

1 முதலிய என்னும் பதத்தால், இருதயம், சிரசு, சிகை, கவசம், அஸ்திரம் ஆகிய மந்திரங்களைக் கொள்ளவேண்டும்.

2 முதலியன என்னும் பதத்தால் பாசத்தைக் கிரகித்தல், தீபனஞ் செய்தல், இவற்றைக் கொள்க.

னஞ் செய்தற்குரிய இருதய மந்திரம். இவ்வாறே சிரசு முத லிய மந்திரங்களையும் 1 காண்க.

3-4. எல்லா 2 க்ரூரகர்மாக்களிலும் இவ்வாறு தீபனஞ் செய்ய வேண்டும். சாந்திகம், பௌஷ்டிகம், வசியம் ஆகிய கர் மாக்களில் 3 வஷட் என்னும் பதத்தை இறுதியிலும் ஆதியிலும் உடைய மந்திரத்தால் ஹோமஞ் செய்யவேண்டும். திருப்தி செய் வித்தல் முதலிய எல்லாக்கர்மாக்களிலும் வஷட் வௌஷட் என் னுமிவற்றுடன் கூடியவையாயும், வகாரத்திற்கு மேல் இருப்ப வையாயும் உள்ள மந்திரங்களால் ஹோமஞ் செய்யவேண்டும்.

## பாசஸூத்ரம் கட்டுமுறை.

5-5½. பின்னர், தன்னுடைய வலது பக்கத்தில் இருக்கிற வனும், 4 மண்டலத்தில் அசைவற்றிருப்பவனும் இருக்கிற 5 சிஷ்யனைப் பூஜித்து, சுழுமுனநாடியாகப் பாவிக்கப்பட்ட நல்ல நூலை மூலமந்திரத்தை உச்சரித்து சிகையில் கட்டி, கால் பெரு விரல் முடிய தொங்கவிட வேண்டும்.

6-6½. முத்தியில் விருப்பமுள்ளவனுக்கு, கால் பெருவிரல் முதல் தொடங்கி சிகையின் நுனியில் நூலைக் கட்டவேண்டும். புருஷனுக்கு வலது பக்கத்திலும் ஸ்திரீகளுக்கு இடது பக்கத்தி லும் நூலைக் கட்டவேண்டும்.

---

1 ஸமயதீக்ஷா விதியில் 78-வது சுலோகத்தின் டிப்பணத்தில் தீப னத்திற்குரிய சிரசு முதலிய மந்திரங்களின் ப்ரயோகவிதி விரிவாக எழு தப்பட்டிருப்பதால் அவ்விடத்திற் காண்க.

2 பாசங்களைச் சேதித்தலால் க்ரூரகர்மாவெனப்பட்டது.

3 ஸோமசம்பு பத்ததியின் வியாக்கியானமான ஸ்பஷ்டபோதினியி லும், அசிந்திய விசுவஸாதாக்கியாகமத்திலும், வஷட் என்னும் பதம் காண ப்படுவதால் அவற்றை அனுசரித்து இங்கும் வௌஷடந்தாதிநா என் பதை வஷடந்தாதிநா என்பதாகத் திருத்தி மொழிபெயர்க்கப்பட்டது.

4 சாணத்தால் மெழுகப் பெற்ற சதுரச்ர மண்டலத்தில் என்பது கருத்து.

5 ஸம்ஹிதாமந்திரங்களை உச்சரித்து சந்தனம் முதலியவற்றால் சிஷ் யனுடைய சிரசில் அர்ச்சிக்க வேண்டுமென்பது கருத்து.

## நூலில் ஆன்மாவைச் சேர்த்தற்காக ஆதார பூதங்களான சத்தி முதலியவற்றை நியாஸஞ் செய்யும் முறை.

7-7½. சிஷ்யனுடைய சிரசில் 1 சத்தி மந்திரத்தால் பூஜிக்கப்பட்ட சத்தியை (க்ரியா சக்தியை) ஸம்ஹார முத்திரையால் எடுத்து, அதே மந்திரத்தால் நூலில் சேர்க்கவேண்டும்.

8. மூலமந்திரத்தை உச்சரித்து நாடிகளை எடுத்து, நூலில் நியாஸஞ் செய்து, இருதய மந்திரத்தால் 2 அருச்சிக்கவேண்டும்.

9. கவசமந்திரத்தால் அவகுண்டனஞ் செய்து, 3 அவற்றின் ஸாந்நித்யத்திற்காக இருதய மந்திரத்தை உச்சரித்து, மூன்று ஆகுதிகள் கொடுக்கவேண்டும். சத்தியின் ஸாந்நித்யத்திற்காகவும் இவ்வாறே ஆகுதிகள் கொடுக்கவேண்டும்.

ஓம் ஹாம் 4 8ஞுாய்வெந நம:, ஓம் ஹாம் வஷாய்வெந நம:, ஓம் ஹாம் வணுாய்வெந நம:, ஓம் ஹாம் ஹுவநாய்வெந நம:, ஓம் ஹாம் தஸூாய்வெந நம:, ஓம் ஹாம் கூஞாய்வெந நம:.

---

1 ஓம் ஹௌம் சக்த்யை நம: என்னும்மந்திரத்தாலென்பது கருத்து.

2 ஓம் ஹௌம் இடாயை நம:, ஓம் ஹௌம் பிங்களாயை நம:, ஓம் ஹௌம் ஸுஷும்நாயை நம: என்று அருச்சிக்கவேண்டும்.

3 நாடிகளின் என்பது கருத்து.

4 ஓம் ஹாம் தஸூாய்வெந நம:, ஓம் ஹாம் வஷாய்வெந நம: ஓம் ஹாம் வணுாய்வெந நம:, ஓம் ஹாம் ஹுவநாய்வெந நம:, ஓம் ஹாம் 8ஞுாய்வெந நம:, ஓம் ஹாம் கூஞாய்வெந நம:, என்று தான் ஸோமசம்பு பத்ததி மூலப்ரதிகளில் இருக்கிறது. இந்த முறையை அனுசரித்தே அசிந்திய விசுவஸாதாக்கியாகமமும் கூறுகிறது. ஆயினும் ஸோமசம்புபத்ததி வியாக்கியானமாகிய ஸ்பஷ்டபோதினியை அனுசரித்தும், அத்துவக்கிரமத்தை அனுசரித்தும் இவ்வாறு திருத்தப்பட்டன.

9½. இவ்வாறு ஆறு விதங்களான அத்வாக்களை நூலில் 1 நியாஸஞ் செய்து,

## நூலில் மலம் முதலியவற்றை நியாஸஞ் செய்தற்காக ஆதாரமான ஆத்மாவை நியாஸஞ் செய்தல்.

10. அஸ்திர மந்திரத்தால் ஜபிக்கப் பெற்ற ஜலத்தால் சிஷ்யனைப் புரோக்ஷித்து, சிஷ்யனுடைய இருதயத்தில் அஸ்திர மந்திரத்தை ஜபித்து புஷ்பத்தால் 2 தாடனஞ் செய்ய வேண்டும். (தாடனமாவது-அடித்தல்)

ஓம் ஹ: ஹூம் பட் என்பது அஸ்திரமந்திரம்.

11. ஹூங்காரத்தை உச்சரித்துக்கொண்டு ரேசகஞ்செய்து, சிஷ்யனுடைய இருதயத்தில் புகுந்து, ஹம்ஸபீஜத்தில் இருக்கும் சிஷ்யனுடைய சைதன்னியத்தை 3 ஓம் ஹ: ஹூம் பட் என்னும் அஸ்திரமந்திரத்தாற் பிரிக்கவேண்டும்.

12. சக்தி மந்திரத்தையும் ஓம் ஹாம் ஹம் ஹாம் ஸ்வாஹா என்னும் மந்திரத்தையுமுச்சரித்து, ஸம்ஹார முத்திரை செய்துகொண்டு, சிஷ்யனுடைய சைதன்யத்தை இழுத்து, நாடியாகப் பவித்த நூலிற் சேர்க்கவேண்டும்.

4 ஓம் ஹாம் ஹம் ஹாம் ஆத்மநே நம: என்பது ஆத்மமந்திரம்.

13. இந்த ஆன்மாவை நூல் முழுதும் வியாபித்திருப்பதாகப் பாவிக்கவேண்டும். கவசமந்திரத்தால் அவகுண்டனஞ் செய்யவேண்டும். நூலில் ஆன்மாவுக்கு ஸாந்நித்யம் உண்டா

---

1 நியாஸஞ்செய்து, அவகுண்டனஞ் செய்து, அத்துவாக்களின் ஸாந்நித்தியத்திற்காக ஆகுதிகளையும் கொடுத்து என்பது பொருள்.

2 தேகம் முழுதும் வியாபித்திருக்கும் ஆன்மாவை இருதயத்திற் சேர்த்தற்காகத் தாடனஞ் செய்ய வேண்டுமென்பது கருத்து.

3 ஓம் ஹாம் ஹம் ஹாம் ஹ: ஹூம் பட் என்று ஆத்ம மந்திரத்துடன் கூடவே அஸ்திர மந்திரம் க்ரியாக்ரமத்யோதிகையில் படிக்கப்பட்டிருக்கிறது.

4 நூலில் ஆன்மாவைச் சேர்க்கும் பொழுது இந்த ஆன்மமந்திரத்தை உச்சரிக்க வேண்டுமென்பது கருத்து.

தற்காக இருதயமந்திரத்தை உச்சரித்து மூன்று ஆகுதிகளைக் கொடுக்கவேண்டும்.

## 1 நூலில் இருக்கிற ஆன்மாவினிடத்தில் சாந்தியதீத கலையைச் சேர்க்கும் முறை.

14. வித்யாதேகத்தை நியாஸஞ்செய்து ஓம் ஹௌம் ஶாந்த்யதீதகலா வாஶாய நம: என்னும் மந்திரத்தை உச்சரித்து சாந்தியதீத கலையை அவலோகனஞ் செய்யவேண்டும். (அவலோகனம்-பார்த்தல்) அந்தச் சாந்தியதீத கலையில் மற்றத் தத்துவம் முதலியவற்றை அடங்கியவையாகப் பாவிக்க வேண்டும்.

15-16. வெண்மையான சாந்தியதீத கலையில் 2 இரண்டு தத்துவங்களையும், எட்டுப் புவனங்களையும், பதினாறு அக்கரங்களையும், ஒரு பதத்தையும், ஒரு மந்திரத்தையும், பீஜங்களையும், நாடிகளையும், இரண்டு வாயுக்களையும், இரண்டு இந்திரியங்களையும்,

---

1 நூலில் இருக்கிற ஆன்மாவினிடத்தில் சாந்தியதீத கலையைச் சேர்த்தற்கு முன்னர் மலம் முதலிய பாசங்களைச் சேர்க்கும் முறை ஸோமசம்பு பத்ததி வியாக்கியானத்திலும் க்ரியாக்ரமத்யோதிகையிலும் கூறப்பட்டிருக்கிறது. அதாவது — ஓம் ஹாம் ஹோக்ஷகாரணாய ஶிவாஶாய நம: என்று சொல்லிக்கொண்டு மலத்தை இருளுக்குச் சமமாகவும், ஓம் ஹாம் லௌகிகாதி கர்த்ருவாஶேஷஸவாஸநாவஶீகரணஹேதுகாரணேப்ய நம: என்று சொல்லிக்கொண்டு கன்மபாசத்தை வெண்ணிறமாகவும் கருநிறமாகவும், ஓம் ஹாம் ஶ்ரீயாவாஶாய ஶரீரேந்த்ரிய விஷயகாரணாய நம: என்று சொல்லிக்கொண்டு மாயாபாசத்தைப் பல நிறமுடையதாகவும், ஓம் ஹாம் வாஶாயிஷ்டாத்ரே ஶிவஶக்த்யை நம: என்று சொல்லிக்கொண்டு பாசங்களை அதிட்டிக்கும் சிவசக்தியை இருள் ரூபமாகவும் தியானித்து, சிஷ்யனுடைய தேகத்திலிருந்து மெடுத்து நூலில் இருக்கும் ஆன்மாவினிடத்தில் சேர்த்து அருச்சித்து அவகுண்டனம் ஸாந்நித்தியாகுதி இவற்றைச் செய்யவேண்டுமென்பதாம்.

2 இந்த சாந்தியதீதகலை முதலிய கலைகளில் அடங்கிய தத்துவம்புவனம் இவற்றின் முழுவிபரமும் இதே நிர்வாணதீக்ஷா ப்ரகரணத்தில் கலாசோதன ஸமயத்தில் மூலத்திலேயே கூறப்படுமாதலால் இங்கு விரிக்கப்படவில்லை.

ஒரு விஷயத்தையும், ஒரு குணத்தையும், காரணேசுவரரான 1ஸதாசிவரையும் அடங்கியவையாகப் பாவித்துச் (சிரசில்) தாடனஞ் செய்யவேண்டும். ஓம் ஹௌம் 2 ஹாம் ஶாந்த்யதீதகலாவாஶாய ஹூம் ஃபட் என்பது தாடனஞ் செய்யும்பொழுதுள்ள மந்திரமாகும்.

17. ஸம்ஹார முத்திரை செய்து, சாந்தியதீத கலையை எடுத்து, நூலின் சிரசில் வைக்கவேண்டும். அதனைப் 3 பூஜிக்கவேண்டும். நூலில் சாந்தியதீதகலை ஸாந்நித்தியமாகும் நிமித்தம் மூன்று ஆகுதிகளைக் கொடுக்கவேண்டும்.

## நூலில் இருக்கும் ஆன்மாவினிடத்தில் சாந்தி கலையைச் சேர்க்கும் முறை.

18-19. கருமை நிறமுள்ள சாந்திகலையின் நடுவில் 4 இரண்டு தத்துவங்களையும், பதினேழு புவனங்களையும், இரண்டு அக்கரங்களையும், பன்னிருபதங்களையும், இரண்டு மந்திரங்களையும், இரு பீஜங்கள், இருநாடிகள், இரண்டு வாயுக்கள், இரண்டு இந்திரியங்கள் இவற்றையும், ஒரு விஷயத்தையும், இரண்டு குணங்களையும், அவ்வாறே கமலத்தில் வீற்றிருக்கும் ஒரு காரணேசுவரரான 5 மகேசுவரரையும் அடங்கியவையாகப் பாவிக்கவேண்டும்.

---

1 வட்டமான மண்டலத்தையும், துர்யாதீதாவஸ்தையையும் என்றும் சேர்த்துக் கொள்ளவேண்டும்.

2 ஓம் ஹௌம் ஶாந்த்யதீதகலாயை ஹ: ஹூம் ஃபட் என்று க்ரியாக்ரமத்யோதிகையிலும், ஓம் ஹௌம் ஶாந்த்யதீதகலாவாஶாய ஹூம் ஃபட் என்று அசிந்திய விசுவஸாதாக்யாகமத்திலுமிருக்கின்றது.

3 ஓம் ஹௌம் ஶாந்த்யதீதகலாயை நம: என்று பூஜித்து அவகுண்டனஞ் செய்க.

4 ஓம் ஹைம் ஶாந்திகலாயை நம: என்று அவலோகனஞ் செய்து என்பதைச் சேர்த்துக் கொள்ளவேண்டும்.

5 துர்யாவஸ்தையையும், அறுகோணமண்டலத்தையும் என்பதையும் சேர்த்துக் கொள்க.

20. 1 தாடனஞ்செய்து 2 எடுத்து புருவ நடுவிலுள்ள நூலில் சேர்க்கவேண்டும். சாந்திகலைக்குரிய பீஜாக்கரத்துடன் கூடிய சாந்திகலா மந்திரத்தை உச்சரித்து ஸாந்நித்தியம் உண்டாவதற்காக மூன்று ஆகுதிகளைக் கொடுக்கவேண்டும்.

ஓம் ஹௌம் ஶாந்திகலாயை நம: என்பது பீஜாக்கரத்துடன் கூடிய சாந்திகலாமந்திரமாகும்.

## நூலில் இருக்கும் ஆன்மாவினிடத்தில் வித்யாகலையைச் சேர்க்கும் முறை.

21-22-23. 3 மிகச்செம்மை நிறமுள்ள வித்யாகலையில் ஏழு தத்துவங்களையும் 4 இருபத்தொரு பதங்களையும், ஆறு அக்கரங்களையும், ஒரு மந்திரத்தையும், இருபத்தைந்து புவனங்களையும், முக்குணங்களையும், ஒரு விஷயத்தையும், காரணேசுவரரான 5உருத்திரரையும், இரு பீஜங்கள், இரு நாடிகள், இருவாயுக்கள், இரு இந்திரியங்கள் இவற்றையும் அடங்கியவையாகப்பாவித்துத் 6 தாடனஞ் செய்து, 7 எடுத்து, இருதயத்திலுள்ள நூலில்

---

1 ஓம் ஹௌம் ஶாந்திகலாயை ஹூம் ஹும் பட் என்னும் மந்திரத்தை உச்சரித்து நெற்றியிலிருந்தும் கழுத்து முடிவாகவுள்ள இடத்தில் தாடனஞ் செய்து என்பது பொருள்.

2 பூரகத்தின் தொழிற்பாட்டால் ஸம்ஹாரமுத்திரை செய்து எடுத்து.

3 ஓம் ஹ்ரீம் வித்யாகலாயை நம: என்று உச்சரித்துப்பார்த்து என்பதைச் சேர்த்துக் கொள்ளவேண்டும்,

4 இந்த கலாஸம்யோஜன ப்ரகரணத்திலும் பின்னால் கூறப்படும் கலா சோதனப்ரகரணத்திலும், தத்துவபுவன வர்ணபத மந்திரங்களின்முற் பிற்பாடுமுற்றிலும் மாறுபட்டே கூறப்பட்டிருக்கின்றது. அசிந்திய விசுவஸாதாக்கியாகமத்திலும் இவ்வாறே இருக்கின்றது. ஆகையால் இம்முறையை அனுசரித்தே மொழிபெயர்க்கப்படுகிறது.

5 த்ரிகோண மண்டலத்தையும் ஸுஷுப்தி அவஸ்தையையும் என்பவற்றைச் சேர்த்துக் கொள்ளவேண்டும்.

6 ஓம் ஹ்ரீம் வித்யாகலாயை ஹூம் ஹும் பட் என்னும் மந்திரத்தை உச்சரித்து புஷ்பத்தால் கழுத்திலிருந்து நாபி முடிவாகவுள்ள இடத்தில் தாடனஞ் செய்யவேண்டுமென்பது பொருள்.

7 ஸம்ஹாரமுத்திரை செய்து பூரகஞ் செய்துகொண்டு எடுத்து என்பது கருத்து.

1சேர்த்து வித்யாகலைக்குரிய மந்திரத்தை உச்சரித்து 2 அருச்சிக்க வேண்டும். பின்னர் நூலில் வித்யாகலையின் ஸாந்நித்திய முண்டாதற்காக மூன்று ஆகுதிகளைக் கொடுக்கவேண்டும்.

ஓம் ஹாம் வித்யாகலாயை நமஃ என்பது வித்தியாகலைக் குரிய மந்திரமாகும்.

## நூலில் இருக்கும் ஆன்மாவினிடத்தில் பிரதிஷ்டா கலையைச் சேர்க்கும் முறை.

24-25-26. 3 வெண்மை நிறமுள்ள பிரதிஷ்டா கலையில் இருபத்துநான்கு தத்துவங்களையும், இருபத்தைந்து அக்கரங்களையும், இரண்டு பீஜங்களையும், இரண்டு நாடிகளையும், இரண்டு வாயுக்களையும், இரண்டு இந்திரியங்களையும், முப்பத்திரண்டு பதங்களையும், ஐம்பத்தாறு புவனங்களையும், நான்கு குணங்களையும், மூன்று மந்திரங்களையும், ஒரு விஷயத்தையும், காரணேசுவரரான 4 விஷ்ணுவையும் அடங்கியவையாகப் பாவித்துத் 5 தாடனம் முதலியன செய்து நாபியிலுள்ள நூலில் இருக்கும் ஆன்மாவினிடத்து ஸாந்நித்தியாகுதிகளையும் கொடுக்கவேண்டும்.

---

1 ஓம் ஹாம் வித்யாகலாயை நமஃ என்னும் மந்திரத்தை உச்சரித்து கழுத்திலுள்ள நூலிற் சேர்த்து என்பது கருத்து.

2 அருச்சித்துக் கவசமந்திரத்தால் அவகுண்டனஞ் செய்ய வேண்டுமென்பது பொருள்.

3 ஓம் ஹ்வீம் ப்ரதிஷ்டாகலாயை நமஃ என்று சொல்லிக்கொண்டு ப்ரதிஷ்டாகலையைப் பார்த்து என்பதைச் சேர்த்துக்கொள்க.

4 அர்த்த சந்திர மண்டலத்தையும், ஸ்வப்நாவஸ்தையையும் என்பதையுஞ் சேர்த்துக் கொள்ளவேண்டும்.

5 ஓம் ஹ்வீம் ப்ரதிஷ்டாகலாயைஹூம் ஹூம் ப்ஹட் என்னும் மந்திரத்தை உச்சரித்து நாபி முதல் முழங்கால் வரையுள்ள இடத்தில் புஷ்பங் கொண்டு தாடனஞ் செய்ய வேண்டுமென்பது பொருள். தாடனம் முதலியன என்பதிலுள்ள முதலிய என்னும் பதத்தால், முன்போல் பூரகஞ் செய்து, ஸம்ஹார முத்ரையால் எடுத்தல், ஓம் ஹ்வீம் ப்ரதிஷ்டாகலாயை நமஃ என்று சொல்லிக்கொண்டு நாபியிலுள்ள நூலிற் சேர்த்தல், அருச்சித்தல், கவசமந்திரத்தால் அவகுண்டனஞ் செய்தல் இவற்றைக்கொள்ள வேண்டும்.

ஓம் ஹ்ரீம் ப்ரதிஷ்டாகலாயை நம: என்பது ப்ரதிஷ்டா கலைக்குரிய மந்திரமாகும்.

## நூலில் இருக்கும் ஆன்மாவினிடத்தில் நிவிருத்தி கலையைச் சேர்க்கும் முறை.

27-28-29. 1 பொன்னிறமுள்ள நிவிருத்திகலையில் நூற்றெட்டுப் புவனங்களையும், இருபத்தெட்டுப் பதங்களையும், இரண்டு பீஜங்களையும், இரண்டு நாடிகளையும், இரண்டு வாயுக்களையும், இரண்டு இந்திரியங்களையும், ஒரு அக்கரத்தையும், ஒரு தத்துவத்தையும், ஒரு விஷயத்தையும், ஐந்து குணங்களையும், தாமரையில் வீற்றிருக்கும் காரணேசுவரரான பிரமனையும், 2 நான்கு மந்திரங்களையும் அடங்கியவையாகப் பாவித்துத் 3 தாடனஞ்செய்யவேண்டும். நிவிருத்தி கலையை 4 எடுத்து கால் ஈருகவுள்ள நூலில் ந்யாஸஞ் செய்து 5 பூஜிக்கவேண்டும்.

ஓம் ஹாம் நிவ்ருத்திகலாயை நம: என்பது நிவிருத்தி கலையைப் பூஜித்தற்குரிய மந்திரமாகும்.

30. ஸாந்நித்யத்திற்காக அக்கினியில் மூன்று ஆகுதிகளைக் கொடுக்க வேண்டும். இவ்வாறு சிஷ்யனுடைய சரீரத்திலிருந்து கலைகளை எடுத்து நூலிற் சேர்க்கவேண்டும்.

---

1 ஓம் ஹாம் நிவ்ருத்திகலாயை நம: என்று சொல்லிக் கொண்டு நிவிருத்தி கலையைப் பார்த்து என்பதைச் சேர்த்துக் கொள்ள வேண்டும்.

2 நாற்கோண வடிவாயும் வஜ்ரத்தை அடையாளமாகவுடையதாயுமுள்ள மண்டலத்தையும் ஜாக்கிரதவஸ்தையையும் என்பதையுஞ் சேர்க்க வேண்டும்.

3 ஓம் ஹாம் நிவ்ருத்திகலாயை ஹூம் பட் என்னும் மந்திரத்தை உச்சரித்து முழங்காலுக்குக் கீழ் புஷ்பத்தால் தாடனஞ் செய்ய வேண்டும் என்பது பொருள்.

4 பூரகஞ் செய்து ஸம்ஹார முத்ரையால் எடுத்து என்பது கருத்து.

5 பூஜித்து அவகுண்டனஞ்செய்ய வேண்டும் என்பது பொருள்.

## 1 ஸபீஜ தீக்ஷையில் பாவனையில் வேற்றுமை.

31-32. ஸபீஜதீக்ஷையில் ஸமயாநுஷ்டான ரூபமான பாசம், அனுபவிக்கப்படும் சரீரத்தை உண்டு பண்ணுகிற தர்மம், மந்திரங்களின் ஸித்தி ரூபமான பலன், யாகம் செய்தல், தடாகம் முதலியன நிர்மாணஞ் செய்தலாகிய தர்மம் ஆகிய இவற்றினும் வேறான சைதன்யத்தை மறைக்கும் சூக்குமமான பந்திக்கும் 2 கர்மாவை கலைகளின் உள்ளே 3 பாவிக்கவேண்டும்.

33. 4 இதே முறையால் ஈண்டு தர்ப்பணம் தீபனம் இவற்றைச் செய்யவேண்டும். தத்தம் கலைக்குரிய மந்திரத்தை உச்சரித்து, மும்மூன்று ஆகுதிகளால் தீபனஞ் செய்ய வேண்டும். அவை வருமாறு.— ௐ ஹௌம் ஶாந்த்யதீதகலாவாஶாய ஸ்வாஹா என்பது முதலியன தர்ப்பணத்திற்குரிய மந்திரங்கள். ௐ ஹூம் ஹௌம் ஹூம் ஶாந்த்யதீதகலாவாஶாய ஹூம் ஃபட் என்பது முதலிய தீபனத்திற்குரிய மந்திரங்கள்.

## 5 கிரந்தி கற்பிக்கும் முறை.

34. நூலின் இவ்வளவு தூரம் வரை இன்னகலை வியாபித்திருக்கின்றது என்பது தெரியும் பொருட்டு, அந்தப்பாசஸூத்

---

1 ஸமயாசாரத்துடன் கூடியதாயும், ஸாதகன் ஆசாரியன் இவர்களுக்கு விஷயமாயுமுள்ள ஸபீஜ நிர்வாண தீக்ஷையில் என்பது பொருள். ஸபீஜ தீக்ஷையில் ஸமயாசார பாசங்கள், தேகத்தை உண்டு பண்ணும் கர்மங்கள் இவற்றினும், ஸாதக தீக்ஷையில் மந்திரஸித்தியின் பலனினும், லோகதர்மிணீ தீக்ஷையில் யாகஞ் செய்தல் முதலிய தர்மங்களினும் வேறுவேறான பந்தத்தைக் கலைகளுக்குள்ளிருப்பதாகப் பாவிக்க வேண்டுமென ஸ்பஷ்டபோதினியில் பொருள் விளக்கப் பெற்றிருக்கின்றது.

2 ஸஞ்சித கர்மாவை என்பது கருத்து.

3 சமயானுஷ்டான ரூபமான பாசம் முதலிய குறிக்கப்பட்ட சில கன்மங்களை மாத்திரம் தீக்ஷை செய்யப்பெறும் சிஷ்யனுடைய தேகத்தில் இருப்பனவாகப் பாவித்து, பிறசன்மங்களைப் பாசசூத்திரத்தில் அடங்கியவையாகப் பாவிக்க வேண்டும் என்பது கருத்து.

4 முதலாவது சாந்தியதீதகலைக்குத் தர்ப்பணம் தீபனம் இவற்றைச் செய்து, பின் சாந்திகலைக்குச் செய்ய வேண்டும். அதன் பின் வித்யா கலைக்கு என்னும் இதே முறையால் என்பது பொருள்.

5 கிரந்தியாவது முடிச்சு.

திரத்தை ஐந்து கலைகளின் 1 ஸ்தானங்களில், குங்குமம் 2 முத லியவற்றால் பூசி, அந்த நூலில் அங்கங்களுடன் கூடிய சிவபெரு மானைப் பூஜிக்கவேண்டும்.

35. ஹூம் ஃபட் என்னும் பதத்தை இறுதியிலுடைய கலாமந்திரங்களை உச்சரித்து, முறையே பாசங்களைப் பேதித்து, கலாமந்திரங்களை நமோந்தமாகவுச்சரித்து, உள்ளே சென்று, கலைகளைக் கிரகித்தல் பந்தித்தல் இவற்றைச் செய்ய வேண்டும். ஓம் ஹூம் ஹாம் ஹௌம் ஹாம் ஹூம் ஸாக்ஷ்ருதீக்ஷாம் ம்ரு ஹாணி வயநாஷிவ என்னும் இது 3 முதலிய மந்திரங்களால், கலைகளைக் கிரகித்தல் கட்டுப்படுத்தல் இவற்றைச் செய்ய வேண்டும்.

36. பாசம் முதலியவற்றை வசப்படுத்தல், கிரகித்தலா கும். புருஷனைக் குறித்து ஸமஸ்தமான தொழிற்பாடுகள் தடைப் படுதல் பந்தித்தலாகும்.

37. பின்னர், சிஷ்யனை உட்காரச் செய்து, அந்தப் பாச ஸூத்ரத்தைச் சிஷ்யனுடைய தோளில் வைக்கவேண்டும். மறதி முதலிய தோஷங்களாலுண்டான பாபங்கள் நசித்தற்காக மூலமந்திரத்தால் நூறுமுறை ஹோமஞ் செய்யவேண்டும்.

## பாசஸூத்திரத்தை இரக்ஷிக்கும் முறை

38. புருஷனுக்கு ஸம்புடமாயுள்ள மடக்குப் பாத்திரத்தி லும், ஸ்திரீகளுக்கு ப்ரணீதா பாத்திரத்தின் மத்தியிலும் இரு தய மந்திரம் அஸ்திர மந்திரம் இவற்றால் ஸம்புடமாகச்செய்யப் பெற்ற பாச ஸூத்ரத்தை வைத்து, இருதய மந்திரத்தால் அருச்சிக்க வேண்டும்.

---

1 பிரமரந்திரம், புருவநடு, கழுத்து, நாபி, முழங்கால் ஆகிய இடங் களில் என்பது கருத்து,

2 முதலிய என்னும் பதத்தால் கோரோசனையைக் கொள்ள வேண் டும்.

3 முதலிய என்னும் பதத்தால் ஓம் ஹூம் ஹாம் ஹௌம் ஹாம் ஹூம் ஸாக்ஷிம் ம்ருஹாணி வயநாஷிவ என்ற இது போன்ற மற்றக் கலைகளின் மந்திரங்களைக் கொள்ள வேண்டும்.

39. அங்கங்களுடன் கூடிய சிவமந்திரத்தால் ஸம்பாத ஹோமம் செய்து, அதனால் நூலைச் சுத்தி செய்து, சிவகும்பத்தின் கீழ் அந்தப் பாசஸூத்ரத்தை வைத்திருக்கும் பாத்திரத்தை வைக்கவேண்டும். பின்னர், சிவகும்பத்தில் எழுந்தருளியுள்ள சிவபெருமானிடம் 1 இரக்ஷையைத் தெரிவிக்க வேண்டும்.

40. சிஷ்யனுடைய கையில் புஷ்பத்தைக் கொடுத்து, கலசம் 2 முதலியவற்றைப் பூஜித்து வணங்கச் செய்து, யாகசாலையின் உள்ளிருந்து வெளியிற் செல்லவேண்டும்.

## பஞ்சகவ்வியம் அருந்தும் முறை.

41. மூன்று மண்டலங்கள் செய்து முதலாவது மண்டலத்தில் முத்தியில் விருப்பமாயின் வடக்கு முகமாகவும், புத்தியில் விருப்பமாயின் கிழக்கு முகமாகவும், சிஷ்யர்களை உட்காரச் செய்ய வேண்டும்.

42. தர்ப்பத்துடன் கூடிய கையுடன், மூன்று சுளுகம் பஞ்சகவ்வியத்தை, இடையிடையே ஆசமனத்துடன் உட்கொள்ளச்செய்யவேண்டும்.

## சரு ப்ராசன முறை.

43-44. இரண்டாவது மண்டலத்தில் மூன்று கவளங்களேனும், எட்டுக் கவளங்களேனுமளவுள்ள சருவை, முத்தியின் பொருட்டுப் புரச இலைகளாலாகிய பாத்திரத்திலும், புத்தியின் பொருட்டு அரசிலைகளாலாகிய பாத்திரத்திலும் கொடுத்து, பற்களின் பரிசம் நேராதபடி இருதய மந்திரத்தால் புசிக்கச் செய்ய வேண்டும். பரிசுத்தமான தீர்த்தத்தால் ஆசமனஞ் செய்விக்க வேண்டும்.

---

1 கலசத்தில் எழுந்தருளிய ஓ சிவபெருமானே ! பாசஸூத்ரம் வைக்கப் பெற்ற இந்தப் பாத்திரத்தை இரக்ஷித்துத் தரவேண்டும் என்று தெரிவிக்க வேண்டுமென்பது கருத்து.

2 முதலிய என்னும் பதத்தால் மண்டலத்தில் எழுந்தருளிய சிவபெருமான், அக்கினியில் எழுந்தருளிய சிவபெருமான், இவர்களைக் கொள்ள வேண்டும்.

## தந்த காஷ்டத்தை ஸேவிக்குமுறை.

45. மூன்ருவது மண்டலத்தில், இருதய மந்திரத்தை உச்சரித்து தந்தகாஷ்டத்தைக் கொடுத்து, சிஷ்யனுடைய தந்தங்களின் நுனிகளால் கடிக்கப்பட்டதாயும், பின்னர் நீரால் கழுவப் பெற்றதாயும் உள்ள அதனை உயரே நோக்கிய முகமாகப் பூமியில் விழச் செய்யவேண்டும். கீழே விழுந்த அந்தத் தந்த காஷ்டத்தை உயரே எடுக்கவேண்டும். (உற்று நோக்க வேண்டுமென்பது கருத்து.)

46. கிழக்கு மேற்கு வடக்கு ஈசானம் ஆகிய திக்குக்களை நோக்கியமுகமாகவும், உயரே நோக்கிய முகமாகவும் விழுதல் எல்லாச் சிஷ்யர்களுக்கும் நன்று. மற்றத் திக்குக்களை நோக்கி விழுதல் நன்றன்று.

47. 1 அமங்களத்தைத் தடுக்கும்பொருட்டு நூறு முறை அஸ்திரமந்திரத்தை உச்சரித்து ஹோமஞ் செய்யவேண்டும். ந்யூனம்(குறைதல்)முதலிய தோஷங்கள் நீங்குதற்காக மூல மந்திரத்தையுச்சரித்து நூற்றெட்டு முறை ஹோமஞ்செய்யவேண்டும்.

## தந்த காஷ்டத்தை ஸேவித்த பின்னர்ச் செய்ய வேண்டுவன.

48-49. மண்டலேசுவரரின் பொருட்டு எல்லாக் கர்மாக்களையும் அர்ப்பணஞ் செய்து, இவருக்குப் 2 பூஜையைச் செய்து, விஸர்ஜனம் செய்து, சண்டேசுவர பூஜையையுஞ் செய்து, நிர்மாலியத்தை நீக்கி, மூன்று சாண உருண்டைகளால் மூலமந்திரத்தை உச்சரித்துப் பூமியைச் சுத்தி செய்து, எஞ்சியுள்ள சருவை அக்கினியில் ஹோமஞ் செய்யவேண்டும்.

50-51. 3 கலசம், லோகபாலர்கள், இவர்களைப் பூஜித்து, 4 நிரோதனஞ் செய்து, கணங்களையும், 5 இரக்ஷிக்கப்படின் அக்

---

1 தந்த காஷ்டம் குறிக்கப்பட்ட திக்குக்களினும் வேறான திக்குக்களில் விழுந்தால் சேரும் அமங்களத்தை என்பது கருத்து.

2 அஷ்டபுஷ்பத்தால் என்பது கருத்து.

3 கடத்திலிருக்கும் சிவன்.

4 நிரோதார்கியம் கொடுத்தலால் தடுத்து என்பது பொருள்.

5 அக்கினியானது வெளியில் ரக்ஷிக்கப்படுமாயின் என்பது பொருள்

கினியையும், விஸர்ஜனம் செய்யவேண்டும். யாகமண்டபத்திற்கு வெளியில் லோகபாலர்களுக்கு பஹிர்ப் பலியையும் சுருக்கமாகக் கொடுத்து, திருநீற்றாலேனும் பரிசுத்தமான ஜலத்தாலேனும் ஸ்நானஞ் செய்து யாகசாலைக்குள் பிரவேசிக்க வேண்டும்.

## சிஷ்யனுடைய நித்திரையின் முறை.

52-53. தர்ப்பங்களாலாகிய படுக்கையில், கிழக்கே சிரஸை வைத்திருப்பவர்களாயும், இரக்ஷை செய்யப் பெற்றவர்களாயும் உள்ள கிரஹஸ்தர்களான சிஷ்யர்களையும், நல்ல திருநீற்றாலாகிய படுக்கையில், இருதய மந்திரத்தை உச்சரித்துத் தெற்கே சிரஸை வைத்துக்கொண்டிருப்பவர்களான முமுக்ஷுக்களாயுள்ள சிஷ்யர்களையும், சிகாமந்திரத்தால் கட்டப்பட்ட (இரக்ஷிக்கப் பெற்ற) சிகைகளை உடையவர்களாகவும், 1 அஸ்திரமந்திரத்தால் இரக்ஷை செய்யப் பெற்றவர்களாகவும் செய்து, ஸ்வப்ன தேவதையின் மந்திரத்தை உபதேசித்து, சிஷ்யர்களை நித்திரை செய்யும்படி செய்யவேண்டும். அதன் பின் 2 வெளியிற் செல்லவேண்டும்.

54-55. ஸ்வப்ன தேவதையின் மந்திரமாவது:— ஓம் ஹிலி ஹிலி ஶூலபாணயே ஸ்வாஹா। ஓம் நமஸ்ஸம்பவே த்ரிணேத்ராய பிங்களாய மஹாத்மநே ॥ வாமாய விஶ்வரூபாய ஸ்வப்நாதிபதயே நமஃ। ஸ்வப்நே கதய மே தத்வம் ஸர்வகார்யேஷ்வஶேஷத: ॥ க்ரியாஸித்திம் விதாஸ்யாமி த்வத்ப்ரஸாதாந் மஹேஶ்வர ॥ இதன் பொருள்,— ஓ சம்புவே! உமக்கு நமஸ்காரம். முக்கண்ணராயும், பொன்னிறமுள்ளவராயும், மஹாத்மாவாயும், சுந்தரராயும், உலகவடிவினராயும், நித்திரைக்கு அதிபதியாயும் இருக்கிற உமக்கு நமஸ்காரம். ஓ தேவர்களுக்கும் தேவரான ஈசா! உம்முடைய சமீபத்தை அடைந்திருக்கிறேன். இந்த என்னுடைய இருதயத்திலுள்ள எல்லாக்காரியங்களையும் ஸ்வப்னத்திற் கூறியருளவேண்டும்.

---

1 படுக்கையில் சிஷ்யனைப்படுக்கச்செய்து, கவசமந்திரத்தால் ஜபிக்கப் பெற்ற வஸ்திரத்தால் மூடி, படுக்கைக்கு வெளியிலிருந்து, அஸ்திரமந்திரத்தால் அபிமந்திரணம் செய்யப்பட்ட எள்ளு, கடுகு, விபூதி இவைகளால் மூன்று ரேகைகளையிட்டு ரக்ஷிக்கப் பெற்றவர்களென்பது பொருள்.

2 சிஷ்யனுடைய படுக்கைக்கு வெளியிலென்பது பொருள்.

## ஆசாரியர் செய்ய வேண்டுவன.

56-57. ஆசாரியர் பஞ்சகவ்வியம், சரு இவற்றைப் புசித்து தந்தகாஷ்டத்தை ஸேவித்து, ஆசமனஞ் செய்து, சிவபெருமானைத் தியானித்து, பரிசுத்தமான படுக்கையை அதிட்டித்து, தீக்ஷையில் அடங்கிய (மேல் செய்யவேண்டிய) கிரியைகளின் சமூகத்தைச் சிந்தித்துக்கொண்டு நித்திரை செய்ய வேண்டும். இவ்வாறு சுருக்கமாகத் தீக்ஷாதிவாஸ விதி கூறப்பட்டது.

தீக்ஷையில் அதிவாஸ விதி முற்றிற்று.

---

## ஸ்வப்ன ஆராய்ச்சி.

58. பின்னர், வைகறையில் எழுந்து, செய்யப் பெற்ற ஸ்நானம் 1 முதலியவற்றை உடைய ஆசாரியர், மங்களத்தின் பொருட்டு சிஷ்யர்களிடம் அவர்களால் காணப்பட்ட ஸ்வப்னத்தைக் கேட்க வேண்டும்.

59. தயிர், 2 நெய், மாம்ஸங்கள், 3 முதலிய இவற்றைப் புசித்ததாகக் காணப்படும் ஸ்வப்னம் சிலாக்யமாகும். யானை 4 முதலியவற்றில் ஏறல், வெண்ணிறமுள்ள ஆடையால் போர்த்துக் கொள்ளல் ஆகிய இவை சிரேஷ்டமாகும்.

60. தன் அங்கங்கள் பின்னங்களாக ஸ்வப்னங்காணுதல் நிந்திக்கத் தக்கது. மஷீ (மை) சேறு இவற்றால் பூசப்படுதலும், எண்ணெய் தேய்த்து ஸ்நானம் செய்தலும், பாழுங்கிணறு முதலியவற்றில் விழுதலும் சிலாகிக்கப்படுகிறதில்லை.

---

1 முதலிய என்னும் பதத்தால், இரண்டு ஸந்த்யா கர்மாக்களைக் கொள்ள வேண்டும்.

2 ஆர்த்ர மாம்ஸ என்பதாகப் பாடத்தைக்கொண்டால் ஈரமுள்ள மாம்ஸம் என்ற பொருளைக் கொள்ள வேண்டும்.

3 முதலிய என்னும் பதத்தால் ரக்தம் போன்றவற்றைக் கொள்ள வேண்டும்.

4 முதலியவற்றில் என்னும் பதத்தால், மலை, மரம் இவற்றைக் கொள்ளவேண்டும்,

60½. கெட்ட ஸ்வப்னங்கள் நசித்தற்காகப் 1 பிராயச்சித்தத்தைச் சிந்தித்துக் கொண்டு,

**நிர்வாண தீக்ஷைக்காக முன்னர்ச் செய்யவேண்டுவன.**

61-61½. 2 இரண்டு நித்யகர்மங்களைச் செய்து, யாகசாலையை அடைந்து, நித்தியத்திற்குச் செய்யப்படுமாறு போல் நைமித்திகத்திலும் ஆத்ம பூஜை 3 ஈறுகவுள்ள கர்மாவைச் செய்ய வேண்டும்.

62-63. பின்னர், தன்னிடத்தில் சோதித்தற்குரிய அத்துவாவையும், தலைப்பாகை ஆபரணம் இவற்றையும், முன் கூறப்பட்ட பிரகாசிக்கிற சிவஹஸ்தத்தையும் 4 நியாஸஞ் செய்து, கும்பத்தில் எழுந்தருளிய 5 சிவபெருமானையும், முறையே இந்திரன் 6 முதலாயினுரையும் பூஜிக்கவேண்டும்.

64. பின்னர் மண்டலத்திலேனும் ஸ்தண்டிலத்திலேனும் சிவபூஜையையும், அக்கினியில் எழுந்தருளியிருக்கும் சிவபெருனுக்குப் பூர்ணுகுதி ஈறுகப் பூஜை ஹோமம் இவற்றையும், மந்திரங்களுக்குத் தர்ப்பணத்தையுஞ் செய்யவேண்டும்.

65. கெட்ட ஸ்வப்னங்கள் காணுதலால் நேரும் தோஷங்கள் நாசமடைதற்காக, அஸ்திரமந்திரத்தை உச்சரித்து நூற்றெட்டு முறை ஹோமஞ் செய்து, ஹூம் என்னும் பீஜாக்கரத்தை

1 "விடியற்காலத்தில் கெட்ட ஸ்வப்னங்கள் கண்டால் ஆயிரம் முறையும், அர்த்த ராத்திரியில் கண்டால் ஐநூறு முறையும், இரவின் ஆரம்பத்தில் கண்டால் நூறு முறையும், அஸ்திரமந்திரத்தை உச்சரித்து ஹோமஞ் செய்யவேண்டும். இக்காலங்களில் ஆசாரியர் கெட்ட ஸ்வப்னம் கண்டால் இரண்டு மடங்கு அதிகமாகக் கூறிய மந்திரத்தை உச்சரித்து ஹோமஞ் செய்ய வேண்டும்." என்பனவாகிய பிராயச்சித்தத்தைச் சிந்தித்து என்பது கருத்து.

2 பிராதக்காலம் மத்யாஹ்னம் இவற்றிற் செய்ய வேண்டியவற்றை என்பது கருத்து.

3 ஸூர்யபூஜை முதல் ஆத்மபூஜை ஈறுக.

4 நியாஸஞ் செய்து, வாஸ்துபிரம்ம பூஜையையும், மஹாலக்ஷ்மி பூஜையையும் செய்ய வேண்டும்.

5 வர்த்தனியையும் பூஜிக்க வேண்டும்.

6 கணபதி, குரவர், இஷ்டலிங்கம், இவர்களையும் பூஜிக்கவேண்டும்.

ஸம்புடமாகச் செய்து, 1 மந்திரங்களுக்குத் தீபனத்தைச் செய்ய வேண்டும்.

66. ஸ்தண்டிலேசுவரர் கும்பத்திலெழுந்தருளியிருக்கும் சிவன் இவர்களுக்கு நடுவில் அந்தர்ப்பலியையுஞ் செய்து, சிஷ்யனுடைய பிரவேசத்திற்காகச் சிவபெருமானிடம் உத்தரவு பெற்று வெளியிற் செல்லவேண்டும்.

67. மண்டலத்தில் சிஷ்யனை ஆரோஹணித்தல் முதல், 2 ஸம்பாத ஹோமம், நாடீரூபமான தர்ப்பத்தைச் சிஷ்யன் கையில் 3 கொள்ளுதல் இவற்றை ஈறுகவுள்ள கிரியைகளை, ஸமய தீக்ஷையில் செய்யப்பட்டவாறு சிஷ்யனுக்குச் செய்ய வேண்டும்.

68. நாடீஸந்தானம் ஸித்திப்பதற்காக மூலமந்திரத்தை உச்சரித்து, மூன்று ஆகுதிகள் ஹோமஞ்செய்து, கும்பத்திலெழுந்தருளியிருக்கும் சிவபெருமானை 4 அருச்சித்துப் பாசஸூத்திரத்தைக் கொண்டு 5 வரவேண்டும்.

69. தன்னுடைய வலது பக்கத்தில் நிமிர்ந்த சரீரத்தை உடையவனும், 6 அர்ச்சிக்கப்பட்டவனும் இருக்கிற சிஷ்யனுடைய சிகையில், அந்தப் பாசஸூத்ரத்தை, கால் பெருவிரல் ஈறுகத் தொங்கும்படி கட்ட வேண்டும்.

## நிவிருத்தி கலையைச் சுத்தி செய்யுமுறை.

69½. சிஷ்யனை உட்காரச் 7 செய்து, நிவிருத்தி கலையின் வ்யாப்தியை மனதால் 8 பாவனை செய்து,

---

1 மூலமந்திரம் முதலிய எல்லா மந்திரங்களுக்கும் என்பது பொருள்.

2 கிரீக்ஷணம் முதலிய நான்கு ஸம்ஸ்காரங்களாற் சுத்தி செய்யப்பெற்ற கத்திரிக்கோலுக்கும் ஸம்பாதஹோமம் செய்ய வேண்டுமென்பது கருத்து.

3 நாடீஸந்தானஞ் செய்தல் என்பது கருத்து.

4 சிஷ்யனையுமருச்சிக்கச் செய்து என்பது பொருள்.

5 பாசஸூத்ரத்தை எடுத்துக் கொண்டு குண்டத்திற்குச் செல்ல வேண்டும் என்பது கருத்து. 6 ஸம்ஹிதா மந்திரத்தால்.

7 𑌓𑌂 𑌹𑌾𑌂 𑌆𑌧𑌾𑌰𑌶𑌕𑍍𑌤𑌯𑍇 𑌨𑌮𑌃 என்று அக்கினியில்ஆதாரசக்தியைப் பூஜித்து மூன்று முறை ஸந்நிதாநாகுதிகளைக் கொடுத்து இருக்கச்செய்து. 8 முழங்காலுக்குக் கீழே பாவனை செய்து.

ஓம் ஹாம் நிவ்ருத்திகலாயை நம: என்று அருச்சித்து, ஓம் ஹாம் வ்ருத்தாய நம: என்று சொல்லிக்கொண்டு அர்ச்சிக்க வேண்டும்.

70. அதன்பின், இந்தக் கலையில் நூற்றெட்டுப் புவனங்களை அடங்கியவையாகப் பாவிக்க வேண்டும்.

71. கபாலர், 1 அஜர், புத்தர், வஜ்ரதேஹர், ப்ரமர்த்தனர், விபூதி, அவ்யயர், சாஸ்தா, பிநாகி, 2 த்ரிதசாதிபர்.

72. அக்கினிருத்ரர், ஹுதாசனர், பிங்களர், காதகர், ஹரர், ஜ்வலனர், தஹனர், 3 பப்ரு, பஸ்மாந்தகர், 4 க்ஷயாந்தகர்.

73. யாம்யர், மிருத்யுஹரர், தாதா, விதாதா, கர்த்தா, காலர், தர்மர், அதர்மர், ஸம்யோக்தா, 5 வியோக்தா.

74. 6 நைருதர், மாரணர், ஹந்தா, க்ரூரதிருஷ்டி, பயாநகர், 7 ஊர்த்வகேசபஸ், விரூபாக்ஷர், தூம்ரர், லோஹிதர், 8 தம்ஷ்ட்ராவான்.

75-75½. பலர், அதிபலர், பாசஹஸ்தர், மஹாபலர், ச்வேதர், ஜயபத்ரர், தீர்க்கபாஹு, ஜலாந்தகர், 9 புத்தி பாஹ்யர்,

---

1 கபாலீசர், ஜடர், புத்னர், என்றும் பாடபேதமுண்டு.

2 ஆகிய இந்தப் பதின்மரும் ப்ரஹ்மாண்டத்தின் வெளியில் கிழக்குத் திக்கில் இருக்கின்றனர்.

3 பப்ரர் என்றும் பாடமுண்டு.

4 அக்கினி ருத்ரர் முதல் க்ஷயாந்தகர் முடிவாகவுள்ள இப்பதின்மர் அக்கினி திக்கில் இருக்கின்றனர்.

5 இப்பதின்மர் தெற்குத் திக்கில் இருக்கின்றனர். இப்பதின்மருள் அடங்கியுள்ள மிருத்யுஹரர் என்னும் பதத்தை மிருத்யு, ஹரர், என்று இரண்டு பதமாகச் செய்து இரண்டு பெயர்களாகக் கொண்டு, காலர் என்னும் பெயரை நீக்கி, அதர்மர் என்னும் பெயருக்குப் பதிலாகத் தர்மபதி என்பதைச் சேர்த்துப் பதின்மராகக் கொள்ளும் பாடமுமுண்டு.

6 நிருருதி என்றும் பாடமுண்டு.

7 ஊர்த்வகேசர் என்றும் பாடமுண்டு.

8 இப்பதின்மர் நிருருதி திக்கில் இருக்கின்றனர்.

9 புத்திபாஹ்யர், பீமர், ஆகிய இருவர்களுக்குப் பதிலாக மேகநாதர், ஸுநாதர், என்று கொள்ளும் பாடமுமுண்டு.

பீமர் ஆகிய இந்தப் பதின்மர் மேற்குத்திக்கை 1 அடைந்திருக்கின்றனர்.

76-76½. சீக்ரர், லகு, வாயுவேகர், ஸூக்ஷ்மர், தீக்ஷ்ணர், க்ஷயாந்தகர், பஞ்சாந்தகர், பஞ்சசிகர், கபர்தீ, 2 மேகவாஹநர்.

77-78. ஜடாமகுடதாரி, நாநாரத்னதரர், நிதீசர், ரூபவான், தன்யர், ஸௌம்யதேஹர், பிரஸாதகிருத், பிரகாசர், லக்ஷ்மீவான், காமரூபர் ஆகிய இப்பதின்மர் வடக்குத் திக்கில் இருக்கின்றனர்.

79-79½. வித்யாதரர், ஞானதரர், ஸர்வக்ஞர், வேதபாரகர் மாதிருவிருத்தர், பிங்காக்ஷர், பூதபாலர், பலிப்ரியர், ஸர்வவித்யாவிதாதா, ஸுகதுக்ககரர் ஆகப் 3 பதின்மர்.

80-81. அனந்தர், பாவகர், தீரர், பாதாளாதிபதி, விருஷர், விஷதரர், வீர்யர், க்ரஸனர், ஸர்வதோமுகர், லோஹிதர் ஆகிய இப்பதின்மர் 4 பாதாளத்தில் இருப்பவர்களாக அறியத்தக்கனர்.

82. சம்பு, விபு, கணாத்யக்ஷர், த்ரயக்ஷர், த்ரிதசவந்திதர், ஸம்வாஹர், விவாஹர், நபர், லிப்சு, 5 விசக்ஷணர், ஆகப்பதின்மர்.

---

1 விசித்ரமான ஆயுதங்களைத் தரிப்பவரும் உதித்த சூரியனது காந்தியை உடையவர்களுமான ஏவலாளர்களுடன் தம் திக்கில் அரசாட்சி செய்கின்றனர் என்பது பொருள். இவ்வாறே ஒவ்வொரு பதின்மரையுங் கொள்க.

2 இப்பதின்மர் வாயுதிக்கில் இருக்கின்றனர்.

3 இப்பதின்மர் ஈசான திக்கில் இருக்கின்றனர். இத்திக்கில் வித்யாதிபர், ஈசர், ஸர்வஞர், ஞானபுக், வேதபாரகர், சுரேசர், ஸர்வர், ஜ்யேஷ்டர், பூதபாலர், பலிப்ரியர், ஆகிய பெயர்கள் இருக்கின்றனர் என்று கூறும் நூலுமுண்டு.

4 விஷ்ணுவுக்குக் கீழே என்பது பொருள். இவ்வுலகத்தில் விருஷர் விருஷதரர், அனந்தர், க்ரோதனர்: மாருதாசனர், க்ரஸனர், உதும்பரர், ஈசர், பணீந்திரர், வஜ்ரதம்ஷ்ட்ரர் ஆகிய பதின்மர் இருக்கின்றனர் என்றும் வேறு நூலிற் கூறப்படுகிறது.

5 இப்பதின்மர் பிரமனுக்கு மேல் பாகத்தில் இருக்கின்றனர். இப்பதின்மரைக் கூறும் வேறு நூலில் சம்பு, விபு, கணாத்யக்ஷர், த்ரயக்ஷர், த்ரிதசர், ஈசுவரர், ஸம்வாஹர், விவாஹர், நபோலிப்ஸு, த்ரிலோசனர், என்று சிறிது மாறுபடப் பெயர்கள் கூறப்பட்டுள்ளன.

83-84. பின்னர் 1 ஹாஹாகர், காலாக்னி ருத்ரர், ஹாடகர், கூஷ்மாண்டகர், ஸத்யர், ப்ரஹ்மா, விஷ்ணு, ருத்ரர், ஆகிய இந்த எட்டு உருத்திரர்கள் ப்ரஹ்மாண்டத்திற்குள் இருக்கின்றனர். இவர்களுடைய பெயர்களையே புவனங்களுக்கும் சிந்தித்துக் கொள்ளவேண்டும்.

## பதாத்வாவைச் சிந்தித்தல்.

𑌭𑌵𑌭𑌵। 𑌭𑌵𑍋𑌦𑍍𑌭𑌵। 𑌸𑌰𑍍𑌵𑌭𑍂𑌤𑌸𑍁𑌖𑌪𑍍𑌰𑌦। 𑌸𑌰𑍍𑌵𑌸𑌾𑌨𑍍𑌨𑌿𑌧𑍍𑌯𑌕𑌰। 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌵𑌿𑌷𑍍𑌣𑍁𑌰𑍁𑌦𑍍𑌰𑌪𑌰। 𑌅𑌨𑌰𑍍𑌚𑌿𑌤𑌾𑌨𑌰𑍍𑌚𑌿𑌤। 𑌅𑌸𑌂𑌸𑍍𑌕𑍃𑌤𑌾𑌸𑌂𑌸𑍍𑌕𑍃𑌤। 𑌪𑍂𑌰𑍍𑌵𑌸𑍍𑌥𑌿𑌤𑌪𑍂𑌰𑍍𑌵𑌸𑍍𑌥𑌿𑌤। 𑌸𑌾𑌕𑍍𑌷𑌿𑌸𑌾𑌕𑍍𑌷𑌿। 𑌤𑍁𑌰𑍁𑌤𑍁𑌰𑍁। 𑌪𑌤𑌙𑍍𑌗𑌪𑌤𑌙𑍍𑌗। 𑌪𑌿𑌙𑍍𑌗𑌪𑌿𑌙𑍍𑌗। 𑌜𑍍𑌞𑌾𑌨𑌜𑍍𑌞𑌾𑌨। 𑌶𑌬𑍍𑌦𑌶𑌬𑍍𑌦। 𑌸𑍂𑌕𑍍𑌷𑍍𑌮𑌸𑍂𑌕𑍍𑌷𑍍𑌮। 𑌶𑌿𑌵। 𑌶𑌰𑍍𑌵। 𑌸𑌰𑍍𑌵𑌦। 𑌓𑌂। 𑌨𑌮𑌃। 𑌶𑌿𑌵𑌾𑌯। 𑌓𑌂। 𑌨𑌮𑌃। 𑌨𑌮𑌃। 𑌶𑌿𑌵𑌾𑌯। 𑌨𑌮𑌃। 𑌨𑌮𑌃। 𑌓𑌂।

ஆகிய இருபத்தெட்டுப்பதங்களையும் அடங்கியவையாகப் பாவிக்க வேண்டும்.

85-86-87. ஸத்யோஜாதம், இருதயம், அஸ்திரம் நேத்ரம் ஆகிய நான்கு மந்திரங்கள், க என்னும் அக்கரம், ஹகாரம் கௌரமாகிய இரண்டு பீஜாக்கரங்கள், இடை பிங்களை என்னும் இரண்டு நாடிகள், பிராணன் அபானன் என்னும் இரண்டு வாயுக்கள், மூக்கு உபஸ்தம் ஆகிய இரண்டு இந்திரியங்கள், கந்தமாகிய ஒரு விஷயம், 2 கந்தம் முதலிய ஐந்து குணங்கள், பொன்னிறமுள்ளதும், கடினமாயும், 3 வஜ்ரத்தால் அடையாளமிடப் பெற்றதாயும், நூறுகோடி யோஜனை விஸ்தாரமுள்ளதாயும் உள்ள பிருதிவி மண்டலம் ஆகிய இவற்றை இந்தக் கலையிலடங்கியவையாகப் பாவிக்கவேண்டும்.

---

1 காலாக்னி, கூஷ்மாண்டம், ஹாடகம், ப்ராஹ்மம், வைஷ்ணவம், ரௌத்ரம் ஆகிய ஆறு புவனங்கள் ப்ரஹ்மாண்டத்திற்குள்ளும், வீரபத்ரம், பத்ரகாளி, ஆகிய இருபுவனங்கள் எல்லாவற்றிற்கும் மேலுமிருக்கின்றனவென்று வேறு நூலில் கூறப்பட்டிருக்கின்றது.

2 கந்தம், ரஸம், ரூபம், ஸ்பரிசம், சப்தம் ஆகிய ஐந்து குணங்கள் என்பது பொருள்.

3 வஜ்ரத்தாலடையாளமிடப் பெற்றதாயும் என்னுமிடத்தில் சதுரச்ரமாயும் என்று வேறு ப்ரதியில் இருக்கின்றது.

## ஆன்மாவிற்குப் பற்பல சரீரங்கள் உண்டாதற்காகப் பதினன்கு யோனிகளை அடங்கச் செய்தல்,

88-89-90. இந்தக் கலையிலேயே பதினன்கு யோனிகளை அடங்கியவையாகப் பாவிக்கவேண்டும். முதல் ஆறு யோனிகள் தேவயோனிகளாய் இல்லாதவையாயும், பின்னுள்ள எட்டு யோனிகள் தேவயோனிகளாகவும் உள்ளன. மிருகம், பக்ஷி, பசுக்கள், ஸர்ப்பம், எல்லாஸ்தாவரங்கள், மனுஷ்யயோனி ஆகிய இவை ஆறு யோனிகளாகும், பைசாசம், ராக்ஷஸம், யாக்ஷம், காந்தர்வம், ஐந்திரம், ஸௌம்யம், ப்ராஜேச்வரம், ப்ராஹ்மம், ஆகிய இவை எட்டு யோனிகளாகக் கூறப்பட்டன.

91-92. இந்த எட்டு யோனிகளுக்கும் அதிகாரஸ்தானமாகப் பிருதிவிதத்துவம் கொள்ளப்பட்டது. (இவற்றிற்கு)ப் பிரகிருதியில்லயம், புத்தியில் போகம், காரணேசுவரரானபிரமன், அதன் பின் இறுதியில் 1 ஜாக்கிரதவஸ்தை ஆகிய எல்லாப்புவனம் முதலியவற்றைத் தன்னுள்ளடக்கியவையாக நிவிருத்தி கலையைத் தியானித்துத் தனது மந்திரத்தால்ப் பிரித்து, அதவாவது:— ௐ ஹாம் ஹூம் ஹாம் நிவ்ருத்திகலாவாஸ்யாயஹ: ஹூம் பட் என்னும் மந்திரத்தை உச்சரித்து முழங்காலுக்குக் கீழ் புஷ்பத்தால் தாடனஞ் செய்து, ௐ ஹாம் ஹூம் ஹாம் நிவ்ருத்திகலாவாஸ்யாய நம: என்று உச்சரித்துப் பிரவேசித்து, ௐ ஹாம் ஹூம் ஹாம் நிவ்ருத்திகலாவாஸ்யாயஹ: ஹூம் பட் என்னும் மந்திரத்தால்பிரித்து, பின்னர் ௐ ஹாம் ஹூம் ஹாம் நிவ்ருத்திகலாவாஸ்யாயஸ்வாஹா என்னும் மந்திரத்தை உச்சரித்து அங்குச முத்ரை செய்துகொண்டு, பூரகஞ் செய்து இழுத்து, ௐ ஹாம் ஹூம் ஹாம் நிவ்ருத்திகலாவாஸ்யாய ஹூம் பட் என்னும் மந்திரத்தை உச்சரித்து ஸம்ஹார முத்ரையால் 2 நாபிக்குக் கீழுள்ள சூத்ரத்தை எடுத்து, கும்பகஞ்செய்து தன்னிடமிருப்பதாகப் பாவித்து, ௐ ஹாம் ஹூம் ஹாம் நிவ்ருத்திகலாவாஸ்யாய நம:

---

1 கண் காது முதலியவற்றாலும், மனம் புத்தி அஹங்காரம் இவற்றாலும் கிரஹிக்கப்படும் பூதங்களின் விஷயமான அறிவின் நிலை, ஜாக்கிரதவஸ்தையாகும்.

2 நாபிக்குக் கீழே முழங்கால் முதலுள்ள சூத்ரத்தை.

என்னும் மந்திரத்தை உச்சரித்து, உத்பவமுத்திரை செய்து கொண்டு, ரேசகத்தால் குண்டத்தில் 1 ஸ்தாபித்து, ஓம் ஹாம் ஹாம் ஹாம் நிவ்ருத்திகலாவாகீஶாய நம: என்னும் மந்திரத்தை உச்சரித்து அர்க்யங்கொடுத்து, பூஜித்து, இதே மந்திரத்தை ஸ்வாஹாந்தமாக உச்சரித்து மூன்று ஸந்நிதானாகுதிகளையும், மூன்று ஸந்தர்ப்பணாகுதிகளையும் ஸமர்ப்பித்து, 2 ஓம் ஹாம் ப்³ரஹ்மணே நம: என்னும் மந்திரத்தால் பிரமனை (நிவிருத்தி கலையில்) ஆவாஹனம் செய்து பூஜித்து, ஓம் ஹாம் ப்³ரஹ்மணே ஸ்வாஹா என்னும் மந்திரத்தால் (அக்கினியில்) ஸந்தர்ப்பணம் செய்து,

93. ப்³ரஹ்மந் த்வத³தி⁴காரேऽஸ்மிந் முமுக்ஷும் தீ³க்ஷயாம்யஹம் ।
பா⁴வ்யம் த்வயாऽநுகூலேந பு⁴வநேஶநியோக³த: ॥

இ-ள். ஓ ப்ரஹ்மாவே! இந்த உம்முடைய அதிகாரத்தில் முத்தியில் விருப்பமுள்ள சிஷ்யனை யான் தீக்ஷை செய்விக்கப் போகிறேன். 3 சிவபெருமானுடைய ஆணையால் தாம் அனுகூலமாக இருக்கவேண்டும். (என்ற இந்த சிவனது ஆணையை ப்ரஹ்மாவுக்கு அறிவிக்க வேண்டும்.)

94. அதன் பின் செம்மை நிறமுள்ளவளாயும், இச்சா சக்தி ஞான சக்தி க்ரியா சக்தி ரூபிணியாயும், ஆறுவித அத்துவாக்களுக்கு முக்கிய காரணமாயும் இருக்கும் தேவியான 4 வாகீசுவரியை இருதய மந்திரத்தால் ஆவாஹனஞ் செய்யவேண்டும்.

---

1 குண்டத்திலுள்ள ஆதார சக்தியில் என்பது கருத்து.

2 பின்னர் மலம் கன்மம் மாயை ரூபங்களான மூன்று பாசங்களையும் போக்தாவுக்கு போகசரீரங்களை உண்டுபண்ணுகிறவையாகப் பாவித்து.

3 சிவபெருமானுடைய ஆணையால் என்பதற்குப் பதிலாக "இவ்வாறு ப்ரம்மாவுக்கு அறிவிக்க வேண்டு"மென்ற பொருளைத் தரும் வேறுபாடமுமுண்டு. கலைக்கு அதிகாரியாயுள்ளவர் அனுகூலமாய் இல்லாவிடில் தீக்ஷை செய்வித்தல் முடியாதாகையால் இப்பிரார்த்தனை வேண்டப்பட்டது.

4 அந்தக் கலையில் ஸ்தாவரம் முதலிய அனேகம் யோநிகளைக் கற்பித்து, அவற்றை வியாபிப்பவளாக வாகீசுவரியைத் தியானித்து இருதய மந்திரத்தால் ஆவாஹனம் செய்ய வேண்டும்.

95. பின்னர் வாகீசுவரியைப் பூஜித்து, தர்ப்பணாகுதிகளையும் செய்யவேண்டும். இந்த முறையை அனுசரித்து ஸமஸ்தமான யோனிகளின் 1 கலக்கத்திற்குக் காரணமான வாகீசுவரரையும் ஆவாஹனஞ் செய்து அருசித்து, தர்ப்பணாகுதிகளையும், 2 கொடுக்க வேண்டும்.

96. இருதய மந்திரங்களால் ஸம்புடமான ஆன்மபீஜாக்கரத்தை முதலாகவுள்ள ஹூம்பட் என்னும் பதத்தை இறுதியிலுடைய அஸ்திர மந்திரத்தை (அதாவது ஓம் ஹாம் ஹாம் ஹாம் ஹ: ஹூம்பட் என்னும் மந்திரத்தை) உச்சரித்து, அந்தச்சிஷ்யனுடைய இருதயத்தைத் 3 தாடனஞ் செய்யவேண்டும். செய்யவேண்டிய விதிகளை அறிந்த ஆசாரியன் சிஷ்யனுடைய இருதயத்திற் 4 பிரவேசிக்கவும் வேண்டும்.

97. பின்னர், சிஷ்யனுடைய இருதயத்தில் நெருப்புப்பொறிக்குச் சமானமாயும், பாசங்களுடன் கூடியதாயும், நிவிருத்திகலையில் இருப்பதாயும் இருக்கிற சைதன்யத்தை 5 ஜயேஷ்டையால் ஓம் ஹாம் ஹம் ஹாம் ஹ: ஹூம்பட் என்னும் மந்திரத்தை உச்சரித்துப் பிரிக்கவேண்டும்.

---

1 தொழிற்படுதற்கு என்பது பொருள்.

2 நீங்களிருவரும் ஆன்மாவிற்கு அனுக்ரஹம் செய்யும்பொருட்டு ஸாந்நித்யம் செய்யவேண்டுமென்று பிரார்த்தித்துக் கொடுக்க வேண்டும்.

3 தாடனஞ் செய்தற்கு முன்னர், கர்மாவில் உரிமை உண்டாதற்காக சிஷ்யனை அஸ்திர மந்திரத்தை உச்சரித்துப் புரோக்ஷிக்க வேண்டும். நாராசமுத்ரை செய்துகொண்டு புஷ்பத்தால் தாடனஞ் செய்யவேண்டும் என்பது கருத்து.

4 ஹூம் என்னும் அக்கரத்தை உச்சரித்து ரேசகஞ் செய்து சிஷ்யனுடைய தேகத்தில் வாமையென்னும் சிவ சக்தியாற் பிரவேசிக்க வேண்டும். இச்சக்தியானது இடது நாடீமார்க்கத்தில் இருக்கின்றது. ஸாதாரணமான புவனஜரூபமான பாசங்களில் ஆன்மாக்களை இச்சக்தி சேர்க்கின்றது.

5 ஜ்யேஷ்டையாவது ஜ்யேஷ்டை என்னும் சிவசக்தியாகும். இச்சக்தியானது தீக்ஷை செய்யும்பொழுது குருமூர்த்தியினிடத்து, அவருடைய சக்தியுடன் அபின்னமான காரகமாயிருந்து, வலது நாடியின் மார்க்கத்தில் இருக்கின்றது. அஸாதாரணமான சூக்குமதேகத்துடன் கூடின ஆன்மாவை ஸ்தூலசரீரத்தினின்றும் இச்சக்தி பிரிக்கின்றது.

𑌓𑌂 𑌹𑌾𑌂 𑌹𑌂 𑌹𑌾𑌂 𑌸𑍍𑌵𑌾𑌹𑌾 என்னும் மந்திரத்தை உச்சரித்துக் கொண்டு பூரகஞ் செய்து, அங்குச முத்ரையால்,

97½. அந்தச் சைதன்யத்தை 1 இழுத்து, ஆன்மமந்திரத்தால் கிரகித்து, தன்னிடத்திற் சேர்க்க வேண்டும்.

𑌓𑌂 𑌹𑌾𑌂 𑌹𑌂 𑌹𑌾𑌂 𑌆𑌤𑍍𑌮𑌨𑍇 𑌨𑌮𑌃 என்பது ஆத்மமந்திரம்.

98½. வாகீசுவரீ வாகீசுவரர்களுக்குச் சேர்க்கையைப் பாவித்து, ரேசகஞ் செய்து, அந்தச் சிஷ்யனுடைய சைதன்யத்தை முறையே பிரமன் முதலிய காரணேசுவரர்களைக் கடந்து துவாதசாந்தத்திற்குக் கொண்டுபோய்,

## கர்ப்பாதானம் முதலிய கிரியைகள்.

99½. எல்லாயோனிகளிலும் ஒரே காலத்தில் 2 கர்ப்பங்களை உண்டு பண்ணுதற்காக (துவாதசாந்தத்திற்குக் கொண்டுபோன சைதன்யத்தை) எடுத்து, உத்பவமுத்திரை செய்துகொண்டு (வாகீசுவரரின்) இடது நாடியால் வாகீசுவரியின் யோனியில் வைக்கவேண்டும்.

𑌓𑌂 3 𑌹𑌾𑌂 𑌹𑌂 𑌹𑌾𑌂 𑌆𑌤𑍍𑌮𑌨𑍇 𑌨𑌮𑌃 என்னும் ஆன்மமந்திரத்தால் வைக்கவேண்டும்.

100½. இதே மந்திரத்தால் பூஜிக்கவேண்டும். ஐந்துமுறை தர்ப்பணாகுதிகளைக் கொடுக்க வேண்டும். எல்லா யோனிகளிடத்தும் இந்த ஆன்மாவுக்குத் தேகங்களின் ஸித்தியை இருதய மந்திரத்தாற் செய்யவேண்டும்.

---

1 ரௌத்ரி என்னும் சிவசக்தியால் இழுத்து. பாசக் கூட்டங்களை நசிக்கும்படி செய்வதால் ரௌத்ரீ என்ற பெயர் வந்தது. இச்சக்தி உத்தாரக்ரியைக்கு (எடுத்தற்கு) உபயோகப் படுகிறது.

2 தன் கர்மாவுக்கு யோக்யமாக ஜராயுஜம், அண்டஜம், ஸ்வேதஜம், உத்பிஜ்ஜம் ஆகிய தேகங்களின் கர்ப்பங்களை என்பது கருத்து.

3 𑌓𑌂 𑌹𑌾𑌂 𑌹𑌂 𑌹𑌾𑌂 𑌆𑌤𑍍𑌮𑌨𑍇 𑌸𑌕𑌲𑌯𑍋𑌨𑌿𑌷𑍁 𑌹𑍃𑌦𑌯𑌾𑌯 𑌨𑌮𑌃 ... என்பது ஸ்பஷ்டபோதினீபாடம்.

101½. இந்த ஆன்மாவிற்குப் பெண் 1 முதலியவர்களின் சரீரமும் நேருமாதலால் பும்ஸவனக் கிரியை கிடையாது. கன்மவசத்தால் குருடன் முதலியவர்களின் தேகமும் நேருமாதலால் ஸீமந்தோந்நயனமென்னும் ஸம்ஸ்காரமும் கிடையாது.

102½. எல்லா ஆன்மாக்களுக்கும் ஒரே காலத்தில் சிரோமந்திரத்தால் ஜனனத்தைச் செய்யவேண்டும். அவ்வாறே இவ்வான்மாக்களுக்குச் சிகா மந்திரத்தால் 2 அதிகாரத்தையும் பாவிக்க வேண்டும்.

103½. கவசமந்திரத்தால் 3 போகத்தையும், அஸ்திர மந்திரத்தால் விஷயம் ஆன்மா இவற்றிற்கு அபேதமான போஹ ரூபமாயுள்ள 4 லயத்தையும் பாவிக்க வேண்டும்.

104½. சிவமந்திரத்தால், 5 அனுபவிக்கப்பட்ட பாசங்களின் ஸ்தானங்களுடைய வழிகளின் (பிரவாகத்தின்) சுத்தியை

---

1 பும்ஸவனமென்னும் ஸம்ஸ்காரமானது, பெண் பிறவி அலிப்பிறவிகளை நீக்குதற்காக ஏற்பட்ட ஸம்ஸ்காரம். தீட்சை செய்யப் பெறும் ஆன்மாவுக்குக் கன்மவசத்தால் பெண் ஜன்மம் அலிஜன்மம் ஆகிய இவையும் நேரக்கூடுமாதலால், இந்தப் பெண் பிறவி அலிப்பிறவிகளை நீக்கும் பும்ஸவன கர்மாவை இவனுக்குச் செய்ய வேண்டாமென்பது கருத்து. இவ்வாறே குருடு முடம் செவிடு முதலிய பிறவிகளைத் தடுக்கும் ஸீமந்தோந்நயன கர்மாவும் இவனுக்குச் செய்ய வேண்டுவதில்லை என்பது கருத்து.

2 தேசம் காலம் வயசு இவற்றிற்குத் தக்கவாறு, போக ஸாதனங்களான பொருள்களின் ஸம்பந்தம் அதிகாரமாகும். ஒரே காலத்தில் எல்லாச் சரீரங்களும் விருத்தியடைவதாகப் பாவித்தலாகும்.

3 ஸமஸ்தமான யோனிகளின் சரீரங்களில், போகங்களைத் தரும் கன்மங்களைச் சம்பாதித்ததாகப் பாவித்து, அதனால் நேரும் சுகதுக்க மோகங்கட்குக் காரணமான போக்யப் பொருள்களில் சுகதுக்க மோக ரூபமான அறிவு போகமாகும்.

4 போக்யப் பொருள்களிடத்து மிகப்ரீதியாயிருப்பது லயமாகும். அதாவது— இத்தகைய போகமானது அனுபவித்த பின்னரும், சிறிது காலம் அவ்வவரூபமாய் இருப்பது லயம் என்பது கருத்து.

5 சுத்தனான ஆன்மாவிற்கு அனுபவிக்கப்பட்ட புவனங்களில், மீண்டும் சம்பந்தம் கூடாது என்னும் கருத்துப்பற்றி, மஹாமாயா கார்யங்களின் ஆரம்பமாகிற ப்ரவாஹத்தின் ரூபமாயுள்ள இவற்றின் சுத்தியானது கூறப்பட்டது.

யும், இருதய மந்திரத்தால், 1 தத்துவ சுத்தியையும் பாவிக்க வேண்டும். கர்ப்பாதானம் முதலிய ஸம்ஸ்காரங்கள் ஸித்திப்பதற்காக 2 முறையே ஐந்து ஐந்து ஆகுதிகளைக் கொடுக்க வேண்டும்.

105½. பின்னர், மாயாபாசம், மலபாசம், கன்மபாசம், இவற்றின் பந்தத்தின் (கட்டின்) நீக்கத்தின் பொருட்டும், 3 நிஷ்கிருதியின் பொருட்டும், இருதய மந்திரத்தால் நூறு ஆகுதிகளைச் செய்ய வேண்டும்.

106½. மலத்தின் சக்தி (பாசங்களை அதிட்டிக்கும் சக்தி) கெடுதற்காகவும், பாசங்கள் 4 பிரிந்து போதற்காகவும், ஸ்வாஹா என்னும் பதத்தை இறுதியிலுடைய அஸ்திர மந்திரத்தால் ஐந்து ஐந்து ஆகுதிகளைக் கொடுக்க வேண்டும்.

107½. மலம் முதலிய 5 உள்ளிருக்கும் பாசங்களை, ஏழு முறை அஸ்திர மந்திரத்தால் ஜபிக்கப் பெற்ற கத்தரிக் கோலால் நிவிருத்திகலா மந்திரத்துடன் கூடிய அஸ்திரமந்திரத்தை 6 உச்சரித்து 7 அறுக்க வேண்டும்.

---

1 போகத்திற்குக் காரணமான கன்மமானது அனுபவிக்கப் படினும், மீண்டும் அக்கன்மம் உண்டாகாமலிருப்பதற்காக, நிவிருத்தி கலையிலுள்ள தத்துவங்களுக்குச் சுத்தியைப் பாவிக்க வேண்டுமென்பது கருத்து.

2 தேகஸித்தி, ஜனனம், அதிகாரம், போகம், லயம் முதலிய கர்மாக்களுக்காகத் தனித்தனி ஐந்து ஐந்து ஆகுதிகளைக் கொடுக்க வேண்டுமென்பது கருத்து.

3 நிஷ்கிருதியாவது எல்லாக் கர்மாக்களையும் குறைவறச் செய்யும் ஸமுதாய சுத்தியாகும்.

4 பிரிந்து போதலாவது, அறுத்தற்குரியதாய் நெகிழ்ந்திருக்கும் தன்மையாகும். உலகத்திலும் கயிற்றால் கட்டப்பட்டவனுடைய அந்தக்கயிறு, கட்டப் பெற்றவனுடைய அங்கத்தினின்று பிரிவுபடாதிருப்பின் (நெகிழாதிருப்பின்) அறுத்தற்குரித்தாகாது.

5 பாசசூத்திரத்தினுள்ளிருக்கும் என்பது கருத்து.

6 மூன்று மாத்திரையுள்ள ஸ்வரத்துடன் உச்சரித்து.

7 நிவிருத்தி கலையின் எல்லையில் அறுக்க வேண்டும் என்பது கருத்து.

ஓம் ஹாம் நிவ்ருத்திகலாவாஸநாய ஹ: ஹூம்பட் என்பது அறுப்பதற்குரிய மந்திரம்.

108½. பாசங்களின் பந்திக்கும் தன்மையை நீக்குதற்காக அஸ்திர மந்திரத்தை உச்சரித்து, அந்தப் பாச சூத்திரத்தை கைகளால் துடைத்து உருட்டி நெய் நிரம்பிய ஸ்ருவத்தில் வைக்க வேண்டும்.

109½. நிவிருத்திகலா மந்திரத்துடன் கூடிய அஸ்திர மந்திரத்தால் 1 தஹிக்க வேண்டும்.

(மீண்டும்)பாசத்தின்மூலைகள் நசிப்பதற்காகதனிஅஸ்திரமந்திரத்தால் ஐந்து ஆகுதிகள் கொடுத்துபஸ்மமாகச்செய்யவேண்டும்.

ஓம் ஹ: அஸ்த்ராய ஹூம்பட் என்பது கலா மந்திரத்துடன் கலப்பற்ற தனி அஸ்திரமந்திரமாகும்.

110. பின்னர், அஸ்திர மந்திரத்தை உச்சரித்துக் கொடுக்கப்படும், எட்டு ஆகுதிகளால் பிராயச்சித்த ஹோமஞ் செய்ய 2 வேண்டும்.

## காரணேசுவரரான பிரமனைப் பூஜித்தல்.

110½. 3 அல்லது, பிறிதொரு முறையாகப் பிரமனுக்குப் பூஜை தர்ப்பணம் இவற்றைச் செய்யவேண்டும். அது வருமாறு-

ஓம் ஹாம் ப்ரஹ்மந் ஶுபஸஸெளம் ஶுல்கம் க்ருஹாண ஸ்வாஹா என்று சொல்லிக்கொண்டு மூன்று ஆகுதிகள் 4 கொடுத்துப் பிரமனுக்கு அதிகாரத்தைச் சமர்ப்பிக்க வேண்டும்.

---

1 நெய்யுடன் அக்கினியில் ஹோமம்செய்து பாசசூத்திரத்தைத் தஹிக்க வேண்டுமென்பது கருத்து.

2 இவ்வாறு ஆன்மாவானது, பல சரீரத்திலும் நின்று போகங்களை அனுபவித்த பின்னர், அச்சரீரங்களுக்கு ஒரே காலத்தில் நாசம் ஏற்பட்டிருந்த அளவில் ஆன்ம சைதன்யம் ஒன்றுபட்டதாகப் பாவித்து என்பதைச் சேர்த்துக்கொள்க.

3 அதாவாஹ்ய விதாதாரம் பூஜயேத் தர்பயேத் ததா என்ற பாடத்தைக் கொண்டால் "பின்னர் (அக்கினியில்) அயனை ஆவாஹனஞ் செய்து அவ்வாறே பூஜை தர்ப்பணம் இவற்றைச் செய்யவேண்டும்" எனப் பொருள்படும்.

4 புர்யஷ்டக சுத்திக்காக என்பது கருத்து.

111½. "ஓ பிரமனே! பொசுக்கப்பட்ட எல்லாப் பாசங்களைஉடைய இந்த ஆன்மாவை, தாம் மீண்டும் பந்தத்திற்குள்ளாக்கக்கூடாது" என்ற இவ்வாறான சிவபெருமானுடைய ஆணையைப் பிரமனுக்கு அறிவிக்க வேண்டும்.

112½-113½. பின்னர் பிரமனை விஸர்ஜனஞ் செய்து, ஸம்ஹார முத்திரை செய்துகொண்டு, ஆன்ம மந்திரத்தை உச்சரித்துக் கும்பகஞ் செய்து, ராகுவால் விடப்பட்ட சிறிது பாகத்தை உடைய சந்திர பிம்பத்திற்குச் சமானமான ஆன்மாவை, வலது நாடியால் மெல்ல எடுத்து, உத்பவ முத்திரை செய்து ரேசகஞ் செய்துகொண்டு, பாசசூத்திரத்திற் 1 சேர்க்க வேண்டும்.

114½. 2 பூஜித்து, அர்க்கிய பாத்திரத்தில் இருப்பதாயும், அமிருதத்திற்குச் சமானமாயும் இருக்கிற ஜலபிந்துவை, சிரமம் நீங்குதற்காக ஆசாரியர் சிஷ்யனுடைய சிரசில் விட வேண்டும்.

115½. வாகீசுவரீ வாகீசுவரர்களை 3 விஸர்ஜனஞ் செய்து கிரியையின் பூர்த்தியின் பொருட்டு, வௌஷடை இறுதியில் உடைய சிவமந்திரத்தை உச்சரித்துப் பூர்ணாகுதி கொடுக்கவேண்டும். இவ்வாறு நிவிருத்தி கலையின் சுத்தி கூறப்பெற்றது.

## ப்ரதிஷ்டாகலையைச் சுத்தி செய்யுமுறை.

116½. பின்னர் சுத்தமான நிவிருத்திகலையை மகாரகலையீறாக (மாயையீறாக) ஹ்ரஸ்வமாகவும், அசுத்தமான ப்ரதிஷ்டா

---

1 வாமை என்னும் சத்தியால் சென்று, ஜ்யேஷ்டாசத்தியால்பிரித்து, ரௌத்ரீ சத்தியால் ஆன்மாவைக்குண்டத்தினின்று எடுத்து, வாமை என்னும் சக்தியால் பூரகஞ் செய்து, தன்னுடைய இருதயத்திற்குக் கொண்டு வந்து கும்பகஞ்செய்து, துவாதசாந்தத்தில் இருப்பதாகச் செய்து, ரேசகத்தினால் பாசசூத்திரத்தில் சேர்க்க வேண்டும்.

2 ஆன்மாவைப் பாச சூத்திரத்திற் சேர்த்த பின்னர், பாச சூத்திரத்திலுள்ள ஆத்மாவைப் பூஜித்து, அவகுண்டனஞ் செய்து, ஸன்னிதானகுதிகளைக் கொடுத்து என்பது பொருள்.

3 பூஜை தர்ப்பணம் இவற்றைச் செய்து, அர்க்கியம் ஸமர்ப்பித்து விஸர்ஜனம் செய்து.

கலையை நாதம் முடிவாக தீர்க்கமாகவும் உச்சரித்து இரண்டு கலைகளுக்கும் 1 ஸந்தானத்தைச் செய்ய வேண்டும்.

ஓம் ஹாம் ஹூாம் ஹாம் ஹாம் ஹூீம் ஹாம் நிவ்ருதிப்ரதிஷ்டாப்யாம் நம: (2 என்பது ஸந்தானம் செய்தற்குரிய மந்திரம்)

## தத்துவாத்துவாவைச் 3 சிந்தித்தல்.

117½-118. ஜலம், அக்கினி, காற்று, ஆகாயம், 4 தன்மாத்ரங்கள், இந்திரியங்கள், புத்தி, முக்குணங்கள், அஹங்காரம், இருபத்து நான்காவதாக புருஷதத்வம் ஆகிய இந்தத் தத்துவங்களை, ப்ரதிஷ்டா கலையிலடங்கியவையாகப் பாவிக்க வேண்டும்.

## வர்ணத்துவாவைச் சிந்தித்தல்.

118½. வ என்னும் அக்கரம் முதல் ய என்னும் அக்கரம் ஈறுன இருபத்தைந்து அக்கரங்களையும்,

## புவனத்துவாவைச் சிந்தித்தல்.

119½. ஐம்பத்தாறு புவனங்களுடன் ஸமானமான பெயர்களை உடைய அவ்வளவு உருத்திரர்களையும் அந்தப் பிரதிஷ்டா கலையில் அடங்கியவர்களாகப் பாவிக்க வேண்டும். அவர்கள் பெயர் வருமாறு:—

---

1 சுத்தி செய்யப்பெற்ற கலையை அதற்கு மேலுள்ள சுத்தி செய்யப் பெறுத கலையில் உபசம்ஹாரம் செய்தல் இவ்விடத்து ஸந்தானமெனப்படும்.

2 இந்தமந்திரத்தை உச்சரித்து, நாபிக்குக்கீழ் பூஜித்து, மூன்று ஆகுதிகள் கொடுத்து, சுத்தமான நிவிருத்திகலையை அசுத்தமான பிரதிஷ்டா கலையில் அடங்கியதாகப் பாவிக்க வேண்டும்.

3 ஓம் ஹாம் சூயாரமூஷகயெ நம: என்று அக்னியில் ஆதாரசக்தியைப்பூஜித்து ஆகுதிகள்கொடுத்துபாசஸூத்திரத்தில்ப்ரதிஷ்டாகலையின் வியாப்தியை ஓம் ஹூீம் ப்ரதிஷ்டாகலாயை நம: என்று அவலோகநம் செய்து சிந்தித்தல்.

4 இவற்றிற்குக் காரணங்களான தன்மாத்ரங்கள் நான்கு என்பது கருத்து.

120½-127½. அமரேசர், ப்ரபாஸர், நைமிசர், புஷ்கரர், ஆஷாடி, 1 டிண்டி, 2 பாரபூதி, எட்டாவதாக லகுளீசுவரர், ஹரிச் சந்திரர், ஸ்ரீசைலர், 3 ஜல்பேசர், 4 ஆம்ராதகேசுவரர், மஹா காளர், மத்யமேசுவரர், கேதாரர், பைரவர், ஆக இரண்டாவது எட்டுப் பேர்களும் கூறப்பட்டனர். பின்னர் கயா, குரு க்ஷேத்ரம், நாகலம், நகலம், விமலர், அட்டஹாஸர், மஹேந் திரர், பீமர், வஸ்திராபதர், ருத்ரகோடி, அவிமுக்தர், மஹாலயர், கோகர்ணர், பத்ரகர்ணர், ஸ்வர்ணாக்ஷர், ஸ்தாணு, அஜேசர், ஸர்வ க்ஞர், பாசுரர், சுபாகு, மந்திரரூபீ, விசாலர், 5 ஜடிலர், ரௌத்ரே சர், பிங்களாக்ஷர், காலதம்ஷ்ட்ரீ, 6 விதுரர், கோரர், ப்ராஜாபத் யர், ஹுதாசனர், 7 காலரூபீ, காலகண்டர், பயாநகர், பதங்கர், பிங்களர், ஹரர், 8 ஸாவித்ரர், சங்குகர்ணர், ஸ்ரீகண்டர், சந்திர மௌளி ஆகியவர்களாவர்.

128. பின்னர் பவ என்னும் பதம் வரையிலுள்ள பதங்க ளும் கூறப்படுகின்றன.

𑌵𑍍𑌯𑌾𑌪𑌿𑌨𑍇 𑌵𑍍𑌯𑌾𑌪𑌿𑌨𑍇। 𑌅𑌰𑍂𑌪𑌿𑌣𑍇 𑌅𑌰𑍂𑌪𑌿𑌣𑍇। 𑌪𑍍𑌰𑌥𑌮 𑌪𑍍𑌰
𑌥𑌮। 𑌤𑍇𑌜𑌸𑍍𑌤𑍇𑌜𑌃। 𑌜𑍍𑌯𑍋𑌤𑌿𑌰𑍍𑌜𑍍𑌯𑍋𑌤𑌿𑌃। 𑌅𑌰𑍂𑌪। 𑌅𑌨𑌗𑍍𑌨𑌿। 𑌅𑌧𑍂𑌮।
𑌅𑌭𑌸𑍍𑌮। 𑌅𑌨𑌾𑌦𑍇। 𑌨𑌾 𑌨𑌾 𑌨𑌾 𑌨𑌾। 𑌧𑍂 𑌧𑍂 𑌧𑍂 𑌧𑍂। 𑍐। 𑌭𑍂𑌃।
𑍐। 𑌭𑍁𑌵𑌃। 𑍐। 9 𑌸𑍍𑌵𑌃। 𑌅𑌨𑌿𑌧𑌨। 𑌨𑌿𑌧𑌨। 𑌨𑌿𑌧𑌨𑍋𑌦𑍍𑌭𑌵।
𑌶𑌿𑌵 𑌶𑌰𑍍𑌵। 𑌪𑌰𑌮𑌾𑌤𑍍𑌮𑌨𑍍 𑌮𑌹𑍇𑌶𑍍𑌵𑌰। 𑌮𑌹𑌾𑌦𑍇𑌵 𑌸𑌦𑍍𑌭𑌾𑌵𑍇𑌶𑍍𑌵𑌰।
𑌮𑌹𑌾𑌤𑍇𑌜𑌃। 10 𑌯𑍋𑌗𑌾𑌧𑌿𑌪𑌤𑍇। 𑌮𑍁𑌞𑍍𑌚 𑌮𑍁𑌞𑍍𑌚। 𑌪𑍍𑌰𑌥𑌮 𑌪𑍍𑌰𑌥𑌮।
𑌶𑌰𑍍𑌵 𑌶𑌰𑍍𑌵। என்ற முப்பத்திரண்டு பதங்கள்.

128½-132. உ காரம் வகாரமாகிய பீஜங்கள், வாமதேவம், சிரசு, சிகை,ஆகிய மூன்று மந்திரங்கள்,காந்தாரீ, சுழுமுனை என்ற இரண்டு நாடிகள், ஸமானன் உதானன் என்ற இரண்டு வாயுக் கள், நா, குதம் என்ற இரண்டு இந்திரியங்கள், விஷயமாகிய ரூபம் ஸ்பரிசம் சப்தம் ரஸம் ஆகிய நான்கு குணங்கள் பாதிச் சந்திரனின் வடிவாயும் வெண்டாமரைப் புஷ்பத்தால்

---

1 டிண்டிமுண்டி, 2 பாரபூமி, 3 ஜலேசர், ஜல்பீசர், 4 ஆம்ராதிகே சுவரர், 5 உங்மதிலர் 6 விதுரர் 7 காமரூபி 8 விதாதா என்றவாறுன பாட பேதங்கள் பலவுள. விரியுமாதலின் இங்கு எழுதப்படவில்லை.

9 𑌸𑍂𑌃 10 𑌯𑍋𑌗𑌾𑌧𑌿𑌪𑌤𑌯𑍇 என்றும் பாட பேதங்களுண்டு.

அடையாளமிடப் பெற்றதாயும், வெண்மையாயுமுள்ள ஜல மண்டலம், 1 ஸ்வப்நாவஸ்தை, காரணேசுவரரான விஷ்ணு, ஆகிய புவனம் முதலிய யாவற்றையும், பிரதிஷ்டா கலையில் அடங்கியவையாகப் பாவித்துப் 2 பிரதிஷ்டா கலாமந்திரத்தை உச்சரித்துத் தேகத்திற்கட்டப் பெற்ற சூத்திரத்திற் புகுந்து இந்த ப்ரதிஷ்டா கலாபாசத்தைப் பிரிக்கவேண்டும்.

132½. பின்னர் ஓம் ஹாம் ஹ்வீம் ஹாம் ப்ரதிஷ்டாகலா பாசாய ஸ்வாஹா என்னும் மந்திரத்தை உச்சரித்துப் பூரகஞ் செய்து, அங்குசமுத்திரையால் ஆன்மாவை 3 இழுக்கவேண்டும். ஓம் ஹௌம் ஹாம் ஹ்வீம் ஹாம் ஹௌம் ப்ரதிஷ்டாகலா பாசாய ஹூம் பட் என்னும் மந்திரத்தை உச்சரித்து, ஸம்ஹார முத்திரை செய்துகொண்டு கும்பகஞ் செய்து. இருதயத்திற்குக் கீழே உள்ள நாபிஸூத்திரத்தை எடுத்து ஓம் ஹாம் ஹ்வீம் ஹாம் ப்ரதிஷ்டாகலா பாசாய நம: என்னும் மந்திரத்தை உச்சரித்து ரேசகஞ் செய்து, உத்பவ முத்திரை செய்துகொண்டு குண்டத்தில் 4 வைக்க வேண்டும். ஓம் ஹாம் ஹ்வீம் ஹாம்

---

1 வெளியிந்திரியங்கள் தொழிற்படாமல் மனம் புத்தி அஹங்காரம் இவை மாத்திரம் தொழிற்படும் பொழுது நிகழும் விஷயங்களை அநுபவிக்கும் நிலை ஸ்வப்நாவஸ்தையாகும்.

2 பிரதிஷ்டாகலா மந்திரத்தை உச்சரிக்க வேண்டிய முறை "ஓம் ஹாம் ஹ்வீம் ஹாம் ஸம்ஹ்வாயச் ப்ரதிஷ்டாம். கலாம் தயா। வாசாய ஹூம் பட் ஸ்வாஹா ந்யாஸேத் தஸ்ஸீதிக:॥ என்ற அசிந்திய விசுவ ஆகமச்லோகத்தாற் குறிக்கப்படுகின்றது. இ-ள். "ஓம் ஹாம் ஹ்வீம் ஹாம் என்னும் பீஜாக்ஷரங்களை முதலில் உச்சரித்து பின்னர், ப்ரதிஷ்டாகலா என்பதையும் அதன் பின் வாசாய ஹூம் பட் என்பதையும் உச்சரிக்க வேண்டுமென்பதாம்." இந்த ச்லோகம் மூலக்கிரந்தத்திலிருத்தற்குரியதாகும்.

3 இந்த மந்திரத்தை உச்சரித்து ஆன்மாவை இழுப்பதற்கு முன்னர் ஓம் ஹாம் ஹ்வீம் ஹாம் ப்ரதிஷ்டாகலா பாசாய ஹூம் பட் என்னும் மந்திரத்தை உச்சரித்துப் புஷ்பத்தால் நாபிக்குக் கீழே தாடனஞ் செய்யவேண்டும்.

4 குண்டத்திலுள்ள ஆதார சக்தியில் என்பது கருத்து.

ப்ரதிஷ்டாத்யாவாஸாய நம: என்னும் மந்திரத்தால் பூஜித்து அர்க்கியம் ஸமர்ப்பித்து, இந்த மந்திரத்தை ஸ்வாஹா சப்தத்தை இறுதியிலுடையதாக உச்சரித்து மூன்று ஆகுதிகள் கொடுத்து, ஸந்தர்ப்பணஞ் செய்து, மீண்டும் மூன்று முறை ஸந்நிதானுகுதிகளையும் கொடுத்து, அதன்பின் **ஓம் ஹாம் விஷ்ணவே நம:** என்று விஷ்ணுவை ஆவாஹனஞ் செய்து, பூஜை ஸந்தர்ப்பணங்களைச்செய்து,

133½. **விஷ்ணோ தவாதிகாரேऽஸ்மின் முமுக்ஷும் தீக்ஷயாம்யஹம் । பாவ்யம் த்வயா ஸநாதேந பரமேசாஜ்ஞயா ஸதா ॥**

இ-ள். ஓ விஷ்ணுவே! இந்த உம்முடைய அதிகாரத்தில், முக்தியில் விருப்பமுள்ள சிஷ்யனை, யான் தீக்ஷை செய்விக்கப் போகிறேன். 1 சிவபெருமானுடைய ஆணையால் தாம் அநுகூலமாக இருக்கவேண்டும். (என்ற இந்தச் சிவபெருமானுடைய ஆணையை விஷ்ணுவுக்கு அறிவிக்க வேண்டும்.)

134½. பின்னர் தேவியான வாகீசுவரியையும், வாகீசுவரரையும் முன்போல் ஆவாகனஞ்செய்து, அருச்சித்து, ஸந்தர்ப்பணஞ் செய்து, சிஷ்யனுடைய மார்பில் தாடனஞ் செய்யவேண்டும். **ஓம் ஹாம் ஹாம் ஹாம் ஹ: ஹூம் பட்** என்பது தாடனஞ் செய்தற்குரிய மந்திரம்.

135½. **ஹூம்** என்னும் அக்கரத்தை உச்சரித்துப் பிரவேசிக்கவேண்டும். அதன் பின் **ஓம் ஹாம் ஹம் ஹாம் ஹ: ஹூம் பட்** என்னும் மந்திரத்தால், பாசங்களுடன்கூடிய சிஷ்யனுடைய சைதன்யத்தை ஜ்யேஷ்டை என்னும் சக்தியால் பிரிக்கவேண்டும்.

136½. அங்குச முத்திரை செய்துகொண்டு, இருதயபீஜாக்கரங்களால் ஸம்புடமாகச் செய்யப் பெற்ற ஆன்ம பீஜாக்கரத்தை உடையதாயும், ஸ்வாஹாசப்தத்தை இறுதியிலுடையதாயுமுள்ள

---

1 சிவபெருமானுடைய ஆணையால் என்பதற்குப் பதிலாக "இவ்வாறு விஷ்ணுவுக்கு அறிவிக்க வேண்டும்" என்ற பொருளைத் தரும் வேறு பாடமுமுண்டு.

(ஓம் ஹாம் ஹாம் ஹாம் ஹூாஹா என்னும்) மந்திரத்தை உச்சரித்து, அந்த சைதன்யத்தை இழுத்து, எடுத்து, ஆன்மமந்திரத்தை நம: என்னும் சப்தத்தை இறுதியிலுடையதாக உச்சரித்துத் தன்னுடைய இருதயத்திற் சேர்க்கவேண்டும்.

137½. முன்போல் வாகீசுவரீ வாகீசுவரர்களுக்குச் சேர்க்கையைப் பாவித்து உத்பவமுத்திரை செய்துகொண்டு, ஓம் ஹாம் ஹாம் ஹாம் ஆத்மநே நம: என்னும் மந்திரத்தை உச்சரித்து, அந்தச் சைதன்யத்தை 1 வாமை என்னும் சக்தியால் வாகீசுவரியின் கருப்பத்திற் சேர்க்கவேண்டும்.

138½. 2 தேகங்கள் சித்திப்பதற்காக இருதயமந்திரத்தை உச்சரித்து ஐந்து ஆகுதிகளும், அவ்வாறே ஜனனத்திற்காக சிரோமந்திரத்தாலும், அதிகாரம் சித்திப்பதற்காகச் சிகாமந்திரத்தாலும், போகத்திற்காகக் கவசமந்திரத்தாலும்,

139½. லயத்திற்காக அஸ்திரமந்திரத்தாலும், பிரவாகங்களின் சுத்திக்காகச் சிவமந்திரத்தாலும், தத்துவசுத்தியின் பொருட்டு இருதயமந்திரத்தாலும், இவ்வாறு கர்ப்பாதானம் முதலுள்ள ஒவ்வொரு ஸம்ஸ்காரத்திற்கும் முன்போல் ஐந்து ஐந்து ஆகுதிகள் கொடுக்கவேண்டும்.

140½. 3 பாசங்களின் பந்தம் நீங்குதற்காகவும், நிஷ்கிருதியின் பொருட்டும், சிரோமந்திரத்தால் 4 நூறு ஆகுதிகள் கொடுக்கவேண்டும். மலத்தை அதிட்டிக்கும் சக்தி கெடுதற்காக அஸ்திரமந்திரத்தால் ஐந்து ஆகுதிகள் கொடுக்கவேண்டும்.

141½. இவ்வாறே பாசங்கள் பிரிதற்காகவும் அஸ்திரமந்திரத்தால் ஐந்து ஆகுதிகள் 5 கொடுக்கவேண்டும். பின்னர் பிரதிஷ்டாகலாமந்திரம் அதன் பீஜாக்கரம் இவற்றை உடைய

---

1 வாகீசுவரரின் இடது நாடியால் என்பது கருத்து.

2 எல்லா யோனிகளின் கர்ப்பங்களில் அவ்வவத் தேகங்கள் உண்டாதற்காக என்பது பொருள்.

3 கன்மபாசம் மாயாபாசம் முதலிய பாசங்களின் என்பது கருத்து.

4 தனித்தனி நூறு ஆகுதிகள் என்பது கருத்து.

5 எள்ளு முதலியவற்றால் என்பது பொருள்.

அஸ்திரமந்திரத்தை (ஓம் ஹ்வூம் வூதிஷாகயோவாஸாய ஹூ: ஹூம் ஃபட் என்னும் மந்திரத்தை) உச்சரித்து ஏழு முறை அஸ்திரமந்திரத்தால் ஜபிக்கப்பெற்ற கத்தரிக்கோலால் 1 அஸ்திரமந்திரத்தை உச்சரித்து 2 அறுக்கவேண்டும்.

142½. நூலை அஸ்திரமந்திரத்தை உச்சரித்து முன்போல் துடைத்து உருண்டையாகச் செய்து நெய்யால் நிரம்பிய ஸ்ருவத்தில் வைத்துக்கொண்டு, ஓம் ஹ்வூம் வூதிஷாகயோவாஸாய ஹூ: ஹூம் ஃபட் என்னும் மந்திரத்தாலேயே ஹோமஞ்செய்ய வேண்டும்.

143½. பாசங்களின் அங்குரங்கள் (முளைகள்) கெடும்பொருட்டு, அஸ்திரமந்திரத்தால் ஐந்து ஆகுதிகளைக் கொடுக்க வேண்டும். அதன்பின்னர் ப்ராயச்சித்தத்திற்காக எட்டு ஆகுதிகளைக் கொடுக்கவேண்டும். 3

ஓம் ஹ: அஸ்த்ராய ஹூம் ஃபட் என்பது அஸ்திரமந்திரம்.

## காரணேசுவரரான விஷ்ணுவைப் பூஜித்தல்.

144½. இருதய மந்திரத்தால் விஷ்ணுவை ஆவாஹனஞ் செய்து, பூஜை ஸந்தர்ப்பணங்களைச் செய்து, முன் கூறப்பட்ட முறையாக அதிகாரத்தை அர்ப்பணஞ் செய்ய வேண்டும்.

"ஓம் ஹாம் விஷ்ணவே ஸம் ஸ்வாஹா ஹ்ராம் ஸ்வாஹா"

என்னும் மந்திரத்தால் மூன்று ஆகுதிகள் கொடுத்து விஷ்ணுவிடம் விக்ஞாபனஞ் செய்து கொள்ளவேண்டும்.

145½. அது வருமாறு— ஓ விஷ்ணுவே! குறைவின்றிப் பொசுக்கப்பட்ட பாசங்களை உடைய இந்த ஆன்மாவைத் தாம் பந்திப்பவராக இருக்கக் கூடாது" என்ற சிவபெருமானுடைய ஆணையை அறிவிக்க வேண்டும்.

1 ஒரு மாத்திரையுள்ள ஸ்வரத்துடன் உச்சரித்து என்பது கருத்து.

2 ப்ரதிஷ்டாகலையின் எல்லையில் அறுக்க வேண்டும்.

3 ஆகுதிகளைக் கொடுத்த பின்னர், இவ்வாறு எல்லாச் சரீரங்களும் நாசமடைந்திருந்த அளவில், ஆன்ம சைதன்யமானது ஒன்றுபட்டதாகவும், சுத்த தத்துவத்தின் முன்னிலையில் இருப்பதாகவும், சுத்தமான ஸ்படிகமணியின் காந்திபோன்ற காந்தியை உடையதாகவும், பிரதிஷ்டா கலையினின்று விடுபட்டதாகவும் பாவிக்க வேண்டும்,

146½. பின்னர், விஷ்ணுவை விஸர்ஜனஞ்செய்து, ராகுவால் விடப்பட்ட பாதிச் சந்திரமண்டலத்திற்குச் சமமான ஆன்மாவை 1 ரௌத்ரீ சக்தியுடன் சேர்க்க வேண்டும்.

147½-148½. ஸம்ஹார முத்திரை செய்துகொண்டு, அந்த ஆன்மாவைத் தன்னிடத்தில் இருப்பதாகச் செய்து, உத்பவ முத்திரை செய்துகொண்டு, நூலிற் சேர்த்து, முன்போல் ஜலத்திவலையை விட்டு, புஷ்பம் முதலியவற்றால் பூஜிக்கப்பட்ட வாகீசுவரீ வாகீசுவரர்களை அக்கினியினின்று உத்வாஸனஞ் செய்து, விதிப்படி பூர்ணாகுதியைக் கொடுக்க வேண்டும். இவ்வாறு ப்ரதிஷ்டா கலை சுத்தி கூறப்பட்டது.

## வித்தியாகலையைச் சுத்தி செய்யும் முறை.

149½. பின்னர், வித்யாகலையில் இதற்கு முன்னுள்ள கலையான ப்ரதிஷ்டா கலையுடன் சந்தானத்தைச் செய்ய வேண்டும். வித்யாகலையில் முன்போல் தத்துவங்கள் அக்கரங்கள் முதலியவற்றை அடங்கியவையாகப் பாவிக்க வேண்டும். எவ்வாறெனில்,

ஓம் ஹாம் ஹ்வீம் ஹ்ரூம் ஹாம் ப்ரதிஷ்டா வித்யாப்யாம் நம: என்று சொல்லிக் கொண்டு கழுத்திற்குக் கீழே 2 அருச்சித்து,

150½. அராகம், சுத்தவித்தை, நியதி, கலை, காலம், மாயை, வித்தை ஆக ஏழு தத்துவங்கள்.

151½. ர, ல, வ, ஶ, ஷ, ஸ, ஆகிய ஆறு அக்கரங்கள் வித்யா கலையிற் கூறப்பட்டன. பிரணவம் முதலான இருபத்தொரு பதங்களும் கூறப்பட்டன. அவையாவன:—

1 ஓம் ஹாம் ஹம் ஹாம் ரௌத்ரை நம: என்று சொல்லிக் கொண்டு ஸம்ஹாரமுத்திரை செய்து ரௌத்ரீ சக்தியால் அக்கினியிலிருந்து ஆன்மாவை எடுக்க வேண்டுமென்பது கருத்து.

2 அருச்சித்த பின்னர், மூன்று ஆகுதிகள் கொடுத்துச் சுத்தமான ப்ரதிஷ்டா கலையை அசுத்தமான வித்யாகலையில் லயமடைந்ததாகப் பாவித்து, ஓம் ஹாம் ஆதாரசக்த்யை நம: என்று அக்கினியில் ஆதாரசக்தியைப் பூஜித்து, மூன்று ஆகுதிகள் கொடுத்து, தேகத்திற் கட்டப்பட்ட நூலில் வித்யாகலையின் ஸ்தானத்தில், ஓம் ஹ்ரூம் வித்யாகலாயை நம: என்று சொல்லிக் கொண்டு, வித்தியாகலையின் வியாப்தியை அவலோகனஞ் செய்ய வேண்டும்.

ௐ நம: । ஶிவாய । ஸர்வப்ரபவே ஶிவாய । ஈஶாநமூர்த்தயே । தத்புருஷவக்த்ராய । அகோரஹ்ருதயாய । வாமதேவ குஹ்யாய । ஸத்யோஜாதமூர்த்தயே । ௐ நம: । நம: குஹ்யாதி குஹ்யாய । கோப்த்ரே । அநிதநாய । ஸர்வயோகாதிக்ருதாய । ஸர்வவித்யாதிபாய । ஜ்யோதீரூபாய । பரமேஶ்வரபராய । அசேதநாசேதந । வ்யோமிந் வ்யோமிந் என்னுமிவையாகும்.

152½-155½. பின்னர், ருத்திரர், புவனம் இவற்றின் ஸ்வரூபம் கூறப்படுகிறது. முதலாவது வாமதேவராவர், பின்னர், சர்வர், பவர், உத்பவர், வஜ்ரதேகர், ப்ரபு, தாதா, க்ரமர், விக்ரமர், சுப்ரபர், புத்தி, ப்ரசாந்தர், பரமாக்ஷரர், சிவர், சுசிவர், பப்ரு, அக்ஷயர், சம்பு, அதிருஷ்டரூபர், தாமக்னர், ரூபவர்த்தனர், மனோன்மனர், மஹாவீர்யர், சித்ராங்கர், கல்யாணர் ஆகிய இருபத்தைந்து ருத்ரர்கள் 1 அறியத்தக்கவர்களாவர்.

156½-158½. அகோர மந்திரம் ஒன்று, மகாரம், ரேபம் ஆகிய இரண்டு பீஜாக்கரங்கள், பூஷை, ஹஸ்திஜிஹ்வை என்ற இரண்டு நாடிகள், வியானம் நாகம் என்ற இரண்டு வாயுக்கள், ரூபமாகிய ஒரு விஷயம், கால் கண் ஆகிய இரு இந்திரியங்கள், சப்தம் பரிசம் ரூபம் ஆகிய மூன்று குணங்கள், 2 சுழுப்தியவஸ்தை, காரணேசுவரரான ருத்ரர் ஆகிய புவனம் முதலியயாவற்றையும் வித்யாகலையிலடங்கியவையாகப் பாவிக்க வேண்டும்.

159½. அந்த வித்யாகலையில் 3 தாடனஞ் செய்தல், பேதித்தல், புகுதல், பிரித்தல், இழுத்தல், கிரகித்தல் ஆகிய இவற்றைச் செய்ய வேண்டும்.

1 இவர்களுடைய பெயராலேயே புவனங்களும் அறியத் தக்கன.

2 கண் முதலிய புற இந்திரியங்கள், மனம் முதலிய உள் இந்திரியங்கள் இவற்றின் தொழிற்பாடின்றி, சித்தம் பிராணன் ஆன்மா மூன்றும் உள்ள நிலை சுழுப்தியாகும்.

3 ௐ ஹாம் ஹ்ரீம் ஹாம் வித்யாகலாயை ஹ: ஹா ஹும் ஃபட் என்னும் மந்திரத்தினால் கழுத்திற்குக் கீழ் தாடனமும், இதனையே நமோந்தமாக உச்சரித்துப் புகுதலும், படந்தமாக உச்சரித்துப் பிரித்தலும், ஸ்வாஹாந்தமாக உச்சரித்து இழுத்தலும், ஹும்ஃபடந்தமாக உச்சரித்து கிரஹித்தலும் முன் கூறப்பட்ட முத்திரைகளால் செய்யப்படவேண்டும். நிவிருத்திகலையைச் சுத்தி செய்தபடி கலைதோறும் ஊகித்துக் கொள்ள வேண்டும்.

160½-161½. இருதயத்திலிருந்து வித்யா கலையைத் தன்னிடத்திலாரோபணஞ் செய்து எடுத்து குண்டத்தில் வைக்க வேண்டும். காரணேசுவரான ருத்ரரை ஆவாஹனஞ் செய்து, புத்ரகனைப் பற்றி 1 அறிவித்து, வாகீசுவரீ வாகீசுவரர்களை 2 ஆவாஹனஞ் செய்து, புத்ரகனுடைய இருதயத்தில் தாடனஞ் செய்யவேண்டும். அவனுடைய இருதயத்திற் பிரவேசித்து, முன் கூறப்பட்ட 3 மந்திரத்தால் புத்ரகனுடைய ஆன்மாவைப் பிரிக்கவேண்டும்.

162½. முன் கூறப்பட்ட முறையால் ஆன்மாவை இழுத்து எடுத்துத் தன்னிடத்திற் சேர்க்க வேண்டும். துவாதசாந்தத்திலிருந்து ஆன்மாவை எடுத்து வாகீசுவரரின் இடது நாடியால் வாகீசுவரியினுடைய யோனியிற் சேர்க்க வேண்டும்.

163½. தேகசித்தி, ஜனனம், அதிகாரம், போகம், லயம், பிரவாஹசுத்தி, அவ்வாறே பிரதிட்டா தத்துவசுத்தி, இவற்றைச்செய்ய வேண்டும்.

164½. ஸமஸ்தமான மலம் கன்மம் முதலிய பாசங்களின் கட்டுகள் நீங்கும் பொருட்டும், நிஷ்கிருதியின் பொருட்டும், விதிப்படி நூறு ஆகுதிகள் ஹோமஞ் செய்ய வேண்டும்.

165½-166½. அஸ்திர மந்திரத்தால் பாசங்களின் பிரிதலையும், மலத்தை அதிட்டிக்கும் சக்தியின் கெடுதலையும், பாசங்களின் அறுத்தல், மர்த்தனஞ் செய்தல், உருண்டையாகச் செய்தல், அவ்வாறே தகனஞ் செய்தல், பாசங்களின் முளைகளற்றுப் போதல், கூறப்பட்டவாறு ப்ராயச்சித்தஞ்செய்தல், ருத்திரரை

---

1 ருத்ர ஸ்வாதிகாரேऽஸ்மிந் மோமோக்ஷம் தீக்ஷயாऽத்ய ஹி | ஸாத்யம் ஸ்வயாநுகூல்யேந ஸதாசிவநியோகத: || இ-ள் "ஓ ருத்ரரே! உம்முடைய இந்த அதிகாரத்தில் மோக்ஷத்தில் விருப்பமுள்ள இந்தச் சிஷ்யனுக்குத் தீக்ஷை செய்விக்கப் போகிறேன். ஸதாசிவருடைய ஆணையால் தாம் அனுகூலமாக இருக்க வேண்டும்" என்பதாக அறிவித்து என்பது கருத்து.

2 பூஜை ஸந்தர்ப்பணங்களையுஞ் செய்து என்பது கருத்து.

3 ஓம் ஹாம் ஹம் ஹாம் ஹ: ஹூம் ஃபட் என்னும் மந்திரத்தால் என்பது கருத்து.

ஆவாஹனஞ் செய்தல், பூஜித்தல், ஓம் ஹாம் ... என்று சொல்லிக் கொண்டு ருத்திராருக்கு ரூபம் கந்தம் இவற்றைச்சமர்ப்பித்தல் ஆகிய இவற்றைச்செய்ய வேண்டும்.

167½. சிவபெருமானுடைய 1 ஆணையை அறிவித்து, காரணேசுவரரான ருத்திரரை விஸர்ஜனம் செய்து, (குண்டத்திலிருந்து) சைதன்யத்தைத் தன்னிடத்தில் ஏற்றி, அச்சைதன்யத்தைப் பாச சூத்திரத்தில் வைக்கவேண்டும்.

168¼. சிஷ்யனுடைய சிரசில் நீர் துளியை விட்டு, அதன் பின் வாகீசுவரீ வாகீசுவரர்களை விஸர்ஜனஞ் செய்து, எல்லாக் கிரியைகளையும் பூர்த்தி செய்வதாகிய பூர்ணாகுதியை விதிப்படி கொடுக்க வேண்டும்.

169½. முன் 2 கூறப்பட்ட முறைப்படி வித்யாகலையில் தாடனம் முதலியவற்றைச் செய்ய வேண்டும். ஈண்டு ஸபீஜ தீக்ஷையில் 3 ஒரு விசேஷமுண்டு. இவ்வாறு வித்யாகலை சோதிக்கப்பட்டது.

## சாந்தி கலையைச் சுத்தி செய்யுமுறை.

170½. இப்பொழுது வித்யாகலையை, சாந்தி கலையுடன் முறைப்படி 4 ஸந்தானஞ் செய்ய வேண்டும். சாந்திகலையில்

---

1 ... "ஓ ருத்திரரே! மோக்ஷத்திற்குச் செல்லுமிந்தச் சிஷ்யனுக்கு உம்மால் தடை செய்யத் தக்கதன்று. இது சிவபெருமானுடைய ஆணை" என்பதாம். இவ்வாறுன ஆணையை என்பது கருத்து.

2 நிவிருத்தி கலையில் கூறப்பட்டவாறு விரியச் செய்ய வேண்டுமென்பது கருத்து.

3 நிவிருத்தி முதலிய மூன்று கலைகளைச் சுத்தி செய்த பின்னரும் சாந்தி கலையைச் சுத்தி செய்வதற்கு முன்னருமான இச்சமயத்தில், முப்பத்தொரு தத்துவங்களின் ரூபமான சூக்கும தேகம் நசித்தற்காகவும், மனதாலும் வாக்காலும் சரீரத்தாலும் செய்யப்படும் கன்ம மலம் பந்தகமாகாதிருத்தற்காகவும், மூலமந்திரத்தால் நூறு நூறு ஆகுதிகள் கொடுக்க வேண்டுமென்பதே விசேஷமென்னும் பதத்தாற் கொள்ளப்பட்டது.

4 நிவிருத்தி கலையின் சுத்தியைக் கூறும்பொழுது ஸந்தானம் முதலியன விரிவாகக்கூறப்பட்டபடியால் சுருக்கமாகவே இங்கு கூறப்படுகின்றன.

முன் போல் தத்துவம் அக்கரங்கள் இவற்றை அடங்கச் செய்ய வேண்டும். அடக்கும் முறை வருமாறு:—

171½. சாந்திகலையில் ஈசுவர தத்துவம் ஸதாசிவதத்துவம் ஆகிய இரண்டு தத்துவங்களும், ஹகாரம், க்ஷகாரம் ஆகிய இரண்டு அக்கரங்களும் அடங்கியுள்ளன.

172½-174. புவனங்களோடு ஸமானமான பெயர்களையுடைய ருத்ரர்கள், சாந்திகலையில் ஸ்தாபிக்கப்பட்டிருக்கின்றனர். அவர்கள் பெயர் வருமாறு:— பிரபவர், ஸமயர், க்ஷுத்ரர், விமலர்,, சிவன், கணர், நிரஞ்சனர், ஓங்காரர், சுசிவர், தீப்தர், காரணர், த்ரிதசேச்வரர், த்ரிதசர், காலர், சூக்குமர், அம்புஜர், ஈசுவரர், ஆகிய இவர்களாம்.

𑌵𑍍𑌯𑍋𑌮𑌵𑍍𑌯𑌾𑌪𑌿𑌨𑍇 । 𑌵𑍍𑌯𑍋𑌮𑌰𑍂𑌪𑌾𑌯 । 𑌸𑌰𑍍𑌵𑌵𑍍𑌯𑌾𑌪𑌿𑌨𑍇 । 𑌶𑌿𑌵𑌾𑌯 । 𑌅𑌨𑌨𑍍𑌤𑌾𑌯 । 𑌅𑌨𑌾𑌥𑌾𑌯 । 𑌅𑌨𑌾𑌶𑍍𑌰𑌿𑌤𑌾𑌯 । 𑌧𑍍𑌰𑍁𑌵𑌾𑌯 । 𑌶𑌾𑌶𑍍𑌵𑌤𑌾𑌯 । 𑌯𑍋𑌗𑌪𑍀𑌠𑌸𑌂𑌸𑍍𑌥𑌿𑌤𑌾𑌯 । 𑌨𑌿𑌤𑍍𑌯𑌯𑍋𑌗𑌿𑌨𑍇 । 𑌧𑍍𑌯𑌾𑌨𑌾 (𑌨) 𑌹𑌾𑌰𑌾𑌯 । என்று பன்னிரண்டு பதங்களும், தத்புருஷ மந்திரம், கவசமந்திரம் ஆகிய இரண்டு மந்திரங்களும், பிந்து, யகாரம் ஆகிய இரண்டு பீஜாக்கரங்களும்,

174½-177. அலம்புஷை, யசை என்னும் இரண்டு நாடிகளும், கிரகரன், கூர்மன் என்னும் இரண்டு வாயுக்களும், த்வக், கை ஆகிய இந்திரியங்களும், பரிசமாகிய விஷயமும், பரிசம், சப்தம், ஆகிய இரு குணங்களும், ஒரு காரணேசுவரரான ஈசுவரரும் 1 துரீயாவஸ்தையும் ஆகிய புவனம் முதலிய யாவும், சாந்தி கலையில் இருப்பனவாகப் பாவித்து, தாடனஞ் செய்தல், பேதித்தல் பிரவேசித்தல், பிரித்தல் இவற்றைச் செய்ய வேண்டும்.

178. முகருத்ரத்திலிருந்து சாந்திகலையை ஆகர்ஷணம் செய்து கிரகிக்கவேண்டும். தன்னிடத்தில் அதனை ஏற்றி, கிரஹித்து, குண்டத்தில் 2 வைக்க வேண்டும்.

---

1 சரீரமிருக்கும் பொழுது இந்திரியங்கள் மனது பிராணன் ஆகிய இவை ஒடுங்கி அசைதல் முதலியன இல்லாத ஆன்ம நிலை துரீயாவஸ்தையாகும்.

2 வைத்த பின்னர்ச் செய்ய வேண்டிய ஸந்நிதாநுகுதி முதலியவற்றை முன் கூறியவாறு கொள்க.

179. ஓ ஈசுவரரே! இந்த உம்முடைய அதிகாரத்தில், முத்தியில் விருப்பமுள்ள சிஷ்னை யான் தீக்ஷை செய்விக்கப்போகிறேன். 1 சிவபெருமானுடைய ஆணையால் தாம் அனுகூலமாக இருக்கவேண்டும். (என்ற இந்தச் சிவபெருமானுடையஆணையை மகேசுவரருக்கு 2 அறிவிக்க வேண்டும்)

180. வாகீசுவரீ வாகீசுவரர்களுக்கு ஆவாஹனம் முதலியவற்றையும், சிஷ்யனுக்குத் தாடனம் முதலியவற்றையும் செய்து, சிஷ்யனுடைய சைதன்யத்தை எடுத்து, விதிப்படி தன்னிடத்திற் சேர்க்க வேண்டும்.

181. முன்போல் வாகீசுவரீவாகீசுவரர்களுக்குச் சேர்க்கையைப் பாவித்து, உத்பவ முத்திரை செய்துகொண்டு, இருதய பீஜாக்கரங்களால் ஸம்புடமாயுள்ள ஆன்மமந்திரத்தால் வாகீசுவரியின் கர்ப்பத்திற் சேர்க்க வேண்டும்.

182½-183. தேகங்கள் சித்திப்பதற்காக இருதய மந்திரத்தாலும், ஜனனத்திற்காக சிரோமந்திரத்தாலும், அதிகாரத்திற்காக சிகாமந்திரத்தாலும், போகத்திற்காகக்கவசமந்திரத்தாலும், லயத்திற்காக அஸ்திர மந்திரத்தாலும், பிரவாகங்களின் சுத்திக்காகச் சிவமந்திரத்தாலும், சாந்திதத்துவ சுத்திக்காக இருதய மந்திரத்தாலும், இவ்வாறு கர்ப்பாதானம் முதலுள்ள ஒவ்வொரு ஸம்ஸ்காரத்திற்காகவும், முன்போல் ஐந்து ஐந்து ஆகுதிகளைக் கொடுக்கவேண்டும்.

184. பாசங்களின் கட்டுக்கள் நீங்குவதற்காகவும், நிஷ்கிருதியின் பொருட்டும், கவசமந்திரத்தால் நூறு ஆகுதிகளைக் கொடுக்க வேண்டும். மலத்தை அதிட்டிக்கும் சிவசத்தி கெடுதற்காக அஸ்திர மந்திரத்தால் ஐந்து ஆகுதிகளைக் கொடுக்க வேண்டும்.

---

1 சிவபெருமானுடைய ஆணையால் என்பதற்குப் பதிலாக "இவ்வாறு மகேசுவரருக்கு அறிவிக்க வேண்டும்" என்ற பொருளைத் தரும் வேறு பாடமுமுண்டு.

2 ஈசுவரரை ஆவாஹனஞ் செய்து பூஜித்த பின்னர் இவ்வாறு சிவாக்ஞையை அறிவிக்க வேண்டும்.

185. இவ்வாறே பாசங்கள் பிரிதற்காவும் அஸ்திர மந்திரத்தால் ஐந்து ஆகுதிகள் கொடுக்க வேண்டும். பின்னர், ஓம் ஹௌம் ஹ்வௌம் ஹௌம் ஶாந்திகலாபாஶாய ஹ: ஹூம் ப²ட் என்னும் பீஜாக்ஷரங்களுடனும், அஸ்திர மந்திரத்துடனும் கூடிய சாந்திகலா மந்திரத்தை உச்சரித்து, ஏழு முறை அஸ்திர மந்திரத்தால் ஜபிக்கப் பெற்ற கத்தரிக்கோலால் பாசங்களை அறுக்கவேண்டும்.

186. அஸ்திரமந்திரத்தால் முன்போல் பாசங்களைத் துடைத்து, உருண்டையாகச் செய்து, நெய் நிரம்பிய ஸ்ருவத்தில் வைத்துக்கொண்டு, ஓம் ஹௌம் ஹ்வௌம் ஹௌம் ஶாந்திகலாபாஶாய ஹ: ஹூம் ப²ட் என்னும் மந்திரத்தாலேயே ஹோமம் செய்யவேண்டும்.

187. பாசங்களின் முளைகள் நசித்தற்காக, அஸ்திர மந்திரத்தால் ஐந்து ஆகுதிகள் கொடுக்க வேண்டும். ஓம் ஹ: அஸ்த்ராய ஹூம் ப²ட் என்னும் மந்திரத்தை உச்சரித்து, பிராயச்சித்தத்திற்காக எட்டு ஆகுதிகளைக் கொடுக்க வேண்டும்.

188. இருதய மந்திரத்தால் மகேசுவரரை 1 ஆவாஹனஞ் செய்து, பூஜை தர்ப்பணாகுதி இவற்றைச் செய்து, ஓம் ஹாம் மஹேஶ்வராய [illegible] ஶுல்கம் க்³ருஹாண ஸ்வாஹா என்று சொல்லிக்கொண்டு, விதிப்படி மகேசுவரன் பொருட்டு 2 சுல்கத்தைச் சமர்ப்பிக்க வேண்டும்.

189. "ஓ மகேசுவரரே! மீதமின்றிப் பொசுக்கப்பட்ட பாசங்களை உடைய இந்த ஆன்மாவுக்குத் தாம் பந்திப்பவராக இருக்கக் கூடாது." என்ற இவ்வாறான சிவாக்ஞையை அறிவிக்க வேண்டும்.

190. தேவரான ஈசுவரரை விஸர்ஜனம் செய்ய வேண்டும். ஆன்மாவை 3 ரௌத்ரீ சக்தியுடன் சேர்க்க வேண்டும். சிறிது

1 அக்கினியில் ஆவாஹனஞ் செய்து.

2 சுல்கமாவது செலுத்த வேண்டிய தக்ஷிணை.

3 ரௌத்ரீ சக்தியால் அக்கினியிலிருந்து ஆன்மாவை எடுக்க வேண்டுமென்பது கருத்து.

மங்கின சந்திரன் போலுள்ள ஆன்மாவை விதிப்படி தன்னிடத்திற் சேர்க்க வேண்டும்.

191. உத்பவமுத்திரைசெய்துகொண்டு, இந்த ஆன்மாவை எடுத்து, சிஷ்யனுடைய தலையில் கட்டப்பட்ட நூலிற் சேர்க்க வேண்டும். மூலமந்திரத்தை உச்சரித்துச் சிஷ்யனுடைய சிரசில் அர்க்கியஜலத் திவலையை விடவேண்டும்.

192. புஷ்பம் முதலியவற்றால் பூஜிக்கப்பட்டவர்களான வாகீசுவரீ வாகீசுவரர்களை அக்கினியிலிருந்து விஸர்ஜனம்செய்து, செய்யவேண்டிய விதிகளை அறிந்த ஆசாரியர் எல்லாக் கிரியைகளையும் பூர்த்தி செய்யும் பூர்ணாகுதியைக் கொடுக்க வேண்டும்.

193. இந்தச் சாந்திகலையிலும், முன்போல் தாடனம் முதலியவற்றைச் 1 செய்யவேண்டும். இந்தச் சாந்தி கலையைச் சுத்தி செய்வதில் ஒரு 2 விசேஷமுண்டு. இவ்வாறு சாந்திகலையின் சுத்தி கூறப்பட்டது.

## சாந்தியதீத கலையைச் சுத்தி செய்யுமுறை.

194. சுத்தி செய்யப் பெற்ற சாந்தி கலையுடன் சாந்தியதீத கலைக்கு ஸந்தானத்தைச் செய்ய வேண்டும். அந்தச் சாந்தியதீத கலையில் முன்போல் தத்துவங்கள் அக்கரங்கள் முதலியவற்றை அடக்க வேண்டும். அவை வருமாறு:—

ஓம் ஹாம் ஹைம் ஹௌம் ஹாம் ஶாந்தி ஶாந்த்யதீதா ஹ்ராம் நம: என்பது ஸந்தானஞ் செய்தற்குரிய மந்திரம்.

195-199. சக்தி தத்துவம், சிவதத்துவம் ஆகிய இரண்டு தத்துவங்களும், இந்திகை, தீபிகை, ரோசிகை, மோசிகை, ஊர்த்வகாமினீ, வ்யோமரூபம், அநாதம், எட்டாவதாக அநாசிரிதம் ஆகிய எட்டுப் புவனங்களும், ஓங்காரமாகிய ஒரு பதமும், ஈசான

1 விரிவாகச் செய்ய வேண்டுமென்பது பொருள்.

2 முன் கூறப்பட்ட அசுத்த தத்துவங்களாலாகிய சூக்கும சரீரம் போன்ற மஹாமாயா ரூபமான சுத்தமான சூக்கும சரீரம் வாயிலாக, ஆன்மாவிற்குக் கிரஹித்தல் முதலியன கூடுமென்பதே இவ்விடத்தில் விசேஷமென்னும் பதத்தால் கொள்ளத்தக்கது.

மந்திரம் ஒன்றும், அகாரம் முதல் விஸர்க்கம் ஈருன பதினறு அக்கரங்களும், நாதம், ஹகாரம் ஆகிய இரண்டு பீஜாக்கரங்களும், குஹூ, சங்கினீ. என்ற இரண்டு நாடிகளும், தேவதத்தன், தனஞ்சயன் என்ற இரண்டு வாயுக்களும், வாக்கு, காது, ஆகிய இரண்டு இந்திரியங்களும், விஷயமாகிய சப்தமும், குணமாகிய சப்தமும், ஐந்தாவதான 1 துரியாதீதாவஸ்தையும், காரணேசுவரரான ஸதாசிவரும் ஆகிய இந்தத் தத்துவம் முதலிய யாவற்றையும் சாந்தியதீத கலையில் இருப்பனவாகத் தியானித்து,த் தாடனம் முதலியவற்றைச் செய்யவேண்டும்.

200. சாந்தியதீத கலாபாசத்தைத் தாடனஞ் 2 செய்து, ஹுட் என்னும் பதத்தை இறுதியிலுடைய சாந்தியதீத கலாமந்திரத்தால் பேதித்து, நம: என்னும் பதத்தை இறுதியிலுடைய இந்தச்சாந்தியதீத கலாமந்திரத்தால் பிரவேசித்து, ஹும்பட் என்னும் பதத்தை இறுதியிலுடைய இந்தச் சாந்தியதீத கலாமந்திரத்தாற் பிரிக்க வேண்டும்.

201.202. சிகாபீஜம் இருதய பீஜம் இவற்ருல் ஸம்புடமாகச் செய்யப்பட்டதாயும், ஸ்வாஹா என்னும் பதத்தை இறுதியிலுடையதாயுமுள்ள சாந்தியதீத கலாமந்திரத்தை உச்சரித்து, அங்குச முத்திரை செய்துகொண்டு, பூரகத்தினல் மத்தகத்திற் கட்டப்பட்ட பாசத்தை இழுத்து, கும்பகத்தினல் எடுத்து, உத்பவ முத்திரை செய்துகொண்டு, இருதய பீஜாக்கரங்களால் ஸம்புடமாகச் செய்யப்பட்ட சாந்தியதீத கலாபீஜாக்கரமாகிய ஹௌம் என்பதையுடையதாயும், நம: என்னும் பதத்தை இறுதியிலுடையதாயுமுள்ள சாந்தியதீதகலா மந்திரத்தை உச்சரித்து, ரேசகத்தினல் அக்கினி குண்டத்தில் சாந்தியதீத கலா பாசத்தை வைக்க வேண்டும்.

203-204. நிவிருத்தி கலைக்குச் செய்யப்பட்டவாறு, இந்த சாந்தியதீத கலைக்கும் பூஜை முதலிய யாவற்றையுஞ் செய்யவே

---

1 கருவிகளின் தொழிற்பாடு ஒன்றுமின்றி ஆன்மா மாத்திரம் இருக்கும் நிலை துரியாதீத அவஸ்தையாகும்.

2 நாராச முத்திரை செய்து, பிரமரந்திரத்திற்குக் கீழே புஷ்பத்தால் தாடனஞ் செய்து என்பது பொருள்.

ண்டும். ஸதாசிவரை (அக்கினியில்) ஆவாஹனஞ் செய்து, பூஜித்துத்; தர்ப்பணாகுதிகளைச் செய்து "ஓ ஸதாசிவரே! இந்த உம்முடைய அதிகாரத்தில் முக்தியில் விருப்பமுள்ள (இந்தச்) சிஷ்யனுக்கு நான் தீக்ஷை செய்விக்கப்போகிறேன். தாம் அநுகூலமாக இருக்க வேண்டும்" என்று அன்புடன் ஸதாசிவருக்கு அறிவிக்க வேண்டும்.

205. வாகீசுவரீ வாகீசுவரர்களை ஆவாஹனஞ் செய்து, பூஜித்து, தர்ப்பணம் ஸாந்நித்யம் இவற்றைச் செய்து, இருதய பீஜாக்கரங்களால் ஸம்புடம் செய்யப்பட்ட ஆன்ம பீஜாக்கரத்தால், சிஷ்யனுடைய இருதயத்தில் தாடனஞ் செய்யவேண்டும்.

ஓம் ஹாம் ஹம் ஹாம் ஹ: ஹ்ரூம் ஃபட் என்பது இங்கு தாடனம் செய்தற்குரிய மந்திரமாகும்.

206. இதே மந்திரத்தால், சிஷ்யனுடைய இருதயத்திற்குள் பிரவேசிக்கவேண்டும். அதன்பின் பாசங்களுடன்கூடின சைதன்யத்தை, அஸ்திரமந்திரத்தை (ஓம் ஹாம் ஹம் ஹாம் ஹ: ஹ்ரூம் ஃபட் என்னும் மந்திரத்தை) உச்சரித்து, ஜ்யேஷ்டை என்னும் சத்தியால் சிஷ்யனுடைய சைதன்யத்தைப்பிரிக்கவேண்டும்.

207. ஸ்வாஹா என்னும் பதத்தை இறுதியில் உடைய இருதய மந்திரத்தால் (ஓம் ஹாம் ஹம் ஹாம் ஸ்வாஹா என்னும் மந்திரத்தால்) சிஷ்யனுடைய சைதன்யத்தை அங்குச முத்திரை செய்து இழுத்து, இருதய பீஜாக்கரங்களாலேயே ஸம்புடமாகச் செய்யப்பட்ட ஆன்ம மந்திரத்தால் அந்தச் சைதன்யத்தைக் கிரகித்து, நம: என்னும் பதத்தை இறுதியிலுடைய ஆன்ம மந்திரத்தால் தன்னுடைய இருதயத்திற் சேர்க்கவேண்டும்.

ஓம் ஹாம் ஹம் ஹாம் ஆத்மனே நம: என்பது நம: என்னும் பதத்தை இறுதியிலுடைய ஆன்ம மந்திரம்.

208. முன்போல் வாகீசுவரீ வாகீசுவரர்களுக்குச் சேர்க்கையைப் பாவித்து, உத்பவ முத்திரை செய்துகொண்டு, இதே மந்திரத்தாலேயே (ஓம் ஹாம் ஹம் ஹாம் ஆத்மனே நம: என்னும் மந்திரத்தாலேயே) அந்தச் சிஷ்யனுடைய சைதன்யத்தை, வாகீசுவரரின் இடது நாடியால் வாகீசுவரியின் கர்ப்பத்திற் சேர்க்க வேண்டும்.

209. முன்கூறப்பட்ட விதிப்படி கர்ப்பாதானம் முதலிய யாவற்றையும் செய்யவேண்டும். பாசங்களின் கட்டுக்கள் நீங்கும் பொருட்டும், நிஷ்கிருதியின் பொருட்டும், மூலமந்திரத்தை உச்சரித்து நூறு ஆகுதிகளைக் கொடுக்க வேண்டும்.

210. மலத்தை அதிட்டிக்கும் சக்தி கெடும்பொருட்டும், பாசங்கள் பிரியும் பொருட்டும், முன்போல் அஸ்திரமந்திரத்தால் ஐந்து ஐந்து ஆகுதிகளைக் கொடுக்க வேண்டும்.

211. சாந்தியதீதகலா மந்திரம், அதன் பீஜாக்கரம், இவற்றுடன் கூடிய அஸ்திர மந்திரத்தை உச்சரித்து (𑍐 𑌹𑍌𑌂 𑌹𑍌𑌂 𑌹𑍌𑌂 𑌶𑌾𑌨𑍍𑌤𑍍𑌯𑌤𑍀𑌤𑌕𑌲𑌾𑌵𑍍𑌯𑌾𑌪𑌕𑌾𑌯 𑌹𑌃 𑌹𑌾 𑌫𑌟𑍍 என்னும் மந்திரத்தை உச்சரித்து) ஏழு முறை அஸ்திர மந்திரத்தால் ஜபிக்கப் பெற்ற கத்தரிக்கோலால் பாசங்களை அறுக்க வேண்டும்.

212. முன்போல் பாசங்களை அஸ்திர மந்திரத்தால் துடைத்து, உருண்டையாகச் செய்து, நெய்யால் நிரம்பப் பெற்ற ஸ்ருவத்தில் வைத்துக்கொண்டு, 𑍐 𑌹𑍌𑌂 𑌹𑍌𑌂 𑌹𑍌𑌂 𑌶𑌾𑌨𑍍𑌤𑍍𑌯𑌤𑍀𑌤𑌕𑌲𑌾𑌵𑍍𑌯𑌾𑌪𑌕𑌾𑌯 𑌹𑌃 𑌹𑌾 𑌫𑌟𑍍 என்னும் மந்திரத்தால் ஹோமஞ் செய்யவேண்டும்.

213. பாசங்களின் முளைகள் நீங்குதற்காக அஸ்திர மந்திரத்தை உச்சரித்து, ஐந்து ஆகுதிகளைக் கொடுக்க வேண்டும். அதன் பின்னர் அஸ்திர மந்திரத்தை உச்சரித்து, எட்டுப் பிராயச்சித்தாகுதிகளையும் கொடுக்க யேண்டும்.

214. ஸதாசிவரை 1 மூலமந்திரத்தால் ஆவாஹனஞ் செய்து, பூஜை தர்ப்பணுகுதி இவற்றைச் செய்து, முன்கூறப்பட்ட விதிப்படி 𑍐 𑌹𑌾𑌂 𑌸𑌦𑌾𑌶𑌿𑌵𑌮𑌨𑍋𑌬𑌿𑌨𑍍𑌦𑍁𑌂 𑌶𑍁𑌕𑍍𑌲𑌂 𑌗𑍃𑌹𑌾𑌣 𑌸𑍍𑌵𑌾𑌹𑌾 என்று சொல்லிக் கொண்டு, அதிகாரத்தைச் சமர்ப்பிக்க வேண்டும்.

215. ஓ ஸதாசிவரே ! எஞ்சுதலின்றிப் பொசுக்கப்பட்ட பாசங்களையுடைய இந்த ஆன்மாவைத் தாம் பந்திக்கக் கூடாது என்ற சிவபெருமானுடைய ஆணையை ஸதாசிவருக்கு அறிவிக்க வேண்டும்.

---

1 ஹிருதயபீஜத்தை முன்னிட்ட மூலமந்திரத்தால்.

216-217, மூலமந்திரத்தை உச்சரித்துப் பூர்ணுகுதி கொடுத்து, ஸதாசிவரை விஸர்ஜனம் செய்ய வேண்டும். பின்னர் உதித்த சரத்காலத்துச் சந்திரன்போன்ற சுத்தமான ஆன்மாவை, ஸம்ஹாரமுத்திரை செய்து கொண்டு, ரௌத்ரீ சத்தியால் எடுத்துத், தன்னுடைய இருதயத்திற் சேர்த்து, உத்பவ முத்திரை செய்துகொண்டு, தன்னுடைய இருதயத்திலிருந்துமெடுத்து சிஷ்யனுடைய ஸூத்ரதேகத்தில்ஆன்மாவைச்சேர்க்கவேண்டும்.

218-219. சிரம நீக்கத்தின் பொருட்டுச் சிஷ்யனுடைய சிரசில் அர்க்கியஜலத்திவலையைத் தெளிக்க வேண்டும். அதன் பின்னர் வாகீசுவரீ வாகீசுவரர்களை, "தாய் தந்தைகளான நீங்கள், சிஷ்யனுடைய தீக்ஷைக்காக என்னுல் சிரமுற்றிருக்கின்றீர்கள். என்னுல் நேரிட்ட அந்தச் சிரமத்தைக் கருணையால் பொறுத்துக் கொண்டு தம்மிருப்பிடத்திற்குச் செல்லுங்கள்" என்றுசொல்லிக் கொண்டு, அன்பு மிகுதியால் பொறுத்துக்கொள்ளும்படி செய்து விஸர்ஜனம் செய்யவேண்டும்.

## சிகையைச் சேதிக்கும் முறை.

220. சிகாமந்திரத்தால் (ஏழு முறை) மந்திரிக்கப் பெற்ற கத்தரிக்கோலால், திரோதான சத்தி ரூபமாயுள்ள சிஷ்யனுடைய 1 நான்கு அங்குல அளவான சிகையை, ஓம் ஹூம் ஶிவாயை ஹ: ஹூம் ப²ட் என்னும் மந்திரத்தை உச்சரித்துச் சேதிக்க வேண்டும்.

221. நெய்யால் நிரம்பப் பெற்ற ஸ்ருக்கில், சாணி உருண்டையின் நடுவில் வைக்கப்பட்ட அந்தச் சிகையை வைத்துக் கொண்டு, ஓம் ஹூம் ஹ: க்ஷ்ரூாய ஹூம் ப²ட், என்னும் மந்திரத்தை உச்சரித்து ஹோமஞ் செய்ய வேண்டும்.

---

1 முத்தியில் விருப்பமுள்ளவர்களுக்கு பன்னிரண்டு அங்குலத்திற்கு மேலும், புத்தியில் (போகத்தில்) விருப்பமுள்ளவர்களுக்கு எட்டங்குலத்திற்கு மேலும் சிகையைச் சேதிக்க வேண்டும். பாலர் முதலாயினோர்க்கு நான்கு அங்குல அளவாக சிகையைச் சேதிக்க வேண்டும். லோகதர்மிணீ தீக்ஷையில் சிகையைச்சேதிக்க வேண்டுவதில்லை என்று ஸித்தாந்த சேகரத்தில் கூறப்பட்டிருக்கின்றது.

## சிகையை ஹோமஞ் செய்த பின்னர்ச்செய்ய வேண்டுவன.

222. சிஷ்யனுக்கு ஸ்நானம் செய்வித்து, ஸ்ருக்ஸ்ருவங்களைக் கழுவி, தான் (ஆசார்யர்) 1 ஆசமனமுஞ்செய்து, சிஷ்யனைச் சிவபெருமானிடத்திற் சேர்ப்பதற்காகச் சிஷ்யனுடைய இருதயத்தில், ஓம் ஹ: ஹூம் ஃபட் என்னும் மந்திரத்தை உச்சரித்து (புஷ்பத்தால்) தாடனஞ் செய்யவேண்டும்.

223. சிஷ்யனுடைய சைதன்யத்தைப் 2 பிரித்து, 3 இழுத்து, முன்போல் துவாதசாந்தத்திற்குக் கொண்டுபோய், துவாதசாந்தத்திலிருந்து 4 கிரகித்து, தன்னுடைய இருதய கமலத்தின் கர்ணிகையில் 5 வைக்க வேண்டும்.

224-226½. நெய்யால் நிரப்பப் பெற்றதாயும், வைக்கப் பெற்ற கீழ் முகமான ஸ்ருவத்தை உடையதாயும் இருக்கிற ஸ்ருக்கை நித்திய விதியிற் கூறப்பட்டவாறு, சங்க முத்திரை செய்துகொண்டு எடுத்து நாதோச்சாரணத்திற்குரியவாறு நிமிர்ந்த தலை கழுத்து இவற்றுடனும், சமமான பார்வையுடனும், சஞ்சலமின்றியும், சாந்தமாயும், மேலான பாவனையுடனுமிருந்து கொண்டு, கும்பம், மண்டலம், அக்கினி, சிஷ்யன், தானாகிய ஆசார்யர்

---

1 உம்மையால் பஸ்மோத்தூளனத்தையும், ஆசமனம் செய்தற்குப் பின்னர்ச் செய்ய வேண்டிய ஸகளீகரணத்தையுங் கொள்க.

2 ரேசகஞ் செய்துகொண்டு சிஷ்யனுடைய தேகத்தில் ஹூம் என்னும் அக்ஷரத்தை உச்சரித்து வாமை என்னும் சத்தியாற் பிரவேசித்து, ஓம் ஹாம் ஹம் ஹாம் ஹ: ஹூம் ஃபட் என்னும் மந்திரத்தை உச்சரித்து, ஜ்யேஷ்டை என்னும் சக்தியாற் பிரித்து என்பது கருத்து.

3 ஓம் ஹாம் ஹம் ஹாம் ஸ்வாஹா என்ற மந்திரத்தை உச்சரித்துக்கொண்டு, அங்குச முத்ரை செய்து, ரௌத்ரீ சக்தியால் இழுத்து என்பது பொருள்.

4 ஆன்ம மந்திரத்தை உச்சரித்து சங்கார முத்திரையால் கிரகித்து என்பது பொருள்.

5 பூரகத்தின் தொழிற்பாட்டால் என்பது கருத்து.

ஆகிய இவர்களிடமிருந்து ஆறு அத்துவாக்களைக் 1 கிரகித்து, ஸ்ருக்கின் நுனியில் பிராண நாடியைச் சிந்தித்து, முறையே ஏழு விதங்களான விசுவங்களைத் தியானிக்க வேண்டும். அவையாவன-

227-230½. 2 பிராணவாயுவின் சேர்க்கை ரூபமாயுள்ளது முதலாவதான பிராண விசுவமாகும். 3 இருதயம் முதலிய ஸ்தானங்களில் முறையான உச்சரிப்புடன் கூடியது இரண்டாவதான மந்திரவிசுவமாகும். 4 சுழுமுனாநாடியில் தொடர்ந்த நாதத்தின் சொரூபம் மூன்றாவதான நாடீவிசுவமாகும். 5 காரணேசுவரர்களைக் கடந்து ஏழாவதான சத்தியின் ஸ்தானத்தில் நாதம் லயித்திருப்பது ப்ரசாந்த விசுவமாகும்.

சத்தியின் நடுவிலிருக்கும் நாதம் (சிஷ்யனுடைய ஆன்மாவுடன்) எவ்வளவு நேரம் (ஸமனா ஈறாக) மேலே செல்லுகின்றதோ, அந்தக்காலம் ஐந்தாவதான சத்தி விசுவமெனப்படும். பிராணவாயுவின் கோடியில் ஒரு அம்சமும், சத்தி வியாபினீ, ஸமனா

---

1 கிரகித்த பின்னர், ''ஸ்ருக்கின் கலசம், ஸ்ருக்கின் வட்டமான தண்டம், கண்டி, வேதிகை, ஒரு அங்குலமுள்ள கழுத்து ஆகியவைகளில் நிவிருத்தி முதலிய கலைகளை முறையே நியாஸம் செய்ய வேண்டும்'' என்பதைச் சேர்த்துக் கொள்க.

2 சிஷ்யனுடைய ஆன்மாவுக்கும், ஆசாரியருடைய மனம் பிராணன் இவற்றிற்குமுண்டான சேர்க்கை பிராண விசுவமாகும்.

3 இருதயம் முதலிய ஸ்தானங்களில், அகாரம் ஔகாரம் முதலியவற்றின் மாத்திரைகளுடைய சேர்க்கை பிரிதல் ஆகிய முறையுடன், பிராஸாதமந்திரத்தை உச்சரித்தல் மந்திர விசுவமாகும்.

4 ஆண்குறி, நாபியிலுள்ள தாமரைக் கிழங்கு, நாபி, இருதயம், கழுத்து, கண்டிகை, புருவநடு, நெற்றி, பிரமாந்திரம், துவாதசாந்தமாகிய பத்து ஸ்தானங்களின் முடிச்சுக்களை மூலமந்திரமாகிய த்ரிசூலத்தாற் பிளந்து சுழுமுனாநாடியை அனுசரித்துச் செல்லும் நாதத்தின் பிரவாகத்தைச் சிந்தித்தல் நாடீ விசுவமாகும். நாதம் சுழுமுனாநாடீ இவற்றின் சேர்க்கையால், நாடீ விசுவமெனப் பெயர் வந்தது என்று பெரியோர்களும் கூறுகின்றனர்.

5 காரணேசுவரரான பிரமன் முதலாயினோரால் அதிட்டிக்கப்பட்ட அகாரம், ஔகாரம், மகாரம், பிந்து, நாதம், நாதாந்தம் ஆகிய ஆறு அக்கரங்களின் ஸ்தானங்களைக் கடந்து, ஏழாவதான சத்தியின் ஸ்தானத்தில் நாதம் லயித்திருப்பது நான்காவதாகிய ப்ரசாந்த விசுவமாகும்.

ஆகிய சக்திகளை 1 அறியாதிருத்தல் ஆறுவதான கால விசுவமெனப்படும். உன்மனை என்னும் சத்தியை 2 அதிக்கிரமித்திருப்பது, ஏழாவதாகிய தத்துவ விசுவமாகும். இந்தத் தத்துவ விசுவம் சிஷ்யனைச்சிவனிடத்தில் சேர்த்தற்குரிய இடம். இவ்வாறு ஏழுவிசுவமுங் கண்டுகொள்க.

## மூலமந்திரத்தை உச்சரிக்கும்பொழுது ஹகாரம் முதலியவற்றைக் கடந்து செல்லும் முறை.

**231-235½.** பூரகம் கும்பகம் இவற்றைச் செய்து, வாயைச் சிறிது திறந்து, மூலமந்திரத்தை மெதுவாக உச்சரித்துக்கொண்டு, மின்னல் போல் வடிவையுடையதாயும், ஆறு அத்துவாக்கள் பிராணன் இவை ரூபமாயும் இருக்கிற ஹகாரத்தினிடத்தில், சிஷ்யனுடைய ஆன்மாவிற்கு ஒடுக்கத்தைச் செய்து, நாபிக்கு அப்பால் எங்கும் வியாபித்திருக்கும் ஹகாரத்தையும், அதன்பின் இருதயத்திலிருந்து நான்கு அங்குலங்கள் அளவாக வியாபித்திருக்கும் அகாரத்தையும், அதன் பின் கழுத்தில் எட்டு அங்குலங்கள் அளவாக வியாபித்திருப்பதாயும், விஷ்ணுவைக் குறிப்பதாயும் உள்ள உகாரத்தையும், தாலுவில்(தாடையில்)நான்குஅங்குலங்கள் அளவாக வியாபித்திருப்பதாயும், ருத்திரரைக்குறிப்பதாயுமுள்ள மகாரத்தையும், அவ்வாறே நெற்றியின் நடுவில் இருப்பதாயும், மகேசுவரரைக் குறிப்பதாயுமுள்ள பிந்துவையும், பிரமரந்திரத்தினுடைய முடிவில் இருப்பதாயும், ஸதாசிவரைக் குறிப்பதாயுமுள்ள நாதத்தையும், பிரமரந்திரத்தினுடைய நடுவில் இருக்கும் சக்தியையும், இவ்வாறு முறையே நீக்க வேண்டும்.

**236-238.** அதே க்ஷணத்தில் திவ்யமான எறும்பின் பரிசம் போலுள்ள பரிசத்தை அனுபவித்து, துவாதசாந்தத்தில்

---

1 பராபர காலம், அபரகாலம், பரகாலம் என்று காலம் மூவகைப்படும். இவ்வாறான முக்காலங்களுமற்ற உன்மனியில் சிஷ்யனைச் சேர்த்து லயத்தை அடைந்தவனாகப் பாவித்தல் கால விசுவமாகும் என்று சித்தாந்த சேகரத்தில் கூறப்பட்டிருக்கின்றது.

2 உன்மனை என்னும் சத்திக்கு அப்பால் விளங்கும் சிவபெருமானுடன் சிஷ்யனைச் சேர்த்தல் தத்துவ விசுவமாகும்.

இருக்கும் மேலான தத்துவமாயும், பிறரால் அதிக்ரமிக்க முடியாத பரிபூர்ண வடிவினராயும், ஸதாசிவர் முதலியோரின் வடிவம் போன்ற வடிவமற்றவராயும், மனஸ் தத்துவத்திற்கு விஷயமாகாதவராயும், நித்தியமாயுள்ள குணங்களுக்கு இருப்பிடமாயும், இருக்கும் இந்தச் சிவபெருமானிடத்தில், சிஷ்யனுடைய ஆன்மாவை ஒடுங்குவதாகப் பாவிக்கவேண்டும். அக்கினியில் நெய்யின் தாரையைச் சொரிந்துகொண்டு, அக்கினியின் ஜ்வாலைகளினுள்ளிருக்கும் சிவபெருமானிடமும் 1 சேர்க்க வேண்டும்.

239. சிஷ்யனைச் சிவபெருமானிடத்தில் சேர்த்தது ஸ்திரமாதற்காக, வௌஷட் என்னும் பதத்தை இறுதியிலுடைய மூலமந்திரத்தை உச்சரித்து, விதிப்படி பூர்ணாகுதியைக் கொடுத்து, சர்வக்ஞத் தன்மை முதலிய குணங்களை 2 உண்டு பண்ணவேண்டும்.

## சர்வக்ஞத்தன்மை முதலிய குணங்களை உண்டு பண்ணும் மந்திரங்கள்.

ஓம் ஹாம் ஶிவாய ஸர்வஜ்ஞாய ஸ்வாஹா । ஓம் ஹீம் ஶிவாய நித்யத்ருப்தாய ஸ்வாஹா । ஓம் ஹூம் ஶிவாய அநாதிபோதாய ஸ்வாஹா । ஓம் ஹைம் ஶிவாய ஸ்வதந்த்ராய ஸ்வாஹா । ஓம் ஹௌம் ஶிவாய அலுப்தஶக்தயே ஸ்வாஹா । ஓம் ஹ: ஶிவாய அநந்தஶக்தயே ஸ்வாஹா ॥

1 சிஷ்யனுடைய ஆன்மாவைத் தன்னுடைய துவாதசாந்தத்திற்குக் கொண்டுபோய், குறித்த லக்ஷணங்களையுடைய சிவபெருமானிடம் சேர்த்து, மீண்டும் வலது நாடி வழியாக அந்தச் சிஷ்யனுடைய ஆன்மாவை வெளிவரச் செய்து, ஸ்ருக்கின் நுனியில் வைத்து, சிவாக்கினியில் எழுந்தருளிய குறித்த லக்ஷணமுள்ள சிவபெருமானிடம் சேர்க்க வேண்டும்.

2 சிஷ்யனுடைய ஆன்மாவிற்குச் சிவபெருமானுடைய சொரூபம் தோன்றினவுடன், தனக்குச் சிவபெருமானிடத்துள்ள சருவக்ஞத்தன்மை முதலிய குணங்கள் ஸித்தித்தனவாயினும், இந்தக் குணங்கள் அநாதியான பாசங்களின் சேர்க்கையால் சித்திக்காமையால் இக்குணங்களை உண்டு பண்ணுவதற்காகக் கீழே குறிக்கப்படும் மந்திரங்களை உச்சரித்து மும்மூன்று ஆஜ்யாகுதிகளைக் கொடுக்க வேண்டுமென்பது கருத்து.

## சிஷ்யனுடைய தேகத்தில் ஆன்மாவைச் சேர்க்கும் முறை.

240. இவ்வாது ஆறு குணங்களை உடைய சிஷ்யனது ஆன்மாவைச் சிவாக்கினியில் எழுந்தருளிய சிவபெருமானிடமிருந்து கிரகித்து, 1 விதிப்படி பாவனையுடன் சிஷ்யனுடைய தேகத்திற் சேர்க்க வேண்டும்.

241. இவ்வாறு 2 குரூரமான மந்திரங்களின் சக்தியினுடைய விழுதலினால் உண்டு பண்ணப் பெற்ற சிரமம் நீங்குதற்காகப் பின்னர் சிஷ்யனுடைய சிரசில் அர்க்ய ஜலத்திவலையைவிட வேண்டும்.

## சிஷ்யனிடத்தில் ஆன்மாவைச்சேர்த்தற்குப் பின்னர்ச் செய்ய வேண்டுவன.

242-244. சிவகும்பம் முதலியவற்றில் எழுந்தருளிய சிவபெருமானை வணங்கச் செய்து, சிவபெருமானுக்கு வலது பக்கத்திலுள்ள மண்டலத்தில், தன்னுடைய வலது பக்கத்தில் வடக்கு முகமாகச் சிஷ்யனை இருக்கச் செய்து, "இந்தச் சிஷ்யன், தேவரீராலேயே என்னுடைய சரீரத்தை அதிட்டித்து அனுக்ரகிக்கப் பெற்றான். ஆகையால் தேவரீர், தேவரீரிடத்திலும், அக்கினியினிடத்திலும், ஆசாரியரிடத்திலும், இந்தச் சிஷ்யனுக்குப் பக்தியை விருத்தி செய்யும்" என்று சிவபெருமானிடம் விக்ஞாபனம் செய்து, ஆசாரியர், தானும் சிவபெருமானை வணங்கி, "உனக்கு மோக்ஷம் சித்திக்கட்டும்" என்று ஆதரவுடன் சிஷ்யனுக்கு ஆசி கூறவேண்டும்.

245. பின்னர் அதிகமான பக்தியுடன், சிவபெருமானை அஷ்டபுஷ்பங்களால் அருச்சித்து, சிவகும்பத்தால் சிஷ்யனுக்கு அபிஷேகஞ் செய்து, யாகத்தை முடிவு செய்ய வேண்டும்.

---

1 "ஷியாநஹாவநோவேத:" என்ற அசிந்திய விசுவாகமத்தின் பாடத்தைக் கொண்டால் "மூடிய பாவனையுடன்" என்னும் பொருளைக் கொள்ள வேண்டும்.

2 சிஷ்யனை அனுக்ரகிப்பதற்காக ஆசார்யரால் உச்சரிக்கப்பட்ட என்பது கருத்து.

[இந்தவிடத்தில் சில விஷயங்கள் அகோர சிவாசாரியர் பத்ததியில் விரிவாகக் கூறப்பட்டிருக்கின்றன.]

246. கோளக மடாதிபதியான சோமசம்பு சிவாசாரியரால், கிரியாகாண்ட க்ராமாவளீ என்னும் நூலில், மோக்ஷத்தைத் தரும் நிர்வாண தீக்ஷை கூறப்பட்டது.

நிர்வாண தீக்ஷை முற்றிற்று.

ஆகச் சுலோகம் 1016.

---

## 1 திரிதத்துவ தீக்ஷாவிதி.

### சிஷ்யனுக்கு அதிவாஸஞ் செய்து வைக்கும் முறை.

1. இனி, திரிதத்துவ தீக்ஷையின் (ஆன்மதத்துவம், வித்யாதத்துவம், சிவதத்துவமாகிய மூன்று தத்துவங்களைச் சுத்தி செய்வதாகிய தீக்ஷையின்) சொரூபம் கூறப்படுகிறது. முன்போல் யாகசாலையிற் செய்யப்பட்ட 2 கிரியைகளை இவ்விடத்துஞ் செய்யவேண்டும்.

2. ஆசாரியர் தன்னிடத்திலும், சிவகும்பம், மண்டலேசுவரர், அக்கினி, சிஷ்யனுடைய தேகம் ஆகியஇவற்றிலும் முறையே [சிவபெருமானைப் பூஜித்து] ஆன்ம தத்துவம், வித்யா தத்துவம், சிவதத்துவம் ஆகிய மூன்று தத்துவங்களை நியாஸஞ் செய்வது முதல் சிவாக்கினிகாரியமீறாகவுள்ள கிரியைகளைச் சிந்திக்கவேண்டும். [செய்து கொள்ள வேண்டும்]

3-4. மந்திரங்களுக்குத் தீபனஞ் செய்வது முதல் சிஷ்யனது பிரவேசத்திற்காகச் செய்யப்படும் ஹோமமீறாகவுள்ள எல்லாக் கிரியைகளையும், முன் கூறியவாறு செய்து, பாசசூத்திர

---

1 ஆகமங்களில் பிராயச்சித்த விதியில் சில பாபங்களுக்கு மீண்டும் தீக்ஷை செய்து கொள்ளுதலே பிராயச்சித்தமாகக் கூறப்படுகிறது. தீக்ஷையால் சித்தித்த ஸர்வக்ஞத் தன்மை முதலிய குணங்கள் தீக்ஷைக்குப் பின்னர்ச் செய்யப்படும் சில பாபங்களால் மறைந்து போவதால் அக்குணங்களை மீண்டும் உண்டு பண்ணுதற்காக, திரிதத்துவ கர்ம தீக்ஷை வேண்டப்பட்டது.

2 துவாரபால பூஜை, திரவிய சுத்தி, சிவபூஜை முதலிய கிரியைகளை என்பது கருத்து.

த்லதைத் தொங்கவிட்டு, சிஷ்யனுடைய சிரசில் சக்தியை ஓம் ஹௌம் ஶக்த்யை நம: என்று சொல்லிப் பூஜித்து, ஸம்ஹார முத்திரை செய்துகொண்டு அதனை எடுத்துப் பாசசூத்திரத்தில் விதிப்படி சேர்க்க வேண்டும்.

5. பின்னர், பாசசூத்திரத்தில் நியாஸஞ் செய்யப்பட்ட அந்தச் சத்தியைப் (பூஜித்து) விதிப்படி அவகுண்டனம் ஸந்நிதானுகுதிகள் இவற்றைச் செய்து, மேலே கூறியவாறு ஆறு அத்துவாக்களையும் நியாஸஞ் செய்ய வேண்டும்.

6. சிஷ்யனை ஸாமான்யார்க்கிய ஜலத்தாற் புரோக்ஷித்து, சிஷ்யனுடைய இருதயத்தில் புஷ்பத்தால் தாடனஞ் செய்து, சிஷ்யனுடைய இருதயத்திற்குள் புகுந்து, சைதன்யத்தைப் பிரித்து, இழுத்து, விதிப்படி சத்தி நியாஸஞ் செய்யப்பெற்ற பாசசூத்திரத்தில் சேர்க்க வேண்டும்.

ஓம் ஹாம் ஹம் ஹாம் ஆத்மநே நம: என்பது ஆன்மாவைப்பாசசூத்திரத்தில் நியாஸஞ் செய்தற்குரிய மந்திரம்.

7. ஆன்மாவை நியாஸஞ் செய்தபின்னர், அதனைப் பூஜித்து, அவகுண்டனஞ் செய்து, ஸந்நிதானுகுதிகளைக் கொடுத்து, மேலே (சாந்தியதீத கலை முதலிய கலைகளுக்கு) க் கூறப்பட்ட முறைப்படி ஓம் ஹாம் ஶிவதத்த்வாய நம: என்னும் மந்திரத்தால், சிவதத்துவத்தை அவலோகனஞ் செய்ய வேண்டும்.

8. ஓம் ஹாம் ஹாம் ஹாம் ஶிவதத்த்வாய ஹூம் ஃபட் என்னும்மந்திரத்தால் தாடனஞ்செய்து, ஓம் ஹாம் ஹாம் ஹாம் ஶிவதத்த்வாய ஹூம் ஃபட் என்னும் மந்திரத்தால் (ஸம்ஹார முத்திரை செய்துகொண்டு கிரகித்து) ஓம் ஹாம் ஶிவதத்த்வாய நம: என்னும் மந்திரத்தால் சிரசில் கட்டப்பெற்ற பாசசூத்திரத்திற் சேர்க்க வேண்டும்.

9. சிவதத்துவத்தை அருச்சித்து, கவச மந்திரத்தால் அவகுண்டனஞ் செய்யவேண்டும். மேலே கூறிய விதிப்படி ஸந்நிதானுகுதிகள் கொடுத்து, ஓம் ஹீம் வித்யாதத்த்வாய நம: என்னும் மந்திரத்தால் வித்யாதத்துவ பாசத்தை அவலோகனஞ் செய்யவேண்டும்.

10. வித்யாதத்துவ பாசத்தைத் தாடனஞ் செய்து, கிரகித்து, சிஷ்யனுடைய (இருதய சூத்திரத்தில்) சேர்த்து, பூஜை அவகுண்டனம் ஸந்நிதானுகுதிகள் இவற்றைச் செய்து, முன்போல் ஓம் ஹாம் ஆத்மதத்வாய நம: என்னும் மந்திரத்தால் ஆன்மதத்துவ பாசத்தை அவலோகனஞ் செய்யவேண்டும்.

11. இந்த ஆன்ம தத்துவ பாசத்திற்கும், மேலே கூறிய விதிப்படி தாடனம், கிரகணம், ஸ்தாபனம், பூஜை, அவகுண்டனம் இவற்றைச் செய்து, திருப்தி செய்தற்காக மூன்று முறை ஸந்நிதானுகுதிகளைக் கொடுக்க வேண்டும்.

12. சிவதத்துவம் வித்யாதத்துவம் ஆன்ம தத்துவமாகிய மூன்று பாசங்களை ஹூம்பட் என்பதை இறுதியிலுடைய சிவ தத்துவம் முதலியமூன்று தத்துவ மந்திரங்களால் தீபனஞ்செய்ய வேண்டும். சிரம், இருதயம், ஆகிய தத்துவங்களின் ஸ்தானங்களில், நூலை குங்குமப்பூ சந்தனம் பச்சைக் கர்ப்பூரம் இவற்றைச் சேர்த்துப் பூசவேண்டும்.

ஓம் ஹூம் ஹூம் ஹூம் ஶிவதத்வாய ஹூம் ப்ஃட் என்பது முதலியன தீபனஞ் செய்தற்குரிய மந்திரங்கள்.

13. பாச சூத்திரத்தில் அங்கங்களுடன் கூடிய சிவபெருமானை அருச்சித்து, சிவதத்துவம் வித்யா தத்துவம் ஆன்ம தத்துவம் ஆகிய பாசங்களை முறையே அறுத்து, (அவ்வந்தத் தத்துவங்களின் ஸ்தானங்களில், ஹூம்பட் என்பதை இறுதியிலுடைய சிவதத்துவம் முதலிய தத்துவ மந்திரங்களால் நூலை அறுத்து) ஓம் ஹாம் ஹூம் ஹாம் ஶிவதத்வாஂஶம் ஸம்ஹர ஸ்வாஹா இதி என்பது முதலிய மந்திரங்களால் சிவதத்துவம் முதலிய தத்துவங்களாகிய பாசங்களைக் கிரகித்து 1 முடியவேண்டும்.

14. சிஷ்யனுடைய வலது தோளில் அந்தப் பாசசூத்திரத்தை வைக்கவேண்டும். ஷடங்க மந்திரங்களால் ஹோமஞ்செய்து சிவமந்திரத்தால் (மூல மந்திரத்தால்) பூர்ணாகுதியைக் கொடுக்க வேண்டும்.

---

1 உலகத்தில் பாசங்களுக்கு ஸந்திஸ்தானங்களிலேயே அறுதல் காணப்படுதலால், இவ்விடத்தும் பாசங்களுக்கு ஸந்திஸ்தானமாகக் கிரந்தி வேண்டப்பட்டது.

15. சம்புடமாயுள்ள மடக்குப் பாத்திரத்தில் பாசசூத்ரத்தை வைத்து, அதனைப் (பஞ்சப்பிரம ஷடங்க மந்திரங்களை உச்சரித்து) ஸம்பாத ஹோமம் செய்தலால் சுத்தி செய்து, விதிப்படி இரக்ஷித்தற்காகச் சிவகும்பத்தின் கீழே வைக்கவேண்டும்.

16. முன்போல் பஞ்சகவியம் சரு இவற்றைச் (சிஷ்யனுக்குக்) கொடுத்து, தந்த காஷ்டத்தைப் பரீக்ஷித்தல் முதலியன செய்து, பலியிட்டு, சிஷ்யனை நித்திரை செய்யும்படி செய்யவேண்டும்.

17. ஆசாரியர், மண்டலேசுவரரின் பொருட்டு எல்லாக் கிரியைகளையும் அர்ப்பணஞ்செய்து, முன்போல் சருப்ராசனம் (முதலியன) செய்து மேல் தீக்ஷை செய்யவேண்டிய முறையைச் சிந்தித்துக் கொண்டு நித்திரை செய்யவேண்டும்.

இவ்வாறு அதிவாஸவிதி முற்றிற்று.

---

## திரிதத்துவ தீக்ஷையில் மறு நாள் செய்யவேண்டுவனவற்றுள் ஆன்மதத்துவ சுத்தி,

18, காலையில் பூர்த்தி செய்யப்பட்ட ஸமஸ்தமான நித்திய நைமித்திக கிரியைகளையுடைய சிஷ்யனை, முன் போல் (யாகசாலையிற்) பிரவேசிக்கச் செய்து, குண்டத்தின் அருகில் உட்காரச் செய்யவேண்டும்.

19. நாடீ ஸந்தானஞ் செய்து, சிஷ்யனுடைய சிரசில் ஸம்பாத ஹோமஞ்செய்து, சிஷ்யனுடைய சிகையில் சூத்ரத்தைக் கட்டி மீண்டும் சிஷ்யனை உட்காரச் செய்யவேண்டும்.

20. ஆறுவித அத்துவாக்களை வியாபிக்கிறதாயும், சிஷ்யனுடைய இருதயம் ஈறாக வியாபிக்கிறதாயும் உள்ள இந்த ஆன்மதத்துவத்தை, அவலோகனஞ் செய்து தாடனஞ் செய்யவேண்டும். கிரகிக்கவும் வேண்டும்.

21. ஓம் ஹாம் சூத்தத்வாஸாய நம: என்னும் மந்திரத்தை உச்சரித்துக் குண்டத்தில் ஆத்மதத்துவ பாசத்தை வைக்க வேண்டும். முன்போல் தர்ப்பணாகுதிகளையும் செய்யவேண்டும். பின்னர் பிரமனை ஆவாஹனஞ் செய்து, பூஜித்து, ஸந்தர்ப்

பணுகுதியைக் கொடுத்து, 1 விக்ஞாபனம் செய்து கொள்ள வேண்டும்.

22. ஓம் ஹாம் ஹம் ஹாம் ஹ: ஹூம் ஃபட் என்னும் மந்திரத்தை உச்சரித்துப் புஷ்பத்தால் சிஷ்யனுடைய இருதயத்திலுள்ள பாச சூத்திரத்தில் தாடனஞ் செய்து, இருதயத்திற்குள் புகுதல் முதலியன செய்து ஆசாரியர் தன்னிடத்தில் சிஷ்யனுடைய சைதன்யத்தைச் சேர்க்கவேண்டும்.

23. தன்னிடத்திற் சேர்க்கப்பட்ட சைதன்யத்தை, துவாதசாந்தம் வரை கொண்டுபோய் மீண்டும் திரும்பக்கொண்டு வந்து, வாகீசுவரியினுடைய யோனியிற் சேர்க்க வேண்டும். (பின்னர் ஓம் ஹாம் ஹம் ஹாம் ஆத்மனே நம: என்னும் மந்திரத்தால்) பூஜித்து, (இதே மந்திரத்தால்) தர்ப்பணுகுதிகளையுஞ் செய்து, சம்ஸ்காரங்களைச் செய்யவேண்டும்.

24-24½. ஜனனம், அதிகாரம், போகம், லயம், மாயா காரியங்களின் ஆரம்பமாகிற ப்ரவாஹத்தின் சுத்தி, மாயை, ஆணவம், கன்மம் ஆகிய பாசங்களின் கட்டுக்கள் அவிழ்தல், ஆகிய இவற்றிற்காகவும், நிஷ்கிருதியின் பொருட்டும், அங்கமந்திரங்களுடன் கூடிய சிவமந்திரத்தால் விதிப்படி ஹோமஞ்செய்யவேண்டும்.

25-25½. மலத்தை அதிட்டிக்கும் சிவசத்தி நீங்கும்பொருட்டும், பாசங்களின் தொழிற்பாடு நீங்கும்பொருட்டும், பாசங்கள் பிரிதற்பொருட்டும், முறையே அஸ்திர மந்திரத்தை உச்சரித்து ஹோமஞ் செய்ய வேண்டும்.

26-27. ஏழு முறை அஸ்திரமந்திரத்தால் ஜபிக்கப் பெற்ற கத்தரிக் கோலால் ஆன்மதத்துவ பாசத்தை ஓம் ஹாம் ஆத்மதத்வ பாசாய ஹ: ஹூம் ஃபட் என்னும் மந்திரத்தை உச்சரித்து, அறுத்து, துடைத்து, உருண்டையாகச் செய்து, ஸ்ருக்கின் நுனியில் வைத்துக்கொண்டு ஹோமஞ்செய்து தகித்து, பாசங்களுடைய மூலைகள் அற்றுப்போதற்காக, இதே மந்திரத்தை உச்சரித்து, (ஐந்து ஆகுதிகளால்) அந்தப் பாசத்தைப் பஸ்மமாகவுஞ் செய்யவேண்டும்.

1 நிர்வாண தீக்ஷா விதியிலுள்ள 93-வது சுலோகத்தில் விக்ஞாபன முறை கூறப்பட்டிருக்கிறது.

28. அஸ்திர மந்திரத்தால் பிராயச்சித்தாகுதிகளைச் செய்து, 𑍐 𑌹𑌾𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌨𑍍 𑌶𑍁𑌲𑍍𑌕𑌾𑌵𑌾𑌪𑍍𑌤𑌿𑌵𑌶𑌾𑌚𑍍𑌛𑌿𑌷𑍍𑌯𑌸𑍍𑌯 𑌶𑍁𑌲𑍍𑌕𑌂 𑌗𑍃𑌹𑌾𑌣 𑌸𑍍𑌵𑌾𑌹𑌾 என்று சொல்லிக்கொண்டு [1] பிரமனுக்குச் சுல்கத்தை அர்ப்பணஞ் செய்யவேண்டும். தடை செய்யாதிருத்தற்காக (முன்போல்) பிரமனிடம் விஞ்ஞாபனஞ் செய்துகொண்டுபிரமனை விஸர்ஜனம் செய்ய வேண்டும்.

29-29½. சிஷ்யனுடைய சைதன்யத்தைக் (குண்டத்திலிருந்து) தன்னிடத்திலேற்றி, சிஷ்யனுடைய முகத்தில் இருக்கும் பாச சூத்திரத்திற் சேர்க்கவேண்டும். சிஷ்யனுடைய சிரசில் அமிருதத்திற்குச் சமமான அர்க்கியஜலத்திவலையைத் தெளித்து, விதிப்படி பூர்ணாகுதியைக் கொடுக்கவேண்டும். இவ்வாறு ஆத்ம தத்துவம் சுத்தி செய்யப் பெற்றது.

## வித்யாதத்துவத்தைச் சுத்தி செய்யும் முறை.

30. சுத்தமான ஆன்ம தத்துவத்தை ஹ்ரஸ்வமாகவும், அசுத்தமான வித்யா தத்துவத்தைத் தீர்க்கமாகவும், 𑍐 𑌹𑌾𑌂 𑌹𑍀𑌂 𑌆𑌤𑍍𑌮𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌾𑌭𑍍𑌯𑌾𑌂 𑌨𑌮𑌃 என்னும் மந்திரத்தை உச்சரித்து, அசுத்தமாகிய வித்யாதத்துவத்தைச் சுத்தமான ஆன்ம தத்துவத்துடன் ஸந்தானம் செய்யவேண்டும்.

31. 𑍐 𑌹𑍀𑌂 𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌾𑌶𑌾𑌯 𑌨𑌮𑌃 என்னும் மந்திரத்தை உச்சரித்து, வித்யாதத்துவத்தை அவலோகனஞ் செய்ய வேண்டும். நெற்றி முடிய வியாபித்திருப்பதாக வித்யா தத்துவத்தைப் பாவிக்கவேண்டும்.

32. ஆறு அத்துவாக்களையும் வியாபிக்கிறதாக வித்யா தத்துவத்தைத் தியானித்துத் தாடனம் முதலியன செய்யவேண்டும். பின்னர் விஷ்ணுவை ஆவாஹனஞ் செய்து பூஜித்து, தர்ப்பணாகுதிகள் கொடுத்து, விக்ஞாபனம் செய்துகொள்ள வேண்டும்.

---

1 அக்கினியில் பிரமனை ஆவாஹனஞ் செய்து, பூஜை தர்ப்பணாகுதிகள் இவற்றைச் செய்து, அதன் பின் சுல்கத்தைச் சமர்ப்பிக்க வேண்டும், நிர்வாண தீக்ஷாவிதியில் விரிவாகக் கூறப்பட்டபடியால் எல்லா விஷயங்களும்இங்கு சுருங்கக் கூறப்படுகிறது.

33. முன்போல் முகத்தில் உள்ள பாச சூத்திரத்திலிருக்கும் சிஷ்யனுடைய ஆன்மாவைத் தாடனஞ் செய்யவேண்டும். ஆசாரியர் புகுதல் முதலியன செய்து, அந்த ஆன்மாவைத் தன்னிடத்திற் சேர்க்க வேண்டும்.

34. சேர்க்கப்பட்ட அந்த ஆன்மாவைத் துவாதசாந்தம் வரை கொண்டுபோய், மீண்டும் அங்கிருந்து கொண்டுவந்து, வாகீசுவரியினுடைய யோனியிற் சேர்க்கவேண்டும். முன்போல் ஜனனம் அதிகாரம் போகம் முதலியவற்றை மூலமந்திரத்தாற் செய்யவேண்டும்.

35. மலசத்தி முதலியவற்றிற்குத்திரோதானம் (நீங்குதல்) 1முதலியவற்றை அஸ்திரமந்திரத்தாற் செய்யவேண்டும். கத்தரிக்கோலால் வித்யாதத்துவ பாசத்தை அறுத்து, முன் கூறப்பட்ட விதிப்படி தஹிக்கவேண்டும்.

36. அவ்வாறே பிராயச்சித்தாகுதிகளையும் கொடுத்து, ஓம் ஹாம் விஷ்ணோ பாக்ஷ்ய ஹுங்காரரூபம் ஶுல்கம் க்ருஹாண ஸ்வாஹா என்று சொல்லிக்கொண்டு, விஷ்ணுவுக்குச்சுல்கத்தைச் சமர்ப்பிக்கவேண்டும். தடை செய்யாதிருத்தற்காக விஷ்ணுவிடம் விக்ஞாபனஞ் செய்து, விஷ்ணுவை விஸர்ஜனஞ்செய்யவேண்டும்.

37-37½. சிஷ்யனுடைய சைதன்யத்தைக் (குண்டத்திலிருந்து) தன்னிடத்திலேற்றி, சிஷ்யனுடைய சிரசிலுள்ள பாச சூத்திரத்திற் சேர்க்கவேண்டும். சிஷ்யனுடைய சிரசில் அமிருதத்திற்குச் சமமான அர்க்கியஜலத் திவலையைத் தெளித்து விதிப்படி பூர்ணுகுதியைக் கொடுக்கவேண்டும். இவ்வாறு வித்யா தத்துவம் சுத்தி செய்யப்பட்டது.

## சிவதத்துவத்தைச் சுத்தி செய்யுமுறை.

38-39. வித்யாதத்துவத்துடன் சிவதத்துவத்தை ஸந்தானஞ் செய்து, சிஷ்யனுடைய சிகை ஈருக வியாபிக்கிறதாயும், ஆறுவித அத்துவாக்களை வியாபிக்கிறதாயும் இருக்கும் சிவ தத்

1 பாசங்களுக்கு அவிழ்ந்து போதலையும் பிரிந்து போதலையும், முதலிய என்பதாற் கொள்ள வேண்டும். நிர்வாண தீக்ஷையில் விரிவாகக் கூறப்பட்டமையால் இங்கு சுருக்கமாகக் கூறப்பட்டது.

துவத்தை அவலோகனஞ் செய்யவேண்டும். சிவதத்துவ பாசத்தைத் தாடனஞ் செய்து, எடுத்துக்குண்டத்தில் வைத்துத் தர்ப்பணாகுதிகளைச் செய்யவேண்டும்.

40-41-42. ருத்திரரை ஆவாஹனஞ் செய்து, பூஜை தர்ப்பணம் முதலியவற்றை விதிப்படி செய்யவேண்டும். பின்னர், ஓ ருத்திரரே! இந்த உம்முடைய அதிகாரத்தில், முத்தியில் விருப்பமுள்ள இந்தச் சிஷ்யனுக்கு நான் தீக்ஷை செய்விக்கப் போகிறேன். தாம் அனுகூலமாக இருக்க வேண்டும் என்று ருத்திரருக்கு அறிவிக்க வேண்டும். சிஷ்யனுடைய இருதயத்திற்குட் புகுந்து, சைதன்யத்தை எடுத்துத்தன்னிடத்தில் விதிப்படி ஏற்றித் துவாதசாந்தத்திற்குக் கொண்டுபோய், மீண்டும்துவாதசாந்தத்திலிருந்துகொண்டு வந்து வாகீசுவரியினுடையயோனியிற் சேர்க்கவேண்டும். ஜனனம் முதல் நிஷ்கிருதி ஈறாகவுள்ள கிரியைகளை, அங்கமந்திரங்களுடன் கூடிய மூலமந்திரத்தாற் செய்ய வேண்டும்.

43-44. மலம் முதலியவற்றிற்குத் திரோதானம் முதலியவற்றை அஸ்திரமந்திரத்தாற் செய்யவேண்டும். சிவதத்துவபாசத்தை அறுத்தல், தகித்தல், பிராயச்சித்தாகுதி கொடுத்தல் ஆகிய இவற்றை முன்போல் செய்து, ருத்திரரை அருச்சித்து ஓம் ஹாம் ருத்ராம்ஶபோ இதம் ஶுல்கம் க்ருஹாண ஸ்வாஹா! என்று சொல்லிக்கொண்டு, ருத்திரருக்குச் சுல்கத்தைச் சமர்ப்பிக்க வேண்டும். (சுல்கத்தைச் சமர்ப்பிப்பதற்காக) தர்ப்பணாகுதிகளைக் கொடுத்து ருத்திரரை விஸர்ஜனஞ் செய்ய வேண்டும்.

45. (சிஷ்யனுடைய ஆன்மாவைக் குண்டத்திலிருந்து எடுத்து)த் தன்னிடத்திலேற்றி, மிகவும் பரிசுத்தனான சிஷ்யனுடைய, ஆன்மாவை ரேசகத்தினால் சிஷ்யனுடைய தேகத்தில் சேர்க்க வேண்டும். சிரசில் அர்க்ய ஜலத்திவலையைத் தெளித்து விதிப்படி பூர்ணாகுதியைக் கொடுக்க வேண்டும்.

46-47½. சுத்தமான சிவதத்துவத்தை முன் கூறியவாறு விரிவாகத் தியானிக்கவேண்டும். பின்னர், ஓம் ஹாம் ஶிவாயை ஹ: ஹூம் ஃபட் என்னும் மந்திரத்தால் ஜபிக்கப்பட்ட

கத்தரிக்கோலால், ௐ ஹ்ரீம் ஶிவாய ஹ: ஹூம் ப²ட் என்னும் மந்திரத்தை உச்சரித்து, முன்போல் சிகையைச் சேதிக்க வேண்டும். கோமயத்திற்குள் வைக்கப் பெற்றதாயும், நெய்யுடன் கூடிய ஸ்ருக்கில் இருப்பதாயுமுள்ள இந்தச் சிகையை, விதிப்படி ஹோமஞ் செய்து, ஸ்ருக் ஸ்ருவம் இவற்றை நீரால் கழுவ வேண்டும்.

48-48½. ஆசாரியர் திருநீற்றால் ஸ்நானம் செய்து, சிஷ்யனை நீரால் (சிவகும்பதீர்த்தத்தால்) ஸ்நானம் செய்து வைக்கவேண்டும். சிஷ்யனுடைய ஆன்மாவைச் சிவபெருமானுடன் சேர்ப்பதற்காக, மீண்டும் தன்னிடத்திற் சேர்க்கவேண்டும்.

49-50-50½. நிமிர்ந்த சரீரத்துடன், ஸ்ருக் ஸ்ருவம் இவற்றை முன் கூறப்பட்ட விதிப்படி எடுத்து. முறையே பிரமன் முதலிய காரணேசுவரர்களைக் கடந்து, மூலமந்திரத்தை உச்சரித்துக் கொண்டு சிவோஹம் (நான் சிவபெருமான்) என்ற உறுதிப்பாட்டுடன், ஞானரூபராயும் மேலானவராயும் இருக்கும் (அக்னியிலுள்ள) சிவபெருமானிடத்தில், நெய்யின் தாரையை விழச் செய்துகொண்டு, சிஷ்யனுடைய ஆன்மாவைச் (சிவபெருமானிடம்) சேர்க்கவேண்டும்.

51-51½. முன் கூறியவாறு அறுகுணங்களின் விளக்கத்தைச் (சிஷ்யனுக்குச்) செய்து, ஸம்பாதஹோமஞ் செய்து, சிஷ்யனுடைய ஆன்மாவைச் சிஷ்யனுடைய தேகத்தில் சேர்க்க வேண்டும்.

52-52½. பின்னர், ஆசாரியர், சிவபெருமானிடம் அன்புடன் 1 விக்ஞாபனஞ்செய்து, வர்த்தனீ சிவகும்பம் இவற்றிலுள்ள தீர்த்தத்தால், (யாகசாலைக்கு) வெளியில் சிஷ்யனுக்கு அபிஷேகஞ் செய்யவேண்டும். இவ்வாறு திரிதத்துவ தீக்ஷை கூறப்பட்டது.

ஆகச் சுலோகம் 1068½.

---

1 நிர்வாணதீக்ஷாவிதியில் 241-வது சுலோகத்திற் கூறியவாறு விக்ஞாபனம்செய்து என்பது கருத்து.

## ஏகதத்துவதீக்ஷாவிதி.

1. பின்னர், ஏகதத்துவ (சிவதத்துவ) தீக்ஷையானது, 1 சிறிதாயிருப்பதால் கூறப்படுகிறது: (நிர்வாணதீக்ஷை முதலிய) தீக்ஷையிற் போல் (இவ்விடத்தும்) தனது மந்திரத்தால் (ஓம் ஹாம் ஶிவதத்த்வாய நம: என்னும் மந்திரத்தால்) பாசசூத்திரத்தைத் தொங்க விடுதல் முதலியன செய்யவேண்டும்.

2. நூலிற் கோர்க்கப்பட்ட இரத்தினக்கூட்டத்தைப்போல் சிவதத்துவத்தில் காலாக்கினி முதல் சிவமீறான எல்லாத் 2 தத்துவங்களையும் (அடங்கியவையாகப்) பாவிக்க வேண்டும்.

3. 3 சிவதத்துவம் முதலியவற்றை ஆவாஹனஞ் செய்து 4 கர்ப்பாதான சம்ஸ்காரம் முதலிய யாவற்றையும் முன்போல் செய்யவேண்டும். ஆனால் மூலமந்திரத்தை உச்சரித்துக்கொண்டு எல்லாச் சுல்கங்களையும் சமர்ப்பிக்கவேண்டும்.

4. பின்னர், எந்த ஒன்றினாலேயே சிஷ்யன் முக்தியை அடைகிறானோ, அப்பேர்ப்பட்டதாயும், தத்துவக் கூட்டத்தை உள்ளடக்கியதாயுமிருக்கிற 5 பூர்ணாகுதியைக் கொடுக்கவேண்டும்.

---

1 நிர்வாண தீக்ஷையிற் செய்யவேண்டிய கிரியைகளில் நின்றும் சில விஷயங்கள் மாத்திரம் இந்த ஏகதத்துவ தீக்ஷையில் மாறுபடக்கூறப்பட்டிருப்பதால் "சிறிதாயிருப்பதால்" என்று கூறப்பட்டது.

2. முன்கூறப்பட்ட பீஜாக்ஷரங்கள் நாடிகள் வாயுக்கள் முதலிய யாவற்றையும் இந்தச் சிவதத்துவத்தில் அடங்கச் செய்ய வேண்டுமென்பது கருத்து.

3 முதலிய என்னும் பதத்தால், சிஷ்யனுடைய சரீரத்திலிருந்து சிவதத்துவ பாசத்தைக் கிரகித்துப், பாசசூத்திரத்தில் ஆவாஹனஞ் செய்து பூஜை, தர்ப்பணாகுதிகள் ஆகிய இவற்றைச் செய்தலுடன், பிரமன் முதலிய காரணேசுவரர்களை ஆவாகனஞ் செய்து, பூஜை முதலியன செய்ய வேண்டுமென்னுமிவை போன்றவை கொள்ளக்கிடக்கின்றன.

4 கர்ப்பாதானம் முதலிய ஸம்ஸ்காரங்கள் செய்வதற்கு முன், சிஷ்யனுடைய இருதயத்திலிருந்து சைதன்யத்தைக் கிரகித்து, முன்போல் வாகீசுவரியினுடைய யோனியிற் சேர்க்கவேண்டும் என்னும் இவ்விஷயம் மூலத்திற் கூறப்படாவிடினும் வெளிப்படை.

5 பூர்ணாகுதி கொடுத்தலால், சிஷ்யனுடைய சைதன்யத்தைச் சிவபெருமானிடஞ் சேர்க்க வேண்டும் என்னும் கருத்தை முன்போற் கொள்ள வேண்டும்.

5. சிவபெருமானிடம் சிஷ்யனைச் சேர்ப்பதற்காகவும், சேர்த்தலை ஸ்திரமாக்குவதற்காகவும், பூர்ணாகுதி 1 கொடுத்து, சிவகும்பத்திலுள்ள தீர்த்தத்தால் சிஷ்யனுக்கு அபிஷேகஞ் செய்ய வேண்டும்.

6. சிவபெருமானிடம் செலுத்திய மனதை உடையவராயும், மூவுலகங்களிலும் பிரசித்தமான தன்னுடைய கீர்த்தியாகிற மேல் கட்டையுடையவராயும் இருக்கிற ஸோமசம்புசிவாசாரியரால், ஸம்சாரமாகிற கடலில் மூழ்கிய ஏராளமான ஜனங்களை, விரைவில் கரையேற்றுதற்கு, மூன்றுவிதமான தீக்ஷைகளும் கூறப்பட்டன.

ஏகதத்துவதீக்ஷாவிதி முற்றிற்று.

ஆகச் சுலோகம் 1074½.

---

## ஆசாரியாபிஷேக விதி.

1 பின்னர், ஆசாரியர் முன் கூறிய 2 விதிப்படி சிவபெருமானை அருச்சித்து, ச்ருதம் (ஆகமங்களைக்கேட்டல்) சீலம் (சடத்

---

1 பூர்ணாகுதி செய்தபின்னர், சிஷ்யனுக்கு ஸர்வக்ஞத்தன்மை முதலிய அறுகுணங்களைத் தோற்றுவித்தல், சிவபெருமானிடமிருந்து சிஷ்யனுடைய சைதன்யத்தைக் கிரகித்துச் சிஷ்யனுடைய தேகத்திற் சேர்த்தல் முதலியவற்றை முன்போல் செய்ய வேண்டுமென்பது வெளிப்படை.

2 "ஆசாரியர் ஸ்நானம் செய்து, காலையிலும் மத்யாஹ்ன காலத்திலும் செய்யவேண்டிய அனுஷ்டானங்களை முடித்து, மண்டபத்தில் துவாரபூஜை முதல் மந்திரங்களுக்குத் தர்ப்பணஞ் செய்தல் ஈறாகவுள்ள கிரியைகளைச்செய்து, நல்ல தேசமாக்குதல், நல்ல காலமாக்குதல், கெட்ட சகுனங்கள் நாசமடைதல் நல்ல சகுனங்களை உண்டுபண்ணுதல் ஆகிய இவற்றிற்காக ஆகுதிகள் கொடுத்து, சிவபெருமானிடம், ஒ சிவபெருமானே ! இத்தச்சிஷ்யன் உம்முடைய மகிமையால் என்னுடைய சமீபத்திற்கு வந்திருக்கிறான். உம்முடைய ஆணையால் இவனுக்கு ஆசாரியாபிஷேகஞ் செய்து வைக்கிறேன் என்று வேண்டிக்கொண்டு, சிவபெருமானும் அவ்வாறே ஆகட்டும் என்று உத்தரவு கொடுத்ததாகப் பாவித்து, நித்யகர்மங்களைச்செய்த சிஷ்யனைக் கொண்டு, ஸர்வதோபத்ர மண்டலத்திலுள்ள சிவபெருமானை அர்ச்சிக்கச் செய்து, அக்கினியிலும் ஹோமஞ் செய்யவேண்டும்." என்பது போன்ற விஷயங்கள் முன்கூறிய விதிப்படி என்னும் பதத்தால் கொள்ளக் கிடக்கின்றன.

தன்மை குரூரத்தன்மை இவையல்லாத நல்ல குணங்கள்) ஆகிய இவற்றை உடைய சிஷ்யனுக்கு அபிஷேகஞ் செய்யவேண்டும்.

2-3. ஆதாரசத்தி முதல் சிவசத்தி ஈறுகப்பூஜிக்கப்பெற்றவை யாயும், ஐந்து இரத்தினங்கள், (மாணிக்கம், வைடூர்யம், நல்முத்து, பவழம், இந்திரநீலம் ஆகிய ஐந்து இரத்தினங்கள்) ஐந்து ஒஷதிகள், (ஸஹதேவி, அதாவது சீதேவியார் செங்கழுநீர், ஒரிலைத்தாமரை, குமிழ், நறுமுருக்கை, விஷ்ணுக்ராந்தி, ஆகிய ஐந்து ஒஷதிகள்) அக்ஷதை இவற்றுடன் கூடியவையாயும், வெண் சந்தனத்தால் பூசப்பெற்றவையாயும், 1 மாந்தளிர்களைமுகத்தில்உடையனவாயும், லக்ஷணமுள்ளவையாயும், பரிசுத்தமுள்ள நீரால் நிரப்பப்பெற்றவையாயும், ஆடையாபரணங்களால் அலங்கரிக்கப்பட்டவையாயும் இருக்கிற ஒன்பது கும்பங்களை, ஈசான திக்கு முதலிய திக்குக்களில் முறையே ஸ்தாபிக்க வேண்டும்.

4. அந்தக் கும்பங்களில் உப்புக்கடல், பாற்கடல், தயிற்கடல், நெய்க்கடல், கருப்பஞ்சாறுக்கடல், தேன்கடல், சுத்தோதகக் கடல், கர்ப்போதக்கடல், ஆகிய எட்டுக்கடல்களையும், முறையே நியாஸஞ் செய்யவேண்டும்.

5-6-6½. பின்னர், கிழக்குத் திக்கில் உள்ள கும்பத்தில் சிகண்டியையும், அக்கினிதிக்கு முதலிய திக்குக்களிலுள்ள கும்பங்களில் ஸ்ரீ கண்டர், த்ரிமூர்த்தி, ஏகருத்திரர், ஏகநேத்ரர், சிவோத்தமர், சூக்குமர், அநந்தர் ஆகிய வித்யேசுவரர்களையும், முறையே

நிர்வாணதீக்ஷை செய்துகொண்டு, அப்பொழுதே ஆசாரியாபிஷேகஞ் செய்து கொள்ளும் சிஷ்யனுக்கு, ஒரு முறை மூலமந்திரத்தை உச்சரித்துச் சிவனுடன் யோகத்தைப் பாவிக்க வேண்டும். சிவபெருமானை அஷ்டபுட்பங்களாற் பூஜித்து, பின்னால் கூறப்படும் ஆசாரியாபிஷேகத்திற்குரிய கிரியைகளை மாத்திரம் செய்தால் போதுமானது. நிர்வாண தீக்ஷை செய்துகொண்டு சிலகாலஞ் சென்று ஆசாரியாபிஷேகஞ் செய்து கொள்ளுஞ் சீடனுக்கு முன்போல் சூரிய பூஜை முதல் நல்ல நிமித்தமாக்குதல் ஈறான கிரியைகளைச் செய்யவேண்டும்.

1 முப்பத்திரண்டு, இருபத்தைந்து, பதினாறு, பதினொன்று, ஒன்பது ஏழு, ஐந்து ஆகிய எண்களுள் யாதானுமொரு எண்ணுள்ள மாவிலைகளைக் கும்பத்தின் மத்தியில் வைக்கவேண்டும். மாவிலைகள் நல்ல லக்ஷணமுடையனவாயும், செம்மையாகவேனும் பசுமையாகவேனுமுள்ள தளிர்களையுடையனவாயும் இருக்கவேண்டும்.

நியாஸஞ் செய்து, 1 நடுக்கும்பத்தில் சிவசமுத்திரத்தையும் சிவ மந்திரத்தையும் நியாஸஞ் செய்யவேண்டும்.

7-8. அல்லது நிவிருத்தி முதலிய ஐந்து கலைகள் நியாஸஞ் செய்யப்பெற்றவையாயும், 2 சிவபெருமானுக்குப் போல் பூஜை செய்யப் பெற்றவையாயும், நூற்றெட்டு முறை மூலமந்திரத்தால் அபிமந்திரிக்கப்பட்டவையாயும் இருக்கிற ஐந்து கும்பங்களாலேனும், அல்லது 3 இவ்வாறான ஒரு கும்பத்தாலேனும், ஆசாரியாபிஷேகஞ் செய்து வைக்கலாம்.

9-10. (ஐந்து கும்பங்களாயின்) மேற்கு, வடக்கு, தெற்கு கிழக்கு ஆகிய திக்குக்களில், முறையே கும்பங்களை ஸ்தாபித்து அந்தக்கும்பங்களில் ஒவ்வொரு கும்பத்திலும் இரண்டிரண்டு சமுத்திரங்களாக எட்டுச் சமுத்திரங்களையும், இரண்டிரண்டு வித்யேசுவரர்களாக எட்டு வித்யேசுவரர்களையும் முறையே நியாஸஞ் செய்து, ஈசான திக்கிலுள்ள ஐந்தாவது கும்பத்தில் சிவசமுத்திரத்தையும் சிவமந்திரத்தையும் நியாசஞ் செய்யவேண்டும்.

11. (ஒரு கும்பமாயின்) அந்த ஒரு கும்பத்திலேனும், தொன்னையிலேனும், எட்டுச் சமுத்திரங்களையும், அவ்வாறே அஷ்டவித்யேசுவரர்களையும் நியாயஸஞ் செய்து, பஞ்சப்ரம்மஷடங்கமந்திரங்களுடன் கூடிய சிவபெருமானைப் பூஜிக்கவேண்டும்.

## சிஷ்யனுக்கு அபிஷேகஞ் செய்யுமுறை.

12. யாகசாலைக்கு ஈசானதிக்கில் செய்யப் பெற்ற ஸ்நான மண்டபத்தில், இரண்டு முழம் நீளமுடையதாயும், எட்டங்குலம் உயரமுடையதாயுமிருக்கிற வேதியை (திண்ணையைச்) செய்ய வேண்டும்.

1 வர்த்தனியில் சக்தி ஸமுத்திரத்தை நியாஸஞ் செய்ய வேண்டுமென்றும் அசிந்திய விசுவஸாதாக்யாகமத்திற் கூறப்பட்டிருக்கின்றது.

2 ஐந்து ஆவரணங்களுடன் கூடிய சிவபெருமானை ஆஸனமூர்த்தி மூலமந்திரங்களாலும், பஞ்சப்ரம்ம ஷடங்க மந்திரங்களாலும் பூஜித்து, எல்லா உபசாரங்களுடனும் பரமீகரணமிருகப் பூஜிப்பதுபோல் என்பது கருத்து.

3 சிவபெருமானைப் பூஜிப்பதுபோல் பூஜை செய்யப் பெற்றதான என்பது கருத்து.

13. அந்தத் திண்ணையில் தேக்கு முதலிய மரங்களாலாக் கப்பெற்ற ஆஸனத்தில், அனந்தாஸனத்தை நியாயஸஞ்செய்து சிஷ்யனைக் கிழக்கு முகமாக இருக்கச் செய்து, ஸகளீகரணஞ் செய்து பூஜிக்கவேண்டும்.

14. பின்னர் புளித்தப் பழைய அன்னம், மிருத்திகை, திருநீறு, அறுகு, (உலர்ந்த) சாணி உருண்டை, (சாணிப்பொடி) வெண்கடுகு, 1 தயிர், ஜலம் ஆகிய 2 இவற்றால் அபிஷேகஞ் செய்யவேண்டும்.

15. பின்னர், அமிருதத்தைத் தரிக்கிற ஆசாரியன், (சிவ மந்திரத்தை உச்சரித்தலால் கலக்கப்பட்ட சத்தி மண்டலத்தி னின்றும் பெருகுகிற அமிருதத்தைக் கும்பத்தில் பிரவேசிக்கச் செய்யுமாசாரியன்) முறையே வித்யேசுவரர்களின் மந்திரத்தை உச்சரித்துக்கொண்டு, லவண சமுத்திரத்தை ஆவாஹனஞ்செய்த கலசத்தை முன்னிட்டு, முறையே ஒவ்வொரு கலசத்தாலும், சிஷ் யனுக்கு அபிஷேகஞ் செய்யவேண்டும்.

## சிஷ்யனுக்கு அதிகாரத்தைச் சமர்ப்பிக்கும் முறை.

16. வெண்மையான இரண்டு ஆடைகளைத் தரிக்கச் செய்து, சிவபெருமானுக்கு வலப்பக்கத்தில் முன் கூறப்பட்ட ஆஸனத் தில் இருக்கச்செய்து; முன்போல் சிஷ்யனை அருச்சிக்கவேண்டும்.

17-18. தலைப்பாகை, கிரீடம், குடை, பாதரக்ஷைகள், சாம ரம், யானை, குதிரை, பல்லக்கு 3 முதலியவற்றையும், கத்தரிக் கோல், அரணிக்கட்டை, குடம், அக்ஷமாலை, தர்ப்பம், ஸ்ருக் ஸ்ருவம், புஸ்தகம் 4 முதலியவற்றையும், (தீக்ஷை ப்ரதிஷ்டைமுத

---

1 அசிந்திய விசுவ ஆகமத்தில் தயிருக்குப் பதிலாக நெய் என்றிருக் கிறது.

2 இவற்றால் பூசி அபிஷேகஞ் செய்து, (அவற்றை) கிழக்கு முதலிய திக்குக்களில் போடவேண்டும்.

3 முதலிய என்னும் பதத்தால் பேரி முதலியவற்றைக் கொள்ள வேண்டும்.

4 முதலிய என்னும் பதத்தால் யோகப்பட்டம் முதலியவற்றைக் கொள்ள வேண்டும்.

லியன செய்தற்குரிய) அதிகாரத்தையும், ஆசாரியர் சிஷ்யனுக்கு 1 அறிவிக்க வேண்டும்.

19. தீக்ஷை செய்துவைத்தல், சிவாகமங்களைக் கற்றுக்கொடுத்தல், ப்ரதிஷ்டை செய்துவைத்தல் ஆகிய 2 இவை முதலியன உன்னால் இதுமுதல் தெரிந்துகொண்டு, நன்கு ஆராய்ந்து செய்யத் தக்கன என்ற இவ்வாறான சிவபெருமானுடைய ஆணையைச் சிஷ்யனுக்கு அறிவிக்க வேண்டும்.

20-21. பின்னர், ஆசாரியர், 3 சிஷ்யனை வணங்கி, விக்கினங்களின் கூட்டத்தைப் போக்குதற்காக, (சிஷ்யனிடம் கொடுத்த அதிகாரம் இடையூறின்றி நிறைவேறுதற்காகச்) சிவ பெருமானை வணங்கி, விக்ஞாபனஞ் செய்து கொள்ள வேண்டும். விக்ஞாபனஞ் செய்யுமுறை வருமாறு:— "ஓ சிவபெருமானே! சிஷ்யனுக்கு ஆசாரியாபிஷேகஞ் செய்து வைப்பதற்காகக் குருமூர்த்தியான (ஆசாரியராகிய பற்றுக்கோடைப் பற்றிய) உம்மால், நான் ஆணை செய்யப்பெற்றேன். சிவாகமங்களைக் கற்ற இந்தச் சிஷ்யன் என்னால் அபிஷேகஞ் செய்யப்பெற்றான்" என்பதாம்.

## சிவபெருமானிடம் விக்ஞாபனஞ் செய்தபின்னர்ச் செய்ய வேண்டுவன:

22. 4 மந்திரங்களுக்குத் திருப்தி செய்தற்காக, ஐந்து ஐந்து ஆகுதிகள் ஹோமஞ் செய்யவேண்டும். பின்னர் பூர்ணாகுதி கொ

---

1 கொடுக்க வேண்டும் என்பது கருத்து.

2 முதலியன என்னும் பதத்தால், ஸ்நபனம், ஸம்ப்ரோக்ஷணம் முதலியவற்றைக் கொள்ளவேண்டும்.

3 அதிகாரத்தைச் சமர்ப்பிப்பதானது நிரபேக்ஷம் ஸாபேக்ஷம் என இரு வகைப்படும். ஆசாரியர், சிஷ்யனுக்கு ஆசாரியாபிஷேகஞ்செய்துவைத்த பின்னர், மீண்டும் மற்றச் சிஷ்யர்களுக்குத் தீக்ஷை முதலியன செய்யாது தான் (ஆசாரியர்) வானப்ரஸ்தாச்ரமத்தை அனுஷ்டித்தலே நிரபேக்ஷமாக அதிகாரத்தைச் சமர்ப்பித்தலாகும். இவ்வாறு செய்யும் முறையில் ஆசாரியர், சிஷ்யனை வணங்க வேண்டும். வானப்ரஸ்தாச்சிரமத்தை நாடாமல் சிஷ்யர்களுக்குத் தீக்ஷை செய்துகொண்டு இருக்கவேண்டுமென்னும் நோக்கத்துடன் அதிகாரத்தைச் சமர்ப்பித்தல் ஸாபேக்ஷமாக அதிகாரத்தைச் சமர்ப்பித்தலாகும். இவ்வாறு செய்யும் முறையில் சிஷ்யன் ஆசாரியரை வணங்க வேண்டும்.

4 பஞ்சப்ரஹ்ம மந்திரங்கள் ஷடங்க மந்திரங்கள் முதலியவற்றிற்கு என்பது பொருள்.

டுத்து, சிஷ்யனைத் தன்னுடைய வலது பக்கத்தில் இருக்கச் செய்ய வேண்டும்.

23. கொளுத்தப்பெற்ற தர்ப்பத்தால், பஞ்சப்ரம ஷடங்க மந்திரங்களை உச்சரித்து, ஸாமர்த்யமுண்டாவதற்காகச், சிஷ்யனுடைய வலது கையிலுள்ள பெருவிரல் முதலிய விரல்களை, முறையே ஸ்பரிசிக்க வேண்டும்.

24. சிஷ்யனுடைய கையில் புஷ்பங்களைக் கொடுத்து, சிவகும்பம், அக்கினி, மண்டலேசுவரர் ஆகிய இவர்களையும், தன்னையும் வணங்கச் செய்து, அதன் பின், சிஷ்யன் (இனிச்) செய்ய வேண்டிய காரியங்களை அவனுக்கு உத்தரவு செய்யவேண்டும்.

25. நீ, சிஷ்யர்களுக்குச் சாஸ்திரங்களிற் கூறப்பட்ட கிரியைகளைச் செய்துவைத்து, அவர்களை அனுக்ரகிக்க வேண்டும். சிவாகமங்களை சிரவணஞ் செய்யவேண்டும். சிவாகமங்களைப் பயில்வதில் விருப்பமுள்ளவர்களுக்கு அவற்றைக் கற்பிக்க வேண்டும்.

26-27. வித்வானுவன் ஒரு வருஷம் குருகுலவாஸஞ்செய்த சிஷ்யனுக்குத் தீக்ஷைசெய்து வைக்கவேண்டும். நாடோறும் ஜபம், ஹோமம், தியானம் இவற்றைச் 1 சிறிதேனுஞ் செய்ய வேண்டும். குரு எப்பொழுதும் உபதேசிக்கும் மந்திரம் இதுவாகும். இவ்வாறு சோமசம்பு சிவாசாரியரால் இந்த ஆசார்யாபிஷேக விதி கூறப்பட்டது.

ஆகச் சுலோகம் $1101\frac{1}{2}$.

---

## ஸாதகாபிஷேக விதி

1. ஸாதகாபிஷேகத்திலோவெனின், முமுக்ஷு விற்குப் போல் நிவிருத்தி முதலிய மூன்று கலைகளைச் சுத்தி செய்து, சாந்தியதீதகலையைச் சுத்தி செய்யவேண்டும்.

2. பின்னர் ஸதாசிவரைத் தியானஞ்செய்து, மூலமந்திரத்தை உச்சரித்துப் பூர்ணுகுதி செய்தலால், (சிஷ்யனைச்) 2 சாந்தி

---

1 ஜபம் ஹோமம் தியானம் இவற்றை ஒரு நாள் கூடச்செய்யாதிருக்கலாகாது என்பதுகருத்து.

2 சிஷ்யனைச் சாந்திகலையிற் சேர்த்த பின்னர், சாந்திகலையையுஞ் சுத்தி செய்து, சாந்திகலையிலிருக்கும் சிஷ்யனுக்கு, குணங்களை உண்டு பண்ண வேண்டும் என்று ஸித்தாந்த சேகரத்தில் கூறப்பட்டிருக்கின்றது.

கலையிற் சேர்த்து, எட்டு விதங்களான குணங்களை உண்டுபண்ண வேண்டும்.

ஓம் ஹௌம் ஶக்த்யை அணிமாதேவதாப்ய: ஸ்வாஹா ॥
ஓம் ஹௌம் ஶக்த்யை லகிமாதேவதாப்ய: ஸ்வாஹா ॥
ஓம் ஹௌம் ஶக்த்யை மஹிமாதேவதாப்ய: ஸ்வாஹா ॥
ஓம் ஹௌம் ஶக்த்யை கரிமாதேவதாப்ய: ஸ்வாஹா ॥
ஓம் ஹௌம் ஶக்த்யை ப்ராப்திதேவதாப்ய: ஸ்வாஹா ॥
ஓம் ஹௌம் ஶக்த்யை ப்ராகாம்யதேவதாப்ய: ஸ்வாஹா ॥
ஓம் ஹௌம் ஶக்த்யை ஈஶித்வதேவதாப்ய: ஸ்வாஹா ॥
ஓம் ஹௌம் ஶக்த்யை வஶித்வதேவதாப்ய: ஸ்வாஹா ॥
ஓம் ஹௌம் ஶக்த்யை யத்ரகாமாவஸாயித்வதேவதாப்ய: ஸ்வாஹா ॥

என்னும் மந்திரங்களால் ஹோமஞ்செய்தல், குணங்களை உண்டு பண்ணுதலாகும்.

3-4. (இவ்வாறு எண்குணங்களையுடைய)சிஷ்யனைச் சிவபெருமானிடம் முன்போல் சேர்த்து, அதன்பின் நியாஸஞ் செய்யப்பெற்ற ஐந்து கலைகளையுடையவையாயும், ஸாத்ய மந்திரங்களால் (பஞ்சப்ரஹ்ம ஷடங்க மந்திரங்களால்) பூஜிக்கப்பட்டவையாயும் நூற்றெட்டு முறை மூலமந்திரத்தால் ஜபிக்கப் பெற்றவையாயும் உள்ள ஐந்து கலசங்களால், சிஷ்யனுக்கு அபிஷேகஞ்செய்யுமுறையில், நிவிருத்தி கலசம், ப்ரதிஷ்டா கலசம், வித்யாகலசம், சாந்தியதீத கலசம், ஆகிய கலசங்களில் உள்ள தீர்த்தத்தை அபிஷேகஞ் செய்தபின், ஐந்தாவது சாந்திகும்ப தீர்த்தத்தால் அபிஷேகஞ் செய்யவேண்டும்.

5-6. அல்லது நியாஸஞ் செய்யப்பெற்ற [முன்கூறப்பட்ட] எட்டு ஸமுத்திரங்களையுடையவையாயும், ஸாத்திய மந்திரத்தால் [மூலமந்திரத்தால்] நூறு முறை மந்திரிக்கப் பெற்றவையாயும் உள்ள, கிழக்கு முதலிய திக்குக்களில் ஸ்தாபிக்கப் பெற்ற எட்டுக் கும்பங்களாலேனும், வடக்கு முகமாக ஆஸனத்தில் அமர்ந்திருக்கும் சிஷ்யனுடைய இருதயத்தில், அணிமா முதலியவற்றை நியாஸஞ் செய்து, ரேசகஞ் செய்தலுடன் உத்பவமுத்திரை செய்து, பஞ்சப்ரஹ்ம மந்திரங்களை ஜபித்து, ஸாதகனுக்கு அபிஷேகஞ் செய்யவேண்டும்.

7. சிவபெருமானுக்கு வலது பக்கத்தில் சிஷ்யனை இருக்கச் செய்து, முன்போல் ஸகளீகரணஞ் செய்து, தலைப்பாகை, கத்தரிக்கோல் இவையல்லாத அதிகாரத்தைச் சமர்ப்பிக்க வேண்டும்.

8. ஆசாரியர் ஸாத்யமந்திரத்தை பிரணவத்தால் ஸம்புடஞ் செய்து உச்சரித்து, சிஷ்யனுடைய அஞ்சலியில், புஷ்பம் முதலியவற்றுடன் ரேசகஞ் செய்து, உத்பவ முத்திரையால் கொடுக்க வேண்டும்.

9. ஸாதகன் பெரிய அநுக்ரகம் என்று சொல்லிக்கொண்டு சரத்காலத்துச் சந்திரனுக்குச் சமமாக ப்ரகாசிக்கும் அந்த ஸாத்ய மந்திரத்தைப் பூரகஞ்செய்து, தன்னுடைய இருதய கமலத்தில் ஸ்தாபிக்க வேண்டும்.

10. சிவாக்கினியில், அன்புடன் மூலமந்திரம் பஞ்சப்ரஹ்ம ஷடங்க மந்திரங்கள் ஆகிய இவற்றிற்குத் தர்ப்பணாகுதிகள் கொடுத்து, மண்டலேசுவரர் சிவகும்பம் இவற்றிற்கு வலது பக்கத்தில் செய்யப்பட்ட மண்டலத்தில் வரையப் பெற்றதாமரையில் ஸாத்யமந்திரத்தை அர்ச்சிக்க வேணடும்.

11-12. ஸாதகன் குருவின் ஆணையைப் பெற்று, குருவை அஷ்டாங்கங்களால் வணங்கி, புண்யகாலத்தில் நல்ல லக்னத்தில் மந்திரங்களை ஆராதிக்க வேண்டும். அணிமா முதலியன ஸித்திப்பதற்காக, நெய் பால் குங்கிலியம் இவற்றுள் யாதானுமொன்றால் ஆயிரம் அல்லது நூறு முறையேனும் ஹோமஞ் செய்யவேண்டும்,

13. ஆகமப்பொருள்களுடன் முரண்படாததாயும், தொன்று தொட்டு வழங்கப் பெற்றதாயும் இருக்கிற ஸாதகாபிஷேகமானது ஸ்ரீ ஸோமசம்பு சிவாசாரியரால் இவ்வாறு கூறப்பெற்றது.

ஆகச் சுலோகம் 1114½.

---

## அஸ்திராபிஷேக விதி.

1-2. அரசர்கள், புருஷர்கள், புத்திரப் பேறில்லாத மலடிகள், மிகப் பெரிதான இடையூறுகளால் தோல்வியுற்றவர்கள், ஆகிய இவர்களுக்கு, உடனே சாந்தியை [தோஷநீக்கத்தைச்]

செய்வதாயும், மேலானதாயும்,, ஐசுவரியம், வெற்றி, ஸௌபாக்கி யங்கள், காம்ய தர்மங்கள், விருப்பமான பலன் இவற்றை அளிப் புதாயும், ஆகமப்பொருளுடன் முரண்படாததாயும் இருக்கிற அஸ்திராபிஷேக விதியானது கூறப்படுகிறது.

3 ஓம் ஶ்லீம் பஶும் ஹும் ஹும் ஃபட் 1 என்னும் மந்திரத்தை, ஆசாரியர் தன் சரீரத்தில் நியாஸஞ்செய்து, பின்னர் ஓம் என்பதை முதலாவதாகவும், நம: என்பதை இறுதியாகவுமுடைய இதன் அங்கமந்திரங்களான ஓம் ஓம் ஹ்ருதயாய ஹும் ஃபட், ஓம் ஶ்லீம் ஶிரஸே ஹும் ஃபட் । ஓம் பம் ஶிகாயை ஹும் ஃபட் । ஓம் ஶும் கவசாய ஹும் ஃபட் । ஓம் ஹும் நேத்ரேப்யோ ஹும் ஃபட் । ஓம் ஹும் ஃபட் அஸ்த்ராய ஹும் ஃபட் । என்னும் இவற்றை 2 நியாஸஞ்செய்து கொள்ளவேண்டும்.

4. [பல நிறங்களையுடைய] பொடிகளால் பிரகாசிக்கும் எட்டுத் தளங்களை உடைய தாமரையிலேனும், சதுரச்ர மண்டலத்திலேனும், அஸ்திர தேவரைத் தியானித்து அருச்சிக்க வேண்டும்.

## தியானம் பூஜை இவை செய்யும் முறை.

5-6-7. பிரணவாஸனத்தின்மீது வீற்றிருப்பவராயும், பத்துக்கைகளையுடையவராயும், மிகப் பலமுடையவராயும், ஐந்து முகங்கள் பத்துக் காதுகள் ஒவ்வொரு முகத்திலும் மூன்று கண்கள் இவற்றையுடையவராயும், கோரப்பற்களால் பயங்கரராயும், மிகவும் உக்ரராயும், பெரிய சப்தத்தை யுடையவராயும், மிகவும் ஜயிக்கமுடியாதவராயும், நாவைத் தொங்கச்செய்து அசைப்பவராயும், நெருங்கமுடியாதவராயும், பதினாயிரங்கோடி (எண்ணிறந்த) சூரியர்களின் காந்தியையுடையவராயும், விக்கினக்கூட்டத்தை நாசம் செய்பவராயும், கர்ணிகையின் நடுவில் வீற்றிருப்

---

1 ஓம் ஶ்லீம் பம் ஶும் ஹும் ஃபட் பாஶுபதாஸ்த்ராய நம: என்று க்ரியாக்ரமத்யோதிகையில் இருக்கின்றது.

2 இம்மந்திரங்களால் ஸகளீகரணஞ் செய்துகொள்ளவேண்டுமென்பது கருத்து. கையெழுத்துப்பிரதியிலுள்ள சகளீகரணமந்திரங்களைத் திருத்தி இம்மொழிபெயர்ப்பிற் சேர்க்கப்பட்ட பாடமே சரியான பாடமாகும்.

பவமாயும், இவ்வாறு தியானித்து, பாசுபதாஸ்திரதேவரான பரமேசுவரரைப் பூஜிக்கவேண்டும்.

8. பிந்து நாதங்களின்றிச் செய்யப்படும் பூஜை, மரணம் முதலியவற்றைத் தரும். பிந்துநாதங்களுடன் செய்யப்படும் பூஜை புக்திமுக்திகளைத் தரும்.

## தாமரையில் மந்திராக்ஷரங்களை நியாஸஞ் செய்தல்.

9-10-11. அக்கினிதிக்கிலுள்ள தளத்தில் ப்ரணவத்தையும், ஈசானதளத்தில் ஶ்ரீம் என்னுமக்ஷரத்தையும், நிருருதிதிக்கில் உள்ள தளத்தில் வம் என்னுமக்ஷரத்தையும், வாயுதிக்கிலுள்ள தளத்தில் ஶிம் என்னுமக்ஷரத்தையும், அஸ்திரதேவருடைய நேத்திரங்களில் ஹாம் என்னுமக்ஷரத்தையும், வடக்குத் திக்கிலுள்ள தளத்தில் 1 ஹூம் ப²ட் என்னுமக்ஷரத்தையும் நியாஸம் செய்து, விதிப்படி 2 பூஜித்து, ஸம்ஸ்காரஞ் செய்யப்பெற்ற

---

1 ஓம் ஶ்ரீம் வம் ஶிம் ஹாம் ஹூம் ப²ட் என்று வேறு ப்ரதியில் ஹாம் என்னும் அக்ஷரம் அதிகமாகக் காணப்படுகிறது. இதை அனுசரித்தே "ஹாக்ஷாரம் ஶிவநேத்ரேப்⁴யோ ஹூம்ப²டு³த்தரதி³க்ஸ்தி²தம்" என்ற பத்தாவது சுலோகமும் காணப்படுகிறது. ஶிவநேத்ரேப்⁴யோ ஹாக்ஷாரம் ப²ட்காரம் ஸௌம்யதி³க்³த³லே என்ற அசித்திய விசுவசுலோகத்தைக் கவனித்தால் வடக்குத் திக்கிலுள்ள தளத்தில் ப²ட் என்னுமக்ஷரத்தையும்" என்று இருக்கவேண்டும்.

2 ஓம் பாஶுபதாஸ்த்ராஸனாய ஹூம் ப²ட் நம:। ஓம் பாஶுபதாஸ்த்ரமூர்த்தயே ஹூம் ப²ட் நம:। ஓம் ஹாம் நேத்ரேப்⁴யோ ஹூம் ப²ட் நம: என்று ஆஸனமூர்த்திநேத்ரமந்திரங்களால் பூஜித்து, ஓம் ஶ்ரீம் வம் ஶிம் ஹூம் ப²ட் பாஶுபதாஸ்த்ராய நம: என்னும் மந்திரத்தால் பாசுபதாஸ்திரதேவரை ஆவாஹனஞ்செய்து, ஸ்தாபனம் முதலியன செய்து, ஓம் ஓம் அஸ்த்ரஹ்ருத³யாய ஹூம் ப²ட் நம:। ஓம் ஶ்ரீம் அஸ்த்ரஶிரஸே ஹூம் ப²ட் நம:। ஓம் வம் அஸ்த்ரஶிகா²யை ஹூம் ப²ட் நம:। ஓம் ஶிம் அஸ்த்ரகவசாய ஹூம் ப²ட் நம:। ஓம் ஹாம் அஸ்த்ரநேத்ரேப்⁴யோ ஹூம் ப²ட் நம:। ஓம் ப²ட் அஸ்த்ராய ஹூம் ப²ட் நம:। என்று அங்கமந்திரங்களாலும் பூஜித்து, மற்ற உபசாரங்களையும் செய்யவேண்டுமென்பது கருத்து,

அக்கினியில் ஒன்பது முறை 1 நவாத்மமந்திரத்தால் ஹோமஞ் செய்யவேண்டும். தேன் சர்க்கரை பால் ஆகிய திரவியங்களால் பாசுபதாஸ்திரமந்திரத்தை உச்சரித்து 2 நூற்றெட்டு முறை ஹோமஞ்செய்யவேண்டும்.

12. விதிப்படி பலி சமர்ப்பித்து, நீரால் நிரப்பப்பெற்றதாயும், லக்ஷணங்களுடன் (ஆசார்யாபிஷேகவிதி 2, 3வது சுலோகங்களிற் கூறப்பட்ட இலக்ஷணங்களுடன்) கூடியதாயும் இருக்கிற கலசத்தை முன்போல் ப்ரணவாஸனத்தில் பூஜிக்கவேண்டும்.

13-14. கலசத்திலுள்ள தீர்த்தத்தை, அஸ்திரமந்திரத்தை உச்சரித்து, நூற்றெட்டு முறை அபிமந்திரணம் செய்து, முன் கூறியவாறு அஸ்திரதேவரைத் தியானித்து, மங்களசப்தம் வேதகோஷம் பேரி மத்தளம் முதலிய வாத்யகோஷங்கள் முழங்கச் சிஷ்யனுக்கு அபிஷேகஞ்செய்து, ஆசாரியர் சிஷ்யனுக்கு ஆசிர்வாதஞ்செய்து, வஸ்திரங்கள் அக்ஷதைமுதலியவற்றைக் கொடுக்கவேண்டும்.

15. ஸ்ரீ ஸோமசம்பு சிவாசாரியரால் மனிதர்களின் நலத்திற்காக விக்கினக்கூட்டத்தை அகற்றும் அஸ்திராபிஷேகவிதியானது இவ்வாறு கூறப்பட்டது.

ஆகச்சுலோகம் 1129½.

---

## விரதோத்தார விதி.

1. பின்னர், சைவர்களுடைய 3 விரதத்தின் நீக்கத்திற்காக, 4 ஐந்து தாமரைகளில் 5 ஸத்யோஜாதம் முதலிய ஐந்தையும் ஒன்றன்பின்னொன்றாகப் பூஜிக்கவேண்டும்.

---

1 ஓம் ஹஊக்ஷ்ம்லவரய ஊம் நவாத்மனே ஶிவாய நம: என்பது நவாத்மமந்திரம். 2 அங்கமந்திரங்களால் தசாம்சமாக ஹோமஞ் செய்யவேண்டுமென்பது வெளிப்படை.

3 இவ்விடத்தில் விரதம் என்னும் பதத்தால் பௌதிகப்ரஹ்மசரிய விரதத்தைக் கொள்ளவேண்டும். விசேஷதீக்ஷாவிதியிலுள்ள 25-26-27ம் சுலோகங்களில் கூறியவாறு, ப்ரஹ்மசரிய விரதத்தை ஸ்வீகரித்த சிஷ்யன் அவ்விரதத்தைச் சிலகாலமனுஷ்டித்தபின்னர், விஸர்ஜனஞ் செய்யலாமாவென்னுமாசங்கை நிகழ, விரதத்தின் விஸர்ஜநவிதியைக் கூறுகிறார்.

4 வேதியின் (திண்ணையின்) நடுவில் கிழக்கு முதலிய நான்கு திக்குக்களிலும் ஈசானதிக்கிலும் ஆக ஐந்து திக்குக்களில் வரையப்பெற்ற ஐந்து தாமரைகளில் என்பது கருத்து, 5 ஸத்யோஜாதம் முதலியமந்திரங்களால் ஐந்து கும்பங்களேயும் என்பது கருத்து.

2. உபவாஸமிருந்த சிஷ்யன் நிமித்தமாக, விரதாங்கங்களின் எண்ணிற்குத் தக்கவாறு, அக்கினியில் நூறுநூறு ஆகுதிகளைப் பஞ்சப்ரஹ்ம மந்திரங்களாலேனும், இருதயம் முதலிய அங்கமந்திரங்களாலேனும் ஹோமஞ் செய்யவேண்டும்.

3. ஸம்யமம், (சிகையில் தரிக்கும் ருத்திராக்ஷமணி) கௌபீனம், தண்டம், திருநீறு, ஜடை ஆகிய சிஷ்யனுடைய விரதாங்கங்களை, முறையே ஸத்யோஜாதம் முதலியவற்றில் (ஸத்யோஜாதம் முதலிய கலசங்கட்குப் பற்றுக்கோடான தாமரைகளில்) அர்ப்பணஞ் செய்யவேண்டும்.

4. பின்னர், சண்டேசுவரபூஜைசெய்து இந்த முறைப்படி விரதாங்கங்களை விஸர்ஜனஞ்செய்து நீர்ப்ரவாஹத்தில் (நதிசமுத்திரம் தடாகம் முதலியவற்றுள் யாதானுமொன்றில்) மிதக்க விடவேண்டும்.

5. ஆசாரியர் சிஷ்யனுக்கு (கந்தம் புஷ்பம் முதலியவற்றுடன்) புதிய இரண்டு வஸ்திரங்களைக் கொடுத்து, நீ உனக்கு உரியவளாயும் நல்ல குலத்துதித்தவளாயும் இருக்கிற கன்னிகையை மணக்கக் கடவாய் என்று கூறவேண்டும்.

6. சைவர்களின் விரதநீக்கமானது இவ்வாறு சுருக்கமாகக் கூறப்பட்டது. ப்ரஹ்மசரியவிரதத்தை அநுட்டிக்கும் பிறமதஸ்தர்கள் செய்யவேண்டிய விரதநீக்கமும் சந்தர்ப்பத்தைக் கருதிக் கூறப்படுகிறது.

7-8. பௌத்தர்கள் புத்திதத்துவத்திலும், ஜைநர்கள் குணதத்துவத்தின் மத்தகத்திலும், (மனஸ்தத்துவத்திலும்) வேதாந்திகள் குணதத்துவத்திற்குக் காரணமாகிய தத்துவத்திலும், (பிரதானமென்னும் பதத்தால் கூறப்படும் பிரகிருதியிலும்) பாகவதர்கள் முதலாயினர் புருஷதத்துவத்திலும், பாசுபதர்கள், மாயாதத்துவத்திலும், மஹாவிரதர்கள் வித்யாதத்துவத்திலும் இருக்கின்றனர். பௌத்தர் முதலிய இந்த மதஸ்தர்களுக்கு முறையே இவை முக்திஸ்தானங்களாகும்.

9-10. ஆசாரியர், மூன்று அல்லது ஐந்து நாட்களேனும் உபவாஸமிருந்தவர்களாயும், பிராயச்சித்தத்தால் சுத்தி செய்யப் பெற்றவர்களாயும், மண்டபத்திற்கு வெளியில் இருப்பவர்களா

யும் இருக்கிற இந்த மதஸ்தர்களுக்கு, முன்போல் (கும்பம் மண்டலம் அக்கினி இவற்றில்)சிவபெருமானைப்பூஜித்து, முறைப்படி விரதாங்கங்களை விஸர்ஜனஞ் செய்யவேண்டும். (அது எவ்வாறெனில்:—)

11. 1 புத்தி முதல் பிருதிவி ஈறாகவுள்ள எல்லாத் தத்துவங்களையும் அக்கினியில் ஸ்தாபித்து, அவ்வந்தத்தத்துவப்பெயர்களால் ஒவ்வொரு தத்துவமாகவேனும், எல்லாத் தத்துவங்களையுஞ் சேர்த்து ஒன்றாகவேனும் பூஜிக்கவேண்டும்.

12-13-14, பின்னர் மண்டபத்திற்கு வெளியில் இருப்பவர்களான இவர்களுக்கு, நாடீஸந்தானஞ்செய்து, இவர்களுடைய இருதயத்தைத் 2 தாடனஞ் செய்து, உட்புகுந்து, (சைதன்யத்தைப்) பிரித்து இழுத்துத் தன்னிடத்திலிருத்தி, ஸ்வாஹாசப்தத்தை இறுதியிலுடைய மூலமந்திரத்தை உச்சரித்து, அதனை அக்கினியிற் சேர்த்து, தனக்கு இஷ்டமான கடவுளை அருச்சித்தலால் உண்டான புண்யபலம் நசித்தற்காக, அஸ்திரமந்திரத்தால் ஒவ்வொரு சிஷ்யனுக்கும் தனித்தனி ஆயிரத்தெட்டு வீதம் ஹோமஞ் செய்யவேண்டும். ஒவ்வொரு தத்துவமும் சுத்தியடைவதற்காக மூலமந்திரத்தால் தனித்தனி ஐந்து ஐந்து ஆகுதிகள் கொடுக்கவேண்டும்.

15-16. புத்தி முதல் பிருதிவியீறான தத்துவங்களினின்றும் (சைதன்யத்தை) எடுத்து, முன் ஜாதியிற் சேர்க்கவேண்டும். அவ்வந்த ஜாதிகளின் ஆசாரம் 3 சேர்க்கை இவற்றிற்காக மூலமந்திரத்தை உச்சரித்து பூர்ணாகுதியீறாக நூற்றெட்டு முறை ஹோமஞ் செய்யவேண்டும். அவ்வாறே விரதாங்கங்களை நீரில் எறிந்து சிஷ்யர்களை கிரஹஸ்தர்களாகச் செய்யவேண்டும்.

---

1 இங்கு "புத்தி தத்துவம் முதல்" என்பது பௌத்தர்களுக்காகக் கூறப்பட்டது. ஏனையோருக்கு அவ்வவர்களின் முத்திஸ்தானமான தத்துவம் முதல் என்பது வெளிப்படை.

2 தாடனம் முதலியன செய்தற்குரிய மந்திரங்கள் முன்னரே கூறப்பட்டுள்ளன.

3 ஆசாரஞ் சேர்க்கை இவற்றைக் கற்பித்துச் சுத்திசெய்து சைதன்யத்தைச் சிஷ்யனுடைய சரீரத்திற் சேர்க்கவேண்டுமென்பது வெளிப்படை.

## பிறிதொருவகையான விரதோத்தார விதி.

17. அல்லது எட்டுத் தளங்களுடன் தாமரையை வரைந்து அதில் ஈசானதிக்கு முதலாக வலமாக 1 ஶவர்க்கம் முதல் அவர்க்கம் ஈருன வர்க்காக்ஷரங்களை முறையே நியாஸஞ் செய்ய வேண்டும்.

18. உயிரெழுத்துக்களுடன் க்ஷௌம் என்னுமக்ஷரத்தைக் கர்ணிகையில் நியாஸஞ்செய்து, பஞ்சப்ரஹ்ம ஷடங்கமந்திரங்களுடன் கூடிய சிவபெருமானைப் பூஜித்து, அக்கினியிலும் சிவபெருமானைப் பூஜிக்கவேண்டும்.

19-20. வர்க்காக்ஷரங்களுக்குத் தர்ப்பணஞ் செய்து, சிவபெருமானுடைய ஆணையால், (அக்கினியில்) ஸ்தாபித்து அருச்சிக்கப்பட்ட ஶவர்க்கத்தில் முன்போல் சிஷ்யர்களின் சைதன்யத்தை நியாஸஞ்செய்து, பூர்ணாகுதியீருக ஷடங்கமந்திரங்களால் நூறு முறை ஹோமஞ்செய்து,பின்னர், அக்கினியிடமிருந்து சைதன்யத்தைப்பிரித்து, சிஷ்யனுடைய சரீரத்திற்சேர்க்கவேண்டும்.

21. இவ்வாறே யவர்க்கம் பவர்க்கம் முதலிய வர்க்கங்களிலும், சிஷ்யனுடைய சைதன்யத்தைச் சேர்த்தல் முதலியன செய்து, விரதாங்கங்களைஎடுத்து ஆழமுள்ளநீரில் எறியவேண்டும்.

22. பின்னர் ஆசாரியர், (கந்தம் புஷ்பம் முதலியவற்றுடன்) இரண்டு ஆடைகளைச்சிஷ்யனுக்குக்கொடுத்து, கிரகஸ்த தர்மத்திற் சேர்க்கவேண்டும். தன்னிடம் அன்புள்ள சிஷ்யர்களிடத்திற் கருணையினால் அவர்களுக்குத் தீக்ஷைசெய்துவைக்கலாம்.

23. மண்டலேசுவரர், அக்கினியிலுள்ள சிவபெருமான் முதலாயினரை விஸர்ஜனஞ் செய்து, விதிப்படி பூமியைச் சுத்தி

---

1 ஶ ஷ ஸ ஹ என்பது ஶவர்க்கம் எனப்படும். இவ்வாறே ய வ ர ல என்பது யவர்க்கம் என்றும், ப ப ப ப ம என்பது பவர்க்கம் என்றும், த த த த ந என்பது தவர்க்கம் என்றும், ட ட ட ட ண என்பது டவர்க்கம் என்றும், ச ச ஜ ஜ ஞ என்பது சவர்க்கம் என்றும், க க க க ங என்பது கவர்க்கம் என்றும் அ முதலிய உயிரெழுத்துக்கள் அவர்க்கம் என்றும் கூறப்படும். இவ்வாறு இந்த எட்டு வர்க்காக்கரங்களை ஈசான திக்கிலுள்ள தளம் முதலாக நியாசஞ் செய்யவேண்டும் என்பது பொருள்.

செய்யவேண்டும். இவ்வாறு சோமசம்பு சிவாசாரியரால் விரதோத்தார விதியானது கூறப்பட்டது.

ஆகச் சுலோகம் 1152½.

---

## அந்தியேஷ்டி விதி.

1. ஆசார்யர், ஸாதகன், புத்திரகன் ஆகிய மூவருள் யாதானுமொரு காரணத்தால் (துர்மரணத்தால்) இறந்த ஒருவனுக்கு அத்துவசுத்தியின்றி 1 அந்தியேஷ்டியைச் செய்யவேண்டும்.

### மரித்தவனை மயானத்திற்குக் கொண்டுபோகும் முறை.

2-3-4. பச்சை மூங்கில் முதலியவற்றால் செய்யப்பெற்றதாயும், செம்மை நிறமுள்ள ஆடையால் சுற்றப்பெற்றதாயும், புஷ்பமாலைகள் கொடிகள் இவற்றால் நிறைந்ததாயும், சங்கு மத்தளம் இவற்றின் சப்தத்தால் வியாபிக்கப்பெற்றதாயும், சுவர்க்கத்திற்குச் செல்லுதற்குரியபடியாயும் இருக்கிற விமானத்தில், பிணத்தை ஏற்றி, உபவீதத்தை இடமாக அணிந்தவர்களாயும், அஸ்திரமந்திரத்தை ஜபிப்பவர்களாயுமிருக்கும் தீக்ஷைபெற்ற சமான ஜாதியர்களாலேனும், மற்றவர்களாலேனும் கொண்டு போய், அருகில் நீரையுடையதாயும், சுத்தமாயுமுள்ள பூமியில், மரித்தவனைத்தெற்குத்திக்கில் தலையிருக்கும்படிவைக்கவேண்டும்.

---

1 நிர்வாண தீக்ஷையினாலேயே சிஷ்யனுடைய எல்லாக் கன்மங்களும் சுத்தி செய்யப் பெற்றன. சிஷ்யனுடைய பிராரப்த கன்மமோ, போகத்தினாற்றான் நசிக்கக் கூடியது. பிராரப்தத்திற்குத் துணையான மலாம்சமும், நாடோறும் செய்யப்படும் ஸ்நானம் சிவபூஜை ஹோமம் இவற்றால் நசித்துவிடும். சிஷ்யனுக்குப் புத்தி பூர்வமாக நேரிடும் விதித்தவற்றைச் செய்யாதிருத்தல் நிஷேதிக்கப்பட்டவற்றைச் செய்தல், இவற்றாலுண்டாகும் பாபங்கள், பிராயச்சித்தத்தாலேயே , நசித்துவிடுகின்றன. இவ்வாறாகவும் அந்தியேஷ்டி எதற்காகவெனின், கூறுதும். தீக்ஷைக்குப் பின்னர் சிஷ்யனுக்கு அபுத்தி பூர்வமாக நேரிட்ட விதித்தவற்றைச் செய்யாதிருத்தல் நிஷேதிக்கப்பட்டவற்றைச் செய்தல் இவற்றாலுண்டாம் பாபங்கள் நசித்தற்காக அந்தியேஷ்டி செய்யப்படுகின்றது. அபுத்திபூர்வமாக நேரிட்ட என்பதற்கு, ராஜபயம் திருட்டுப்பயம் அக்கினி பயம் ஆகிய இவற்றால் நேரிட்ட என்பது பொருள். புத்திபூர்வமாக ஸமயாசாரங்களை நழுவவிட்டு, பிராயச்சித்தமும் செய்யாமல், இறந்தவர்களுக்கு அந்தியேஷ்டியினால் சுத்தி உண்டாகாது. உண்டு என்று கொள்ளின் பிராயச்சித்த சாஸ்திரங்கள் பயனற்றவையாய் முடியும்.

## குண்டம் முதலியன நிர்மாணஞ் செய்யும் முறை.

5-6-6½. சதுரச்ரமாயும், (நாற்கோணவடிவமாயும்) ஒரு மேகலையுள்ளதாயும், ஆறு அங்குலங்கள் 1 உயரமுடையதாயும் உள்ள குண்டத்தை விதிப்படி செய்து, தோண்டப்பெற்ற அந்த மண்ணால் குண்டத்திற்கு வாயுதிக்கில் 2 ஸ்தண்டிலத்தை(மேடையைச்) செய்து, குண்டத்திற்குத்தெற்குத்திக்கில் இரண்டு முழங்கள் விஸ்தாரமுள்ளதும், நான்கு முழங்கள் நீட்சியுள்ளதும், எட்டங்குலங்கள் ஆழமுள்ளதுமான சிதைக்குரிய பள்ளத்தைச் செய்யவேண்டும். குண்டம், ஸ்தண்டிலம், சிதைப்பள்ளம், இம்மூன்றையும் கோமயத்துடன் கூடிய நீரால் மெழுக வேண்டும்.

7-8-9. பின்னர் ஆசாரியர் ஸ்நானம் ஸகளீகரணம் இவற்றைச் செய்து, அஸ்திரத்தினால் மந்திரிக்கப்படும் வர்த்தனியைக் கையிலெடுத்துக்கொண்டு, இடமாக ஸ்தண்டிலத்தினருகிற் சென்று, வடக்குமுகமாக அமர்ந்து, 3 விபரீதமாக (அபஸவ்யமாக)

---

1 அகலமுமுடையதாயுமென்றும் கொள்ள வேண்டும்.

2 ஆறு அங்குல உயரத்தில் ஒரு முழமுள்ளதாக மேடையைச்செய்ய வேண்டும், குண்டத்திற்கும் மேடைக்கும் இடையில் ஒரு முழம் அவகாசமிருக்க வேண்டும். தெற்கு வடக்கான அமைப்புள்ளதாக இருக்க வேண்டும்.

3 விபரீதமாக நியாஸஞ் செய்யும் முறை வருமாறு:— ,,ஓம் ஹ: அஸ்த்ராயஹூம்பட்" என்னும் மந்திரத்தை உச்சரித்து, உள்ளங்கை புறங்கை இவற்றை மாறுதலாகச் சுத்திசெய்து அமிருதீகரணஞ் செய்து, இரண்டு உள்ளங்கைகளிலும் ஆஸனம் மூர்த்தி இவற்றை நியாஸஞ் செய்து, கடைவிரல் முதலிய விரல்களில் இருதயம் முதலிய மந்திரங்களை நியாஸஞ் செய்து, கவசமந்திரத்தை உச்சரித்து அப்ரதக்ஷிணமாக அவகுண்டனஞ் செய்து, பரமீகரணஞ் செய்து, நித்யக்ரியையிற் செய்யப்படுமாறு சூக்குமமாயும் தூலமாயுமுள்ள சரீரத்தைச் சுத்தி செய்து, இருதயத்தில் ஆஸனம் மூர்த்தி இவற்றை நியாஸஞ் செய்து, பாதம் குஹ்யம் இருதயம் முகம் சிரசு இவற்றில் சத்யோஜாதம் முதலிய பஞ்சப்ரஹ்ம மந்திரங்களை நியாஸஞ்செய்து,வித்யாதேகம் நேத்ரம் மூலமந்திரம்இவற்றைநியாஸஞ்செய்து, இருதயம் முதல் கை ஈறான தானங்களில் இருதயம் முதலிய மந்திரங்களை நியாஸஞ் செய்து, மூன்று தாளங்கள் செய்து, அஸ்திரமந்திரத்தால் அப்ரதக்ஷிணமாக திக்பந்தனஞ் செய்து,மூலமந்திரத்தால் மகாமுத்திரை காண்பிக்க வேண்டுமென்பதாம்.

நியாசங்களைச் செய்துகொண்டு (நியாஸத்தின் முடிவில்) அஸ்திர மந்திரத்தால் 1 ஸம்ரக்ஷணஞ் செய்து, 2 அந்தர்யாகஞ்செய்து, மௌனமாக இருந்து, அஸ்திரமந்திரத்தால் வர்த்தனியை மந்திரித்து, அந்த ஜலத்தால் திரவியங்களைப் 3 புரோக்ஷிக்க வேண்டும். பின்னர் தன்னைப் பூஜித்துக் கொள்ளவேண்டும்.

10. இறைத்தற்குரிய திரவியங்களை (தர்ப்பங்கள் திருநீறு எள்ளு இவற்றை அஸ்திரமந்திரத்தால் மந்திரித்து) 4 இறைத்து வர்த்தனிக்கு ஆஸனமாகும் நிமித்தமாக (தர்ப்பங்களாலாகிய கோலால் ஈசான திக்கிலுள்ள வேதிகையில்) ஒன்று சேர்த்து, விதிப்படி 5 சிதாவாஸ்துவைப் பூஜிக்கவேண்டும்.

## மண்டபபூஜை செய்யும் முறை

11-12-13-14. ஐந்து பாகங்களாகச் செய்யப்பட்டதாயும், இருபத்தைந்து பதங்களையுடையதாயும், பிருதிவீ முதலியவற்றிற்குரிய ஐந்து 6 நிறமுள்ள பொடிகளால் அலங்கரிக்கப் பெற்றதா

---

1 தன்னை ஸம்ரக்ஷணஞ் செய்துகொண்டு.

2 சங்கார முறையாகவே அந்தர்யாகம்அந்தராக்னிகாரியம் இவற்றைச் செய்து, தானசுத்தியுஞ் செய்து கொள்ளவேண்டும்.

3 ஸத்யோஜாதம் முதலிய ஸம்ஹிதா மந்திரத்தால் விசேஷார்க்கியத்தையும் கற்பித்து அதனாலும் புரோக்ஷிக்க வேண்டும்.

4 விகிரத்திரவியங்களை இறைப்பதற்கு முன்னர் அத்துவசுத்தி செய்யும் விஷயத்தில், தன் தேகத்தில் நிவிருத்தி முதலிய கலைகளை ஸம்ஹாரக்கிரமமாக நியாஸஞ் செய்து, பஞ்சப்ரஹ்ம ஷடங்கமந்திரங்களுடன் கூடச் சிவபெருமானை நியாஸஞ் செய்ய வேண்டும். அதன் பின் சிவஹஸ்தஞ் செய்து கொள்ளல் பஞ்சகவ்யம் சேகரித்தல் முதலிய கிரியைகளைச்செய்ய வேண்டும்.

5 இருபத்தைந்து பதங்கள் கொண்ட வேதாளமென்னும் பெயருடைய சிதாவாஸ்துவை என்பது பொருள்.

6 பிருதிவீ முதலிய ஐந்து தத்துவங்களுக்கு அதிபர்களான பிரமன் முதலியவர்க்குரிய கோஷ்டங்களை பொன்மை, வெண்மை, செம்மை, கருமை, வெண்மை அல்லது பசுமை நிறமுள்ள பொடிகளால் முறையே அலங்கரிக்க வேண்டும் என்பதுகருத்து. மஞ்சள்முதலிய திரவியத்தால் மஞ்சட்பொடியையும், யவம் கோதுமைமுதலியவற்றால் வெள்ளைப்பொடியையும், குங்குமம் தாதுக்கள் இவற்றால் செம்மைப் பொடியையும், பச்சிலைகளால் பச்சைப் பொடியையும் சேகரிக்கவேண்டும்.

யும், மூங்கில்கள் கயிறு இவற்றால் நிர்மாணம் செய்யப்பெற்றதாயுமுள்ள சிதாஸ்தானத்தில் வாஸ்து தேவதைகளை நியாஸஞ்செய்யவேண்டும். இருபத்தைந்து பதங்களுள், நடுவிலுள்ள ஐந்து [1] பதங்களில் பிருதிவியுடன் பிரமனையும், நிருருதி திக்கிலுள்ள நான்கு பதங்களில் அப்புவுடன் விஷ்ணுவையும், அக்னிதிக்கிலுள்ள நான்கு பதங்களில் அக்கினியுடன் உருத்திரரையும், வாயு திக்கிலுள்ள நான்கு பதங்களில் வாயுவுடன் ஈசுவரரையும், ஈசாந திக்கிலுள்ள நான்கு பதங்களில் ஆகாயத்துடன் ஸதாசிவரையும், இவ்வாறு வாஸ்து தேவதைகளை ந்யாஸஞ் செய்யவேண்டும்.

இவர்களை அருச்சித்தற்குரிய மந்திரங்களாவன:—

ஓம் ஹாம் வாஸ்த்வதிபதயே ப்ரஹ்மணே நம: என்று [2] பிருதிவீதத்துவத்திலும், ஓம் ஹாம் விஷ்ணவே நம: என்று ஜலதத்துவத்திலும், ஓம் ஹாம் ருத்ராய நம: என்று தேஜஸ் தத்துவத்திலும், ஓம் ஹாம் ஈஶ்வராய நம: என்று வாயுதத்துவத்திலும், ஓம் ஹாம் ஸதாஶிவாய நம: என்று ஆகாயதத்துவத்திலும், அர்ச்சிக்க வேண்டும்.

15. கிழக்கு தெற்கு மேற்கு வடக்கு ஆகிய திக்குக்களிலுள்ள பதங்களில், இந்திரன் யமன் வருணன் குபேரன் ஆகிய நால்வரையும், நம: என்னும் பதத்தை இறுதியிலுள்ள [3] தத்தம்

---

1 கிழக்குத்திக்கை நோக்கி ஆறு நூல்களும், வடக்குத்திக்கை நோக்கி ஆறு நூல்களுமிட்டு இருபத்தைந்து பதங்களைக் கற்பித்து, அந்த இருபத்தைந்து பதங்களுள் நடுவில் ஒரு பதமும், அதனைச் சுற்றி அருகில் கிழக்கு தெற்கு மேற்கு வடக்கு ஆகிய திக்குக்களிலுள்ள நான்கு பதங்களும், ஆக ஐந்து பதங்களில் என்பது கருத்து.

2 ஓம் ஹாம் ப்ருதிவீதத்த்வாய நம: என்று பிருதிவீ தத்துவத்தை அருச்சித்து, அதன் பின் இந்தத் தத்துவத்திற்கு அதிபதியான பிரமனை அருச்சிக்க வேண்டும். இவ்வாறே அப்பு முதலிய தத்துவங்களை அருச்சித்து அவ்வந்தத் தத்துவாதிபர்களையும் அருச்சிக்க வேண்டும்.

3 ஓம் ஹாம் இந்த்ராய நம:, ஓம் ஹாம் யமாய நம:, ஓம் ஹாம் வருணாய நம:, ஓம் ஹாம் குபேராய நம:, என்னும் மந்திரங்களால் என்பது கருத்து.

பெயர்களால் (சந்தனம் முதலியவற்றைக் கொண்டு) முறையே, அருச்சித்து, ஸ்வாஹா என்னும் பதத்தை இறுதியிலுள்ள தத்தம் 1 பெயர்களால் பலியைச் சமர்ப்பிக்க வேண்டும்.

16. ஈசான திக்கில் 2 வர்த்தனியை பாசுபதாஸ்திர மந்திரங்களால் 3 பூஜித்து, எட்டுத் திக்குக்களிலும், (முறையே) இந்தி

---

1 ஓம் ஹாம் இந்த்ராய ஸ்வாஹா, ஓம் ஹாம் யமாய ஸ்வாஹா, ஓம் ஹாம் வருணாய ஸ்வாஹா, ஓம் ஹாம் குபேராய ஸ்வாஹா என்னும் மந்திரங்களால் என்பது கருத்து.

2 கூட்டப்பெற்ற விகிரத்திரவியங்களின்மேல் தாபிக்கப்பெற்றதாயும், நீரால் நிரப்பப்பெற்றதாயும், நூல் சுற்றி ஆடையுடுத்தப்பெற்றதாயும், மாந்தளிர் முதலியவற்றால் அலங்கரிக்கப் பெற்றதாயும், ஸிம்மாஸனத்தின்மீது வீற்றிருப்பதாயுமுள்ள வர்த்தனியை என்றுகொள்ளவேண்டும்.

3 பூஜிக்கும் முறை வருமாறு:— "ஓம் அஸ்த்ராஸநாய ஹும் ஃபட் நம:। ஓம் அஸ்த்ரமூர்த்தயே ஹும் ஃபட் நம: என்று ஆஸனம் மூர்த்தி இவற்றைப் பூஜித்து, "ஸம்வர்த்தகோடிப்ரதீகாஶம் ப்ரஜ்வலந்தம் ஸுதேஜஸம் । த்ர்யக்ஷம் நாகோபவீதாங்கம் வஜ்ரதம்ஷ்ட்ரம் ஜடாதரம் ॥ ப்ரதீப்ததஹநஜ்வாலம் தீப்தஶ்ருங்கம் ஜடம் । ஶக்தித்வஜதரம் ஸாக்ஷாத் அஸ்த்ரராஜம் ஶிவம் பஜே ॥ என்னும் சுலோகங்களால் அஸ்திரதேவரைத் தியானித்து, ஓம் ஶ்லீம் பஶும் ஹும் ஃபட் நம: என்னும் மந்திரத்தால் ஆவாஹனஞ் செய்து, ஸ்தாபனம் முதலியன செய்து, இருதயம் முதல் கை ஈறாகவுள்ள ஸ்தானங்களில் ஓம் ஹாம் ஹ்ருதயாய ஹும் ஃபட் நம:। ஓம் ஶ்லீம் ஶிரஸே ஹும் ஃபட் நம:। ஓம் பம் ஶிகாயை ஹும் ஃபட் நம:। ஓம் ஶும் கவசாய ஹும் ஃபட் நம:। ஓம் ஹூம் நேத்ரேப்யோ ஹும் ஃபட் நம:। ஓம் ஃபட் அஸ்த்ராய ஹும் ஃபட் நம:। என்னும் மந்திரங்களால் அங்கங்களையும் நியாஸஞ் செய்து, ஓம் ஶ்லீம் பஶும் ஹும் ஃபட் பாஶுபதாஸ்த்ராய நம: என்னும் மந்திரத்தை உச்சரித்துப் பெருவிரலால் ஏகத்வத்தைச்செய்து, இரக்ஷை அவகுண்டனம் அமிருதீகரணங்களைச் செய்து, பாத்யம் ஆசமநீயம் அர்க்கியங்களைச் சமர்ப்பித்து, சந்தனம் புஷ்பம் முதலியவற்றால் அருச்சித்து, லயாங்கபூஜை செய்து, போகாங்கபூஜையைச்

ரன் முதலிய உலகபாலர்களின் 1 ஆயுதங்களை நியாஸஞ் செய்ய வேண்டும்.

## ஸ்தண்டிலத்திற் செய்யவேண்டுவன.

17. ஐசுவரியம் முதலிய ஆஸனங்களைப் பூசித்து, ஸ்தண்டிலத்திலுள்ள 2 தாமரையின் நடுவிலிருக்கும் மனோன்மனி முதல் வாமையீறான சக்திகளைப் 3 பூஜிக்கவேண்டும்.

---

செய்யவேண்டும். போகாங்கபூஜை செய்யும் முறை வருமாறு:— ஈசான திக்கில் ஓம் ஹாம் ஹ்ருதயாய ஹாம் ஹௌம் ணம் நம: என்றும், அக்கினி திக்கில் ஓம் ஹாம் ஹ்ருதயாய ஹாம் ஹௌம் ணம் நம: என்றும், ஈசானதிக்கில் ஓம் ஶீம் ஶிரஸே ஹாம் ஹௌம் ணம் நம: என்றும், நிருருதிதிக்கில் ஓம் வம் ஶிகாயை ஹாம் ஹௌம் ணம் நம: என்றும், வாயுதிக்கில் ஓம் ஶும் கவசாய ஹாம் ஹௌம் ணம் நம: என்றும், வடக்கு முதலான நான்கு திக்குக்களிலும் ஓம் ஹட் அஸ்த்ராய ஹாம் ஹௌம் ணம் நம: என்றும் பூஜித்து, நைவேத்யம் தூபம் தீபங்கள் ஸமர்ப்பித்து, ஜபஸமர்ப்பணஞ் செய்து, தசாம்சமாக அங்கமந்திரங்களையுஞ்ஜபித்து, அதனையும் ஸமர்ப்பித்து, ஞானகட்கத்தைச் சமர்ப்பித்து, அதன் தேஜஸால் மண்டபத்திலுள்ள எல்லா விக்னங்களும் நீங்கியவையாகப் பாவிக்கவேண்டும்" என்பதாம்.

1 நியாஸஞ்செய்து பூஜிக்கவேண்டுமென்பது பொருள். பூஜிக்கும் முறை வருமாறு:— ஈசானம் முதலிய திக்குக்களிலுள்ள கலசங்களில் அப்ரதக்ஷிணமாக ஓம் ஹாம் ஶூலாய நம:। ஓம் ஹாம் மஹாகதாயை நம:। ஓம் ஹாம் த்வஜாய நம:। ஓம் ஹாம் பாஶாய நம:। ஓம் ஹாம் கட்காய நம:। ஓம் ஹாம் தண்டாய நம:। ஓம் ஹாம் ஶக்தயே நம:। ஓம் ஹாம் வஜ்ராய நம:। என்று சொல்லிக்கொண்டு அவற்றின் தியானத்தை முன்னிட்டு முறையே சூலம் கதை துவஜம் பாசம் கட்கம் தண்டம் சக்தி வஜ்ரம் இவற்றைப் பூஜித்து, நிருருதி திக்கிற்கு வடக்குத்திக்கில் ஓம் ஹாம் சக்ராய நம: என்றும், ஈசானதிக்கிற்குத் தெற்குத்திக்கில் ஓம் ஹாம் பத்மாய நம: என்றும் சொல்லிக்கொண்டு, சக்ரம் பத்மம் இவற்றையும் பூஜிக்கவேண்டும்" என்பதாம். 2 எள்ளு அக்ஷதை இவற்றால் செய்யப்பெற்ற தாமரையின் என்பது கருத்து.

3 பூஜிக்கும் முறை வருமாறு:— ஓம் ஹாம் ஸூர்யாஸக்தயே நம:। ஓம் ஹாம் ஶிவதாஸநாய நம:। ஓம் ஹாம் ஶிவதாய

நம: । என்று சொல்லிக்கொண்டு தாமரையின் நடுவில் பூஜித்து, ஈசான திக்குமுதல் அக்கினிதிக்கு ஈறான உபதிக்குக்களில் முறையே ஓம் ஹாம் தர்மாய நம: । ஓம் ஹாம் வைராக்யாய நம: । ஓம் ஹாம் ஜ்ஞாநாய நம: । ஓம் ஹாம் ஐஶ்வர்யாய நம: । என்று சொல்லிக்கொண்டு ஐசுவரியம் முதலியவற்றைப் பூஜித்து, வடக்குத் திக்குமுதல் கிழக்கு ஈறான திக்குக்களில் ஓம் ஹாம் அநைஶ்வர்யாய நம: । ஓம் ஹாம் அவைராக்யாய நம: । ஓம் ஹாம் அஜ்ஞாநாய நம: । ஓம் ஹாம் அதர்மாய நம: என்று சொல்லிக்கொண்டு அனைசுவரியம் முதலியவற்றைப் பூஜித்து, நிருருதிதிக்கு ஈசானதிக்கு இவற்றில் ஓம் ஹாம் அதஶ்சதநாய நம: । ஓம் ஹாம் ஊர்த்வச்சதநாய நம: । என்று பூஜித்து, ஓம் ஹாம் கந்தாய நம: । ஓம் ஹாம் பீஜாய நம: । ஓம் ஹாம் அங்குராய நம: । ஓம் ஹாம் நாலாய நம: । ஓம் ஹாம் தளேப்யோ நம: । ஓம் ஹாம் கேஸரேப்யோ நம: । ஓம் ஹாம் கர்ணிகாயை நம: । ஓம் ஹாம் பீஜாய நம: । ஓம் ஹாம் பத்மாய நம: । என்று பூஜித்து, அதன் பின்னர் கர்ணிகையின் ஈசானதிக்குமுதல் அப்ரதக்ஷிணமாகக் கிழக்குத்திக்குஈறாக முறையே ஓம் ஹாம் மநோந்மந்யை நம: । ஓம் ஹாம் ஸர்வபூததமந்யை நம: । ஓம் ஹாம் பலப்ரமதந்யை நம: । ஓம் ஹாம் பலவிகரண்யை நம: । ஓம் ஹாம் கலவிகரண்யை நம: । ஓம் ஹாம் காள்யை நம: । ஓம் ஹாம் ரௌத்ர்யை நம: । ஓம் ஹாம் ஜ்யேஷ்டாயை நம: । ஓம் ஹாம் வாமாயை நம: । என்று பூஜித்து, கர்ணிகையின் நடுவில் ஓம் ஹாம் ஶக்திமண்டலாய நம: । ஓம் ஹாம் ஶக்திமண்டலாதிபதயே ஈஶ்வராய நம: । என்றும், கர்ணிகையின் நுனியில் ஓம் ஹாம் வஹ்நிமண்டலாய நம: । ஓம் ஹாம் வஹ்நிமண்டலாதிபதயே ருத்ராய நம: । என்றும், கேஸரங்களின் நுனியில் ஓம் ஹாம் ஸோமமண்டலாய நம: । ஓம் ஹாம் ஸோமமண்டலாதிபதயே விஷ்ணவே நம: என்றும், தளங்களின் நுனியில் ஓம் ஹாம் ஸூர்யமண்டலாய நம: । ஓம் ஹாம் ஸூர்யமண்டலாதிபதயே ப்ரஹ்மணே நம: என்றும் பூஜிக்கவேண்டும்" என்பதாம். மூலத்தில் சுருங்கக் கூறியிருத்தலின் விரிவாக டிப்பணத்தில் இவ்வாறு கூறப்பெற்றது.

171/2. எள்ளு திருநீறு முதலியவற்றை (ஸ்தண்டிலத்திற்கு மேல்) இறைத்து 1 அங்கங்களுடன்கூடச் சிவபெருமானைப் பூஜிக்கவேண்டும்.

---

1 சிவபெருமானை ஸாங்கமாகப் பூஜிக்கும் முறை வருமாறு:— "ஓம் ஹாம் ஶிவாஸநாய நம: । ஓம் ஹாம் ஶிவமூர்த்தயே நம: । என்று சொல்லிக்கொண்டு ஆஸனம் மூர்த்தி இவற்றைப் பூஜித்து, இடதுபாதம் முதற்கொண்டு சிரசு ஈருக ஸத்யோஜாதம் வாமதேவம் அகோரம் தத்புருஷம் ஈசானம் ஆகிய மந்திரங்களை நியாஸஞ் செய்து, ஐந்து முகங்களை நியாஸஞ் செய்து, வித்யாதேகம் நேத்ரம் இவற்றை நியாஸஞ்செய்து, அத்துவசுத்தி செய்யின் நிவிருத்தி முதலிய கலைகளை பாதம் முதலிய ஸ்தானங்களில் நியாஸஞ்செய்து, மூலமந்திரத்தால் சிவபெருமானை ஆவாஹனஞ் செய்து, ஸ்தாபனம் ஸந்நிதாபனம் முதலியன செய்து, நல்வரவு கூறி, என் பூஜை முடியும்வரையில் இங்கிருந்து அருளவேண்டுமென்று பிரார்த்தித்து அர்க்யம் சமர்ப்பித்து, இருதயம் முதல் கை ஈறான இடங்களில் இருதயம் முதலிய அங்கங்களை நியாஸஞ் செய்து, மூலமந்திரத்தால் ஏகத்துவத்தைச் செய்து, அஸ்திரமந்திரத்தால் ஸம்ரக்ஷணஞ்செய்து, கவசமந்திரத்தால் அவகுண்டனஞ் செய்து, அமிருத முத்ரை காண்பித்து, வௌஷடை இறுதியிலுடைய மூலமந்திரத்தை உச்சரித்து மஹாமுத்ரையால் பரமீகரணஞ் செய்து, பஞ்சமுகீமுத்ரை காண்பித்து, பாத்யம் ஆசமனீயம் அர்க்யங்களை முன்போல் சமர்ப்பித்து, வௌஷடை இறுதியிலுடைய மூலமந்திரத்தால் அறுகு புஷ்பம் அக்ஷதைகளைச் சமர்ப்பிக்கவேண்டும். ஹிருதயபீஜத்துடன் கூடியதாயும் ஸ்வாஹாசப்தத்தை இறுதியிலுடையதாயுமுள்ள மூலமந்திரத்தால், தூபமும், முன்போல் ஆசமனீயம் அர்க்யங்களையும் சமர்ப்பித்து, அப்யங்கம் முதலியவற்றை மனதால் பாவித்து விசேஷ ஆடையாபரணங்களை மனதால் சமர்ப்பித்து, தூபம் தீபம் ஆசமனம் அர்க்யம் இவற்றைச் சமர்ப்பித்து, மனோதமுத்ரை காண்பிக்கவேண்டும். ஸத்யோஜாதம் முதலிய மந்திரங்களால் லயாங்கபூஜை செய்து, பிரார்த்தித்து, போகாங்கங்களைப் பூஜிக்கவேண்டும். மேற்கு வடக்கு தெற்கு கிழக்கு ஈசானம் ஆகிய திக்குக்களில் ஸத்யோஜாதம் முதலியவற்றை ஆவாஹனஞ்செய்து, ஈசானதிக்கில் நேத்ரமந்திரத்தையும், அக்கினி ஈசானம் நிருருதி வாயு ஆகிய திக்குக்களிலுள்ள தளங்களில் இருதயம் முதலிய மந்திரங்களையும், நான்கு திக்குக்களில் அஸ்திரத்தையும் அருச்சித்து, அர்க்யம் சமர்ப்பித்து, ஸத்யோஜாதம் முதலியவற்றிற்கு ஸ்ருக்முத்ரை மகரமுத்ரை த்ரிசூலமுத்ரை பத்மமுத்ரை தேநுமுத்ரை ஆகிய இவற்றையும், அங்கங்களுக்கு நமஸ்காரமுத்ரையும் காண்பித்து, ஜபமீறாகப் பூஜிக்கவேண்டும்" என்பதாம்.

## அக்கினிகாரிய விதி.

(18-18½) தெற்குத்திக்கிலுள்ள குண்டத்தில் (அக்கினியை) 1 வைத்து, முன்போல் அக்கினியை 2 உண்டுபண்ண வேண்டும். அக்கினியினுடைய இருதயத்தில் சிவபெருமானைப் 3 பூஜித்து பூர்ணுகுதியீருக ஹோமஞ் செய்யவேண்டும்.

## சிதையடுக்குமிடத்திற் செய்யவேண்டுவன.

(19-20-21) அக்கினி திக்கு முதலிய உபதிக்குக்களில் அஸ்திரமந்திரத்தால் (ஒருமுறை)ஜபிக்கப்பெற்றவையாயும், செம்மை நிறமுள்ள நூலாற் (கவசமந்திரத்தை உச்சரித்து அப்ரதக்ஷிணமாக) சுற்றப்பெற்றவையாயும்,உயரேவேரையும் கீழே நுனியையுமுடையவையாயும் உள்ள உலர்ந்த காஷ்டத்தாலாகிய முளைகளை அப்ரதக்ஷிணமாகமுறையே 4(இரக்ஷைக்காக)நடவேண்டும். 5 விறகுகளால் சிதையடுக்குதற்குரிய பள்ளத்தைநிரப்பி, 6 ஆடையால்

---

1 வாகீசுவரியினுடைய கர்ப்பநாடியில் வாகீசுவரரால் விடப்படுவதாகப் பாவித்துவைத்து என்பது பொருள். 2. அக்கினிக்கு ஜனனம் முதலிய ஸம்ஸ்காரங்களை உண்டுபண்ணவேண்டும் என்பது கருத்து.

3. ஸ்தண்டிலத்திற் செய்யப்பெற்றவாறு ஆபரணங்களுடன் சிவபெருமானை அபஸவ்யமாகப்பூஜித்து மந்திரங்களுக்குத்தர்ப்பணஞ்செய்தற்காக மூலமந்திரத்தை உச்சரித்து நூற்றெட்டு முறையும், பஞ்ச ப்ரஹ்மஷடங்க மந்திரங்களுக்கு தசாம்சமாகவும் ஹோமஞ்செய்து, விசேஷதர்ப்பணத்தைச் செய்து, பூர்ணுதிகொடுத்து, நல்லதேசம் நல்லகாலமாதற்காக திரவியம் காலம் இவற்றை அநுசரித்து மூலமந்திரத்தால் நானூறு முறையேனும் சக்திக்குத் தக்கவாறேனும் ஹோமஞ்செய்து, மூலமந்திரம் முதலிய மந்திரங்களுக்குத் தர்ப்பணம் தீபனம் இவற்றைச் செய்யவேண்டும். தர்ப்பணம் தீபனங்களுக்குரிய பிரயோகமுறை மேலே ஸமயதீக்ஷா விதியில் டிப்பணத்தில் கூறப்பட்டிருக்கின்றது.

4 "சிதை அடுக்குமிடத்தில் நடுவில் பொன்னிறமுள்ள பொடிகளால் நாற்கோணத்தையும், அதன் நடுவில் செம்மை நிறமுள்ள பொடிகளால் முக்கோணத்தையும் வரைந்து, அவற்றில் இந்திரன் அக்கினி இவர்களைப் பூஜித்த பின்னர், காஷ்டத்தாலாகிய முளைகளை நடவேண்டு"மென்று நூல்களிற் காணப்படுகின்றது,

5 தனிகர்களுக்கு சந்தனம் அகில் இவற்றின் காஷ்டங்களாலும், மற்றவர்களுக்குச் சக்திக்குத்தக்கவாறான காஷ்டங்களாலும் என்பதுகருத்து.

6. கவசமந்திரத்தை உச்சரித்து தெற்குத்திக்கில் தலைப்பை உடைய ஆடையால் மறைத்து.

அபஸவ்யமாக மறைத்து, அஸ்திரமந்திரத்தை உச்சரித்து, தர்ப்பம் புஷ்பம் எள்ளு இவற்றால் பூஜிக்கவேண்டும்.

## மரித்தவனுக்குச் செய்யவேண்டுவன.

(22) மிருத்திகை, கோமயம் இவை கலந்த நீரால் 1 மரித்தவனுக்கு ஸ்நானஞ் செய்வித்து, திருநீறால் 2 உத்தூளனஞ்செய்வித்து, முந்தின ஜாதியைக்கருதாது உபவீதத்தையும் 3 மாட்டி, 4 கொண்டுவரவேண்டும்.

(23) பின்னர் 5 தாரணைகளால் சுத்தமாயும், கந்தம் புஷ்பம் முதலியவற்றால் 6 பூஜைசெய்யப்பெற்றதாயுமுள்ள 7 பிணத்தினிடத்தில், 8 மகா ஜாலப்ரயோகத்தால் (இறந்தவனுடைய) ஆன்மா

---

1 பஞ்சகவ்வியம் ஸ்நபனதீர்த்தம் இவற்றாலும் என்று கொள்ளவேண்டும். இவ்வாறு ஸ்நானஞ்செய்வித்தல் வீடு மயானம் இவற்றிலொன்றில் செய்யலாமென காமிகத்தில் கூறப்பட்டிருக்கின்றது.

2 ஸத்யோஜாதம்முதலான மந்திரங்களால்கால்முதலாக உத்தூளனஞ் செய்வித்து என்பது கருத்து.

3 உம்மையால் சுத்தமான இரண்டு ஆடைகளை உடுத்தி என்னும் பொருளையும் கொள்ளவேண்டும்.

4 குண்டத்திற்குத் தெற்குப்பக்கத்தில் பிரணவத்தாற் கற்பிக்கப்பெற்ற தர்ப்பத்தாலாகிய ஆஸனத்தில் வைக்கவேண்டுமென்பது கருத்து.

5 பிருதிவி முதலியபஞ்சபூதங்களைச் சுத்தி செய்வதால் என்பது பொருள்.

6 இருதயத்தில் ஆஸனபூஜை செய்யப்பெற்றதாயும் என்பது கருத்து.

7 பிணத்தின் இருதயத்திலென்பது கருத்து.

8 மஹா ஜாலப்ரயோக முறை வருமாறு:— மரித்தவனுடைய சரீரத்தில் ஜீவனை நியாஸஞ் செய்தற்காக பிரணவத்தை உச்சரித்தலால் எழுந்த நாதத்தை, முஷ்டியால் துவாதசாந்தத்திற்குக் கொண்டுபோய், அந்த நாதத்துடன் ஒற்றுமைப்பட்ட கையையுடைய ஆசாரியர், இறந்தவனுடைய ஆன்மாவை கன்மத்திற்குரியவாறு இங்குமங்குஞ் செல்லுகிறதாகச் செய்து, வலைபோல் எங்கும் பரந்தநாதத்தின் சக்தியால் அதனைப்பிடிக்கப் பெற்றதாகப் பாவித்து, ஆன்மமந்திரத்தை மிக்க சூக்குமமாக உச்சரித்து, நாதரூபமான சுட்டுவிரலை மூன்றுமுறை சுற்றி தூரத்திலுள்ள ஆன்மாவை அருகிலிருப்பதாகப்பாவித்து, பெருவிரலடியில் கடைவிரல் முதலிய விரல்களைச்சேர்த்து அந்த ஆன்மாவைக்கிரகித்து, அங்குசமுத்ரை செய்து கொண்டு இருதய மந்திரத்தால் தன்னுடைய இருதயத்தில் இழுத்து தன்னுடைய நாதத்திலிருந்தும் அந்த ஆன்மாவைப் பிரித்து, ஆன்மமந்திரத்

மாவைக்கிரகித்து 1 ஓம் ஹாம் ஹாம் ஹம் ஹாம் ஹ்ம்ம் அமுக நம: என்றுசொல்லிக்கொண்டுநியாஸஞ்செய்யவேண்டும்.

24-25. இறந்தவனுடைய தேகத்தில் 2 வித்யாதேகத்தையும், சிரசு முகம் இருதயம் நாபி அதற்குக் கீழுள்ள சரீரம் (முழங்கால்) இவற்றில் சாந்தியதீதை முதலிய கலைகளையும், வித்யாதத்வம் சக்திகளின் ஸமூகம் இவற்றையும், அவ்வாறே சிவபெருமானையும்நியாஸஞ்செய்து,சைதன்யம்ஸாந்நித்தியமாதற்காக மூலமந்திரத்தால் நூறு ஆகுதிகளைக் கொடுக்கவேண்டும்.

---

தை உச்சரித்து ஸம்ஹாரமுத்ரை செய்து கிரகித்து, ப்ராணப்ரவாஹத்தினால் வெளியில் வரச்செய்து, வெளியில் துவாதசாந்தத்தில் சேர்த்து, மீண்டும் கிரகித்து உத்பவமுத்ரை செய்துகொண்டு அவனுடைய தேகத்தில் சேர்த்துவிடவேண்டும்" என்பதாம்.

1. ஓம் ஹாம் ஹாம் ஹம் ஹாம் ஹம் என்னும் பீஜாக்கரங்களை உச்சரித்த பின்னர் அமுக நம: என்னும் பதத்தை இறுதியிலுடைய இறந்தவனது தீக்ஷா நாமதேயத்தை உச்சரிக்கவேண்டும் என்பது மந்திரத்தில் குறிக்கப்பட்ட அமுக என்னும் பதத்தின் பொருள்.

2 வித்யாதேகத்தை நியாஸஞ் செய்தற்கு முன்னர், இறந்தவனுடைய சரீரத்தில் ஜீவனை நியாஸஞ்செய்தவுடன், மூலமந்திரத்தை உச்சரித்து மூன்று ஆகுதிகள் கொடுத்து ஆணவமலம் முதலிய மூன்று பாசங்களைப் பாவித்து, கால்முதல் முறையே ஸத்யோஜாதம் முதலிய பஞ்சப்ரஹ்ம மந்திரங்களை நியாஸஞ்செய்யவேண்டுமென்று க்ரியாக்ரமத்யோதிகையில் கூறப்பட்டிருக்கின்றது. அன்றியும் வித்யாதேகத்தை நியாஸஞ்செய்த பின்னர், ஸாமான்யதீக்ஷை பெற்றவர்க்கு மாத்ரம் செய்துவைக்கப்படும் சில அந்தியேஷ்டிக்ரியைகளைக் கூறி, ஸமயாந்தியேஷ்டிவிதி எனவும், அதன்பின் விசேஷதீக்ஷை பெற்றவர்க்கு மாத்ரம் செய்துவைக்கப்படும் சில அந்தியேஷ்டிக்ரியைகளைக் கூறி விசேஷஅந்தியேஷ்டிவிதி எனவும், தனித்தனி பிரிக்கப்பெற்றிருக்கின்றன. அவ்வாறு பிரித்துக் கூறுதல் பலருக்குப் பயன்படுமெனக் கருதி, க்ரியாக்ரமத்யோதிகையில் கூறப்பட்ட அவ்விஷயங்கள் ஈண்டு டிப்பணத்தில் மொழிபெயர்க்கப்பெற்றுள்ளன. அவை வருமாறு:— வித்யாதேகத்தை நியாஸஞ்செய்து, அத்துவசுத்தி செய்யும் விஷயத்தில், முழங்கால் நாபி கழுத்து புருவநடு பிரமரந்திரம் இவற்றில் முறையே நிவிருத்தி முதலிய கலைகளை நியாஸஞ்செய்து, அதிஷ்டிப்பவர்களான சிவபெருமான் அங்கங்கள் இவர்களையும் நியாஸஞ்செய்து, சைதன்யம் ஸாந்நித்யமாதற்காக மூலமந்திரத்தை உச்சரித்து நூறுமுறை ஹோமஞ் செய்யவேண்டும். பின்னர் நாடீஸந்தானம் செய்யவேண்டும்,

அது எவ்வாறெனில், தர்ப்பத்தின் அடியை மூலமந்திரத்தை உச்சரித்து சிஷ்யனுடைய கையில் கொடுத்து, அதன் நுனியை தன்னுடைய முழங்கால் சந்திலிடுக்கிக்கொண்டு, தர்ப்பமென்னும் வியாஜத்தால் தாமரை நூலுக்குச் சமானமான சிஷ்யனுடைய நாடியை பிங்கலை வழியாக வெளிவரச்செய்து, பூரகஞ் செய்தலால், சிஷ்யனுடைய இருதயத்துட் புகுந்து, ரேசகத்தினால் வெளியில் வந்து, பூரகஞ்செய்து, தன்னுடைய இருதயத்துட் புகுந்து, இவ்வாறே சிவகும்பம் அக்கினியிலெழுந்தருளிய சிவபெருமான் இவர்களிடமும் நாடீஸந்தானஞ்செய்து, நாடீஸந்தானத்திற்காக மூலமந்திரத்தை உச்சரித்து மூன்று ஆகுதிகள் கொடுக்கவேண்டும்.

## ஸமயதீக்ஷைபெற்றிறந்தவனைச் சிவபெருமானிடஞ்சேர்க்குமுறை.

பின்னர் ஸமயதீக்ஷை பெற்றவன் அவனுடைய அனுட்டானத்திலிருந்து தவறினால், அந்தத் தோஷத்தின் நீக்கத்திற்காக மூலமந்திரத்தால் மூன்று ஆகுதிகள் கொடுத்து, சிஷ்யனை அஸ்திரமந்திரத்தால் புரோக்ஷித்து, நாராசமுத்ரை செய்துகொண்டு, ஓம் ஹ: ஹூம் பட் என்னும் மந்திரத்தால் புஷ்பத்தால் இறந்தவனது இருதயத்தில் தாடனஞ் செய்து, ஆசாரியர் ஹூம் என்னுமக்ஷரத்தை உச்சரித்து, ரேசகத்தினால் அவனுடைய தேகத்துட் புகுந்து, ஓம் ஹாம் ஹம் ஹாம் ஹ: ஹூம் பட் என்னும் மந்திரத்தை உச்சரித்து, ஜ்யேஷ்டை என்னும் சிவசக்தியால் அவனிடம் நியாஸஞ்செய்த ஜீவனைப் பிரித்து, ஓம் ஹாம் ஹம் ஹாம் ஸ்வாஹா என்னும் மந்திரத்தால் அங்குசமுத்திரை செய்து கொண்டு இழுத்து, அதனைத் துவாதசாந்தத்திற்குக் கொண்டுபோய், புல்லின் நுனியிலிருக்கும் ஜலத்திவலைபோல் ஜீவனைச் சிந்தித்து, ஆன்ம மந்திரத்தை உச்சரித்து, சங்காரமுத்ரையால் கிரகித்து, பூரகத்தினால் தன்னுடைய இருதயத்திற்குக் கொண்டுவந்து, ஸமரஸமாகச் செய்து, நெய்யால் நிரப்பப்பெற்றதாயும், கீழ்நோக்கிய முகமாக வைக்கப்பட்ட ஸ்ருவத்தையுடையதாயும், நுனியில் புஷ்பத்துடன் கூடியதாயும் இருக்கிற ஸ்ருக்கைச் சங்கமுத்ரை செய்து கிரகித்து, எழுந்து குரு உபதேசம் செய்தபடி பூர்ணாகுதி செய்தலால் ருத்ரபதத்தை அதிட்டிக்கும் சிவபெருமானுடன் இறந்தவனது ஆன்மாவைச் சேர்த்து, மண்டலத்தில் இருக்கும் சிவபெருமானை அக்கினியிலுள்ள சிவபெருமானுடன் சேர்த்து, அவரையும் சிவாக்கினியுடன் சேர்த்து, மற்றக் கிரியைகளைப்பின்னர் கூறப்படும் முறையாகச் செய்யவேண்டும்.

ஸமயாந்தியேஷ்டி விதி முற்றிற்று.

---

## விசேஷாந்தியேஷ்டி விதி.

விசேஷ தீக்ஷைபெற்று இறந்தவனுக்கு, முன் கூறப்பட்டவாறு நாடீஸந்தானமீறான கிரியைகளைச் செய்து, அக்கினியினுடைய இருதய கமலத்தில் வாகீசுவரீ வாகீசுவரர்களை அருச்சித்து, அவர்கள் ஸாந்நித்ய மடைதற்காகத் தனித்தனி மூன்று ஆகுதிகள் கொடுத்து, அவர்களைச் சேர்ந்திருப்பவர்களாகப் பாவித்து, சிஷ்யனை அஸ்திர மந்திரத்தால் புரோக்ஷித்து, ஓம் ஹ: ஹ்ரூம் ஃபட் என்னும் மந்திரத்தை உச்சரித்து நாராச முத்திரை செய்துகொண்டு புஷ்பத்தால் தாடனஞ் செய்து, ஆசாரியர் ஹூம் என்னும் அக்ஷரத்தை உச்சரித்து ரேசகஞ் செய்து அவனுடைய தேகத்துட் புகுந்து, ஓம் ஹாம் ஹம் ஹாம் ஹ்ரூம் ஃபட், என்னும் மந்திரத்தை உச்சரித்து ஜ்யேஷ்டை என்னும் சக்தியால் பிரித்து, ஓம் ஹாம் ஹம் ஹாம் ஸ்வாஹா என்னும் மந்திரத்தால் அங்குசமுத்திரை செய்து இழுத்து, அந்த ஜீவனை துவாதசாந்தத்திற்குக் கொண்டுபோய், புல் நுனியிலுள்ள திவலைரூபமாக ஜீவனைச் சிந்தித்து, நம: என்னும் பதத்தை இறுதியிலுடைய ஆன்ம மந்திரத்தால் ஸம்ஹாரமுத்திரை செய்து கிரஹித்து, பூரகஞ்செய்து தன்னுடைய இருதயத்தில் தாபித்து, கும்பகஞ் செய்து, மூலமந்திரத்தைத் தியானித்துக்கொண்டு பிரமன் முதலிய காரணேசுவரர்களை முறையே கடந்து, தன்னுடைய துவாதசாந்தத்திற்குக் கொண்டுபோய், மீண்டும் அதனைக் கிரகித்து, வலது நாடி வழியாக வெளியில் கொண்டுவந்து, வாகீசுவரீ வாகீசுவரர்களுக்குச் சேர்க்கையைப் பாவித்து, இடது நாடிவழியாக உத்பவமுத்திரை செய்து, ஆன்ம மந்திரத்தால் வாகீசுவரியின் கர்ப்பத்திற் சேர்த்து, மூலமந்திரத்தால் ஆயிரம் அல்லது ஐநூறு அல்லது நூறு முறையேனும் ஹோமஞ் செய்து, அந்தச் சிஷ்யனுடைய ஆன்மாவை அக்கினியினின்று எடுத்து, பூர்ணாகுதி கொடுத்தலால் ஈசுவர பதத்தை அதிட்டிக்கும் சிவபெருமானிடம் சேர்க்கப்பட்டதாகப் பாவித்து, வாகீசுவரீ வாகீசுவரர்களுக்குத் தர்ப்பணாகுதிகள் செய்து, விஸர்ஜனஞ் செய்து, பிராயச்சித்தத்திற்காக அஸ்திரமந்திரத்தால் நூற்றெட்டு முறை ஹோமஞ் செய்து, ஸ்தண்டிலத்திலுள்ள சிவபெருமானை அக்கினியிலுள்ள சிவபெருமானோடு சேர்த்து, அந்தச் சிவபெருமானையும் விஸர்ஜனஞ் செய்யவேண்டும்" என்பதாம், இதற்குப் பின் செய்யவேண்டிய தகனம் முதலியவற்றை மூலத்திற் கூறப்பட்டவாறு கொள்ளவேண்டும்.

ஓம் ஹாம் ருத்ரலோகஸ்த்ரோதஸ்வாஹா । ஓம் ஹாம் ருத்ரவர்ணஸ்வாஹா । ஓம் ஹாம் ருத்ரகணாயிபோஸ்வாஹா என்று சொல்லிக்கொண்டு, ஸமய விசேஷதீக்ஷை பெற்றிறந்தவர்களுக்குப் பிதிரு தர்ப்பணஞ் செய்யவேண்டும்.

26-27. நிவிருத்தி முதலிய கலைகளை ஒரேமுறையிலேனும் ஒன்றன்பின் ஒன்றாக முறையாகவேனும், (அவனிடமிருந்து) கிரகித்து, அக்கினியிற் சேர்த்துப் பூஜித்து, வாகீசுவரீ வாகீசுவரர்களை ஆவாஹனம் செய்தல் முதலியன செய்து, இறந்தவனிடமேற்றிய ஜீவனைத் தாடனஞ் செய்து பிரித்து இழுத்தல் முதலியன செய்து, அதனைத் தன்னிடத்திலேற்றி,வாகீசுவரியினுடைய கர்ப்பத்தில் வாகீசுவரரால் விடப்படுவதாகப் பாவித்தல் முதலியன அனைத்தையும் தீக்ஷையிற் செய்யப்படுமாறு செய்ய வேண்டும்.

28-29-30. ஜனனம், அதிகாரம், போகம், லயம், மாயா காரியங்களின் ஆரம்பமாகிற பிரவாஹத்தைச் சுத்தி செய்தல், நிஷ்கிருதி, மலசத்தி கெடுதல், ஆன்மாவின் பாசங்களை அறுத்தல், மர்த்தனஞ்செய்தல், உருண்டையாகச் செய்தல், பாசத்தை எரித்தல் முதலிய எல்லாக் கிரியைகளையும், காரணேசுவரர்களை ஆவாஹனஞ் செய்தல், அவ்வாறே அதிகாரத்தைச் சமர்ப்பித்தல், அக்கினியிலிருந்து சிஷ்யனுடைய ஆன்மாவை எடுத்தல் முதலிய கிரியைகளையும் செய்து, நிர்க்குணராயும், பாவனைக்கு விஷயமாகாதவராயும், அழிவற்றவராயுமிருக்கும் சிவபெருமானிடம் சிஷ்யனுடைய சைதன்யத்தைச் சேர்க்கவேண்டும்.

31. ஸ்தண்டிலேசுவரரை 1 அக்கினியிற் சேர்த்து, பிணத்தைத் தெற்குத் திக்கில் தலையை வைத்துச் சிதையில் 2 ஏற்றி அதனை நல்ல விறகுகளால் மறைக்க வேண்டும்.

---

1 ஸ்தண்டிலேசுவரரை அக்கினியிலுள்ள சிவபெருமானிடம் சேர்த்து அந்தச் சிவபெருமானையும் விஸர்ஜனம் செய்து என்பது கருத்து.

2 பிணத்தைச் சிதையில் ஏற்றிய பின்னர், ஆடையால் அதனை மறைத்து, புத்ரன் ஞாதி சிஷ்யன் இவர்களுள் எவரேனும் ஸ்நானம் செய்து, உபவீதத்தை அபஸவ்யமாகத் தரித்து, சிவகும்பத்தைத் தலையில் தூக்கிக் கொண்டு, அப்ரதக்ஷிணமாக நீர்த்தாரையை இடைவிடாது மூன்று முறை பெருக்கிச் சுற்றி, தலைப்பக்கஞ் சென்று, காஷ்டத்தால் உடைக்கப் பெற்றுப் பெருகும் எஞ்சிய ஜலத்தை எடுத்து, அதில் பால், அரிசி, சுவர்ணம் இவற்றைப் போட்டு, அவற்றை வாயில் பிதிருமந்திரத்தை ஜபித்துக்கொண்டு போட வேண்டுமென்று க்ரியாக்ரமத்யோதிகையில் நிர்வாணாந்தியேஷ்டி விதியில் கூறப்பட்டிருக்கின்றது.

32. பின்னர் குண்டத்தின் நடுவிலுள்ள சிவாக்கினியால் சிதையை எரியச் செய்து, பிணத்தின் தலைப்பக்கத்தில் வடக்கு முகமாக நின்று ஜ்வாலையுடன் கூடிய அக்கினியிற் பூர்ணாகுதி கொடுக்க வேண்டும்.

33. பூர்ணாகுதி செய்தற்குரிய மந்திரசுலோகம் வருமாறு:-

ௐ ஸம்பூர்ண தக்ஷிண: காய: காலயோகேந வோபபாதி தாய! ம்ருத்யுஹாரணேஞ ஸம்பூர்த்தி தாம் ஶாவ்யா த்வேநாம் ஹேஹா ஹா திய ॥

இ-ள். "ஓ பிரபுவான அகோர ருத்திரரே! 1 காலத்தினாலேயே கொண்டு வரப்பெற்றதாயும், மந்திரங்களால் பரிசுத்தமாயும், பிணத்தைச் சார்ந்ததாயுமுள்ள இந்த உத்கிருஷ்டமான ஆகுதியைத் தேவரீர் ஏற்றருள வேண்டும்" என்பதாம்.

34. இவ்வாறு மஹாமந்திரத்தை உச்சரித்துக்கொண்டு, "பவ" என்னும் பதத்தை ஈற்றிலுச்சரித்துப் பூர்ணாகுதிகொடுத்து, ஜ்வலிக்கிற அந்தச் சிதையில் ஸ்ருக்ஸ்ருவம் இவற்றைக் கவிழ்த்து வைக்கவேண்டும்.

## பிணத்தைத் தகித்த பின்னர்ச் செய்யவேண்டுவன.

35. இடது தோளில் அஸ்திர வர்த்தனியை வைத்துக்கொண்டு, அப்ரதக்ஷிணமாகக் கீழ் நோக்கித் தாரையை விழச் செய்து, அதன் பின் எந்த இடத்திலிருந்து வர்த்தனீ எடுக்கப் பெற்றதோ அந்த இடத்தில் வர்த்தனியை வைக்கவேண்டும்.

36. பின்னர் திரும்பிப் பார்க்காமல், நீரின் பக்கத்துச் சென்று ஸ்நானஞ் செய்து, தர்ப்பங்களைப்பரப்பி அபஸவ்யமாக ஓம் ஹாம் ஶாந்த்ரு ரம்ஶோஹவஸ்யா । ஓம் ஹாம் ஶாந்த்ரு ஸதாஶிவோஹவஸ்யா । ஓம் ஹாம் ஶாந்த்ரு ஶாந்தோஹவஸ்யா । என்று சொல்லிக்கொண்டு மூன்று முறை பிதிரு தர்ப்பணஞ் செய்யவேண்டும்.

---

1 அந்தியேஷ்டிக்குரிய இந்தச் சமயத்தில் செய்யப்பட்டதாயும் என்பது கருத்து.

37. ஆசாரியர் மீண்டும் ஸ்நானஞ் செய்து, அகோர மந்திரத்தை நூறு முறை ஜபிக்கவேண்டும். பிணத்தைச் சுமந்தவர்கள் இருநூறுமுறை 1 ஜபிக்கவேண்டும். பின்னர் (எல்லோரும்) தமது கிருஹத்திற்குச் 2 செல்லவேண்டும்.

38. வீட்டிற்குச் சென்று இறந்தவனைக் குறித்து தேவ பூஜை செய்ய வேண்டும். முதல் தினத்திலேனும் மூன்றாவது தினத்திலேனும் சிதையிலிருந்து 3 ஸஞ்சயனம் (எலும்புகளை எடுத்தலை) செய்யவேண்டும்.

---

1 பிணத்தைத் தொடர்ந்து சென்றவர்கள் ஸம்ஹிதா [illegible] தயே னும் அகோர மந்திரத்தையேனும் நூறு முறை ஜ [illegible] என் றும், தகனம் செய்தவர்கள் இருநூறு முறை ஜபி [illegible] ன்றும் க்ரியாக்ரமத்யோதிகையில் அதிகமாகக் கூறப்ப [illegible]

2 வீட்டின் வாயிலை அடைந்து, வேப்பி [illegible] மனஞ் செய்து, அக்கினி, நீர், சாணி, வெண்கடுகு [illegible] கல்லில் காலைவைத்து வீட்டிற்குள் பிரவேசிக்க வே [illegible] ரமத்யோ திகையில் கூறப்பட்டிருக்கின்றது.

3 சிதையிலுள்ள அக்கினி அணைந்தால் [illegible] ளடஸம்ஸ்காரம் அக்கினி ஸம்ஸ்காரம் இவற்றைச் செய் [illegible] இருதயத்தில் பரமேசுவரரைப் பூஜித்து, மந்திரங்களுக்கு [illegible] ள் செய்து பின்னர் அஸ்திர மந்திரத்தால் நூறு முறை ஆகு [illegible] து, சிவபெருமானை விஸர்ஜனம் செய்து, சிவாக்கினியில் பிருதி [illegible] முதல் உள்ள தத்துவங்களைப் பூஜித்து, தனித்தனி மூன்று ஆகுதிகளால் ஹோமஞ் செய்ய வேண்டும். தத்துவங்களைப் பூஜித்தற்குரிய மந்திரங்கள் வருமாறு:—

𑌓𑌂 𑌪𑍃𑌥𑌿𑌵𑍀𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌾𑌯 𑌨𑌮𑌃 । 𑌓𑌂 𑌅𑌪𑍍𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌾𑌯 𑌨𑌮𑌃 । 𑌓𑌂 𑌤𑍇𑌜𑌸𑍍𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌾𑌯 𑌨𑌮𑌃 । 𑌓𑌂 𑌵𑌾𑌯𑍁𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌾𑌯 𑌨𑌮𑌃 । 𑌓𑌂 𑌆𑌕𑌾𑌶𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌾𑌯 𑌨𑌮𑌃 । 𑌓𑌂 𑌗𑌨𑍍𑌧𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌾𑌯 𑌨𑌮𑌃 । 𑌓𑌂 𑌰𑌸𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌾𑌯 𑌨𑌮𑌃 । 𑌓𑌂 𑌰𑍂𑌪𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌾𑌯 𑌨𑌮𑌃 । 𑌓𑌂 𑌸𑍍𑌪𑌰𑍍𑌶𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌾𑌯 𑌨𑌮𑌃 । 𑌓𑌂 𑌶𑌬𑍍𑌦𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌾𑌯 𑌨𑌮𑌃 । 𑌓𑌂 𑌉𑌪𑌸𑍍𑌥𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌾𑌯 𑌨𑌮𑌃 । 𑌓𑌂 𑌪𑌾𑌯𑍁𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌾𑌯 𑌨𑌮𑌃 । 𑌓𑌂 𑌪𑌾𑌦𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌾𑌯 𑌨𑌮𑌃 । 𑌓𑌂 𑌪𑌾𑌣𑌿𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌾𑌯 𑌨𑌮𑌃 । 𑌓𑌂 𑌵𑌾𑌕𑍍𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌾𑌯 𑌨𑌮𑌃 । 𑌓𑌂 𑌨𑌾𑌸𑌾𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌾𑌯 𑌨𑌮𑌃 । 𑌓𑌂 𑌜𑌿𑌹𑍍𑌵𑌾𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌾𑌯 𑌨𑌮𑌃 । 𑌓𑌂 𑌚𑌕𑍍𑌷𑍁𑌸𑍍𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌾𑌯 𑌨𑌮𑌃 । 𑌓𑌂 𑌤𑍍𑌵𑌕𑍍𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌾𑌯 𑌨𑌮𑌃 । 𑌓𑌂 𑌶𑍍𑌰𑍋𑌤𑍍𑌰𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌾𑌯 𑌨𑌮𑌃 । 𑌓𑌂 𑌘𑍍𑌰𑌾𑌣𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌾𑌯 𑌨𑌮𑌃 । 𑌓𑌂 𑌅𑌹𑌙𑍍𑌕𑌾𑌰𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌾𑌯 𑌨𑌮𑌃 । 𑌓𑌂 𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌾𑌯 𑌨𑌮𑌃 । 𑌓𑌂 𑌗𑍁𑌣𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌾𑌯

39. பால் அல்லது நீரால் கெண்டியை நிரப்பி, மூன்று காஷ்டங்களாலாக்கப் பெற்ற ஆஸனத்தில் அந்தக்கெண்டியை ஸ்தாபித்து, அந்தக் கெண்டியினுள் எடுத்த எலும்புகளைப் [1] போடவேண்டும்.

40. பாலர்களின் அறிவு விளக்கத்திற்காக ஸ்ரீ ஸோமசம்பு சிவாசாரியரால் க்ரியாகாண்ட க்ரமாவளீ என்னும் நூலில் அந்தியேஷ்டி விதியின் முறையானது கூறப்பெற்றது.

ஆகச் சுலோகம் $1192\frac{1}{2}$.

அந்தியேஷ்டி விதி முற்றிற்று.

---

## சிராத்த விதி.

1 பின்னர் ஆசௌசம் நீங்கியதினம் [2] முதல் ஒரு வருஷம் முடிய மாஸந்தோறும் சிராத்தமானது விதிக்கப் பெற்றிருக்கின்றது. இந்தச் சிராத்தம் ஆசாரியர் முதலியவர்களுக்குத் திருப்தி செய்து வைப்பதாகும்.

---

நம꞉ । ஓம் ப்ரக்ருதிதத்த்வாய நம꞉ । ஓம் புருஷதத்த்வாய நம꞉ । ஓம் ராகதத்த்வாய நம꞉ । ஓம் நியதிதத்த்வாய நம꞉ । ஓம் வித்யாதத்த்வாய நம꞉ । ஓம் கலாதத்த்வாய நம꞉ । ஓம் காலதத்த்வாய நம꞉ । ஓம் மாயாதத்த்வாய நம꞉ । ஓம் ஶுத்த வித்யாதத்த்வாய நம꞉ । ஓம் ஈஶ்வரதத்த்வாய நம꞉ । ஓம் ஸதாஶிவதத்த்வாய நம꞉ । ஓம் ஶக்திதத்த்வாய நம꞉ । ஓம் ஶிவதத்த்வாய நம꞉ । என்பதாம்.

ஹோமஞ் செய்யும்பொழுது, இவற்றை ஸ்வாஹா என்னும், பதத்தை ஈற்றில் உடையனவாகச் செய்து, உச்சரிக்க வேண்டும். ஆகுதிகளைக்கொடுத்த பின்னர் அக்கினியை விஸர்ஜனஞ் செய்து, கால், குஹ்யம் இருதயம் முகம் சிரசு இவற்றிலுள்ள எலும்புகளை ஸத்யோஜாதம் முதலிய மந்திரங்களால் எடுக்கவேண்டும்.

1 பின்னர் அந்தப் பாத்திரத்தைச் சுத்தமுள்ள இடத்தில் தோண்டிப் புதைக்க வேண்டும். ஸமுத்ரம் முதலிய தீர்த்தங்களிலேனும் போடவேண்டும். அந்தச் சாம்பலை எடுத்து ஆழமுள்ள நீரில் போடவேண்டும்.

2 பதினோராவது நாளில் செய்யவேண்டிய ஏகோத்திஷ்ட சிராத்தம், பன்னிரண்டாவது தினத்தில் ஸபிண்டீகரணம், அதன்பின் மாஸிகம் முதலியன செய்ய வேண்டுமென்பது கருத்து.

2. சிராத்தம் செய்யவேண்டிய பிறையில் (பக்ஷத்தில்) எல்லாத் திதிகளிலும் சிராத்தத்தைச் செய்யவேண்டும். கிரஹஸ்தர்களுக்கு ஆறு 1 தேவதைகளும், ஸந்யாஸிகளுக்கு மூன்று தேவதைகளும் கூறப்படுகின்றன.

3-4. சிவதீக்ஷை பெற்ற ஸந்யாஸிகள், பிராமணர் முதலாயினோர் சிராத்தத்தில் வரிப்பதற்கு உரியராவர். சைவ சிராத்தத்தில் ஈசர் ஸதாசிவர் சாந்தர் ஆகிய இவர்கள் பிதிருக்களாயும், இரண்டு பிராமணர்கள் ருத்திரர் அநந்தர் என்னும் பெயருடன் விசுவேதேவர்களாகவும் இருக்கின்றனர். நிர்வாணதீக்ஷைபெற்றவர்களுக்கு இவ்வாறு ஈசர் முதாலாயினோர் பிதிருதேவதைகள் ஆவர். ருத்திரரின் அம்சத்தை உடையவர்களுக்கு (ஸமய விசேஷதீக்ஷை பெற்றவர்க்கு) பிதிருதேவதைகள் பின்னர்க் கூறப்படுகின்றனர்.

5 ஸமய விசேஷ தீக்ஷைபெற்றவர்களின் சிராத்தத்தில், இருவரிடம் நந்தி, மஹாகாளர் என்னும் பெயருடைய விசுவேதேவர்களும், மூவரிடம் ஸ்கந்தர் சண்டர் கணேசர் ஆகிய பிதிருதேவதைகளும் முறையே இருக்கின்றனர்.

6. லௌகிக (வைதிக) சிராத்தத்தில் பிரமன் விஷ்ணு ஈசர் ஆகிய இந்தப் பெயருடன் பிதிரு தேவதைகளும், யமன் அருணன் ஆகிய பெயருடன் விசுவேதேவர்களும் இருக்கின்றனர். எல்லாச் சிராத்தங்களிலும் ஐந்து பேர்கள் கிடையாவிடில் இரண்டு பேர்களைக்கொண்டு நடத்துதலும் கூடும்.

7. ஒரு பாகத்தில் 2 தலை இருதோள்கள் என்னும் பிரிவினையால் மூவரையும், இரண்டாவது பாகத்தில் இரு புயங்களின்

---

1 சிராத்தத்தில் வரித்தற்குரிய பாத்திரர்கள் என்பது பொருள். கிரகஸ்தர் பிதாவின் ஸபிண்டீகரணத்தில் மூன்று பேர்களை வரிப்பது போல் மாதாவின் ஸபிண்டீகரணத்தில் மாதா முதலாயினோர்க்காக மூன்று பேர்களைக் கொள்ள வேண்டுமென்பது கருத்து.

2 வடக்கு முகமாக அமர்ந்த நிமந்திரணஞ் செய்யப் (வரிக்க) பெற்றவரின் கிழக்கு முதல் ஆரம்பித்து, வலது தோள் சிரசு இடது தோள் என்னும் பிரிவினால் பிதா பிதாமஹர் பிரபிதாமஹர் ஆகிய இவர்களை ஆராதிக்க வேண்டும் என்பது கருத்து.

அடிகள் என்னும் பிரிவினையால் விசுவேதேவர்களையும் கற்பிக்க வேண்டும்.

8-9. அல்லது ஒரே பாகத்தில் இருபுயங்களின் 1 அடிகளுடன் ஐந்து பேர்களையும் கற்பிக்கவேண்டும். சதுர்த்தி ஸப்தமி நவமி த்ரயோதசி அமாவாஸ்யை மகநக்ஷத்ரம் ஆகிய இந்த நாட்கள் பிதிருவர்க்கத்திற்குரியன. அஷ்டமீ எஞ்சியுள்ள பர்வதினங்கள் ஆகிய இந்த நாட்கள் மாதிருவர்க்கத்திற்குரியனவென்று கூறப்பட்டிருக்கின்றன.

10. சிராத்ததினத்திற்கு 2 முன் தினத்தில் 3 மதிப்புக்குரியவாறு (சிராத்தத்தில் வரிக்கப்படும் பாத்திரர்களை) ஆதரித்து 4 வேண்டிக்கொள்ள வேண்டும். பின்னர் மறுநாளாகிய சிராத்த தினத்தன்று நித்தியகன்மங்களை முடித்து, பிற்பகலில் அவர்களை (சிராத்தத்தில் வரிக்கப்பட்டவர்களை) அழைத்து வரவேண்டும்.

---

1 இரண்டு புயங்களின் அடிகளாகப் பாவிக்கப்பட்ட விசுவேதேவஸ்தானத்திலுள்ள இருவரையும் சேர்த்து ஐந்து பேர்களையும்என்பதுகருத்து.

2 முன்தினத்தில் சூரியன் அஸ்தமித்தபின் நக்ஷத்திரங்கள் காணப்பெற்ற பின்னர் என்பது கருத்து.

3 அவர் அவர்களின் வயதிற்குத் தக்கவாறு என்பது பொருள். அதாவது தம்மினும் வயதானவர்களைக் கால்களைப் பிடித்துக்கொண்டும், தமக்குச் சமானமானவர்களைக் கையைப் பிடித்துக்கொண்டும், தமக்கு இளையவர்களைப் பிரியமான வார்த்தையாலும், மரியாதை செய்து என்பது கருத்து.

4 வேண்டிக்கொள்ளும் முறை வருமாறு:— ஶ்வ: பிது:..... ஶ்ராத்³த⁴ம் ப⁴விஷ்யதி ருத்³ரஸம்ஜ்ஞக விஶ்வேதே³வஸ்தா²நே ப⁴வத்³பி⁴: க்ஷண: க்ரியதாம் ப்ரஸாத³: கர்தவ்ய: இ-ள். "என் பிதாவின் இன்னவிதமான சிராத்தம் நாளையதினம் வரப்போகிறது. தாங்கள் ருத்ரரென்னும் பெயருடைய விசுவேதேவரின்ஸ்தானத்தில்இருந்து வேறுதொழிற்பாடின்றி அனுக்ரஹஞ் செய்யவேண்டும்" என்பதாம். இவ்வாறு சொல்லிக்கொண்டு ஒரு ஸாதகரின் கையில் தாம்பூலம் முதலியன கொடுக்க வேண்டும். இவ்வாறே ருத்³ரஸம்ஜ்ஞக என்பதற்குப் பதிலாக ஆதி³த்யஸம்ஜ்ஞக என்னும் பதத்தைச் சேர்த்து உச்சரித்து மற்றொரு ஸாதக

11. வீட்டிலுள்ள அங்கணத்தில் (முற்றத்தில்) ஒரு முழ அளவில் சதுரச்ரமாயும், தெற்கு வடக்கு அமைப்புள்ளவையாயும், (இரண்டு மண்டலங்களுக்கும் நடுவில்) ஒரு முழ அளவு இடைவெளியுடையவையாயும் இருக்கும் இரண்டுமண்டலங்களைக் கிழக்குத் திக்கில் 1 செய்யவேண்டும்.

12. அதற்கு மேற்குத்திக்கில், அவ்வாறே வட்டமாக பிதிருதேவதைகளுக்குரிய இரண்டு மண்டலங்களைச் செய்ய வேண்டும். கிழக்குத்திக்கில் அமைக்கப்பெற்ற இரண்டு மண்டலங்களும் விசுவேதேவர்களுக்குரியனவாகும். விசுவேதேவர்களுக்குரிய இரண்டுமண்டலங்களில் தர்ப்பங்களோடு யவங்களையும், பிதிருக்களுக்குரிய இரண்டு மண்டலங்களில் தர்ப்பங்களோடு எள்ளையும் சமர்ப்பிக்க வேண்டும்.

13-14. தென்திக்கிலுள்ள இரண்டு மண்டலங்களைச் சிவாஸ்திர மந்திரத்தாலும், வடக்குத் திக்கிலுள்ள மண்டலங்களை இருதயமந்திரத்தாலும், வெண்மையான புஷ்பங்கள்கொண்டருச்சிக்க வேண்டும். பின்னர் சதுரச்ர மண்டலத்தில் விசுவேதேவஸ்தானத்திலுள்ள இருவர்களுக்குயவங்களுடனும், பிதிருஸ்தானத்

---

ருக்கும் தாம்பூலம் கொடுக்கவேண்டும். பின்னர் பூணூலை இடமாகத்தரித்து [illegible] என்று சொல்லிக்கொண்டு பிதிருக்களாக வரிக்கப்பெறும் மூவருள் ஒருவருக்கும், பின்னர் [illegible] என்று மற்றொருவருக்கும், அதன் பின் [illegible] என்று சொல்லிக்கொண்டு, பிறிதொருவருக்கும், தனித் தனி தாம்பூலம் சமர்ப்பிக்க வேண்டும். இவ்வாறே பிற சிராத்தங்களிலும் ஊஹித்துக்கொள்க.

1 சாணியுடன் கூடிய ஜலத்தால் செய்யவேண்டும்.

திலுள்ள மூவருக்கு எள்ளுகளுடனும், முறையே 1 ஸ்வாஹா என்னும் பதத்தையும் ஸ்வதா என்னும் பதத்தையும் இறுதியிலுடையவையாயும், பிரணவம் தன்னுடைய பெயர் இவற்றுடன் கூடியவையாயுமுள்ள மந்திரங்களை உச்சரித்து, அர்க்கியம் சமர்ப்பிக்கவேண்டும்.

**15-16.** தெற்குத் திக்கிலுள்ள மண்டலத்தில் வாமதேவ மந்திரத்தை உச்சரித்து மிருத்திகையால் கால்களைக் கழுவவேண்டும். வடக்குத்திக்கிலுள்ள மண்டலத்தில் (இருதயமந்திரத்தால்) ஆசமனத்தைக் கொடுக்க வேண்டும். ஆசமனம் செய்தபின்னர் (எல்லோரையும் உள்ளே) பிரவேசிக்கச் செய்யவேண்டும். சுத்தமான ஆஸனங்களில் முதலாவது விசுவேதேவர்களைக்கிழக்கு முகமாகவும், பின்னர் பிதிருஸ்தானத்திலுள்ள மூவரையும் வடக்கு முகமாகவும் வாமதேவ மந்திரத்தால் உட்காரச் செய்யவேண்டும்.

**17-18.** திரவியங்களை (சந்தனம் வஸ்திரம் முதலிய திரவியங்களை அஸ்திர மந்திரத்தையுச்சரித்து) 2 அர்க்கிய ஜலத்தால் ப்ரோக்ஷித்து, சிராத்தத்தை விதிப்படி செய்யப்போகிறேனென்று 3 சொல்லிக்கொண்டு, மனதை வேறிடத்திற் செலுத்தாமல்

---

1 விசுவேதேவர்களுக்கு ஸ்வாஹா என்னும் பதத்தையும், பிதிருக்களுக்கு ஸ்வதா என்னும் பதத்தையும் இறுதியில் உச்சரிக்க வேண்டும். ௐ ஹாம் ருத்ராய ஸ்வாஹா। ௐ ஹாம் ஸநகாய ஸ்வாஹா। என்று சொல்லிக்கொண்டு விசுவேதேவர்களுக்கும், ௐ ஹாம் ஸம்ஸாரஶிவாய ஸ்வதிதஃ பித்ரே ஸ்வதா। ௐ ஹாம் ஸதாஶிவரூபஶிவாய ஸ்வதிதஃ பிதாமஹாய ஸ்வதா। ௐ ஹாம் ஶாந்தரூபஶிவாய ஸ்வதிதஃ ப்ரபிதாமஹாய ஸ்வதா என்னும் மந்திரங்களை உச்சரித்துப் பிதிருக்களுக்கும் நல்வரவுக்காகவுள்ள அர்க்கியத்தைச் சமர்ப்பிக்க வேண்டும் என்பது கருத்து. விசுவேதேவர்களைக் கிழக்கு முகமாகவும், பிதிருக்களை மேற்கு முகமாகவும் உட்காரச் செய்து இந்த அர்க்கியத்தைச் சமர்ப்பிக்க வேண்டும்.

2 ஸாமான்யார்க்கிய ஜலத்தால் என்பது கருத்து.

3 ஸ்வர்கவாஸே ஸ்வர்கநக்ஷத்ரே ஸ்வர்கதிதௌ ஸ்வர்க வர்ணஸ்ய யஜ்ஞஸ்ய பார்வணஸ்ய ஸ்வதந்த்ரவ்யாதிபிஃ யதாஶக்த்யா

விசுவேதேவர்களையும் பிதிருக்களையும் ப்ரார்த்திக்க வேண்டும். அவ்வாறே செய் என்று அவர்களால் உத்தரவிடப் பெற்று, விசுவேதேவர்களுக்காக ஆஸனங்களில் ஸத்யோஜாத மந்திரத்தை உச்சரித்துக்கொண்டு வலமாகத் தர்ப்பங்களையும், பிதிருஸ்தானத்திலுள்ள மூவருக்கும் அபஸவ்யமாகத் தர்ப்பங்களையும் சமர்ப்பிக்க வேண்டும். இவ்வாறே எல்லாவுபசாரங்களையும் விசுவேதேவர்களுக்கு வலமாகவும், பிதிருக்களுக்கு இடமாகவும் முறைப்படி செய்யவேண்டும்.

19. அதன்பின் ஐந்துபேர்களையும் அவ்வவப்பெயர்களால் 1 (ருத்ரர் அனந்தர் முதலிய பெயர்களால்) ஆவாஹனஞ் செய்ய வேண்டும். வாமதேவமந்திரத்தை உச்சரித்து யவங்களால் விசுவேதேவர்களுக்கு இரக்ஷையையும், ஈசானமந்திரத்தைஉச்சரித்து எள்ளுகளால் பிதிருக்களுக்கு இரக்ஷையையும் முறையே செய்ய வேண்டும்.

20-21-22. அகோர மந்திரத்தை உச்சரித்து, புஷ்பம் ஜலம் தர்ப்பம்அக்ஷதை இவற்றுடன் விசுவேதேவர்களுக்கு ஸாந்நித்யார்க்கியத்தையும், பிதிருக்களுக்கு ஈசான மந்திரத்தால் ஸாந்நித்யார்க்கியத்தையும் சமர்ப்பிக்க வேண்டும். பின்னர், பூமியில் இரண்டு முழங்கால்களையுமூன்றி, அகோர மந்திரத்தையுச்சரித்து,

---

யதாஶ்ராத்தம் ஸம்பாதயேத் கரிஷ்யே இ-ள். "இன்ன வாரத்தில், இன்ன நக்ஷத்திரத்தில், இன்ன திதியில், இன்ன புண்யஸ்தலத்தில் கிடைத்த திரவியங்களைக்கொண்டு சக்திக்குத் தக்கவாறு சிராத்தத்தைச் செய்கிறேன் என்பதாம். இவ்வாறு கூறி அஞ்சலிசெய்து அவர்களை ப்ரார்த்தித்து என்பது கருத்து.

1 ஓம் ஹாம் ருத்ராய நம: । ஓம் ஹாம் அநந்தாய நம: । ஓம் ஹாம் ஶ்ரீகண்டாய ஸ்வதிதாய விஷ்ணவே நம: । ஓம் ஹாம் ஸதாஶிவாய ஸ்வதிதாய பிதாமஹாய நம: । ஓம் ஹாம் ஶாந்தாய ஸ்வதிதாய ப்ரபிதாமஹாய நம: । என்னும் மந்திரங்களால் என்பது கருத்து.

விசுவேதேவர்களை யவங்களால் 1 கால் முதல் சிரசு ஈறுகப் பூஜித்து, ஈசானமந்திரத்தால் பவித்திரம் 2 முதலியன வழங்கி, ஸம்பூர்ணமாக இருக்கட்டுமென்று ஐவர்களிடமும் கூறவேண்டும். அவர்களுடைய பாத்திரத்தில் 3 விதிப்படி செய்து "பித்ருஸ்தாநமஸி" பிதிருஸ்தானமாகிறாய் என்று சொல்லி, பாத்திரத்தைக் கீழ்நோக்கிய முகமாக (நிருருதி திக்கில்) வைக்கவேண்டும்.

23. பாகஞ் செய்த முழு அன்னத்தின் முதல் பாகத்தை எடுத்து பிண்ட பிதிருயக்ஞத்திற் செய்யப்படுமாறு அக்கினியில் 4 ஹோமஞ்செய்து, எஞ்சிய அன்னத்தை, தத்புருஷமந்திரத்தை உச்சரித்து பாத்திரங்களில் வைக்கவேண்டும்.

---

1 பிதிருக்களுக்கு மத்தகம் முதல் கால் ஈறுக என்னால் ஈசான மந்திரத்தை உச்சரித்துப் பூஜை செய்யவேண்டும். பின்னர் வாமதேவ மந்திரத்தை உச்சரித்து, விசுவேதேவர்களையும் பிதிருக்களையும், சந்தனம், புஷ்பம், அக்ஷதை, பூமாலை இவற்றால் அலங்கரித்து, அகோர மந்திரத்தால் தூபம் தீபம் இவற்றையுஞ் சமர்ப்பிக்க வேண்டும்.

2 முதலியன என்னும் பதத்தால் வஸ்திரம் உபவீதம் இவற்றையுங் கொள்ளவேண்டும்.

3 ஐவர்களும் "அஸ்து ஸம்பூர்ணம்" "சம்பூர்ணமாக இருக்கட்டும்" என்று கூறியதும், அவர்களுடைய கையில் அர்க்கிய ஜலத்தைவார்த்துக் கையிலிருந்து பெருகும் நீரைப் பவித்திரத்துடன் பாத்திரத்தில் கிரகித்து என்பது கருத்து.

4 ஓம் ஶம்ஶாய பித்ரே ஸ்வதா நம: ஸ்வாஹா । ஓம் ஸதாஶிவாய பிதாமஹாய ஸ்வதா நம: ஸ்வாஹா । ஓம் ஶாந்தாய ப்ரபிதாமஹாய ஸ்வதா நம: ஸ்வாஹா । ஓம் ஶம்ஶாயை மாத்ரே ஸ்வதா நம: ஸ்வாஹா । ஓம் ஸதாஶிவாயை பிதாமஹ்யை ஸ்வதா நம: ஸ்வாஹா । ஓம் ஶாந்தாயை ப்ரபிதாமஹ்யை ஸ்வதா நம: ஸ்வாஹா । ஓம் ஶிவீபூதாய ஸகலஶிவாய ஸ்வதா நம: ஸ்வாஹா என்னும் மந்திரங்களால் மும்மூன்று முறை ஹோமஞ்செய்து என்பது கருத்து. இவ்வாறே ஸமயவிசேஷதீக்ஷைபெற்றவர்களுக்கு பிதிருபக்ஷம் மாதிருபக்ஷம் இவற்றில் ஸ்கந்தர் முதலாயினாரை ஊஹித்துக் கொள்க.

24. இவ்வாறு அக்கினியில் ஹோமஞ்செய்து, சர்க்கரை, நெய் (வியஞ்ஜனம்) இவற்றுடன் கூடிய அன்னத்தை, தத்புருஷ மந்திரத்தை உச்சரித்து (இலைகளில்) பரிமாறி மந்திரங்களை அறிந்தவன், பரிசுத்தமாக்குதற்காக அகோர மந்திரத்தால் அபி மந்திரிக்க வேண்டும்.

25. அவர்களுடைய வலது பெரு விரலை (தன் கையால் பிடித்துக்கொண்டு) வக்ரமாக (கீழ் நோக்கி அன்னத்தில் சம்பந்தப்பட்டதாகச்) செய்து, வாமதேவ மந்திரத்தையேனும், மிருத்யுஞ்ஜய மந்திரத்தையேனும் உச்சரித்துக் கொண்டு, அமிருதமாக்குதற்காக அன்னத்தைச் சுற்றி நான்கு பக்கங்களிலும் சுற்ற வேண்டும்.

26. ஈசானமந்திரத்தை உச்சரித்துக்கொண்டு அவர்களுடைய தாமரைபோன்ற கைகளில் ஆபோசனத்தை வார்க்கவேண்டும். பிறகு இவர்களும் கர்த்தாவால் "ஜுஷ்வம்" "போஜனம் செய்யுங்கள்" என்று கூறப்பட்டவர்களாய்க்கொண்டு மௌனமாகப் புசிக்கவேண்டும்.

27. அவர்கள் புசித்து முடியும் வரை கர்த்தா வடக்குமுகமாக இருந்து ஈசான மந்திரத்தை ஜபிக்கவேண்டும். அப்பொழுது வரும் அதிதிகளுக்கு விசாரிக்காமல் போஜனஞ் செய்து வைக்கவேண்டும்.

28. (வரிக்கப்பெற்றவர் போஜனஞ்செய்தபின்)சிறிது அன்னத்தைஎடுத்துக் கொண்டு "த்ருப்தாஸ்த" "திருப்தியடைந்தவர்களாக இருக்கிறீர்கள்" என்று கருத்தா கூறி, வரிக்கப்பெற்றவர்களால் "த்ருப்தாஸ்ம:" 'திருப்தி அடைந்தவர்களாக இருக்கிறோம்' என்று ஒப்புக்கொள்ளப்பெற்று, அந்த அன்னத்தைமெல்ல பூமியில் இறைத்து ஜலத்தையும் விடவேண்டும்.

29. பின்னர், உச்சிஷ்டத்தின் அருகில் கோமயத்தால் மண்டலத்தைச் செய்து, அந்த மண்டலத்தில் ஸத்யோஜாத மந்திரத்தை உச்சரித்துத் தெற்கு நுனியாகத் தர்ப்பங்களையும், வாமதேவ மந்திரத்தால் எள்ளையும் இறைக்கவேண்டும்.

30. எல்லா அன்னங்களாலாகிய மூன்று பிண்டங்களை,எள்ளுடன் தெற்கு முகமாக இருந்து, (ஸ்வதா சப்தத்தை இறுதியி

னுடைய) முறையே ஈச ஸதாசிவ சாந்த மந்திரங்களால் தர்ப்பங்களுக்கு மேல் 1 கொடுக்கவேண்டும்.

31-31½. வாமதேவமந்திரத்தை உச்சரித்து (அப்ரதக்ஷிணமாக) நீர்த்தாரையைப் பெருகச் செய்து, சந்தனம், புஷ்பம், தூபம் முதலியவற்றால் அருச்சித்து வணங்கி, பொறுத்துக்கொள்ளச்செய்து, பிண்ட பிதிரு தேவதைகளை விஸர்ஜனஞ் செய்து, செய்யவேண்டுவனவற்றை அறிந்த கர்த்தா ஆசமனஞ் செய்யவேண்டும்.

32-33. முன்னர் 2 மூவருக்கும், பின்னர் இருவருக்கும் ஆசமனம் ஸமர்ப்பிக்கவேண்டும். இவர்களுக்குத் தக்ஷிணையைக் கொடுக்கவேண்டும். பின்னர் பாத்திரத்தை (நிருருதி திக்கில் கீழ் நோக்கிய முகமாக வைக்கப் பெற்ற பிதிருபாத்திரத்தை) உயரே நோக்கிய முகமாக வைக்கவேண்டும். அதன்பின் எல்லோரையும் பிரதக்ஷிணஞ் செய்து வணங்கி விஸர்ஜனஞ் செய்யவேண்டும்.

34. நடுப்பிண்டத்தை ருத்திரரின் அம்சமான புத்திரன் ஜனிப்பதற்காக ஸ்திரீயிடம் (மனைவியிடம்) கொடுக்கவேண்டும். மூன்று பிண்டங்களையும் பசு, வேதியர், நீர், அக்கினி, ஆகிய இவற்றுள் யாதானுமொன்றில் விநியோகஞ் செய்யலாம்.

35. சிவ சிராத்தமானது செய்யப்பட்டால், சிவபெருமானுடைய மாஹாத்ம்யத்தால், தேவர்கள் மனுஷ்யர்கள் பிதிருக்கள் அசுரர்கள் ஆகிய இவர்கள் திருப்தி அடைந்து, இரு குலங்களையும் விருத்தி செய்கின்றனர்.

---

1 தென் திக்கை இறுதியாகச் செய்து கொடுக்க வேண்டுமென்பது கருத்து. பிதிருபக்ஷத்திற்குக் கூறிய இம்முறையை அனுசரித்து மாதிருபக்ஷத்திற்கு மூன்று பிண்டங்களையும் நிமித்தத்திற்கு ஒரு பிண்டமும் கொடுக்கவேண்டுமென்பதைச் சேர்த்துக் கொள்க.

2 முன்னர் பிதிருஸ்தானத்திலுள்ள மூவருக்கும் பின்னர் விசுவேதேவஸ்தானத்திலுள்ள இருவர்களுக்கும்; என்பதுகருத்து.

36. எவருடைய கீர்த்தியானது 1 சக்ரவாள பர்வதத்தின் குஹையிலிருந்து (எல்லாவற்றையும்) பிரகாசிப்பிக்கின்றதோ, அப்பேர்ப்பட்ட ஸ்ரீ சோமசம்பு சிவாசாரியரால் சிராத்த விதியானது சிறிது கூறப்பட்டது.

சிராத்தவிதிமுற்றிற்று.
நைமித்திக விதி முற்றிற்று.
ஆகச் சுலோகம் 1228½.

---

## காமியவிதி-
## சிலாநியாஸ விதி.
(பிரதிஷ்டைகளின் பிரிவு.)

1. பின்னர், சுருக்கமாகவும் முறையாகவும் பிரதிஷ்டை செய்யும் முறை கூறப்படுகின்றது. பீடமானது சத்தி எனப்படும். லிங்கமானது சிவன் எனப்படும். சிவசத்தி மந்திரங்களால் (செய்யப்படும்) இவ்விரண்டின் சேர்க்கை பிரதிஷ்டையாகும். *1 முன்னர் பிர்ம்ம சிலையின் நடுவில் விதிப்படி லிங்கத்தை நியாஸஞ் செய்து, பீடபந்தத்தைச் செய்து, நல்ல லக்னத்தில் பிண்டிகையுடன் (பீடத்துடன்) மந்திரங்களாற் செய்யப்படுஞ் சேர்க்கை பிரதிஷ்டை எனப்படும். இரத்தினலிங்கம், பாணலிங்கம், லோஹலிங்கம் முதலிய லிங்கங்களுள் யாதானுமொரு லிங்கத்தை ஐந்து பாகங்களாகப் பிரித்து இரண்டுபாகங்களையேனும், மூன்று பாகங்களாகப் பிரித்து ஒரு பாகத்தையேனும் லிங்கத்தின்பலாபலத்தை அனுசரித்து, பீடத்தில் ஸ்தாபித்தல் ஸ்தாபனம் எனப்படும்.

---

1 பூமிக்குக் கோட்டையைப்போல் சுற்றிக்கொண்டிருக்கின்ற லோகா லோக பர்வதத்தின் என்பது கருத்து. இப்பர்வதத்தின் உட்பக்கத்தில் சூரிய சஞ்சாரமும், வெளிப்புறத்தில் அதன் இன்மையுமிருத்தலால், இச்சக்ரவாள பர்வதத்திற்கு லோகாலோக பர்வதமென வேறு பெயர் சித்தித்தது. ஆகவே சக்ரவாள பர்வதத்தின் குஹையிலிருந்து என்னும் பதத்திற்கு இப்புவியில் என்பது கருத்து.

1 * இந்த அடையாளமிட்ட முன்னர் என்பது முதல் ஸ்தாபனமெனப்படும் என்பது முடிவாகவுள்ள விஷயங்கள் மூலத்திலில்லை. மூன்றுவது சுலோகத்தில் பிரதிட்டை ஐந்து வகையாக வகுக்கப் பெற்றிருப்பதால் மற்ற நூல்களை அனுசரித்து ஈண்டுச் சேர்க்கப்பட்டது.

2. பிரிவுபடாத பீடத்தை உடைய (படிகம் இரத்தினம் முதலிய) லிங்கத்திற்கு (மந்திரங்களை உச்சரித்து மனதாற் செய்யப்படும்) பிரதிஷ்டை ஸ்தித ஸ்தாபனம் எனப்படும். 1 லிங்கத்தின் நீக்குதலை முன்னிட்டுச் செய்யப்படும் பிரதிஷ்டை உத்தாபனம் எனப்படும்.

3. பீடத்தில் (வியக்த) லிங்கத்தையேற்றி, வித்வான்களால் செய்யப்படும் ஸம்ஸ்காரமானது ஆஸ்தாபநமெனப்படும். சிவபெருமானைப்பற்றிய இந்தப் பிரதிஷ்டையானது இவ்வாறு ஐந்து வகைப்படும்.

4. விஷ்ணு முதலியவர்களின் பிரதிஷ்டையானது ஆஸ்தாபனம் உத்தாபனம் என்னும் பிரிவால் இருவகைப்படும். இந்த எல்லாப் பிரதிட்டைகளிலும் மேலானதாயும் மங்களகரமாயும் இருக்கிற சைதன்யத்தை நியாஸஞ் செய்யவேண்டும்.

4½. 2 கால், வாயில் முதலியவற்றின்வேறுபாட்டால், ப்ராஸாதங்களிலும் பிரதிஷ்டையானது ஐந்து வகைப்படும். பிராசாதம்—ஆலயம்.

## பூமியைப் பரீக்ஷித்தல்.

5. பின்னர், ப்ராஸாதம் செய்வதில் விருப்பத்தால் பூமியைப் 3 பரீக்ஷிக்கவேண்டும்.

6. நெய்யின் மணமுள்ள வெண்ணிறமான பூமியும், உதிரத்தின் மணமுள்ள செம்மை நிறமான பூமியும், கோமூத்திரத்தின் மணமுள்ள பொன்னிறமான பூமியும், கள்ளின்மணமுள்ள கருநிறமுள்ள பூமியும், முறையே பிராமணர் முதலிய ஜாதியருக்குரியனவாகும்.

---

1 ஜீர்ணம் முதலிய தோஷங்களையுடைய லிங்கத்தையேனும் பீடத்தையேனும் நீக்கி மீண்டும் புதிதாக ப்ரதிட்டை செய்தல் உத்தாபனமாகும் என்பது கருத்து.

2 பாதப்ரதிஷ்டை த்வாரப்ரதிஷ்டை, ஹ்ருத்கும்பப்ரதிஷ்டை,ஸ்தூபிப்ரதிஷ்டை, த்வஜப்ரதிஷ்டை என்னும் பேதத்தால் ஐந்து வகைப்படும் என்பது கருத்து.

3 உருசி, மணம், நிறம், மண், ஜலம், சகுனம், விரைகள் இவற்றால் பூமியைப் பரீக்ஷிக்க வேண்டும் என்பது கருத்து.

7. கிழக்குத்திக்கு, ஈசானதிக்கு, வடக்குத் திக்கு ஆகிய இந்தத் திக்குக்களில் போகிறதாயும், நான்கு திக்குக்களிலும் சதுரச்ரமாகவுள்ளதாயும் இருக்கிற பூமியானது சிலாகிக்கப்படுகிறது. விருப்பமான நிறமுள்ள பூமி கிடையாவிடில் நிறத்தை உண்டு பண்ணலாம்.

8. ஒருமுழம் தோண்டப்பட்டவுடன் எந்தப் பூமியின் தோண்டப் பெற்ற மண்ணானது 1 அதிகமாக இருக்கிறதோ, அந்தப் பூமியை உத்தம பூமியாக அறிந்துகொள்ள வேண்டும். ஜலம் 2முதலியவற்றால் பரீக்ஷிக்கப்பட்ட பூமியையும் உத்தமபூமியாக அறிந்துகொள்ள வேண்டும்.

## பூபரிக்ரஹ விதி.

9. எலும்பு கரி முதலியவற்றால் தோஷத்தையுடைய பூமியை, தோண்டுதலாலும் பசுக்களின் கூட்டத்தை வஸிக்கச் செய்தலாலும் அடிக்கடி உழுதலாலும் நன்றாகச் சுத்தி செய்ய வேண்டும்.

---

1 பூமியைப் பள்ளமாகத் தோண்டி, அந்தப்பள்ளமானது தோண்டப்பெற்ற மணல்களாலேயே தூர்க்கப் பெறுமளவிற்கு மேல் மண் அதிகமாகவிருந்தால் அந்தப்பூமி உத்தம பூமி என்றும், சமமாக இருந்தால்மத்யம பூமி என்றும், குறைவாக இருந்தால் அதம பூமி என்றும் அறிந்துகொள்ள வேண்டும் என்பது கருத்து.

2 நீர் நிறைந்த கும்பத்தில் புஷ்பத்தையிட்டு அந்தக் கும்ப தீர்த்தத்தைப் பள்ளத்தில் விடவேண்டும். அப்பொழுது நீர்மேல் குமிழியின்றி நீர் வலமாகச் செல்லுமாயின் நன்று. புஷ்பம் மேல் நோக்கியே இருக்க வேண்டும். கீழ் நோக்கிக் கவிழ்ந்து இருக்கக் கூடாது. இதுவே நீரால் பரீக்ஷிக்கும் முறை. முதலிய என்னும் பதத்தால் விரைகளாலும், பூமியைக் காலால் தட்டுதலாலும் பரீக்ஷிக்க வேண்டுமென்பதைக் கொள்ள வேண்டும். எந்தப் பூமியில் விரைக்கப்பெற்ற கடுகு எள்ளு இவைமூன்று நாட்களில் முளைக்கின்றனவோ அந்தப் பூமி சுபத்தைத் தரும். இதுவே விரைகளால் பரீக்ஷிக்கு முறை. எந்தப் பூமியானது அஸ்திரமந்திரத்தை உச்சரித்து வலது காலால் குட்டனஞ் செய்யப்பெற்றால் கம்பீரமாகச் சப்திக்கின்றதோ, அந்தப் பூமி உத்தமபூமியாகும். இதுவே பூமியைக்காலால் தட்டுதலால் பரீக்ஷித்தலாகும்.

10. 1 மண்டபத்தில் துவாரபூஜை முதற்கொண்டு மந்திரங்களுக்குத் தர்ப்பணாகுதிகளைச் செய்தல் ஈறுகவுள்ள க்ரியைகளைச் செய்து, அகோராஸ்திர மந்திரத்தை உச்சரித்து விதிப்படி ஆயிரம் முறை ஹோமஞ் செய்யவேண்டும்.

11. சமமாகச் செய்து மெழுகப்பெற்ற பூமியில் திக்குக்களைச் 2 சுத்தி செய்ய வேண்டும். 3 சுவர்ணம் தயிர் அக்ஷதை இவற்றால் வலமாகக் கோடு கீறவேண்டும்.

12. 4 நடுவிலுள்ள பதம் முதல் ஈசான திக்கு ஈறுகவுள்ள (ஆறு) பதங்களில் பூர்ணகும்பத்தை ஸ்தாபித்து, அந்தக் கும்பத்தில் சிவபெருமானைப் பூஜிக்கவேண்டும்.

---

1 ப்ராஸாதத்தின் நடுவிற்கு ஈசான திக்கில் சதுரச்ரமாயும் நான்கு முழ அளவாகவும் நான்கு ஸ்தம்பங்களை உடையதாயும் உள்ள மண்டபத்தைச் செய்து, மங்களகரமான குண்டத்தையுஞ் செய்து, அதில் ஹோமஞ் செய்யவேண்டும் என்று ஈசான சிவகுரு தேவபத்ததியில் கூறப்பட்டிருக்கின்றது.

2 ப்ராஸாதம் செய்தற்குரிய இடத்தை அடைந்து சிவபெருமானை வணங்கி, தேவலோகம் ஆகாயம் பூமி இவற்றிலுள்ள நிமித்தங்களை (சகுனங்களை) ஆராய்ந்து, நல்ல சகுனத்தில் பூமியைப் பரீக்ஷிக்க வேண்டும். கெட்ட சகுனங்கள் உண்டானால் அகோர மந்திரத்தால் நூறுமுறை ஹோமஞ் செய்ய வேண்டும். இதுவே திக்குக்களைச் சுத்தி செய்தலாகும்.

3. சுவர்ணத்தாலாக்கப்பெற்ற குச்சியால் என்பது கருத்து.

4 மண்டபத்தின் நடுவில் ஐந்து பதங்கள் செய்து நடுவிலுள்ள பதத்தில்பத்மத்தையும், நான்குதிக்குக்களிலும் நான்குஸ்வஸ்திக மண்டலங்களையும் வரைந்து, அவற்றில் ஏழுவித தானியங்களைப் பரப்பி, ஐந்து கும்பங்களை ஸ்தாபித்து, அவற்றைச் சுத்தமான நீரால் நிரப்பி, அந்தக் கும்பங்களில் சுவர்ணம் இரத்தினம் சந்தனம் புஷ்பம் அக்ஷதை ஒஷதிகள் வில்வம் அரசின்தளிர் முதலிய ஐந்து தளிர்களையும் இட்டு, தர்ப்பகூர்ச்சம் தேங்காய் இவற்றைக் கும்பத்தின் முகத்தில் ஸமர்ப்பித்து, கும்பங்களின் கழுத்தை வஸ்திரம் மாலை இவற்றால் அலங்கரித்து, ஆஸன பூஜை முதல் தொடங்கி சிவபெருமானை ஆவாஹனஞ் செய்து முறைப்படி பூஜிக்கவேண்டும். இந்த விஷயங்கள் மூலத்தில் விரிவாகக் கூறப்படவில்லை. ஈசான சிவகுரு தேவபத்ததியிலிருந்து ஈண்டு எழுதப்பட்டது.

அந்தக் குடங்களிலுள்ள 1 தீர்த்தங்களால் வாஸ்துவை அருச்சித்து, மண்வெட்டி முதலியவற்றை (கும்பத்தில் உள்ள எஞ்சிய நீரால்) நனைக்கவேண்டும்.

**13-14.** வெளியில் அரக்கர் முதலிய துஷ்டக்கிரஹங்களைப் பூஜித்து விதிப்படி திக்குக்களில் 2 பலியிட வேண்டும். 3 பூஜையைக் கும்பத்திற்சேர்த்து, நல்ல லக்னத்தில் (ஸ்வீகரிக்கப்பட்ட வாஸ்துவின்) அக்கினி திக்கிலுள்ள பதத்தை (வடக்குத் திக்கை நோக்கிய சிற்பியால்) தேன் சிவகும்பதீர்த்தம் இவற்ருல் அபிஷேகம் செய்யப் பெற்ற மண்வெட்டியால் வெட்டச்செய்யவேண்டும். வெட்டப்பெற்ற மண்ணை (பிரம்புக் கூடையில் வாரி) நிருருதி திக்கில் (ஏழு முறை) போடச் செய்ய வேண்டும். தோண்டப் பெற்ற இடத்தில் கும்பத்திலுள்ள நீரை (எஞ்சிய நீரை) விட வேண்டும்.

---

1 ஐந்து கும்பங்களுள் நடுக்கும்பத்திலுள்ள தீர்த்தத்தால் ஈசானமந்திரத்தை உச்சரித்து ப்ராஸாத கர்ப்பத்தின் நடுவையும், இவ்வாறே கிழக்கு முதலிய நான்கு திக்குக்களிலுள்ள ப்ராஸாதத்தின் எல்லைகளையும், கிழக்கு முதலிய நான்கு திக்குக்களிலுள்ள கும்பஜலங்களால், முறையே தத்புருஷம் முதலிய மந்திரங்களை உச்சரித்து நனைக்கவேண்டுமென்பது கருத்து.

2 𑍐 𑌭𑍂𑌤𑌰𑌾𑌕𑍍𑌷𑌸𑌾 𑌯𑌕𑍍𑌷𑌾𑌃 𑌪𑌿𑌶𑌾𑌚𑌾𑌃 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌰𑌾𑌕𑍍𑌷𑌸𑌾𑌃 । 𑌯𑍇𑌽𑌤𑍍𑌰𑌾𑌵𑌤𑌿𑌷𑍍𑌠𑌨𑍍𑌤𑍇 𑌸𑌰𑍍𑌵𑍇 𑌤𑍇𑌽𑌨𑍍𑌯𑌤𑍍𑌰 𑌯𑌾𑌨𑍍𑌤𑍁 ॥ 𑌅𑌦𑍍𑌯𑌪𑍍𑌰𑌭𑍃𑌤𑌿 𑌯𑌤𑍍𑌸𑍍𑌥𑌾𑌨𑌮𑌿𑌦𑌂 𑌦𑍇𑌵𑌸𑍍𑌯 𑌶𑌮𑍍𑌭𑌿𑌨𑌃 ॥ 𑍐 𑌹𑌃 𑌹𑍂𑌂 𑌫𑌟𑍍

இ-ள். இந்த வாஸ்துபூமியில் வஸிக்கும் பூதங்கள் அரக்கர் யக்ஷர்கள் பிசாசர்கள் பிரமராக்ஷதர் இன்னும் மற்றுமுள்ள அனைவரும் இங்கிருந்து வேறிடத்திற்குச் செல்லவேண்டும். இது முதல் இந்த இடம் சிவபெருமானுடையது" என்பதாம்.

இவ்வாறு சொல்லிக்கொண்டு எல்லோரையும் வெளிப்படுத்தி அவர்களுக்குப் பலியைச்சமர்ப்பிக்க வேண்டும் என்பது கருத்து. இவ்வாறு பலிசமர்ப்பித்தல், சிவகும்பத்தை வேதியருடைய சிரசில் ஏற்றி,கிழக்கு முதலிய திக்குக்களின் எல்லைகளை நனைத்துக்கொண்டு பிரதக்ஷிணம் செய்தபின்னரே ஈசான சிவகுரு தேவபத்ததியிற் காணப்படுகின்றது. காமிகாகமத்தில் பூபரிக்ரஹத்திற்கு முன்னர்க் காணப்படுகின்றது.

3 அக்கினியிலுள்ள சிவபெருமானை. கும்பஜலத்திற் சேர்த்து என்பது கருத்து.

15-16. பூமியை நனைத்து, மண்வெட்டி முதலியவற்றை அபிஷேகஞ்செய்து பூஜிக்க வேண்டும். இரண்டு வஸ்திரங்கள் அணியப்பெற்ற மற்றொரு கும்பத்தை வேதியருடைய தோளில் ஏற்றி, பாட்டு வாத்தியம் வேதகோஷம் இவற்றுடன் விருப்பத்தை அனுசரித்து பட்டணத்தின் கிழக்கு எல்லை ஈறுகக் கொண்டு போகவேண்டும்.

17. பின்னர் அந்தக்கிழக்குத் திக்கின் எல்லையில் சிறிது நேரம் நின்று அதன்பின்னர் அங்கிருந்து சென்று அக்கினிதிக்கு முதல் ஈசானதிக்கு ஈறுகவுள்ள எல்லையின் ஈற்றிலுள்ள அடையாளங்களை (அந்தக் கும்ப தீர்த்தத்தால்) நனைத்துக்கொண்டு சுற்றச் செய்ய வேண்டும்.

18. பத்ரகும்பத்தை (சிவகும்பத்தை) எடுத்துக்கொண்டு சுற்றுதலாகிய இந்தக் கிரியையானது அர்க்கியத்தைச் சமர்ப்பித்தல் எனப்படும். இவ்வாறு பூமியை ஸ்வீகரித்துக் கொள்ள வேண்டும்.

## சல்யோத்தார விதி.

19. சுக்கான்பாரை காணப்படும் வரையேனும், நீர் காணப்படும் வரையேனும், சல்யங்களாகிற (கரிக்கட்டைகள் முதலான) தோஷங்கள் நீங்குவதற்காகப் (பூமியைத்) 1 தோண்டவேண்டும். அல்லது சாஸ்திர விதிப்படி சல்யங்கள் இருக்குமிடமறிந்து அவற்றை நீக்க வேண்டும். (சாஸ்திர விதி வருமாறு:—)

---

1 எந்த இடத்தில் வெகு தூரம் தோண்டப்பட்டும் நீர் காணப்படவில்லையோ, கல் சுக்கான்கல் முதலியன மிகுதியாகக் காணப்படுகின்றனவோ, அந்த இடம் லிங்கப்ரதிஷ்டைக்கு உரியதாகாது என்பது முதலியவற்றை அஜிதாகமத்தில் காண்க.

பூபரிக்ரஹம் செய்தபின் செய்யவேண்டிய கர்ஷணவிதி மூலத்தில் காணப்படவில்லையாதலால் இங்கு டிப்பணத்தில் ஈசானசிவகுருதேவ பத்ததியிலிருந்து மொழிபெயர்க்கப்பட்டிருக்கின்றது. அதாவது:— "ஆசாரியர், ஸத்யோஜாத மந்திரத்தை உச்சரித்துக்கொண்டு கலப்பையைத் தொட்டு அபிமந்திரித்து, இடபங்களைப் பூட்டி, கிழக்குத் திக்கை நோக்கிக் கோடிழுத்து, உழச் செய்யவேண்டும். இடபங்கள் கபில நிறமுள்ளவையாகவேனும் வெண்மை நிறமுள்ளவையாக வேனும் இருக்கவேண்டும்.

20. 1 வ, க, ச, த, ம, ஹா, ஸ, ப, ய, ஆகிய ஒன்பது எழுத்துக்களும் ப்ரச்ன எழுத்துக்களாகும். பிரச்ன முகூர்த் தத்தில் துவ்ஜம் முதலிய தோஷம் இருக்குமாயின் வாஸ்துவின் அங்கங்களில் சல்யங்கள் இருப்பதாக அறிந்துகொள்ளவேண்டும்.

21. (நூல் போடுங்காலத்தில்) கர்த்தாவின் 2 அங்க சேஷ்டையாகிய பிரமாணம், 3 பசுக்கள் 4 முதலியவற்றின் பிரவேசம்,

---

அன்றியும் பலமுள்ளவையாகவும், நல்ல இலக்கணமுள்ளவையாகவும், பாலுள்ள மரங்களாலாக்கப்பெற்ற கோக்காலுடன் கூடியவையாயும், கருங் காலிமரத்தாலாக்கப் பெற்ற ஆஸனத்தையுடைய கலப்பையுடன் கூடிய வையாயுமிருக்கவேண்டும். ஸ்நானஞ்செய்து புதிய ஆடை அணிந்து அலங்கரித்துக்கொண்ட புருஷர்களால், கர்ஷணத்தை ஆசாரியர் செய்விக்க வேண்டும். வாமதேவமந்திரத்தை உச்சரித்து எழுவகையான தான்யங்களை ஊன்ற வேண்டும். அகோர மந்திரத்தை உச்சரித்து நீரால் நனைத்து ஈசான மந்திரத்தால் ரக்ஷை செய்யவேண்டும். அதில் முளைத்த பக்குவமான ஸஸ்யங்களைப் பசுக்களைக்கொண்டு மேயச் செய்யவேண்டும்'' என்பதாம். இதன் விரிவை காமிகாகமத்திற்காண்க.

1 ஒன்பதாக வகுக்கப்பட்ட பூமியில் கிழக்கு முதலான கோஷ்டங்களில் வ, க, முதலான ப்ரச்ன எழுத்துச்கள் அடையப்பெற்று, சல்யங்களை அறிவிக்கின்றன என்பது பொருள். தக்க ஆதாரங் கிடைக்காமையால் ஈண்டு விளக்கப்படவில்லை.

2 நூல்போடும்பொழுது யஜமானன் தன்னுடைய எந்த அங்கத்தை ஸ்பரிசித்துக் கொள்ளுகிறானோ, வாஸ்துவினுடைய அந்த அங்கத்தில் சல்யமிருக்கின்றதென்று அறிந்துகொள்ள வேண்டும். தன்னுடைய அங்கங்களில் ஒரு சேஷ்டையும் செய்யாமலிருந்தால் அந்த வாஸ்துபூமியில் சல்யமில்லை என்றறிந்து கொள்ளவேண்டும். இரண்டு மூன்று சேஷ்டைகளைச் சேர்த்துச் செய்தால் சல்யங்களும் சேர்ந்து இருக்கின்றனவென்று அறிந்துகொள்க என்பது கருத்து. இந்த இந்த அங்கங்களைத் தொட்டால் வாஸ்துவின் இந்த இந்த அங்கங்களில் இவ்வளவு ஆழத்துக்குக் கீழ் சல்யங்கள் இருக்கின்றன என்று அறிந்துகொள்ள வேண்டும் என்னும் விபரம் காரணாகமம், ஈசான சிவகுருதேவ பத்ததி முதலிய நூல்களில் விரிவாகக் காணப்படுதலால் ஆண்டுக் காண்க.

3 பசுக்கள் என்னும் பதத்தால் நாய், ஆடு, குதிரை முதலியவற்றைக் கொள்ள வேண்டும். நூல் போடும்போது நாய் முதலியன அந்த நூலைத் தாண்டினாலும், அந்த இடத்திற் புகுந்தாலும், பார்த்தாலும், சப்தித்தாலும், அவ்விடத்தில் சல்யங்கள் இருக்கின்றன என்று அறிந்துகொள்ள வேண்டும். இதன் விபரம் ஈசான சிவகுரு தேவ பத்ததியிற் காண்க.

4 முதலியவற்றின் என்னும் பதத்தால் பக்ஷிகள் அவ்விடத்தில் பிரவேசித்தால் சாம்பல் உமி கரி இவை அவ்விடத்தில் இருக்கின்றன என்று

அவற்றின் சப்தம், திக்குக்களின் சப்தம் ஆகிய இவற்ருல் சல்யங்களை அறிந்துகொள்ள வேண்டும்.

22. சல்யங்களை இன்ன முறையாக அறிந்து கொள்ளவேண்டுமென்பது (எம்மால்) சிறிது கூறப்பட்டது. விரிவைப் பிற நூல்களிற் காண்க. (இவ்வாறு சாஸ்திரங்களால் சல்யங்களை அறிந்து கொள்ளுதலால்) வாஸ்து பூமியைச் சிறிது தோண்டியதும் விரைவில் சல்யங்களை நீக்குதலாகிய பயனுண்டாகும்.

23-23½. எட்டங்குல அளவில் மண்ணை இடையில் உடையனவாயும், ஒரு முழம் நிரப்பப் பெற்றவையாயும், நீருடன் கூடியவையாயும், இருப்புலக்கையால் அடிக்கப்பட்டவையாயுமுள்ள கற்களால், முக்கால்பாகம் தோண்டப்பெற்றபூமியைநிரப்பி, மேடு பள்ளமின்றிச் சமமாகச் செய்து, பூமியை மெழுக வேண்டும்.

## சிலைகளுக்கு அபிஷேகஞ்செய்தற்குரியமண்டபத்திற்கு செல்லுதற்கு முன்னர்ச் செய்யவேண்டுவன.

24. ஆசாரியர் ஸாமான்னியார்க்கியத்தைக் கையில் ஏந்தி, கூறப்போகும் மண்டபத்திற்குச் செல்லவேண்டும்.

25-26. தோரணங்களையும் 1 துவாரபாலர்களையும் பூஜித்து, மேற்குவாயில் வழியாக உள்ளே செல்லவேண்டும். அங்கு

அறிந்துகொள்ள வேண்டும். இவ்வாறு சல்யங்களை உத்தாரஞ் செய்த பின்னரே ஆண்டு சிவாலயத்தை நிர்மாணஞ் செய்யவேண்டும். இல்லையேல் அங்கு தேவதைகள் ஸாந்நித்தியஞ் செய்யமாட்டார்கள். கருத்தாவுக்கும் தோஷமுண்டாகும் என்று நூல்களிற் காணப்படுகின்றன. உயிருள்ள மீன் தான்யத்தைத் தரும். ஆமை யோகத்தைக் கொடுக்கும். தவளை லக்ஷ்மியைத் தரும். மூஷகம் தர்மகுணத்தைத் தரும். ஆகவே மீன் ஆமைதவளை ஆகிய இவையும் தங்கம் ரத்தினம் முதலியனவும் நல்லசல்யங்களாகும். இவை தோண்டப்பெற்ற வாஸ்துபூமியிற் கிடைக்கப்படுமாயின் இவற்றை நீக்கக் கூடாது. நீக்கினுல் தோஷமுண்டாகும்.

1 பவித்திர விதியில் 31-வது சுலோகத்திற் கூறப்பட்டவாறு நான்கு வாயில்களையும் துவாரபாலர்களையும் பூஜித்து, அவ்விடத்திற் கூறப்பட்டவாறு லக்ஷ்மி, வாஸ்துபிரமன், கணேசர், கணேசருக்கு முன்னர் குருபாம்பரை ஆகிய எல்லோரையும் பூஜிக்கவேண்டும் என்பதுகருத்து.

ஆத்ம சுத்தி 1 முதலியன, குண்டஸம்ஸ்காரம், மண்டபஸம்ஸ்காரம், வர்த்தனியுடன் கூடிய கலச பூஜை, லோகபால பூஜை, சிவ பூஜை, சிவாக்கினிக்கு ஜனனம் பூஜை முதலியன செய்தல் முதலிய யாவற்றையும் முன்போல் செய்து கொள்ள வேண்டும்.

26½. ஆசாரியர் யஜமானனால் பூஜிக்கப்பட்டு, சிலைகளை அபிஷேகஞ் செய்தற்குரிய ஸ்நான மண்டபத்திற்குச் செல்ல வேண்டும்.

## பிராஸாத சிலைகளின் இலக்கணம்.

27-28-29. பிராஸாதமாகிற லிங்கத்திற்கு, தர்மம் முதலிய பெயர்களையுடைய பிரதம (முதல்) சிலைகள் 2 எட்டங்குலங்கள் விஸ்தாரமுடையவையாயும், சதுரச்ரமாயும், ஒரு முழம் நீட்சியுள்ளவையாயும் இருக்கவேண்டும். இவை உத்தமமான சிலைகளாகும். கற்களால் ஆக்கப்பெற்ற இந்தச் சிலைகளின் அளவில் பாதி அளவாகச் செங்கலாலாக்கப் பெற்ற சிலைகளைக் கொள்ள வேண்டும். பிராஸாதம் கற்களால் நிர்மாணஞ் செய்யப்படின் அதற்குரிய பாதங்களாகிய சிலைகளும் கல்லாகவிருக்க வேண்டும். செங்கலால் பிராஸாதஞ் செய்யப்படின் அதற்குரிய பாதங்களாகிய சிலைகள் செங்கலாகவிருக்க வேண்டும். வஜ்ரம் முதலியவற்றால் அடையாளமிடப் பெற்றஒன்பதுசிலைகளேனும், தாமரையால் அடையாளமிடப் பெற்ற ஐந்து சிலைகளேனும் நியாஸஞ் செய்யப்படல் வேண்டும்.

30. ஐந்து சிலைகளும் முறையே நந்தை, பத்ரை, ஜயை, ரிக்தை, பூர்ணை என்னும் பெயர்களையுடையன. இந்த ஐந்து

---

1 பவித்திரவிதியிற் கூறப்பட்டவாறே பூதசுத்தி, அந்தர்யாகம், விசேஷார்க்கியம் சேகரித்தல், திரவியசுத்தி, மந்திரசுத்தி ஸ்தானசுத்தி, இரைக்கும் திரவியங்களை மண்டபத்தில் இரைத்து வர்த்தனியின் ஆஸனத்திற்காக ஒன்று சேர்த்தல் முதலியவற்றைச் செய்து கொள்ளவேண்டும் என்பது கருத்து.

2 எட்டங்குல உயரமும் ஒரு முழச் சதுரமும் உடையதென்பது கருத்து.

சிலைகளுக்கும் (தனித்தனி) 1 பத்மம், மஹாபத்மம், சங்கம், மரகதம், ஸமுத்திரம் என்னும் பெயர்களுடன் ஐந்து நிதி கலசங்களுள்ளன. 2 நந்தை, பத்ரை, ஜயை பூர்ணை, அஜிதை, அபராஜிதை, விஜயை, மங்களை, தரணீ என்னும் பெயர்களையுடைய ஒன்பது சிலைகளும் ஆகமங்களிற் கூறப்படுகின்றன. இந்த ஒன்பது சிலைகளுக்கும் முறையே சுபத்ரம், விபத்ரம், சுநந்தம், புஷ்பதந்தம், ஜயம், விஜயம், ஜயந்தம், பூர்ணம், உத்தரம் என்னும் பெயர்களை உடைய ஒன்பது நிதி கும்பங்களுமுள்ளன.

## சிலைகளுக்கு அபிஷேகஞ் செய்யும் முறை.

31-34. சிலைகளுக்கு பிரணவாஸனத்தைச் சமர்ப்பித்து, சிகாமந்திரத்தால் உல்லேகனஞ் செய்து, எல்லாச் சிலைகளையும் கவசமந்திரத்தால் அவகுண்டனஞ் செய்து, மண், கோமயம், கோமூத்திரம், கந்தோதகம் இவற்றால் கழுவி, அவற்றிற்கு சுஸூக்ஷ்மாய ஹூம் ஹ்லீம் பட் என்னும் மந்திரத்தால் மலஸ்நானம் செய்விக்க வேண்டும். பஞ்சகவ்யம் பஞ்சாமிருதம் இவற்றால் விதி ஸ்நானம் செய்விக்க வேண்டும். இடையிடையே வாஸனையுள்ள நீரை அபிஷேகஞ் செய்து, தத்தம் (அந்த அந்தச் சிலைகளின்) பெயர்களால் அடையாளமிடப் பெற்ற மந்திரத்தை உச்சரித்து, பலோதகம் ரத்நோதகம் கோசிருங்க தீர்த்தம் இவற்றாலும் அபிஷேகஞ் செய்யவேண்டும்.

## சிலைகளை அருச்சிக்கும் முறை.

35-38. சிலைகளுக்குச் சந்தனத்தைப்பூசி, 3 வஸ்திரங்களைச்

---

1 நந்தை முதலிய ஐந்து சிலைகளுக்கும், தர்மம் ஞானம் வைராக்கியம் ஐசுவர்யம் ஸர்வஸித்தி என்னும் பெயர்களுடன் ஐந்து கலசங்களுள்ளன. பத்மம் முதலிய ஐந்து நிதிகள் இக்கலசங்களில் ஆவாஹனஞ் செய்யப்படுவதால் இவற்றிற்கு நிதி கலசங்கள் எனப் பெயர் பிறந்தது.

2 இங்கு மூலத்தில் ஒன்பது சிலைகளின் பெயரும் கும்பங்களின் பெயரும் இல்லையாயினும் இவற்றின் நியாஸம் பின்னர் மூலத்திலேயே கூறப்படுவதாலும், அசிந்திய விசுவஸாதாக்கியம், ஸித்தாந்தசேகரம் முதலியவற்றில் இப்பெயர்கள் இந்தச்சந்தர்ப்பத்தில் கூறப்பட்டிருத்தலாலும், எண்ணிலடக்காமல் சுலோகங்களின் பொருள்கள் இங்கு எழுதப்பட்டுள்ளன.

3 கோடி வஸ்திரங்களை.

சாத்த வேண்டும். 1 ஷடுத்தாஸன பூஜை செய்து, வலமாக யாகசாலைக்குக் கொண்டுபோய் செந்நெற்களால் செய்யப் பெற்ற ஸ்தண்டிலத்தின் மேல், தர்ப்பங்களால் ஆக்கப்பெற்ற சயனத்தில் இருதய மந்திரத்தை உச்சரித்துக்கொண்டு, அந்தச் சிலைகளை வைக்கவேண்டும். புத்தி தத்துவம் முதல் பிருதுவீ தத்துவம் ஈறுகிய தத்துவங்களை (அந்தச் சிலைகளில்) நியாஸஞ் செய்து பூஜித்து, 2 மூன்று கண்டங்களை வியாபிக்கிற (சிவதத்துவம் வித்யாதத்துவம் ஆன்ம தத்துவம் ஆகிய) மூன்று தத்துவங்களை, முறையே இந்தச் சிலைகளில் நியாஸஞ் செய்யவேண்டும். புத்தி முதல் சித்தம் வரையும், சித்தம் முதல் தந்மாத்ரைகள் வரையும், தந்மாத்ரைகள் முதல் பிருதிவீ தத்துவம் முடியவும் (முறையே) சிவதத்துவம் வித்யாதத்துவம் ஆன்மதத்துவம் ஆகிய இவற்றின் 3 இருக்கை கூறப்படுகின்றது. தத்துவங்களையும் தத்துவ நாயகர்களையும், இருதய பீஜத்தை முன்னிட்ட தத்தம் பெயர்களை உச்சரித்துக் கொண்டு 4 பூஜிக்கவேண்டும்.

---

1 ஓம் ஹாம் அநந்தாய நம: । ஓம் ஹாம் தர்மாய நம: । ஓம் ஹாம் ஜ்ஞாநாய நம: । ஓம் ஹாம் வைராக்யாய நம: । ஓம் ஹாம் ஐஶ்வர்யாய நம: । ஓம் ஹாம் பத்மாய நம: । என்று சொல்லிக்கொண்டு பூஜிப்பது ஷடுத்தாஸன பூஜையாகும்.

2 ஒவ்வொரு சிலையையும் புஷ்பமாலைகளால் மூன்று பாகங்களாகச் செய்து கொள்ளவேண்டும். இவ்வாறு செய்யப் பெற்ற ஒவ்வொரு சிலையின் மூன்று பாகங்களை என்பது கருத்து.

3 ஆகிய இம்மூன்று தத்துவங்களைச் சிலைகளின் அடி நடு நுனி இவற்றில் பூஜிக்கவேண்டும் என்பது கருத்து.

4 ஓம் ஹாம் ஶாந்தி தத்வாய நம: । ஓம் ஹாம் ஶாந்தி தத்வாதிபதயே ஶம்பாய நம: । என்று ஆரம்பித்து, ஓம் ஹாம் ப்ருதிவீ தத்வாய நம: । ஓம் ஹாம் ப்ருதிவீ தத்வாதிபதயே ஸ்ரீகண்டாய நம: என்பது ஈறாக இம் முறையை அனுஸரித்துப் பூஜிக்கவேண்டும் என்பது கருத்து.

## தத்துவேசுவரர்களின் பெயர்கள்.

39-41. புத்தர், அஹங்கிருதி, ஸங்கற்பர், கநாநந்தர், தீர்ணபுக், ஸமாதானர், துந்துபி, விலும்பகர், மஹாவக்திரர், 1 ப்ரகாசர், 2 ஸர்வாங்கர், வியோமதாரகர், சூக்குமர், நாதர், 3 பாநுமான், பலவத்தரர், 4 ரமணர், ஜயதர், கந்தர், மாதரிச்வா, த்விஷாம் நிதி, ஜலேசர், ஸ்ரீ கண்டர் ஆகிய இவர்கள் முறையே (புத்தி முதலிய) தத்துவங்களுக்கு நாயகர்களாவர்.

ஓம் ஹாம் ஶிவதத்த்வாய நம꞉ । ஓம் ஹாம் ஶிவதத்த்வாதிபதயே ருத்ராய நம꞉ । ஓம் ஹீம் வித்யாதத்த்வாய நம꞉ । ஓம் ஹீம் வித்யாதத்த்வாதிபதயே விஷ்ணவே நம꞉ । ஓம் ஹூம் ஆத்மதத்த்வாய நம꞉ । ஓம் ஹூம் ஆத்மதத்த்வாதிபதயே ப்ரஹ்மணே நம꞉ । ஆகிய இவை மூன்று தத்துவ மந்திரங்களாகும்.

## சிலைகளிற் செய்யப்படும் மூர்த்தி மூர்த்தீசுவர ந்யாஸம்.

42-43. பிருதிவீ, அக்கினி, யஜமானன், சூரியன், ஜலம், வாயு, சந்திரன், ஆகாயம் ஆகிய எட்டு மூர்த்திகளையும், இவற்றிற்கு நாயகர்களான சர்வர், பசுபதி, உக்ரர், ருத்ரர், பவர், ஈசுவரர், மகாதேவர், பீமர், ஆகிய எண்மரையும், முறையே ஒவ்வொரு சிலையிலும் 5 ஒவ்வொரு தத்துவம் தோறும் நியாஸஞ் செய்யவேண்டும்.

ஓம் ஹாம் ப்ருதிவீமூர்த்தயே நம꞉ । ஓம் ஹாம் ப்ருதிவீமூர்த்த்யதிபதயே ஶர்வாய நம꞉ । என்பது முதலியன மூர்த்தி மூர்த்தீசுவர மந்திரங்களாகும்.

---

1 ப்ரசாந்தர் என்பது வ்யாக்கியான பாடம்.

2 ஸர்வக்ஞர் என்பது வியாக்கியான பாடம்.

3 முன்னர் பலவக்திரர் என்றும் பின்னர் பாநுமான் என்றும் வியாக்கியான பாடம்.

4 ரமணர் என்னும் பாடம் தர்மபுர பிரதியில் உள்ளது.

5 எல்லாச் சிலைகளின் அடி நடு நுனிகளில் நியாஸஞ் செய்யப்பட்ட சிவதத்துவம் வித்யாதத்துவம் ஆன்மதத்துவம் ஆகிய மூன்று தத்துவங்களில், தனித்தனி ஒவ்வொரு தத்துவத்திலும், இந்த மூர்த்தி மூர்த்தீசுவரர்களை நியாஸஞ் செய்யவேண்டுமென்பது கருத்து.

44. 1 அனந்தம் முதலிய கும்பங்களில் லோகபாலர்களை முறையே அவர்களின் மந்திரங்களை உச்சரித்து நியாஸஞ்செய்து, லோகபாலர்களின் மந்திரங்களாலேனும், நிதிகும்பங்களின் மந்திரங்களாலேனும், அனந்தம் முதலிய கும்பங்களைப் பூஜிக்க வேண்டும்.

## மந்திரங்களின் ஆரம்பத்திலுள்ள பீஜாக்ஷரங்கள்.

லூம், ரூம், ஶூம் ஷூம், வூம், யூம், ஸூம், ஹூம் ஆகிய இவைகளாகும்.

## ஐந்து சிலைகளாயின் நியாஸஞ் செய்யும் முறை.

45-46. ஒன்பது சிலைகளில் நியாஸஞ் செய்யும் முறை இவ்வாறு கூறப்பட்டது. (இனி) ஐந்து சிலைகளை ப்ரதிஷ்டை செய்யும் முறையில் மந்திரங்களை நியாஸஞ் செய்யும் முறை கூறப்படுகின்றது. ஒவ்வொரு தத்துவத்திலும் (சிவதத்துவம் முதலிய ஒவ்வொரு தத்துவங்களிலும்) பிருதிவீ, ஜலம், தேயு, வாயு, ஆகாயம் ஆகிய ஐந்து மூர்த்திகளை ஸிருஷ்டிக்கிரமமாக நியாஸஞ் செய்யவேண்டும். பிரமன், விஷ்ணு, ருத்ரர், ஈசுவரர், ஸதாசிவர் ஆகிய ஐவர்களும் பிருதிவீ முதலிய ஐந்து மூர்த்திகளுக்கும் நாயகர்கள் ஆவர். ஐந்து சிலைகளிலும் இந்த மூர்த்தீசுவரர்களையும் முன்போல் நியாஸஞ் செய்யவேண்டும்.

ஓம் ஹாம் ப்ருதிவீமூர்த்தயே நம: । ஓம் ஹாம் ப்ருதிவீமூர்த்யதிபதயே ப்ரஹ்மணே நம: । என்பது முதலியன மூர்த்தி மூர்த்தீசுவர மந்திரங்களாகும்.

47-47½. ஐந்து கலசங்களை அவற்றின் பெயர்களால் முறையே அருச்சித்து, விதிப்படி நிரோதனஞ் செய்யவேண்டும். நியாஸமானது நடுச் சிலை முதற்கொண்டு செய்யப்படவேண்டும். அஸ்

---

1 நடுவிலுள்ள சக்திநிதியுடன் கூடிய அனந்த கும்பத்தில் அனந்தரையும், அதன் மேல் பிரமனையும் பூஜித்து, எஞ்சியுள்ள எட்டுக் கும்பங்களிலும் பத்மம், மஹாபத்மம், மகரம், கச்சபம், முகுந்தம், அனந்தம், நீலம், சங்கம் என்னும் எட்டு நிதிகளை ஆவாஹனஞ் செய்து, அவற்றில் இந்திரன் முதலிய லோகபாலர்களை ஆவாஹனஞ் செய்து அருச்சிக்க வேண்டுமென்பது கருத்து.

திர மந்திரத்தை உச்சரித்து, திருநீறு, தர்ப்பம், எள்ளு இவற்றால் (மூன்று)ப்ராகாரத்தை (இரக்ஷையைச்) செய்ய வேண்டும்.

## சிலைகளை அருச்சித்தற்கு அங்கமாகிய ஹோமத்தைச் செய்யும் முறை.

48½. 1 குண்டங்களில் ஆதாரசத்தியை நியாஸஞ்செய்து, அருச்சித்து, தத்துவதத்துவேசுவரர்கள், மூர்த்தி மூர்த்தீசுவரர்கள் ஆகிய இவர்களை, இவர்களுக்குரிய மந்திரங்களை உச்சரித்து, 2 நெய் முதலியவற்றால்ஹோமஞ்செய்து திருப்திசெய்யவேண்டும்.

50. பின்னர், பிரமபாகஞ் சுத்தமாவதற்காக, மூலமந்திரம் பஞ்சப்ரம ஷடங்க மந்திரம் ஆகிய இவற்றால் முறையே நூறு முறை ஹோமஞ்செய்து, பூர்ணாகுதி செய்து, சாந்திகும்பத்திலுள்ள தீர்த்தத்தால் சிலைகளை ப்ரோக்ஷித்து, சிலைகளைப் பரிசித்துக் கொண்டு முறையே ஒவ்வொரு தத்துவத்திலும் 3ஜபிக்க வேண்டும்.

51. பின்னர், ஸாந்நித்தியத்திற்காக (தத்துவங்களின்) 4 ஸந்தானத்தைச் செய்து, அசுத்தமான தத்துவத்தை மீண்டும் நியாஸஞ் செய்ய வேண்டும். இவ்வாறே விஷ்ணுபாகம் ருத்ரபாகம் இவற்றின் சுத்திக்காகவும் தனித்தனி ஆகுதிகளைக்கொடுக்க வேண்டும்.

52. தர்ப்பங்களின் அடி முதலியவற்றால் பிரமபாகம் முதலிய மூன்றையும் முறையே பரிசிக்க வேண்டும். சுத்தமான தத்துவத்தை ஹ்ரஸ்வமாகவும், அசுத்தமான தத்துவத்தைத் தீர்க்கமாகவும் உச்சரித்து, தத்துவங்களை ஸந்தானம் செய்ய வேண்டும்.

---

1 ஆசாரியர், மூர்த்திபர்களுடன் [ஸாதகர்களுடன்] குண்டத்தினருகிற் சென்று என்பதைச் சேர்த்துக்கொள்ள வேண்டும்.

2 ஸமித்து சரு என்னுமிவற்றை முதலிய என்னும் பதத்தால் கொள்ள வேண்டும்.

3 எவ்வளவு முறை ஹோமஞ் செய்யப்படுகின்றதோ, அவ்வளவு முறை ஜபஞ் செய்யவேண்டுமென்பது கருத்து.

4 சுத்தாத்துவாவை அசுத்தாத்துவாவில் லயத்தை அடையச் செய்தல் ஸந்தானமாகும்.

ஓம் ஹாம் ஹீம் ஆத்மதத்வ வித்யாதத்வாப்யாம் நம:। ஓம் ஹீம் ஹௌம் வித்யாதத்வ சிவதத்வாப்யாம் நம:। என்னுமிவை ஸந்தானஞ் செய்தற்குரிய மந்திரங்கள்.

53-53½. நெய், தேன், இவற்றால் நிரப்பப்பெற்றவையா யும், 1 இரத்தினங்களை உடையனவாயும், பஞ்சகவ்வியம் அர்க்கிய ஜலம் இவற்றால் ப்ரோக்ஷிக்கப்பட்டவையாயும், லோகபாலர்களை அதிதேவதைகளாக உடையனவாயும் இருக்கிற தாம்பிர கும்பங் களை, 2 தம் மந்திரங்களால் பூஜித்து, ஸாந்நித்தியத்திற்காக ஹோ மத்தைச் செய்யவேண்டும்.

54-55. பின்னர், எல்லாச் சிலைகளுக்கும் அதிதேவதை களைத் தியானஞ் செய்யவேண்டும். சிலைகளின் அதிதேவதைகள் கல்விரூபமாயும், ஸ்நானம் செய்தவையாயும், தங்க நிறமுள்ளவை யாயும், புன் சிரிப்புள்ள முகமுடையவையாயும், எல்லா ஆபரணங் களுடன் கூடியவையாயுமிருக்கின்றனர்.

56. குறைதல் முதலிய தோஷங்கள் நீங்குதற்காகவும், வா ஸ்து பூமியின் சுத்திக்காகவும், அஸ்திர மந்திரத்தை உச்சரித்து நூறு நூறு ஆகுதிகளைச் செய்து, ஈற்றில் பூர்ணாகுதியைச் செ ய்யவேண்டும்.

## வாஸ்து பூஜை;

57. பின்னர், பிராஸாதத்தில் நூல்போட்டு வாஸ்து மண் டலத்தைச் செய்யவேண்டும். சதுரச்ரமாயும், மேடுபள்ளமில் லாததாயுமுள்ள (ஸ்வீகரிக்கப்பெற்ற) பூமியில், 3 அறுபத்து நான்கு கோஷ்டங்களைச் செய்யவேண்டும்.

---

1 ஒன்பது கும்பங்களாயின் நவரத்தினங்களையும், ஐந்து கும்பங்களா யின் ஐந்துவித இரத்தினங்களையும் உடையனவாயும் என்பது கருத்து.

2 சுபத்ரம் முதலிய கும்பங்களில் பத்மம் முதலிய நிதிகளை ஆவாஹ னஞ் செய்து, இந்த நிதிகளில் இந்திரன் முதலிய லோகபாலர்களை ஆவா ஹனஞ் செய்து அருச்சிக்க வேண்டும் என்பது கருத்து.

3 கிழக்கு முகமாகவும் வடக்கு முகமாகவும் ஒன்பது ஒன்பது நூல் கள் போட்டு, எட்டு எட்டாக அறுபத்து நான்கு கோட்டங்களைச் செய்ய வேண்டுமென்பது கருத்து.

58. கோணங்களில் (மூலைகளில்) 1 வம்சகர்களை நியாஸஞ் செய்யவேண்டும். இரண்டு பதங்களையுடையனவாயும், ஆறு பதங்களையுடையனவாயு மிருக்கிற 2 எட்டுப் பாசங்கள் மூலைகளை அடைந்தனவாக இருக்கின்றன. அந்த வாஸ்து மண்டலத்தில் வாஸ்துவை அருச்சிக்க வேண்டும்.

---

1 ஈசானதிக்கு முதற்கொண்டு நிருருதி திக்குவரையிலும், அக்கினி திக்கு முதற்கொண்டு வாயுதிக்கு வரையிலும், தூர்ஜயர் தூர்த்தரர் என்னும் பெயருள்ள இரண்டு தேவதைகள் முறையே மேலும் கீழுமாகஇருக்கின்றனர். இவர்கள் வம்சகர்கள்.

2 ஈசானம் முதலிய நான்கு கோணங்களிலுள்ள பதங்களின் இரண்டு பக்கங்களிலும், சமீபத்திலிருக்கிற இரண்டாவது பதங்களிலிருந்து மூலை மூலையாகப் போடப்பட்டவையாக இரண்டு இரண்டாக நான்கு சூத்திரங்களும், அவ்வாறே அதனை அடுத்த மூன்றுவது பதங்களிலிருந்து ஆறுவது பதம் வரை மூலை மூலையாகப் போடப்பட்ட நான்கு சூத்ரங்களுஞ் சேர்ந்து, எட்டுச் சூத்திரங்களாகுமென்பது கருத்து. இந்த எட்டுச் சூத்திரங்களும் வாஸ்து புருஷனைக் கட்டுகிற பாசங்களாகும். அந்தகாசுர யுத்தத்தில் கோபித்த பரமேசுவருடைய நெற்றியிலிருந்து கீழே விழுந்த வெயர்வை ஜலத்திலிருந்து உண்டான ஓர் பூதம், அந்தகாசுரனுடைய உதிரத்தைப் பானஞ் செய்தும் திருப்தியடையாமல், சிவபெருமானைக் குறித்து கொடுந்தவம் புரிய, சிவபெருமான் அந்தப் பூதத்திற்கு வரத்தை அருளினுர். அந்த வரத்தினுல் அந்தப் பூதமானது மூன்று லோகங்களையும் விழுங்கவல்ல சத்தியைப் பெற்று, மூன்று லோகங்களையும் தன் தேகத்தால் தாக்கிற்று. அதனுல் பயந்த தேவர்கள் ஸ்ரீ கண்ட பரமேசுவரரைச் சரணமடைய, அவர் அதிபலன் என்னும் ருத்திரரையும் மாயாபாசங்களையுஞ் சிருஷ்டித்தருள, அதிபலன் என்னும் ருத்திரர், எட்டுப் பாசங்களாலும் அந்தப் பூதமாகிய அசுரனைக் கட்டி உயரே நோக்கிய முகத்தை உடையவனுகப் பூமியிற் றள்ளினுர். இந்தக் கதையே வாஸ்து புருஷனை எட்டு நூல்களாற் கட்டுதற்குப் பிரமாணமாகும். இவ்வாறு தள்ளப்பெற்ற அசுரனுடைய தேகத்தில், பிரமன் முதலிய தேவர்களை வஸிக்கச் செய்ததாலேயே, இந்தப் பூதமாகிற அசுரனுக்கு வாஸ்துபுருஷன் என்னும் பெயர் சித்தித்தது. அன்றியும் சுக்ரனுடைய கோபத்தால் வாஸ்து உண்டானுன் என்றும், இந்திரன் பர்வதங்களுடைய இறக்கைகளைச் சேதிக்கும்போது, இறக்கைகள் பூமியில் விழ அந்தப்பாரத்தைப் பூமி சஹிக்கமாட்டாமல் சர்ப்பங்களோடு பெருமூச்சுவிட, சர்ப்பங்களின் விஷத்திலிருந்து வாஸ்துவுண்டானுனென்றும் கூறப்படுகின்றன. இவையாவற்றையும் கற்பபேதமெனக் கொள்ள வேண்டும்.

## அருச்சிக்கும் முறை வருமாறு.

59. [1] பூஜாகாலங்களில் வாஸ்து புருஷனை மடிக்கப்பெற்ற கேசத்தை உடையவனாகவும், உயரே நோக்கியவனாகவும், அசுரனின் சொரூபத்தை உடையவனாகவும், சுவர் முதலியன அமைக்கும் கால் கீழ் நோக்கிய முகத்தை உடையவனாகவும் தியானஞ் செய்ய வேண்டும்.

60. வாஸ்துபுருஷனுடைய தலை ஈசானதிக்கிலும், முழங்கால்களானவை முழங்கைகளைப்பற்றிக்கொண்டு வாயுதிக்கு அக்கினிதிக்கு இவற்றிலும், நிருருதிதிக்கில் இரண்டு கால்களும், இருதயத்தில் அஞ்சலியும் இருக்கின்றன.

61. இந்த வாஸ்து புருஷனுடைய தேகத்தில் வஸிக்கும் தேவதைகள், பூஜை செய்யப்பெற்று, [2] சுபத்தைத் தருபவர்களாக இருக்கின்றனர். இந்த வாஸ்து மண்டலத்தில், கோணத்

---

1 தீக்ஷைகளிலும், தேவாலயம் மண்டபம் இவற்றிற்குச் சுவர் முதலியன நிர்மாணஞ் செய்யும்பொழுதும், இடையூற்றை அகற்றுவதற்காகவும், முதலில் வாஸ்துபூஜை செய்யவேண்டுமென்று ஈசான சிவகுருதேவ பத்ததியில் கூறப்பட்டிருக்கின்றது.

2 இந்தத் தேவர்கள் பூஜை செய்யப்பெறாவிடில் சுபத்தைத் தரமாட்டார்கள் என்பது கருத்து. முன்னொருகாலத்தில் அசுரகுருவாகிய சுக்கிரன் தேவர்களை வெல்லுதற்காக யாகஞ் செய்து அஜமுகாசுரனைச் சிருஷ்டித்தார். இதனால் துன்புற்ற தேவர்களுடைய வேண்டுகோளுக்கிணங்கிய சிவபெருமானுடைய நெற்றிக் கண்ணிலிருந்து தீப்பொறி தோன்ற, சுக்ரன் பயந்து யோகமஹிமையால் சிவபெருமானுடைய சரீரத்துள் ஒளிந்துகொண்டான். தன்னைச் சரணமடைந்ததையுணர்ந்த பரமேசுவரர் சந்தோஷத்துடன் சுக்ரனுடைய வேண்டுகோளுக்கிணங்கி, தன்னை வேண்டிய அஜமுகாசுரனைப் பார்த்து "உனக்கு வாஸ்துபன் என்னும் பெயர் சித்திக்கட்டும். உன்னுடைய சரீரத்தில் பிரமன் முதலிய தேவர்கள் வஸிக்கட்டும். வீடுகள் கட்டும்போதும் தேவாலயம் நிர்மாணஞ் செய்யும்போதும் உன்னையும் உன் சரீரத்தில் வஸிப்பவர்களையும் முதலில் பூஜிப்பவர்களுக்கு எல்லா ஐசுவரியங்களும் சித்திக்கட்டும். இவ்வாறு பூஜிக்காமல் வீடு ஆலயம் முதலியன செய்தால் அசுரப்ரீதிகரமாக இருக்கட்டும்" என்று திருவாய்மலர்ந்தருளினர். இந்தப் பூர்வகதையே வாஸ்து புருஷனுடைய தேகத்தில் வஸிக்கும் தேவர்களைப் பூசிக்காவிடில், இவர்கள் சுபத்தைத் தரமாட்டார்கள் என்பதற்குப் பிரமாணமாகும்.

திற்கு அதிபர்களான எண்மர், (நான்கு) கோணங்களின் 1 எட்டுப்பாதிகளில் இருக்கின்றனர்.

62. 2 கிழக்கு முதலிய திக்குக்களில் முறையே ஆறுபதங்களுக்கு நாயகர்களான மரீசி முதலாயினோரும், நடுவில் நான்கு பீதங்களில் பிரமனும் இருக்கின்றனர். எஞ்சியவை பரிகைகள் (அகிழ்கள்) ஆகும்.

## நீக்குதற்குரிய பன்னிரு மர்மஸ்தானங்கள்.

63-64. 3 எல்லாநாடிகளும் இருக்குமிடம், மகாமர்மம், அம்புஜம், ஹலம், த்ரிசூலம், ஸ்வஸ்திகம், வஜ்ரம், மஹாஸ்வஸ்திகம், ஸம்புடம், த்ரிகடி, மணிபந்தம், சுவிசுத்தபதம் ஆகிய வாஸ்துவின் பன்னிரு மர்மஸ்தானங்களை சுவர் முதலியன கட்டுங்கால் 4 விலக்கவேண்டும்.

## வாஸ்து தேவதைகளுக்குப் பலி சமர்ப்பித்தல்.

65-66½. ஈசானருக்கு நெய்யுடன் அக்ஷதையும், பர்ஜன்யருக்குத் தாமரைப் புஷ்பத்துடன் நீரையும், ஜயந்தருக்குக் குங்கும நிறமுள்ள பதாகையையும், (கொடியையும்) மகேந்திருக்கு இரத்தினத்துடன் நீரும்; ஆதித்தியருக்கு புகை நிறமுள்ள மேற்கட்டும், ஸத்யருக்கு நெய்யுடன் கோதுமையும், பிருசருக்கு உளுந்தன்னமும், அந்தரிக்ஷருக்கு (பக்ஷியின்) மாம்ஸம், அல்லது

---

1 நான்கு மூலைகளிலிருக்கும் பாதிபாதி பதங்களில், ஒரு பாதி பதத்திற்கு ஒருவராக, எட்டுப் பாதி பதங்களில் ஈசர் முதலிய எண்மர் இருக்கின்றனர் என்பது கருத்து.

2 பிரமன் இருக்குமிடத்திற்குக் கிழக்கு முதலான நான்கு திக்குக்களிலும், ஆறு ஆறு பதங்களில், மரீசி, விவஸ்வான். மித்திரன், பூராதரன், என்னும் நால்வர் இருக்கின்றனர் என்பது கருத்து.

3 கிழக்கு நுனியாகவும் வடக்கு நுனியாகவும் போடப்பட்ட நூல்கள் வாஸ்துவின் நாடிகளாகும். லக்ஷ்மீ, யசோவதீ, காந்தை, சுப்ரியை, விமலை, சிவை, சுபகை, சுமதீ, ஸாரை, ஆகிய ஒன்பது நாடிகள் கிழக்கு முகமாயுள்ளன. தன்யை, ப்ராணை, விசாலை, ஸ்திரை, பத்திரை, ஜயை, நிசை, விரஜை, விபவை, ஆகிய ஒன்பது நாடிகள் வடக்கு முகமாயுள்ளன. இவ்வாறு அமைந்த எல்லா நாடிகளும் என்பது கருத்து.

4 இந்த மர்மஸ்தானங்களில் சுவர் முதலியன கட்டக் கூடாது என்பது கருத்து.

சத்துமாவும், இவ்வாறு கிழக்குத்திக்கில் எண்மருக்குப் பலி சமர்ப்பிக்க வேண்டும்.

**67-69.** அக்கினிக்கு தேன், பால், நெய் இவற்றால் நிரம்பிய ஸ்ருக்கையும், பூஷாவுக்குப் பொரியையும், விததருக்குச் சுவர்ணத்துடன் நீரையும், கிரகக்ஷதருக்குத் தேனையும், யமராஜருக்குப் பழத்துடன் அன்னத்தையும், கந்தர்வநாதருக்குக்கந்தத்தையும், (சந்தனத்தையும்) பிருங்கருக்குப் பக்ஷியின் நாவையும், 1 மிருகருக்கு யவமென்னும் தான்யத்தின் இலைகளையும், இவ்வாறு தெற்குத்திக்கில் எண்மருக்குப் பலி சமர்ப்பிக்கவேண்டும்.

**70-72.** நிருருதிக்கு எள்ளன்னத்தையும், தௌவாரிகருக்கு பால் மரத்தாலாக்கப்பெற்ற பற்குச்சியையும், தானமுத்திரையால் கொடுக்கவேண்டும். சுக்ரீவருக்கு 2 அப்பத்தையும், புஷ்பதந்தருக்குத் தர்ப்பங்களையும், வருணனுக்கு உதிரத்தையும், அசுரருக்குத் தாமரைப் புஷ்பத்துடன் கள்ளையும், சோஷருக்கு நெய் சொரியப்பெற்ற அன்னத்தையும், ரோகருக்கு நெய்யின் மேலுள்ள தெளிவு அல்லது பொரியையும், இவ்வாறு மேற்குத்திக்கிலுள்ள எண்மருக்குப் பலி சமர்ப்பிக்க வேண்டும்.

**73-74.** வாயுவுக்கு வெண்மையான கொடியையும், நாகருக்குப் பொன்னிறமுள்ள நாககேஸரமென்னும் பூவையும், முக்கியருக்குத்தின்னும் பண்டங்களையும், பல்லாடருக்குப் பக்குவஞ் செய்த பாசிப்பயறன்னத்தையும், சோமருக்கு நெய்யுடன் பாயஸத்தையும், 3 அர்க்களருக்குச் செந்நெலரிசியையும், அதிதிக்கு

---

1 மிருஷருக்கு மீனாலாக்கப் பெற்ற அன்னத்தையும் என்று மயமதத்திலிருக்கின்றது.

2 அசிந்திய விசுவஸாதாக்கியம் ஈசான சிவகுரு தேவபத்ததி ஆகிய இவற்றை நோக்க சுக்ரீவருக்கு தூபத்தையும் என்று இருக்கவேண்டுமென்று தோன்றுகிறது.

3 ஈசானசிவகுருதேவ பத்ததியை அனுஸரித்து இவ்விதம் மொழிபெயர்க்கப்பட்டது. [illegible] என்று பொருளுக்கிணங்காதவாறு மூலத்திலிருக்கிறது. மிருகருக்கு உலர்ந்த மாம்ஸத்தையும் என்று மயமதத்திலிருக்கின்றது.

1 மோதகத்தையும், திதிக்கு 2 எள்ளாலாக்கப் பெற்ற தின்னும் பண்டங்களையும், இவ்வாறு வடக்குத் திக்கிலுள்ள எண்மருக்குப் பலி சமர்ப்பிக்க வேண்டும்.

75. பிரமனுக்குக் கிழக்குத்திக்கில் ஆறு பதங்களில் இருக்கும் மரிசியின்பொருட்டு மோதகங்களையும், அக்கினிக்குக் கீழ் கோணத்திலுள்ள கோஷ்டத்தில் ஸவிதாவின்பொருட்டு செம்மை நிறமுள்ள புஷ்பங்களையும் சமர்ப்பிக்க வேண்டும்.

76. அதற்குக் கீழுள்ள பதத்தில் ஸாவித்திரனுக்குத் தர்ப்பை ஜலத்தையும், பிரமனுக்குத் தெற்குத் திக்கில் ஆறுபதங்களிலிருக்கும் விவஸ்வானுக்குச் செஞ்சந்தனத்தையும் சமர்ப்பிக்க வேண்டும்.

77. நிருருதிக்குக் கீழே இருக்கும் கோணத்திலுள்ள பதத்தில் இந்திரனுக்கு மஞ்சளன்னத்தையும், இந்திரனுக்குக் கீழுள்ள பதத்தில் இந்திரஞ்ஜயனுக்கு 3 சித்திரான்னத்தையும் சமர்ப்பிக்க வேண்டும்.

78. பிரமனுக்கு மேற்குத் திக்கில் ஆறுபதங்களில் இருக்கும் மித்திருக்குச் சர்க்கரை அன்னத்தையும், வாயுகோணத்திற்குக் கீழே உள்ள பதத்தில் ருத்திருக்கு நெய்யில்பக்குவமான அன்னத்தையும் சமர்ப்பிக்க வேண்டும்.

---

1 ஹொவீ8ஷி தயெ என்று மூலப்ரதிகளிலும், விவீ8ஷி தயெ என்று அசிந்தியவிசுவஸாதாக்கியத்திலும் இருக்கின்றன. இவை பொருளுக்கிணங்காதபடியால் ,,ஷெவ8ா தஙிெ8ாடிகழ" என்னும் மயமதத்திற்கிணங்க மொழிபெயர்க்கப் பெற்றிருக்கின்றது.

2 ,,ஷிெதள திஸஃஜெகூ்ரண" என்ற மயமதத்திற்கிணங்க இவ்வாறு மொழிபெயர்க்கப்பட்டிருக்கின்றது. மூலப்ரதிகளில் ,,ஷிெெதர வஷ்ரீழ" என்றும், அசிந்தியவிசுவஸாதாக்கியத்தில் ,,ஷிெெதர வடீரீழ" என்றுமிருக்கின்றன. இவை பொருளுக்கிணங்கவில்லை. ,,ஷிெெதரஸஷ்ரிவெதர௱க்ஷாஷீகழ" என்று திருத்திக்கொண்டால் "திதிக்குப் பொன்னையும்" என்று பொருள்படும்.

3 சுத்தான்னத்தையும் என்று ஈசானசிவகுருதேவ பத்ததியில் கூறப்பட்டிருக்கின்றது.

79. அதற்குக் கீழே உள்ள பதத்தில் ருத்திர்தாஸருக்கு ஈரமுள்ள மாம்சத்தைச் சமர்ப்பிக்க வேண்டும். பின்னர் பிரமனுக்கு வடக்குத் திக்கில் ஆறுபதங்களிலிருக்கும் தராதரருக்கு உளுந்தன்னத்தைச் சமர்ப்பிக்க வேண்டும்.

80. ஈசான கோணத்திற்குக் கீழே உள்ள பதத்தில் ஆபருக்கும், அவ்விடத்தில் ஆபவத்ஸருக்கும் முறையே 1 தயிர், பால், இவற்றை விதிப்படி பூசித்துச் சமர்ப்பிக்க வேண்டும்.

81. நடுவில் நான்கு பதங்களில் இருக்கும் பிரமனுக்கு, பஞ்சகவ்வியம் அக்ஷதை இவற்றுடன், நெய்யுடன் கூடிய சருவை நிவேதனஞ் செய்யவேண்டும்.

82. ஈசானதிக்கு முதல் வாயுதிக்கு ஈருகவுள்ள மூலைகளில், வாஸ்துபூமிக்குவெளியில், முறையே சரகீ, விதாரீ, பூதனை பாபராக்ஷஸீ ஆகிய நால்வரையும் பூசிக்கவேண்டும். பூஜிக்கும் முறை வருமாறு:—

83-83½. சரகியின் பொருட்டு நெய்யுடன் மாம்ஸத்தையும், விதாரியின் பொருட்டு தயிர் தாமரைப்பூ இவற்றையும், பூதனையின்பொருட்டு பழம் பித்தம் உதிரம் இவற்றையும், பாபராக்ஷஸியின் பொருட்டு எலும்பு உதிரம் பித்தம் பழம் இவற்றையும், நிவேதனஞ் செய்யவேண்டும்.

84-86. பின்னர், கிழக்குத் திக்கில் ஸ்கந்தருக்கு உளுந்தன்னத்தையும், தெற்குத் திக்கில் அர்யமாவுக்கு எள்ளுடன் கூடிய அப்பங்களையும், மேற்குத் திக்கில் ஜிரும்பகருக்கு உதிரத்துடன்கூடிய மாம்ஸத்தையும், வடக்குத்திக்கில் பிலிபிஞ்சருக்கு செம்மையான அன்னம் புஷ்பங்கள் ஆகிய இவற்றையும், நிவேதனஞ் செய்யவேண்டும், 2 என்னால் ஆகமங்களை அனுஸரித்து வாஸ்துபூஜை நன்கு கூறப்பட்டது.

---

1 ஆபருக்குப் பாலும், ஆபவத்ஸருக்குத் தயிரும் ஈசான சிவகுரு தேவபத்ததியில் விதிக்கப்பட்டிருக்கின்றது.

2 மயமுனிவரியற்றிய நூலான மயமதமென்னும் கிரந்தத்தில் கூறப்பட்ட வாஸ்து பலியிடும் முறையுடன், இங்கு கூறப்பட்ட வாஸ்து பலியிடும் முறை ஒற்றுமைப்படாததால், மூலத்திலுள்ள "யோமதோ நு ஸாரேண" என்னும் பதத்திற்கு "மயமதமென்னும் நூலை அனுஸரித்து" என்று மொழிபெயர்க்கப் படவில்லை.

87. பிறவிடங்களில் தர்ப்பம், தயிர், அக்ஷதை, எள்ளு இவற்ருல் இந்த வாஸ்துபூஜை கூறப்பட்டிருக்கின்றது. 1 வீட்டிலும் எண்பத்தொரு கோஷ்டங்களில் வாஸ்துவைப் பூஜிக்க வேண்டும்.

88. மூன்று பதங்களிலும், முன்போல் ஆறு பதங்களிலும், 2 பாசங்களை நியாஸஞ் செய்யவேண்டும். இந்த வாஸ்துவில் ஈசர் 3 முதலாயினோர் ஒவ்வொருபதத்தில் இருக்கின்றனர். 4 ஆபர் முதலாயினோர் இரண்டிரண்டு பதங்களில் இருக்கின்றனர்.

89. 5 மரீசி முதலாயினோர் ஆறு ஆறு பதங்களில் இருக்கின்றனர். பிரமன் ஒன்பது பதங்களில் இருக்கிருர். வெளி

---

1 வீடு முதலியன கட்டும்போது கிழக்கு நுனியாகப் பத்து நூலும், வடக்கு நுனியாகப் பத்து நூலும் போட்டு ஒன்பது ஒன்பதாக எண்பத்தொரு பதங்களைச் செய்து, வாஸ்துபூஜை செய்ய வேண்டும் என்பது கருத்து.

2 ஈசான திக்கிலுள்ள பதத்திற்குத் தெற்குத் திக்கிலும் மேற்குத் திக்கிலுமுள்ள நான்காவது பதத்திலிருந்து தொடங்கி, நிருருதி கோண பதத்திற்குக் கிழக்குத் திக்கிலும் வடக்குத் திக்கிலுமுள்ள நான்காவது பதம் வரையில் போடப்பட்ட சூத்திரமிரண்டும், அவ்வாறே அக்கினி மூலையிலுள்ள பதத்திற்கு வடக்கும் மேற்கும் நான்காம் பதம் தொடங்கி வாயு கோணத்திற்குக் கிழக்கும் தெற்கும் நான்காம் பதம்வரையில் போடப்பட்ட சூத்திரங்கள் இரண்டும், ஆக ஆறு பதங்களில் சூத்திரங்கள் நான்கும், ஈசான பதத்திற்குத் தெற்கும் மேற்கும் மூன்ருவது பதம் தொடங்கி நிருருதி கோணபதத்திற்குக் கிழக்கும் வடக்கும் மூன்ருவது பதம் வரையில் போடப்பட்ட பாச சூத்திரங்களிரண்டும், அவ்வாறே அக்கினி கோணத்திற்கு வடக்கும் மேற்கும் மூன்ருவது பதம் தொடங்கி வாயுகோணத்திற்குக் கிழக்கும் தெற்கும் மூன்ருவது பதம் வரையில் போடப்பட்ட பாசசூத்திரங்களிரண்டும் சேர்ந்து, மூன்று பதங்களில் சூத்திரங்கள் நான்கும், இவ்வாறு எட்டுப் பாசசூத்திரங்களை என்றறிக.

3 ஈசானர் முதலிய முப்பத்திரண்டு பேர்கள் என்பது கருத்து.

4 ஆபர் ஆபவத்ஸர் முதலான எண்மர் பிரமன் இருக்குமிடத்திற்கு ஈசானகோணம் தொடங்கி இரண்டு இரண்டு பதங்களில் இருக்கின்றனர் என்பது கருத்து.

5 மரீசி, விவஸ்வாந், மித்ரர், தராதரர் ஆகிய நால்வர் என்பதுகருத்து

யில் ஈசானம் முதலிய மூலைகளில் சுபகி முதலிய நால்வரைப் பூஜிக்க வேண்டும்.

90. முறையே ஒவ்வொரு தேவருக்கும் மூன்று ஆகுதிகளைக் கொடுக்கவேண்டும். 1 பூதங்களுக்குப் பலியைச் சமர்ப்பித்து நல்ல லக்னத்தில் சிலாநியாஸத்தைச் செய்யவேண்டும்.

## ஒன்பது சிலைகளை நியாஸஞ் செய்யும் முறை.

91. நடுவிலுள்ள குழியில் ஆதார சக்தியை நியாஸஞ் செய்து, இறுதியிலுள்ள 2 அநந்தமென்னும் கும்பத்தையும் நியாஸஞ் செய்து, 3 இதன் மேல் லாம் என்னும் பிருதிவீ பீஜத்தை முன்னருடைய மூலமந்திரத்தை உச்சரித்து, தரணீ என்னும் சிலையை நியாஸஞ் செய்யவேண்டும்.

92-93. கிழக்கு முதலிய திக்குக்களில் உள்ள நியாஸஞ் செய்யப் பெற்ற ஆதார சக்தியை உடைய குழிகளில் முறையே சுபத்ரம் 4 முதலிய எட்டுக் கும்பங்களை (இந்திரன் முதலிய) லோகபாலர்களின் மந்திரங்களை உச்சரித்து நியாஸஞ் செய்து, அதன் பின் அந்தக் கும்பங்களில், நந்தை 5 முதலிய சிலைகளை முறையே 6 மூர்த்தீசுவரர்களுடைய மந்திரங்களை உச்சரித்து,

---

1 வெளியில் எட்டு வகையான க்ரூர பூதங்களுக்கு என்பது கருத்து.

2 [illegible] என்னும் பாடத்தை அனுஸரித்து மொழிபெயர்க்கப்பட்டிருக்கிறது. வேறு ப்ரதியை அனுஸரித்து [illegible] என்ற பாடத்தைக் கொண்டால் உத்தரமென்ற கும்பத்தையும் எனப் பொருள்படும். இரண்டும் சரியான பாடங்கள்.

3 கும்பங்களின் சமீபத்தில் சிலைகளை நியாஸஞ் செய்ய வேண்டுமென்று ஸித்தாந்த ஸாராவளீ வியாக்கியானத்திற் கூறப்பட்டிருக்கிறது.

4 சுபத்ரம், விபத்ரம், சுநந்தம், புஷ்பதந்தம், ஜயம், விஜயம், ஜயந்தம், பூர்ணம் என்னும் எட்டுக் கும்பங்களை என்பது கருத்து.

5 நந்தை, பத்திரை, ஜயை, பூரணை, அஜிதை, அபராஜிதை, விஜயை, மங்களை என்னும் எட்டுச் சிலைகளை என்பது கருத்து.

6 இதே சிலா நியாஸவிதியில் 43-வது சுலோகத்திற் கூறப்பட்ட [illegible] என்பது முதலான மந்திரங்களால் என்பது கருத்து.

சுவர்களின் நடுவில் இருக்கும்படியான நிலைமையில் நியாஸஞ் செய்யவேண்டும்.

94-94½. உபதிக்கு மஹாதிக்கு இவற்றில் அமையப் பெற்ற அந்தச் சிலைகளில் தர்மம் முதலிய எட்டையும் நியாஸஞ் செய்ய வேண்டும். அல்லது அக்கினி திக்கு முதலிய நான்குமூலைகளில், சுபத்ரம் முதலிய நான்கு கும்பங்களில், நந்தை முதலிய நான்கு சிலைகளையும், கிழக்கு முதலிய நான்கு மஹாதிக்குக்களில், ஜயம் முதலிய நான்கு கும்பங்களில், அஜிதை முதலிய நான்கு சிலைகளையும் நியாஸஞ் செய்யவேண்டும்.

95-96. மேலே பிரமனையும், வியாபகமாக மகேசுவரனையும் நியாஸஞ்செய்து, வ்யோம (நிஷ்கள) ப்ராஸாத மந்திரத்தின் நடுவிலுள்ளதாக வரப்போகும் அத்துவாவைச் சிந்திக்க வேண்டும். பின்னர், பலியைச் சமர்ப்பித்து, இடையூறுகளாகிற தோஷங்களைப் போக்கும் அஸ்திர மந்திரத்தை ஜபிக்கவேண்டும்.

## ஐந்து சிலைகளை நியாஸஞ் செய்யும் முறை

97-98. ஐந்து சிலைகளை நியாஸஞ் செய்யும்முறையும் சிறிது கூறப்படுகிறது. எவ்வாறெனில்:— "நடுவில் சமுத்திர கலசத்திற்கு மேல் பூரணை என்னும் சிலையை நியாஸஞ்செய்து, அக்னி திக்கு முதலிய நான்கு மூலைகளில் முறையே பத்மம் முதலிய கும்பங்களில் நந்தை முதலிய சிலைகளை நியாஸஞ் செய்யவேண்டும்" என்பதாம். நடுவிலுள்ள சிலையால் மற்ற நான்கு சிலைகளும் தாய் சிலை (பிரதான சிலை) யுற்றவையாகும்.

## சிலைகளைப் பிரார்த்திக்கும் முறை.

99. பெரிதான கல்வி ரூபியாயும், எல்லாவற்றையும் தருபவளாயும், அங்கிரஸ் என்னும் முனிவருக்குப் பெண்ணுயுமிருக்கிற ஓ பூர்ணையே! நீ இந்தயாகத்தில் எல்லாக் கிரியைகளையும் பூர்த்தி செய்தருள வேண்டும்.

100-101. புருஷர்களைச் சந்தோஷிக்கச் செய்யும் ஓ நந்தையே! நான் இந்த ப்ராஸாதத்தில் உன்னை ஸ்தாபிக்கிறேன். சந்திர சூரியர்கள் இருக்குமளவும் இந்த ப்ராஸாதத்தில் சந்தோஷத்துடன் நீ இருக்கவேண்டும். வஸிஷ்டருடைய புதல்வியான

ஓ நந்தையே! மனிதர்களுக்கு ஆயுள், காமம், பொருள் இவற்றைக் கொடு. இந்த ப்ராஸாதத்தை முயற்சியுடன் நீ எப்பொழுதும் இரக்ஷிக்க வேண்டும்.

102. கச்யப முனிவரின் புதல்வியான ஓ பத்ரையே! நீ எப்பொழுதும் ஜனங்களுக்கு க்ஷேமத்தைச் செய். ஆயுள், காமம், ஸம்பத்து இவற்றை எப்பொழுதும் அளிப்பவளாக இரு.

103. பிருகு முனிவரின் புதல்வியான ஓ ஜயையே! நீ இந்த ப்ராஸாதத்தில் என்னால் ஸ்தாபிக்கப் பெற்று எப்பொழுதும் வஸிக்கவேண்டும். கருத்தாவுக்கு ஜயத்தையும் ஐசுவர்யத்தையும் எப்பொழுதும் தந்தருள வேண்டும்.

104. தாரித்ரிய தோஷத்தை நீக்குபவளாயும், ஸித்தி முக்திகளைத் தருபவளாயும், மங்களரூபிணியாயும், எல்லாவிடங்களிலும் இருப்பவளாயும் இருக்கிற ஓ ரிக்தையே! ஈசுவரஸ்வரூபமாயுள்ள இந்தப்ராஸாதத்தில் எப்பொழுதும் 1 இருந்தருளவேண்டும்.

---

1 நடுவில் பூர்ணை என்னும் சிலையையும், அக்கினிதிக்கு முதலியமூலைகளில் நந்தை, பத்ரை, ஜயை, ரிக்தை ஆகிய நான்கு சிலைகளையும் நியாஸஞ்செய்யும் முறையில், இந்த ஐந்துசிலைகளுக்குமாத்திரம் மூலத்தில் பிரார்த்தனைக் கூறப்பட்டிருக்கின்றது. ஒன்பது சிலைகளை நியாஸஞ்செய்யும் முறையில் கூறியதுபோக எஞ்சியுள்ள அஜிதை, அபராஜிதை, விஜயை, மங்களை, தரணீ என்னும் ஐந்து சிலைகளின் பிரார்த்தனைகளும் வேண்டப்படுவதால் வித்தார்த்த சேகரத்திலிருந்து இவற்றின் பிரார்த்தனைகள் இங்குக் கூறப்படுகின்றன. அவையாவன:—

ஓ அஜிதாதேவியே! நீ எப்பொழுதும் கர்த்தாவுக்கு ஜயத்தைக்கொடு. பிரளயகாலம் வரை நீ இந்த ப்ராஸாதத்தை அதிட்டித்தருள வேண்டும்.

ஓ தேவியான அபராஜிதையே! சத்துருக்களுக்குப் பயத்தைக் கொடு. உன்னுடைய அனுக்கிரஹத்தால் பிராஸாதத்தில் விக்கினமில்லாதிருக்க வேண்டும்.

ஓ விஜயையே! கர்த்தாவானவன் மஹிமையுடன் கூடி ஜயமுள்ளவனாக இருக்கட்டும். பிரளயகாலம் வரை பிராஸாதமானது ஸ்திரமான தேவதையை உடையதாக இருக்கட்டும்.

ஓ மங்களையே! சிவபெருமானிடம் அன்புள்ளவர்களுக்கு மங்களத்தைக் கொடு.

ஓ தரணீ தேவியே! முதுகால் எல்லா உலகங்களையும் தரிப்பவளே! கருத்தாவுக்கு விருப்பமான பொருளைத் தருவதற்காக ஆலயத்தில் வீற்றிருந்து மங்களத்தைக் கொடுத்துக்கொண்டு ஸ்திரமாக இரு என்பனவாம்.

105. பிராஸாதத்தை [1] ஆகாயமாகத் தியானித்து, மூன்று தத்துவங்களை நியாஸஞ் செய்யவேண்டும். பின்னர் விதிப்படி பிராயச்சித்தாகுதிகளைச் செய்து யாகத்தைப் பூர்த்தி செய்ய வேண்டும்.

106. ஸ்ரீ ஸோமசம்பு சிவாசாரியரால் க்ரியாகாண்டக்ரமாவளீ என்னும் இந்த நூலில் சிலாநியாஸ விதியானது சுருக்கமாக இவ்வாறு கூறப்பட்டது.

ஆகச் சுலோகம் 1334½.

---

## பிரதிஷ்டாதிவாஸ விதி.

### பிரதிட்டைக்குரிய காலம்.

1-2. பின்னர், லிங்கத்தைப் பிரதிஷ்டை செய்யும் முறை கூறப்படுகின்றது. பிரதிஷ்டையானது முத்தியின் பொருட்டு [2] எப்பொழுதும் செய்யப்படுகின்றது. புத்தியின் (போகத்தின்) பொருட்டு, உத்தராயணத்தில் சைத்திரம் (சித்திரைமாதம்) நீங்கிய மாகமாதம் முதல் உள்ள ஐந்து மாதங்களில், குரு சுக்கிரர்களின் உதயத்தில், முதலாவதுள்ள மூன்று [3] கரணங்களில் செய்ய வேண்டும்.

3-4. விசேஷமாகச் சுக்கில பக்ஷத்திலும், கிருஷ்ணபக்ஷத்தில் பஞ்சமீவரையிலும் பிரதிட்டைக் குரிய காலமாகும். சதுர்

---

[1] ஷட்நாயகஃவ்யோகா என்று மூலத்திலிருக்கிறது. இதுபொருளுக்கு இணங்காததால் வ்யோமாயதநம் ப்ராஸா என்ற அசிந்திய விசுவஸாதாக்ய சுலோகத்திற்கிணங்க நமஸ்வாயதநம் ப்ராஸா என்று திருத்தப்பெற்று பரமாகாசமாக எனப்பொருள்பட இவ்வாறு மொழிபெயர்க்கப்பெற்றது:

[2] காலவரையறையின்றி, பன்னிருமாதங்களிலும், வளர்பிறை தேய்பிறைகளிலும், எல்லா நக்ஷத்திரங்களிலும் செய்யலாமென்பது கருத்து.

[3] பவம், பாலவம், கௌலவம் என்னும் மூன்று கரணங்களில் என்பது கருத்து.

த்தி, நவமீ, 1 ஷஷ்டீ, சதுர்த்தசீ இவை நீங்கலாக, 2 க்ரூரவாரங்களுடன் கூடாத எஞ்சிய திதிகள் நல்ல திதிகளாகும். சோதிட சாஸ்திரத்தில் கூறப்பட்ட 3 தாரைகள், 4 யோகங்கள் ஆகிய இவற்றின் 5 விசேஷத்தையும் அறிந்து கொள்ள வேண்டும்.

5-5½. சதயம், அவிட்டம், திருவாதிரை, அநுஷம், உத்திரம், உத்திராடம், உத்திரட்டாதி, ரோஹிணீ, திருவோணம் ஆகிய இந்த நக்ஷத்திரங்களிலும், 6 ஸ்திரலக்கினங்களிலும் பிரதிஷ்டை செய்தல் மேன்மையைத் தரும். கும்பம், ஸிம்மம், விருச்சிகம், துலாம், விருஷபம், 7 தநுசு ஆகிய லக்கினங்கள் பிரதிஷ்டைக்குரியனவாகும்.

1 த்விதீயை, திருதீயை, பஞ்சமீ, ஸப்தமீ, தசமீ, ஏகாதசீ, ஷஷ்டீ, துவாதசீ, திரயோதசீ ஆகிய இந்தத் திதிகள் சிரேஷ்டமான திதிகளாகுமென்று ஸித்தாந்த சேகரத்திற் கூறப்பட்டிருக்கின்றது.

2 ரோஹிணீ நக்ஷத்திரத்துடன் கூடிய சனிக்கிழமையும், ரேவதீ ஹஸ்தம் ஆகிய இந்த நக்ஷத்திரங்களுடன் கூடிய ஞாயிற்றுக்கிழமையும், உத்திராடம், அசுவினீ நக்ஷத்ரம் இவற்றுடன் கூடிய செவ்வாய்க்கிழமையும், நல்ல வாரங்களென்று ஸித்தாந்த சேகரத்தில் கூறப்பட்டிருக்கின்றது.

3 ஜன்மம், ஸம்பத், விபத், க்ஷேமம், ப்ரத்யரம், ஸாதகம், வதம், மைத்ரம், பரம மைத்திரம் என்ற ஒன்பது தாரைகள் என்பது பொருள்.

4 விஷ்கம்பம், ப்ரீதி, ஆயுஷ்மான், ஸௌபாக்கியம், சோபனம், அதிகண்டம், சுகர்மம், திருதி, சூலம், கண்டம், விருத்தி, துருவம், வியாகாதம், ஹர்ஷணம், வஜ்ரம், ஸித்தி, வியதீபாதம், வரீயாந், பரிகம், சிவம், சித்தம், சாத்தியம், சுபம், சுப்ரம், ப்ராம்யம், மாகேந்த்ரம், வைதிருதி, ஆகிய இருபத்தேழு யோகங்கள் என்பது பொருள்.

5 பரமமைத்ரதாரையும், இரண்டு நான்கு ஆறு எட்டாவதுள்ள தாரைகளும் நன்மையைத் தரும். இவ்வாறே யோகங்களில் பதினெண் யோகங்கள் சிரேஷ்டமாகும் என்பது கருத்து. ஸித்தாந்த சேகரத்தில் "பெயரால் நன்மையை விளக்கும் பதினெட்டு யோகங்கள் சிலாக்கியமாகும். எஞ்சியவை கொள்ளத் தகாதவை" எனக் கூறப்பட்டிருக்கின்றது.

6 ஸ்திரராசிகளிலும், உபயராசிகளிலும், பிரதிட்டையைச் செய்ய வேண்டுமென்று ஸந்தான ஸம்ஹிதையில் கூறப்பட்டிருக்கிறது.

7 தநுராசியையும், மேஷம், கடகம், துலாம், மகரம் ஆகிய இந்தச் சர ராசிகளையும் விலக்க வேண்டுமென்று சைவகால விவேகத்தில் கூறப்பட்டிருக்கின்றது.

## ஜாதிபேதத்தால் நக்ஷத்திர பேதத்தைக் கொள்ளுதல்.

6. பிங்களாமதம் என்னும் நூலில் நான்கு ஜாதியருக்குரிய தனித்தனி நக்ஷத்திரங்கள் கூறப்பட்டிருக்கின்றன. (அவை வருமாறு.)

7. பூசம், அஸ்தம், உத்திராடம், பூராடம், ரோஹிணீ ஆகிய இந்த நக்ஷத்திரங்கள் பிராமணருக்கு உத்தமமாகும்.

7½. புனர்பூசம், சித்திரை, அவிட்டம், திருவோணம் ஆகிய இவை க்ஷத்திரியருக்கு உத்தமமாகும்.

8. ரேவதீ, உத்திரம், அசுவதீ ஆகிய இந்த நக்ஷத்திரங்கள் வைசியருக்கு உத்தமமாகும்.

9. மகம், கேட்டை, சுவாதீ, பூசம் பூரம், உத்திரம் ஆகிய இவை சூத்திருக்கு உத்தமமாகும். (என்பதாம்) இவையும் பாரமேசுவராகமத்தில் விசேஷமாகக் காணப்படுகின்றன.

10-11-11½. ப்ராஸாதத்தினளவில் ஐந்து மடங்கு அதிகமாகவேனும், பிராஸாதத்தினளவாகவேனுமுள்ள பூமியை நீக்கி, பிராஸாதத்திற்கு முன்னர், பன்னிரு முழ அளவுடைய படிகளுடன், சதுரச்ரமாயும், நான்கு வாயில்களையுடையதாயும் இருக்கிற (அதிவாஸ) மண்டபத்தைச் செய்யவேண்டும். ஈசானதிக்கு, கிழக்குத்திக்கு, வடக்குத்திக்கு ஆகிய இந்தத் திக்குக்களுள், யாதானுமோர் திக்கில், இந்த அளவில்பாதி அளவாகவும், ஒன்று அல்லது நான்கு வாயில்களையுடையதாகவும் உள்ள ஸ்நான மண்டபத்தையும் செய்யவேண்டும். முதலாவதுள்ள மூன்று லிங்கங்களுக்கு மூன்றுமண்டபங்களைச் செய்யவேண்டும்.

12-13. ஒரு முழமுள்ள லிங்கத்திற்கு எட்டு முழமுள்ள மண்டபத்தையும், இரண்டு முழமுள்ள லிங்கத்திற்கு ஒன்பது முழமுள்ள மண்டபத்தையும், மூன்று முழமுள்ள லிங்கத்திற்கு பத்து முழமுள்ள மண்டபத்தையும், நான்கு முழம் முதற்கொண்டுள்ள லிங்கங்களுக்கு, முறையே இரண்டு முழங்கள் அதிகமாகவுள்ள மண்டபங்களையும் செய்யவேண்டும். (இவ்வாறு அதிகப்படும் முறையில்) ஒன்பது முழமுள்ள லிங்கத்திற்கு இருபத்திரண்டு முழமுள்ள மண்டபம் செய்யவேண்டுவதாகும்.

14. அல்லது ஒருமுழமுள்ள லிங்கத்திற்கு பத்துஅல்லது பன்னிரண்டு முழமுள்ள மண்டபத்தைச் செய்யலாம். எஞ்சியுள்ள எட்டு மண்டபங்களுக்கும் (முறையே) இரண்டு முழங்களை அதிகமாகச் செய்யவேண்டும்.

15. பாதம் முதலியவற்றால் விருத்தியடைந்த (அதிக அளவுடைய) 1 லிங்கங்களுக்கு, (அவற்றின்) அளவிற்குரியவாறு மண்டபத்தைச் செய்யவேண்டும். பாணலிங்கம், இரத்தின லிங்கம், லோஹலிங்கம் இவற்றிற்கு ஒரு முழ அளவுடைய லிங்கத்திற்குக் கூறப்பட்டவாறு மண்டபத்தைச் செய்யவேண்டும்.

16. இந்தப் பாணலிங்கம் முதலிய லிங்கங்களுக்கு, ப்ராஸாதத்திற்குச் சமமாகவேனும், மண்டபத்தைச் செய்யவேண்டும். ப்ராஸாதங்களும் எல்லா லிங்கங்களும் சிவாகமங்களால் அறியத்தக்கவையாகும்.

17. கனம், கோஷம், விராஜம், காஞ்சனம், காமம், ராமம், சுவேஷம், கர்க்கரம், தக்ஷம் என்னும் ஒன்பதுக்கும் (ஒன்பதுவகையான லிங்கங்களுக்கும்) ஒன்பதுவகையான மண்டபங்கள் விதிக்கப்பட்டிருக்கின்றன.

18. ஒரு முழ லிங்கத்திற்கு, மூலைகளில் நான்கு தூண்களும், வாயில்களில் இரண்டிரண்டு தூண்களும் விதிக்கப்பட்டிருக்கின்றன. லிங்கம் விஸ்தாரமாயிருக்குமாயின், தூண்களும் அழகுக்குரியவாறு செய்யப்பட வேண்டும்.

## வேதியின் லக்ஷணம்.

19. நடுவில் நான்கு முழ நீளமுள்ளதாயும், மூலைகளில் தூண்களுடன்கூடியதாயும், எட்டங்குலமுயரமுடையதாயுமுள்ள வேதிகையைச் (ஒரு முழ லிங்கத்திற்கு) செய்யவேண்டும். மற்ற லிங்கங்கள் விஷயத்தில் வேதிகையின் அளவு கூறப்படுகின்றது.

20. இரண்டங்குல உயரத்தையும், ஒரு முழம் விஸ்தாரத்தையும், முறையே பன்னிரு முழம் வரை, மற்ற வேதிகளுக்கு அதிகமாகக் கொள்ள வேண்டும்.

21. சகளலிங்கங்களில், விஸ்தாரம் உயரம் இவற்றைக் கால் பாகம் அதிகமாகச் செய்யவேண்டும். அல்லது ஒன்பது பாக

1 நடராஜர் முதலிய சகளலிங்கங்கள்.

மாகச் செய்யப்பட்ட மண்டபத்தில், நடுவிலுள்ள பதத்தில் வேதியைச் செய்யவேண்டும்.

## குண்டங்கள் செய்யும் முறை.

22. வேதியினின்று ஒரு பதம் விட்டு, மந்திரங்களின் முறையை அனுசரித்து, ஒன்பது அல்லது ஐந்து குண்டங்களைச் செய்யவேண்டும். ஒன்பது அல்லது ஐந்தாவதான குண்டத்தை, ஈசானதிக்கில் ஆசாரியர் ஹோமஞ்செய்தற்குச் செய்யவேண்டும்.

23. அல்லது ஈசானம் கிழக்கு இவற்றுள் யாதானுமோர் திக்கில், ஆசாரியர் ஓமம்செய்வதற்காக ஒரு குண்டத்தையேனுஞ் செய்யவேண்டும். இந்தக் குண்டங்களை வட்டமாகவேனும், சதுரச்ரமாகவேனும் செய்தல் எப்பொழுதும் சிலாக்கியமாகும்.

24. ஒருமுழ லிங்கத்திற்கு ஒருமுழ குண்டத்தையும், எஞ்சியவற்றிற்கு (இரண்டு முழம் முதலுள்ள லிங்கங்களுக்கு) இரண்டு அங்குலங்கள் அதிகமாகவும் செய்யவேண்டும். பாணலிங்கம் இரத்தினலிங்கம் முதலியவற்றிற்கு, இவற்றிற்குச் செய்யப்படும் மண்டபத்திற்குரியவாறு குண்டங்களைச் செய்யவேண்டும்.

## ஹோமத்தின் எண்ணிற்குரியவாறு குண்டத்தின் விஸ்தாரம்.

25-26-26½. ஸந்தர்ப்பத்தைக் கருதி வேறு சில குண்டங்களையும் கூறுகிறேன். ஐம்பது எண்ணுள்ள ஹோமத்திற்கு முஷ்டி அளவும், நூறு எண்ணுள்ள ஹோமத்திற்குச்சுண்டுவிரல் பிடியுள்ள முழ அளவும், ஆயிரம் எண்ணுள்ள ஹோமத்திற்கு ஒரு முழ அளவும், பதினாயிரம் எண்ணுள்ள ஹோமத்திற்கு இரண்டு முழ அளவும், லக்ஷம் எண்ணுள்ள ஹோமத்திற்கு நான்கு முழ அளவும், பத்துலக்ஷம் எண்ணுள்ள ஹோமத்திற்கு ஆறு முழ அளவுமுள்ள குண்டத்தையும், இதற்குமேல் எண்ணை உடைய ஹோமத்திற்கு எட்டு முழங்களுள்ள குண்டத்தையும் செய்யவேண்டும். கோடிக்கு மேற்பட்ட எண்ணையுடைய ஹோமத்திற்கு இதற்கு அதிகமான முழத்தையுடைய ஆழமுள்ள குண்டம்[1] வேண்டுவதில்லை.

---

1 இவ்வாறு கூறப்பட்ட அளவு கிரணகமத்துடன் ஒத்திருக்கின்றது.

## காமனையின் பேதத்தால் குண்டங்களின் பேதம்.

27-28-29. 1 தஹிப்பதற்காக ஆக்கினிதிக்கில் யோனி குண்டத்தையும், த்வேஷத்திற்காகதெற்குத்திக்கில்அர்த்தசந்திர குண்டத்தையும், மாரணத்திற்காக நிருருதி திக்கில் முக்கோண குண்டத்தையும், 2 சுபத்திற்காக மேற்குத் திக்கில் விருத்த (வட்டமான) குண்டத்தையும், எப்பொழுதும் எல்லா நன்மைகளையும் 3 தருவதற்காக வாயுதிக்கில் அறுகோணகுண்டத்தையும், புஷ்டியைத் தருவதற்காக வடக்குத்திக்கில் பத்மகுண்டத்தையும், (சத்துருக்களுக்கு) பயத்தைக் கொடுப்பதற்காக ஈசானதிக்கில் எண்கோண குண்டத்தையும் 4 செய்யவேண்டுமெனச் சிவாகமங்களில் காணப்படுகின்றது.

## குண்ட இலக்கணம்.

30. குண்டமானது, மேல் மேகலையோடு குறுக்காகவும் சமமாகவும் உள்ள (ஒரு முழ) ஆழமுள்ளதாக இருக்கவேண்டும். ஒரு அங்குல அளவுடன் கண்டம் (கழுத்து) 5 இருக்கவேண்டும். சில ஆகமங்களில் கண்டத்தின் அளவு இரண்டு அங்குலங்கள் இருக்கவேண்டுமென்றும் கூறப்பட்டிருக்கின்றது.

31-31½. கண்டத்திற்கு வெளியில், 6 நான்கு மூன்று இரண்டு அங்குல அளவுடன் மூன்று மேகலைகளேனும், ஆறு

---

1 ஸித்தாந்தஸாராவளீ வியாக்கியானத்தில் உபகாரத்திற்காக என்றிருக்கின்றது.

2 திருப்தியைச் செய்வதற்காக என்று ஸித்தாந்தஸாராவளீ வியாக்கியானத்திற் கூறப்பட்டிருக்கின்றது.

3 உச்சாடனத்திற்காக என்று ஸித்தாந்தஸாராவளீ வியாக்கியானத்தில் கூறப்பட்டிருக்கின்றது.

4 இந்தக் காமிய குண்டங்கள் யாவும் ஆன்மார்த்தமான ஸ்தாபனம் முதலிய கிரியைகளுக்கு உதவாதென்று ஸித்தாந்த ஸாராவளீ வியாக்கியானத்திற் கூறப்பட்டிருக்கின்றது.

5 குண்டத்தின் உட்பக்கத்தில்மேகலையின் கீழ் நான்கு பக்கங்களிலும் மேகலை செய்வதற்காக விடப்படும் ஒரு அங்குல அளவு கண்டமெனப்படும்.

6 மேல் நான்கு அங்குல அளவிலும், நடுவில் மூன்று அங்குல அளவிலும், அடியில் இரண்டங்குல அளவிலும், விஸ்தாரம் உயரம் இவற்றுடன் மேகலைகளை அமைக்க வேண்டும் என்பது கருத்து.

ஐந்து ஏழு மூன்று பதினைந்து அங்குல அளவுடன் ஐந்து மேகலைகளேனும், ஆறு அங்குல அளவுடன் ஒருமேகலையேனும் இருக்க வேண்டும். இந்த மேகலைகள் குண்டத்தின் சொரூபம் போல் இருக்கவேண்டும்.

32-33. இந்த மேகலைகளுக்கு மேல், நடுவில் அரசிலைபோன்ற வடிவத்துடன் யோனி அமைக்கப்படவேண்டும். இதன் உயரம் ஒரு அங்குலமும், அகலம் எட்டங்குலமும், நீளம் குண்டத்தின் பாதி அளவாகவும் (பன்னிரு அங்குலமும்) இருக்கவேண்டும். குண்டத்தின் கண்டத்திற்குச் சமமாக அதரம் இருக்க வேண்டும்.

34. கிழக்குத்திக்கு, அக்கினிதிக்கு, தெற்குத்திக்கு இவற்றிலுள்ள குண்டங்களுக்கு வடக்குமுகமாகவும், மற்றத்திக்கிலுள்ள குண்டங்களுக்குக் கிழக்கு முகமாகவும், ஈசானதிக்கிலுள்ள குண்டத்திற்கு வடக்குமுகமாகவேனும் கிழக்கு முகமாகவேனும் யோனியைக் கற்பிக்கவேண்டும்.

35. குண்டங்களில் இருபத்து நான்கில் ஒரு பாகம் அங்குலமெனப்படும். இம்முறையை அனுசரித்து, மேகலைகள் கண்டம் நாபி இவற்றைச் செய்யவேண்டும்.

## தோரணங்கள் செய்யும் முறை.

36. கிழக்கு முதலிய வாயில்களில் முறையே இரளி, அத்தி, அரசு, ஆல் ஆகிய மரங்களாலாக்கிய தோரணங்களை நிர்மாணஞ் செய்யவேண்டும். அல்லது கிழக்குத்திக்கில் ஆலமரத்தாலாக்கிய தோரணத்தையும், வடக்குத் திக்கில் இரளியாலாக்கிய தோரணத்தையும் செய்யலாம்.

37. இந்தத் தோரணங்களுக்கு, முறையே சாந்தி, பூதி, பலம், ஆரோக்கியம் ஆகிய பெயர்களுண்டு. கூறப்பட்ட இந்த மரங்கள் கிடையாவிடில், இவற்றுள்யாதானுமொரு மரத்தாலாக்கப் பெற்ற தோரணத்தை நான்கு திக்குக்களிலும் நிர்மாணஞ் செய்யவேண்டும்.

38. (ஒரு முழம் இரண்டு முழம் மூன்று முழங்களுள்ள) அதம லிங்கங்களுக்கு, முறையே ஐந்து ஆறு ஏழு முழங்களுள்ள தோரணங்களைச் செய்யவேண்டும். (நான்கு முழம் ஐந்துமுழம்

ஆறு முழங்களுள்ள) மூன்றுவிதமானமத்யமலிங்கங்களுக்கு, முறையே எட்டங்குலங்களை அதிகமாகச் செய்யவேண்டும்.

39. (ஏழு முழம் எட்டு முழம் ஒன்பது முழங்களுள்ள) உத்தம லிங்கங்களுக்கு, முறையே நான்கு அங்குலங்களை அதிக மாகச் செய்யவேண்டும்.

இவ்வாறு அங்குலங்கள் அதிகப்படும் முறையில், ஒன்பது முழமுள்ள லிங்கத்திற்கு எட்டரை முழமுள்ள தோரணம் செய்ய வேண்டியதாகும்.

40-41-41½. முதல் மூன்று லிங்கங்களுக்குரிய தோரணங் களின் ஆழம் ஒரு முழம் இருக்கவேண்டும். மத்யமமான மூன்று வித லிங்கங்களுக்குரிய தோரணங்களுக்கு, முறையே நான்குஅங் குலங்கள் அதிகமான ஆழத்தைச் செய்யவேண்டும். உத்தம மான மூன்றுவித லிங்கங்களுக்குரிய தோரணங்களின் ஆழம், முறையே இரண்டு அங்குலங்கள் அதிகமான ஒன்றரை முழ முள்ள ஆழத்தைச் செய்யவேண்டும். மோஹசூரோத்தரமென் னும் ஆகமத்தில், எல்லாத் தோரணங்களுக்கும், ஐந்தில் ஒரு பங்கு ஆழத்தைச்செய்யவேண்டுமென்றுகூறப்பட்டிருக்கின்றது.

42-43. உயரத்தில் பாதியாகவேனும், சமமாகவேனும்அகல மிருக்கவேண்டும். தோரணங்களின் அடிகள் சமமாக இருக்க வேண்டும். ஐந்து முழமுள்ள தோரணத்தின் கனம், ஆறு அங் குலங்கள் இருக்கவேண்டும். எஞ்சிய முழமுள்ள தோரணத்திற்கு முறையே ஒவ்வொரு அங்குலம் அதிகமான கனம் இருக்க வேண்டும்.

44. முதல் தோரணத்திற்கு, (ஐந்து முழம் உள்ள தோர ணத்திற்கு) எட்டங்குலமுள்ள சல்யத்தை (முளையைச்) செய்ய வேண்டும். இதற்கு மேற்பட்ட முழமுள்ள தோரணத்திற்கு, முறையே ஒவ்வொரு அங்குலம் அதிகமாகச் சல்யத்தைச்செய்ய வேண்டும். மூக்கு இதற்குச் சமமாக இருக்கவேண்டும்.

45. உயரத்தில் ஐந்தில் ஒரு பாகம் சூலத்தைச் செய்ய வேண்டும். இதன் பதினைந்தில் ஒரு பாகம் வெளியிலிருக்கவே ண்டும். இதன் உயரத்தில் மூன்று பங்கு சூலத்தின் இறக்கை களின் விஸ்தாரம் இருக்கவேண்டும்.

46. இதன் பிரவேசம் இரண்டு அங்குலம் இருக்கவேண்டும். மற்றவைகளுக்கு முறையே ஒவ்வொரு அங்குலம் அதிகமாக இருக்கவேண்டும். நெற்றியில் ஸ்வஸ்திகத்தையேனும், பத்மத்தையேனும் நிர்மாணஞ் செய்யவேண்டும்.

47. ஒவ்வொரு வாயில்களையும் வாழைமரங்கள், மாவிலைகளாலாகிய மாலைகள், இவற்றால் அலங்கரித்து, மேற்கு வாயில் நீங்கலாக மற்ற வாயில்களை மூடவேண்டும்.

## பதாகை த்வஜம் இவற்றின் இலக்கணம்.

48-49. இந்திராயுதம் (வஜ்ரம்) போன்ற நிறமுடையதாயும், செம்மை நிறமுடையதாயும், கருமை நிறமுடையதாயும், புகை நிறமுடையதாயும், சந்திரன் போன்ற நிறமுடையதாயும், 1 பசுமை நிறமுடையதாயும், சுவர்ணம் போன்ற நிறமுடையதாயும், ஸ்படிகம் போன்ற நிறமுடையதாயுமுள்ள (இந்த எட்டுப்) பதாகைகளை, (முறையே) கிழக்கு முதலிய திக்குக்களில் நிர்மாணஞ் செய்யவேண்டும். பிரமனுக்குச் செம்மை நிறமும், நிருருதிதிக்கில் விஷ்ணுவுக்குக்கருமை நிறமுமுள்ள பதாகைகளையும், நடுவில் சித்திர (பல) நிறமுள்ளதாகவேனும், வெண்மை நிறமுள்ளதாகவேனுமுள்ள பதாகையையும் நிர்மாணஞ் செய்யவேண்டும்.

50. அவ்வாறே துவஜங்களை ஐந்து முழம் நீளத்துடனும், இரண்டுமுழம் அகலத்துடனும் செய்யவேண்டும். பதாகைகளை எழு முழம் நீளத்துடனும் இருபது அங்குலம் அகலத்துடனும் செய்யவேண்டும்.

51. துவஜங்களின் தண்டங்கள் ஒரு முழம் பிரவேசத்தையும், ஐந்துமுழம் நீளத்தையுமுடையதாக இருக்க வேண்டும். பதாகைகளின் தண்டங்கள் பத்துமுழ நீளமுடையனவாயும், ஐந்தில் ஒரு பாகம் பிரவேசமுடையனவாயுமிருக்க வேண்டும்.

---

1 மூலத்தில் வெண்மை நிறமென்னும் பொருளை அறிவிக்கும் ஶுக்லாபா என்றுதான் இருக்கிறது. இங்கு திக்பாலர்களின் நிறத்தை அனுசரித்து பதாகைகளின் நிறம் கூறப்படுவதாலும், அசிந்தியவிசுவசாதாக்கியத்தில் கீராபா என்ற பதம் இருப்பதாலும், ஶுக்லாபா என்னும் பதத்தை ஶுகாபா என்று திருத்தி இவ்வாறு மொழிபெயர்க்கப்பட்டது.

52. அல்லது அதமலிங்கத்திற்கு எழு முழமும், மத்யம லிங்கத்திற்குப் பத்து முழமும், சிரேஷ்ட லிங்கத்திற்கு இருபது முழமும் நீளமுள்ளவையாயும், இரண்டு முழம் அகலமுள்ளவையாயும் த்வஜங்களைச் செய்ய் வேண்டும்.

53. அல்லது எட்டு முழம் நீளமுள்ளவையாயும், இரண்டு முழம் அகலமுள்ளவையாயுமுள்ள த்வஜங்கள் உத்தமமாகும். பாதி அளவினின்றும் சிறிது குறைவாக இவ்வாறு சிவாகமங்களில் காணப்படுகின்றது.

54. பால் மரத்தாலாக்கப்பெற்ற பீடம், பிரமபாகத்திற்கு இரண்டு பங்கு அதிகமாகவும், தாமரையால் அடையாளமிடப்பெற்றதாகவும், நான்கு கால்களையுடையதாகவும், பதினாறு அங்குலம் உயரமுடையதாகவும் இருக்கவேண்டும்.

55-56. அல்லது கூறப்பட்ட உயரமும், இதற்கு இரண்டு பங்கு விஸ்தாரமும் இருக்க வேண்டும். அதமலிங்கங்களுக்கு விஸ்தாரத்திற்கு இரண்டு பங்கு நீளமுள்ள பத்ரபீடமிருக்கவேண்டும். மற்ற லிங்கங்களுக்கு, முறையே நான்கு அங்குலங்கள் அதிகமாக இருக்கவேண்டும். ஒன்பது வகையான லிங்கங்களுக்கும் ஆகமங்களில் மூன்று பீடங்கள் காணப்படுகின்றன.

57-58. மலையின் உச்சி, அரசரின் வாயில், நதியின் கரை, கலப்பை, தர்ப்பைகள் இருக்குமிடம், புற்று, யானையின் தந்தங்களின் நுனி, இடபங்களின் கொம்பு, தாமரைகளின் கூட்டம், பன்றி, (காட்டிலுள்ளபன்றி) பசுக்கள் கட்டுமிடம், நான்கு வழிகளும் கூடுமிடம் ஆகிய இந்தப் (பன்னிரு) ஸ்தானங்களிலிருந்து பன்னிரு மிருத்திகைகளைக் கிரஹிக்கவேண்டும். (அல்லது) விஷ்ணு, சிவபெருமான் இவர்களுக்குரிய கிரியைகளில் எட்டு மிருத்திகைகளையும் கொள்ளலாம்.

59-60½. ஆல், அத்தி, அரசு, மா, நாவல் ஆகிய (ஐந்து) மரங்களின் பட்டைகளாலாக்கப்பெற்ற கஷாயோதகம், இவற்றின் தளிர்கள், வாஸனையுடன் கூடிய (கங்கை முதலிய) தீர்த்த ஜலங்கள், எல்லா ஓஷதிகளுடன் கூடிய ஜலம், 1 சங்கோதகம்,

1 அசிந்த்யவிசுவஸாதாக்கியத்திலும் வேறு பிரதியிலும் சங்க என்னும் ஸ்தானத்தில் ஸஸ்ய என்னும் பதம் இருப்பதால் பீஜோதகம் எனக் கொள்ளுதலும் கூடும்.

புஷ்போதகம், பலோதகம், ஸ்வர்ணோதகம், இரத்னோதகம், கோ சிருங்க தீர்த்தம், இவ்வாறே பஞ்சகவ்வியம், பஞ்சாமிருதம், ஆகிய இவற்றையும் அபிஷேகத்திற்காகக் கொணர்ந்துவைத்துக் கொள்ளவேண்டும்.

61-61½. சுத்தி செய்தற்காக மாவினுற் செய்யப்பெற்ற (லோகபாலர்களின் ஆயுதங்களான) வஜ்ரம் முதலிய திரவியங்களை யும், ஸஹஸ்ர தாரையுள்ள கடம், மங்களத்திற்காகக் கோரோசனை ஆகிய இவற்றையும் கொணர்ந்து வைத்துக்கொள்ளவேண்டும்.

62-63. நூறு (அனேகம்) ஓஷதிகளின் வேர்கள், விஜயை, லக்ஷணை, சித்தாமுட்டி, சிந்திற்கொடி, அதிபலை, பங்கைப்பாளை, சிதேவியார் செங்கழுநீர், தண்ணீர்முட்டான், ஸித்தி என்னும் ஓஷதி, சுவர்ச்சலை, விருத்தி ஆகிய இந்த ஓஷதிகள், தனித்தனி அபிஷேகத்திற்காக விதிக்கப்பட்டிருக்கின்றன.

64. இரக்ஷைக்காக எள்ளு, தர்ப்பம், திருநீறு இவற்றை யும், அபிஷேகத்திற்காக யவம், கோதுமை, வில்வம் இவற்றின் பொடிகளையும் சேகரித்துக்கொள்ளவேண்டும்.

65. அபிஷேகத்திற்காகப் பச்சைக் கற்பூரத்துடன் பூசும் திரவியத் (சந்தனத்) தையும், கும்பம்,அபிஷேக கலசம் இவற்றை யும் சேகரித்துக் கொள்ளவேண்டும். பல நிறங்களுள்ள நல்ல வஸ்திரங்களால் இரண்டு மண்டபங்களிலும் மேல் கட்டிகளை நிர் மாணஞ் செய்யவேண்டும்.

66. கட்வாங்கம், (யோகத்திற்கு ஸாதனமான தண் டம்) தலையணை, ஆடை, லக்ஷணோத்தாரத்திற்குரிய இரண்டு படுக் கைகள் ஆகிய இவற்றை, தனத்தின் சக்திக்குரியவாறு சேக ரித்துக் கொள்ளவேண்டும்.

67. நெய்,.தேன் இவற்றுடன் கூடிய பாத்திரத்தையும், உத்தமம், மத்யமம், அதமம் என்னும் வேறுபாட்டால் (முறை யே) மூன்று இரண்டு ஒன்று மாஷ (இரண்டு குன்றிமணி) ப்ரமா ணமுள்ள சுவர்ணத்தாலாக்கிய குச்சியையும் சேகரித்துக்கொள்ள வேண்டும்.

68-69. வர்த்தனீ, சிவகும்பம், லோகபாலர்களுக்காகவுள்ள கலசங்கள், இவ்வாறே நித்திரைக்காகவுள்ள கும்பம் (நித்திரா கும்பம்) குண்டங்களின் எண்ணிற்குரியவாறு சாந்தி ஜபத்திற்கு

ரிப கடங்கள், துவாரபால கடங்கள், தர்மம் முதலியவற்றின்கடங்கள், ப்ராசாந்தர் முதலாயினோரின் கடங்கள், மற்றுமுள்ள வாஸ்துப்ரஹ்மன், இலக்குமி, கணபதி இவர்களின் கடங்களையும் சேகரித்துக் கொள்ளவேண்டும்.

**70-71.** எல்லாக் கும்பங்களையும் தான்ய சமூஹத்தைப் பற்றுக்கோடாக உடையனவாகவும், ஆடை, பூமாலை இவற்றால் அலங்கரிக்கப்பெற்றவையாகவும், சுவர்ணத்துடன் கூடியவையாகவும், அபிமந்திரிக்கப்பெற்றவையாகவும், வாஸனையுள்ள நீரால் நிரப்பப்பெற்றவையாகவும், பூர்ணபாத்ரமான தேங்காய் (முற்றிய தேங்காய்) இவற்றுடன் கூடியவையாகவும், மாவிலைகளை முகத்தில் உள்ளவையாகவும், நல்ல இலக்ஷணமுடையவையாகவும் செய்ய வேண்டும். குண்டங்கள் தோரணங்கள் இவற்றிற்கு ஆடைகளைத் தரிப்பிக்க வேண்டும்.

**72.** தூண்களை ஆடைகளால் மறைக்க வேண்டும். விகிரத்திற்காக (இறைப்பதற்காக) வெண்கடுகு பொரி இவற்றையும், முன்போல் ஞான கட்கத்தையும் சேகரித்துக்கொள்ளவேண்டும்.

**73.74.** தாம்பிரம் முதலியவற்றுள் யாதானுமொன்றால் செய்யப்பட்ட மூடியுடன்கூடிய சருஸ்தாலீ, அகப்பை இவற்றையும், பாதாப்யங்கத்திற்காக நெய், தேன் இவற்றுடன்கூடியபாத்திரத்தையும், முப்பது தர்ப்பங்களால் முடியப்பெற்ற ஒரு முழமுள்ள நான்கு விஷ்டரங்களையும், பட்டையுடன் கூடிய பலாசக் கிளைகளாலாக்கிய நான்கு பரிதிகளையும் சேகரித்துக் கொள்ள வேண்டும்.

**75.** திலபாத்திரம், (எள்ளு வைக்கப்படும் பாத்திரம்) ஹவிஸ் வைக்கப்படும் பாத்திரம், முக்காலியுடன் கூடிய அர்க்கிய பாத்திரம், இருபது பலமுள்ள மணி, தூபம் சமர்ப்பிக்கப்படும் பாத்திரம், இவற்றையுஞ் சேகரித்துக் கொள்ள வேண்டும்.

**76-78.** ஸ்ருக், ஸ்ருவம் ஆகிய இவற்றையும், பெட்டி, பீடம், விசிறி, உலர்ந்த இந்தனங்கள், (விறகுகள்) உதிர்புஷ்பங்கள், பூமாலைகள், வில்வதளங்கள், குங்கிலியம், சந்தனம், குங்குமம், தூபம், நெய்யால் நிரப்பப்பெற்ற விளக்குகள், அக்ஷதை, த்ரிஸூத்ரீ, (தொகுதியான மூன்று நூல்கள்) பசுவின் நெய்,யவம்,

எள்ளு, மிக்கீள மற்ற தர்ப்பங்கள், சாந்திஹோமத்திற்காகமது, சர்க்கரை, பால் ஆகிய இவை, ஹவிஸ், யாகத்திற்குரிய விருக்ஷங்களிலிருந்துண்டான பத்துக் கணுக்களுள்ள ஸமித்துக்கள் ஆகிய இவற்றையும் சேகரித்துக் கொள்ளவேண்டும்.

79. நடுவிரலிலுள்ள அங்குலம் முதலிய வேறுபாட்டால், அங்குலங்களை மூன்றுவகையாக அறிந்துகொள்ள வேண்டும். விருப்பத்தை அனுசரித்து அதமம் மத்தியமம் ஜ்யேஷ்டம் இவற்றுள் யாதானுமொன்றைக் கொள்ளவேண்டும்.

## ஸ்ருக் ஸ்ருவங்களின் இலக்ஷணம்.

80. முப்பத்தாறு அங்குலம் நீளம் உள்ளதாகவேனும், ஒரு முழ நீளமுள்ளதாகவேனுமுள்ள ஸ்ருக்கு உத்தமமாகும். இந்தஅளவில் 1 ஒவ்வொருஅங்குலம் குறைய, முறையே மத்யம பக்ஷமாகவும் அதம பக்ஷமாகவுமாகும்.

81. எட்டு அங்குலத்தில் வேதிகையும், ஒரு அங்குலத்தில் கண்டமும், ஏழு அங்குலத்தில் முகமும் இருக்கவேண்டும். (கைபிடிக்கும்) தண்டமானது ஆறு அங்குல கனத்தையும், இருபது அங்குல நீளத்தையுமுடையதாக இருக்கவேண்டும்.

82. மூன்று அல்லது நான்கு அங்குலத்தில் (கண்டத்தின் கனத்திற்குச் சமமான) கலசத்தையும், நான்கு அங்குல விஸ்தாரமும், இரண்டு அங்குல நீளமுமுள்ளதாகக் கண்டியையும், (வேதியின் மத்தியில்) நான்கு அங்குல அகலத்தில் வட்டமாகவும் மூன்று அங்குலம் ஆழமுள்ளதாகவும் இரண்டு யவப்ரமாணமாகவுமுள்ள பள்ளத்தையுஞ் செய்யவேண்டும்.

83. ஸ்ருக்கின் முகத்தினுடைய நுனி கண்டம் ஆகிய இவற்றை, வேதியின் விஸ்தாரத்தில் மூன்றில் ஒரு பங்கு விஸ்தாரமுள்ளவையாகச் செய்யவேண்டும். (முகம் கண்டம் இவற்றில்) கடைவிரலளவு விஸ்தாரமுள்ளதாக நெய் விழும் மார்க்கத்தைச் செய்யவேண்டும். (கண்டம் முகம் இவற்றில்) ஒரு அங்குல அளவில் வட்டமாக மேகலையையும் அரை அங்குல ஆழத்தையுஞ் செய்யவேண்டும்.

---

1 இரண்டு இரண்டு அங்குலங்கள் குறைய என்று வித்தாந்தஸாராவளீ வியாக்கியானத்திற் கூறப்பட்டிருக்கின்றது.

84-85. ஸ்ருவத்தின் நீளம் இருபத்து நான்கு அங்குல மிருக்கவேண்டும். தண்டமானது இருபத்திரண்டு அங்குலம் உள்ளதாக இருக்கவேண்டும். தண்டத்தின் நுனியில் மூன்று அங்குல விஸ்தாரத்துடன் விருத்தமாகவும், (வட்டமாகவும்) இரண்டு அங்குல ஆழத்துடன் கார்ஷம் (முப்பத்திரண்டு குன்றிமணி) இடை நெய் நிறையும்படியாயும், சேற்றில் பதிந்த மானின்கால் போன்ற வடிவத்தை உடையதாயும் (நடு உயர்ந்து இருபக்கங்களும் தாழ்ந்திருப்பதாயும்) நெய் தங்கும் பள்ளத்தைச் செய்யவேண்டும். இந்த ஆஜ்யஸ்தானத்திற்கு அடியில் கண்டிகையின் நுனியில் பத்ம அடையாளம் இருக்க வேண்டும்.

86. குமிழ், சிம்சுபாவிருக்ஷம், தேவதாரு, மாதுளமரம், மாமரம், நரிமுருங்கை, பலாசமரம், ஆகிய யாகத்திற்குகந்தமரங் கள் ஸ்ருக் செய்தற்குரியனவாகின்றன.

## சமித்து முதலியவற்றைச் சேகரித்தல்.

87, 88. சூரியன் முதலிய ஒன்பது கிரஹங்களின் சாந் திக்காக முறையே எருக்கு, பலாசமரம், கருங்காலி, நாயுருவி, அரசமரம், அத்தி, வன்னி, அறுகு, தர்ப்பம் ஆகிய இவற்றின் நூற்றெட்டுச் சமித்துக்களைச் சேகரித்துக் கொள்ள வேண்டும். இவை கிடையாவிடில் யவம், எள்ளு இவற்றைச் சேகரித்துக் கொள்ளவேண்டும்.

89-90-91. விஷ்டரம் முதலிய இந்தப் பொருள்களை ஒவ் வொரு குண்டத்தின்ருகிலும் வைத்துக்கொள்ளவேண்டும். கிர ஹோபகரணங்கள், ஸ்தாலீ, அகப்பை, மூடி, உலக்கை, உரல், பெரிய கத்தி, சூரிக்கத்தி, குடை, சாமரம், சிலே, (அம்மி) தம்ப லப்படிக்கம் (உச்சிஷ்டமான தாம்பூலத்தைத் தாங்கும் பாத்தி ரம்) பனையோலைவிசிறி, முக்காலி, இரண்டு பாதுகைகள், கண் ணாடி, பூர்ணபாத்திரம், குங்குமபாத்திரம், மைப்பாத்திரம், அலகிடுங் கோல், யோகப்பட்டம், பட்டம் ஆகிய இவற்றையுஞ் சேகரித்து வைத்துக்கொள்ள வேண்டும்.

92. ஸ்நானம், அதிவாஸம், பூஜை, பிர்திஷ்டை ஆகிய கர் மாக்களில் சிவபெருமான், பிரமசிலை, வேதிகை, விருஷபம் இவற் றிற்கு இரண்டு வஸ்திரங்களைச் சாத்தவேண்டும்.

93-94. மோதிரம், கிரீடம், ஆடைகள், ஹாரம், குண்டலம், கைவளையல் இவற்றைத் தாராளமாக ஆசாரியருக்குக் காணிக்கையாகச் சமர்ப்பிக்கவேண்டும். 1 ஆசாரியருக்குக்கொடுக்கும் திரவியத்தின் நான்கிலொருபங்கு தக்ஷிணையை மூர்த்திபருக்கும், அதில் கால்பங்கு அஸ்திரஜபம் செய்பவருக்கும் கொடுக்கவேண்டும். பிராமணர், ஜோஸ்யர், சிற்பி இவர்களுக்கு அஸ்திர ஜபம் செய்கிறவர்களுக்குக் கொடுப்பதுபோல் தக்ஷிணையைக் கொடுக்கவேண்டும். (இவற்றைச் சேகரித்துக் கொள்ளவேண்டும்.)

95. வஜ்ரமணி, (வைரம்) சூரியகாந்தம், நீலம், மஹாநீலம், நல்முத்து, புஷ்யராகம், பத்மராகம், வைடூரியம், ஆகிய எட்டு இரத்தினங்களையும் சேகரித்துக் கொள்ள வேண்டும்.

96. விலாமிச்சைவேர், மாதவக்கிராந்தி, ரக்த சந்தனம், அகில், ஸ்ரீகண்டம், நன்னாரி, கீழாநெல்லி, சங்கங்குப்பி ஆகிய இந்த ஔஷதிகளையும் சேகரித்துக் கொள்ள வேண்டும்.

97. சுவர்ணம், தாமிரம், (செம்பு) இரும்பு, வங்கம், வெள்ளி, பித்தளை, வெண்கலம், ஈயம் ஆகிய லோகங்களையும் சேகரித்துக் கொள்ளவேண்டும்.

98. ஹரிதாளம், மநச்சிலை, (மணிசிலை) கைரிகம், ஸ்வர்ணமாக்ஷிகம், பாதரஸம், அக்கினி கைரிகம், கந்தகம், அப்ரகம், ஆகிய இந்த எட்டுத்தாதுக்களையுஞ்சேகரித்துக்கொள்ளவேண்டும்.

99. நெல், கோதுமை, எள்ளு, உழுந்து, பச்சைப்பயறு, யவம், நீவாரம், சியாமாகம், ஆகிய எட்டுத் தானியங்களையுஞ் சேகரித்துக் கொள்ளவேண்டும்.

100. ஐந்து வகையான இந்த எட்டுப்பொருள்களும்கிடைக்காவிடில் வைரம், சீதேவியார் செங்கழுநீர், சுவர்ணம், ஹரிதாளம், யவம், ஆகிய ஐந்து பொருள்களை முறையே சேகரித்துக்கொள்ளவேண்டும்.

---

1 ஆசாரியர் திருப்தி அடையும் வரை ஆசாரியருக்கு பூமி பசு முதலியவற்றைக் கொடுக்கவேண்டும். மூர்த்திபர்களுக்கு ஆசாரியருக்குக் கொடுக்கும் தக்ஷிணையில் பாதியைக் கொடுக்க வேண்டும். இதற்குப் பாதி தக்ஷிணையை, அஸ்திர ஜபம் செய்பவர், ஜோசியர், சிற்பி, இவர்களுக்குக் கொடுக்க வேண்டுமென்று வித்தாந்த சேகரத்தில் கூறப்பட்டிருக்கின்றது.

101. இந்தத் திரவியங்களும் இடையாவிடில் பாதரஸத்தைச் சேகரிக்கவேண்டும். சுவர்ணம் முதலியவற்றுள் யாதானுமொன்றால் செய்யப்பட்ட ஆமை, பூமி, விருஷபம், தாமரை இவற்றுள் யாதானுமொன்றைச் சேகரித்துக்கொள்ளவேண்டும்.

102. ஒரு முழமுள்ள லிங்கத்திற்கு மாஷம் (இரண்டு குன்றிமணி) இடையளவாகவும், இதற்கு மேற்பட்ட ஒவ்வொரு முழத்திற்கும் ஒவ்வொரு மாஷம் அதிகமான இடையளவாகவும் மேற்குறிப்பிட்ட திரவியங்களைச் செய்ய வேண்டும். இவ்வாறு கொள்ளும் முறையில் உத்தம லிங்கத்திற்கு (ஒன்பது முழ லிங்கத்திற்கு) ஒன்பது மாஷங்களிடையுடன் மேற் கூறப்பட்ட லோஹத்தால் ஆமை முதலிய பொருள்களைச் செய்யவேண்டும். இவ்வாறு எல்லாப் பொருள்களையும் சேகரித்துக் கொள்ள வேண்டும்.

## ஆசாரியர் யாகசாலைக்குச் செல்லும் முறை.

103. ஆசாரியர் ஸ்நானம்செய்து, நித்திய கர்மங்களிரண்டையும் (காலையில் செய்யவேண்டிய ஸந்த்யோபாஸனை, மாத்யாஹ்னிகம் இவற்றை) முடித்துக்கொண்டு, பிரணவத்தால் மந்திரிக்கப்பெற்ற ஸாமான்யார்க்கிய பாத்திரத்தைக் கையிலேந்தி, துணைவரான மூர்த்திபர்களுடனும் பிராமணர்களுடனும், யாகசாலைக்குச் செல்லவேண்டும். (மூர்த்திபர்-ஸாதகர்.)

## துவார பூஜை.

104-109. யாகமண்டபத்தில் கிழக்கு முதலிய வாயில்களில் முறையே சாந்தி, பூதி, பலம், ஆரோக்கியம் எனப்படும் நான்கு தோரணங்களைப் பூஜிக்கவேண்டும். இந்தத் தோரணங்களுடைய தனித்தனி இரண்டு சாகைகளில், தனக்கு வலது இடது முறையாக, கிழக்குத் திக்கில் நந்தி, மஹாகாளர் இருவரும், தெற்குத் திக்கில் பிருங்கி, விநாயகர் இருவரும், மேற்குத்திக்கில் விருஷபதேவர், ஸ்கந்தர் இருவரும், வடக்குத் திக்கில் தேவீ, சண்டர் இருவரும் ஆகிய இந்தத் துவாரபாலர்களைப் பூஜிக்கவேண்டும். இந்தச் சாகைகளின் அடியில் இருப்பவர்களானப்ரசாந்தர், சிசிரர் இருவரையும், பர்ஜன்யர், அசோகர் இருவரையும், பூதஸஞ்ஜீவனர், அமிருதர் இருவரையும், தனதர், ஸ்ரீப்ரதர் இருவரையும், முறையே இரண்டு இரண்டு பேர்களாகப் பிரணவத்தை முதலி

னும், நம: என்னும் பதத்தை இறுதியிலுமுடையனவாயும், நான்காவது விபக்தியுடன் கூடியவையாயும் உள்ள தத்தம் பெயர்களால் (ஓம் ஹாம் ஞுஸாஞாய நமஃ । ஓம் ஹாம் ஸிஸிராய நமஃ। என்பது முதலான மந்திரங்களால்) பூஜிக்கவேண்டும். லோகங்கள், (பூலோகம், புவர்லோகம், சுவர்லோகம், மஹர்லோகம், ஜனோலோகம், தபோலோகம், ஸத்யலோகம், த்ருவலோகமாகிய எட்டு லோகங்கள்) கிரஹங்கள், (சூரியன் நீங்கலாக எட்டுக்கிரகங்கள்) அஷ்டவசுக்கள், நதிகள் (கங்கை, யமுனை, ஸிந்து, ஸரஸ்வதி, தாபை, பயோஷ்ணீ, கௌதமீ, நர்மதை,) ஆகிய இவர்கள் இரண்டிரண்டுபேர்களாகவும், பன்னிரண்டு ஆதித்யர்கள் மூன்று மூன்றுபேர்களாகவும், கிருதயுகம், திரேதாயுகம், துவாபரயுகம், கலியுகம் ஆகிய நான்கும் ஒவ்வொன்றாகவும், நான்கு வேதங்களும் ஒவ்வொன்றாகவும், அவ்வாறே லக்ஷ்மீ, கணபதி, (ஸரஸ்வதி) இவர்களும், ஆகிய இந்தத் தேவர்கள் யாகசாலையில் ஒவ்வொரு தோரணத்திலும் விக்னக் கூட்டத்தைப் போக்குதற்காகவும், யாகத்தை இரக்ஷிப்பதற்காகவும் 1 வஸிக்கின்றனர்.

110. (கிழக்கு முதலிய திக்குக்களிலுள்ள) பதாகைகளில் முறையே வஜ்ரம், சக்தி, தண்டம், கட்கம், பாசம், த்வஜம், கதை த்ரிசூலம், சக்ரம், பத்மம், இவற்றை (இந்தத் தசாயுதங்களை) ஓம் 2 ஹாம் வஜ்ராய ஹும் பட் நமஃ என்பது முதலான மந்திரங்களால் பூஜிக்கவேண்டும்.

111-112. குமுதர், குமுதாக்ஷர், 3 புண்டரீகர், வாமனர், சங்குகர்ணர், ஸர்ப்பநேத்ரர், சுமுகர், 4 சுப்ரதிஷ்டிதர் ஆகிய எண்மர் துவஜங்களுக்கு அதிதேவதைகளாவர். அனேகம் பூதங்க

1 சிவலிங்கப்பிரதிஷ்டா விதியில் இந்தத் துவாரபாலர்களின் பூஜா முறை கூறப்பட்டிருக்கின்றது. விரியுமாதலின் இங்கு எழுதப்படவில்லை. ஓம் ஹாம் லோகாய நமஃ என்பது முதலான மந்திரங்களால் லோகம் முதலியவற்றைப் பூஜிக்க வேண்டும்.

2 சிவலிங்கப்ரதிஷ்டாவிதியில் ஹாம் என்ற பீஜாக்ஷரமிருக்கின்றது.

3 புண்டரீகாக்ஷர் என்று அசிந்திய விசுவஸாதாக்கியத்தில் கூறப்பட்டிருக்கின்றது.

4 சுப்ரதீகர் என்று சிவலிங்கப்ரதிஷ்டாவிதியில் கூறப்பட்டிருக்கின்றது.

ளால் சூழப்பட்ட இவர்களை, கிழக்கு முதலிய திக்குக்களில் ஓம் [1] க்ஷாம் க்ஷேத்ரபாலாய நம: என்பதுமுதலானமந்திரங்களால் பூஜிக்கவேண்டும்.

## எட்டுத் திக்குக்களில் எட்டு பைரவர்களைப் பூஜித்தல்.

113-114. இவ்வாறே ஹேதுக்னர், த்ரிபுரக்னர், வஹ்னி, யமஜிஹ்வர், காளர், கராளி, ஏகாங்க்ரி, பீமர், ஆகியஎட்டு க்ஷேத்ர பாலர்களை முறையே எட்டுத் திக்குக்களில் பலி, புஷ்பம், தூபம், முதலியவற்றால் பூஜித்து, சந்தோஷமடைந்தவர்களாகப் பாவிக்க வேண்டும்.

115. யாகமண்டபத்திலுள்ள கம்பம், திருணம், பந்தம், வம்சம், தூண் இவற்றில் முறையே பிருதிவி முதலிய ஐந்து தத்துவங்களை ஸத்யோஜாதம் முதலிய ஐந்து மந்திரங்களை உச்சரித்துப் பூஜிக்கவேண்டும்.

116-117. சிவபெருமானுடைய கிரஹமானயாகமண்டபத்தை ஸதாசிவ பதத்தை வியாபிப்பதாகவும், [2] பதாகை சக்திகளுடன் கூடியதாகவும், [3] தத்துவ திருஷ்டியால்பார்த்துக்கொண்டு (தியானித்துக்கொண்டு) தேவலோகம், ஆகாயம், பூமி இவற்றிலுள்ள விக்னங்களை முன்போல் போக்கி, மேற்கு வாயில் நீங்கலான வாயில்களை மூடிக்கொண்டு, மேற்கு வாயில் வழியாக யாக சாலைக்குட் செல்லவேண்டும்.

## பூதசுத்தி முதலியன செய்தல்.

118-119. வலமாகச் சென்று, வேதிகைக்குத் தென்பக்கத்தில் வடக்கு முகமாக அமர்ந்து, முன்போல் பூதசுத்தியைச் செய்யவேண்டும். அந்தர்யாகம், விசேஷார்க்கியம், திரவியசுத்தி

---

1 சிவலிங்கப்ரதிஷ்டாவிதியில் ஹாம் என்ற பீஜாக்ஷரமிருக்கின்றது.

2 பதாகையில் சக்தியிருப்பதாகத் தியானித்து என்பது கருத்து.

3 மண்டபத்தில் லக்ஷ்மியும், வேதிகையில் வித்யாசக்தியும், வேதியின் தூண்களில் துர்க்கை முதலாயினோரும், இவ்வாறு ஒவ்வொன்றிலும் தேவதைகள் இருந்து எல்லாத்திரவியங்களையும் ரக்ஷித்துக்கொண்டிருப்பதாகத் தியானித்து என்பது கருத்து.

முதலியன, ஆத்மபூஜை இவற்றைச் செய்து மற்றுமுள்ள கிரியை களையும் முன்போல் செய்து கொள்ளவேண்டும்.

**120-121** ஆதார சக்தியுடன் யாவற்றையும் தன்னிடம் நியாஸஞ்செய்து, அதன் பின் விசேஷமாக சிவதத்வமாதற்காக ருத்ரர், விஷ்ணு, பிரமன் இவர்களைத்தேவதைகளாகவுடையனவா யும், 1 ஹௌம் ஹீம் ஹாம் என்னும் பீஜாக்கரங்களுடன் கூடிய வையாயும் உள்ள சிவதத்துவம், வித்தியாதத்துவம், ஆத்மதத் துவம் ஆகிய தத்துவங்களை, தத்தம் மந்திரங்களால் (ஓம் ஹௌம் ஶிவதத்வாய நம: । ஓம் ஹௌம் ஶிவதத்வாதிபதயே ருத்ராய நம: । ஓம் ஹீம் வித்யாதத்வாய நம: । ஓம் ஹீம் வித்யாதத்வாதிபதயே விஷ்ணவே நம: । ஓம் ஹாம் ஆத்மதத்வாய நம: । ஓம் ஹாம் ஆத்மதத்வாதிபதயே ப்ரஹ்மணே நம: । என்னும் மந்திரங்களால்) முறையே நெற்றி, கழுத்து, பாதம் இவற்றில் நியாஸஞ் செய்துகொள்ள வேண்டும்.

**122.** முன்போல் ஒவ்வொரு தத்துவந்தோறும் மூர்த்தி, மூர்த்தீசுவரர்களையும், இவற்றை வியாபிப்பவராயும், அங்கங்களு டன் கூடினவராயும் இருக்கும் சிவபெருமானையும் நியாஸஞ் செய்து, சிரசில் சிவஹஸ்தத்தைச் சாத்தவேண்டும்.

**123-124.** பிரமரந்திரத்தில் பிரவேசித்த தேஜஸால், வெ ளியிலும் உள்ளுமுள்ள இருட்கூட்டத்தை நீக்கிப் பிரகாசிக்கப் பெற்ற திக்குக்களையுடைய தன்னை, மூர்த்திபர்களுடன் மாலை, ஆடை, 2 கிரீடம் முதலியவற்றால் அலங்கரித்துக்கொண்டு, "ஶிவோऽஹம்" சிவனாக இருக்கிறேன் என்று தியானித்து, ஞானகட்கத்தைக் கிரகித்துக் கொள்ளவேண்டும்.

---

1 வேறு பிரதிகளில் ஊம் ஓம் ஹூம் என்னும் பீஜாக்கரங்கள் இருக்கின்றன.

2 ஸித்தாந்த சேகரத்தில் மூர்த்திபர்களுக்கு மகுடாபரணம் கூறப் படவில்லை. பட்டம், குண்டலம், கேயூரம், மோதிரம், வளையல், தங்கப் பூணூல், பட்டாடை, தலைப்பாகை, உத்தரீயம், உருத்திராக்கம் முதலி யன கூறப்பட்டிருக்கின்றன.

125. (நிரீக்ஷணம் முதற்கொண்டு) சதுஷ்பதம் ஈறுகவுள்ள ஸம்ஸ்காரங்களால் யாக மண்டபத்தைச் சுத்தி செய்யவேண்டும். விகிரம் (இறைக்கப்படும் பொரி முதலியன) முதலியவற்றை இறைத்து, தர்ப்பத்தாலாக்கப்பெற்ற கோலால் கூட்டவேண்டும்.

## யாக மண்டபத்திலுள்ள தேவதைகளைப் பூசித்தல்.

126. கூட்டப்பெற்ற இறைக்கும் திரவியங்களை வர்த்தனிக்கு ஆஸனமாகச் செய்து, 1 வாஸ்துப்பிரமன் முதலியவர்களை முன்போல் பூஜிக்கவேண்டும். 2 சிவகும்பம் வர்த்தனீ இவற்றிற்குச் சலாஸன பூஜை செய்யவேண்டும்.

127. தத்தம் திக்குக்களில் கலசங்களில் வீற்றிருப்பவர்களாயும், வாஹனம் ஆயுதம் இவற்றுடன் கூடியவர்களாயும் இருக்கிற லோகபாலர்களை முறையே விதிப்படி 3 பூஜிக்கவேண்டும். இவர்களின் தியானம் வருமாறு:—

---

1 நிருருதி திக்கில் வாஸ்துப் பிரமனை 𑌓𑌂 𑌹𑌾𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌾𑌸𑌨𑌾𑌯 𑌨𑌮𑌃। 𑌓𑌂 𑌹𑌾𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌮𑍂𑌰𑍍𑌤𑌯𑍇 𑌨𑌮𑌃। என்று ஆஸன மூர்த்தி மந்திரங்களால்பூஜித்து "ஹம்ஸத்தின்மீது வீற்றிருப்பவராயும், தொங்கிவயிற்றை உடையவராயும், வெண்மை நிறமுடையவராயும், மீசையுடன் கூடிய நான்கு முகங்களையுடையவராயும், வலது கையில் ஸ்ருக்கு அக்ஷமாலை இவற்றையும், இடது கையில் தண்டம் கமண்டலு இவற்றையும் தரித்திருப்பவராயும்" தியானித்து, 𑌓𑌂 𑌹𑌾𑌂 𑌵𑌾𑌸𑍍𑌤𑍍𑌵𑌧𑌿𑌪𑌤𑌯𑍇 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌣𑍇 𑌨𑌮𑌃 என்று சொல்லிக்கொண்டு ஆவாஹனஞ் செய்து, மற்றவுபசாரங்களையுஞ் செய்யவேண்டும். இவ்வாறே மஹாலக்ஷ்மீ முதலியவர்களையும் பூஜிக்கவேண்டும்.

2 ஈசான திக்கில் ஸ்தண்டிலத்தில் எட்டுத் தளங்களுடன் தாமரையை வரைந்து, அதன் நடுவில் எள்ளு முதலிய ஏழு தான்யங்களுக்கு மேல் நீரால் நிரப்பப்பெற்றவையாயும், சுவர்ணம் முதலியவற்றை உள்ளே உடையவையாயுமுள்ள சிவகும்பம் வர்த்தனீ கும்பம் இவற்றை வைத்து, ஆதார சக்தி முதலாகப் (சலாஸனத்தால்) பூஜிக்கவேண்டும்.

3 𑌓𑌂 𑌹𑌾𑌂 𑌇𑌨𑍍𑌦𑍍𑌰𑌾𑌸𑌨𑌾𑌯 𑌨𑌮𑌃 𑌓𑌂 𑌹𑌾𑌂 𑌇𑌨𑍍𑌦𑍍𑌰𑌮𑍂𑌰𑍍𑌤𑌯𑍇 𑌨𑌮𑌃, என்று ஆஸனமூர்த்தி மந்திரங்களால் பூசித்து, பின்னர் மூலத்தில் கூறப்பட்டவாறு தியானித்து, 𑌓𑌂 𑌹𑌾𑌂 𑌇𑌨𑍍𑌦𑍍𑌰𑌾𑌯 𑌨𑌮𑌃 என்று ஆவாஹனஞ் செய்து, மற்றவுபசாரங்களையுஞ் செய்யவேண்டும். இவ்வாறே அக்கினி முதலாயினோர்க்கும் பூஜை செய்யவேண்டும்.

128. இந்திரனை, ஐராவதயானைமீது வீற்றிருப்பவராயும், சுவர்ணத்தின் நிறமுடையவராயும், கிரீடத்தை உடையவராயும், ஆயிரம் கண்களை உடையவராயும், வஜ்ரத்தைக் கையில் தாங்கியவராயும் தியானிக்கவேண்டும்.

129. அக்கினியை, அக்ஷமாலை கமண்டலு இவற்றைத் தரித்திருப்பவராயும், சுவாலையின் கூட்டத்தால் வியாபிக்கப்பட்டவராயும், செம்மை நிறமுடையவராயும், சக்தியாயுதத்தைக் கையில் தாங்கியவராயும், ஆட்டின்மீது ஏறியிருப்பவராயும் தியானிக்க வேண்டும்.

130. யமனை, எருமை மீது ஏறியிருப்பவராயும், தண்டாயுதத்தைக் கையில் தாங்கியவராயும், பயங்கரராயும், காலபாசத்தைத் தரித்திருப்பவராயும், கருமை நிறமுள்ளவராயும், தென்திசைக்கு நாயகராயும் தியானிக்க வேண்டும்.

131. நிருருதியை, செம்மையான கண்களையுடையவராயும், பிணத்தின் மீது ஏறியிருப்பவராயும், நீலோத்பல தளத்தின் காந்தி போன்ற நிறத்தை உடையவராயும், கத்தியைக் கையில் உடையவராயும், உதிரத்தைப் பானஞ் செய்கிறவராயும் தியானிக்க வேண்டும்.

132. வருணனை, நாகபாசத்தைத் தரித்திருப்பவராயும், சந்தோஷமுள்ளவராயும், ரத்தினக்கூட்டத்தின் காந்தியையுடைய சரீரத்தை உடையவராயும், (அனேகம் ரத்தினங்களுடன் கூடியவராயும்,) சந்திரன்போல் வெண்ணிறமுள்ளவராயும், மீன் மீது வீற்றிருப்பவராயும் தியானிக்க வேண்டும்.

133. வாயுவை, பருமனான சரீரமுள்ளவராயும், பசுமை நிறமுள்ளவராயும், அசைகிற துவஜத்தைத் தரித்திருப்பவராயும், எல்லாப்ராணிகளுக்கும் உயிராக இருப்பவராயும், மான் மீது வீற்றிருப்பவராயும் தியானிக்க வேண்டும்.

134. குபேரனை, மனிதன் மீது வீற்றிருப்பவராயும், எங்கும் செல்லுகிறவராயும், குள்ளமான சரீரத்தை உடையவராயும், சுவர்ணத்தின் காந்தியை உடையவராயும், கதாயுதத்தைக் கையில் உடையவராயும், வடதிசைக்கு நாயகராயும் தியானிக்கவேண்டும்.

135. ஈசானரை, விருஷபத்தின் மீது வீற்றிருப்பவராயும், த்ரிசூலம் ஸர்ப்பம் இவற்றைத் தரித்திருப்பவராயும், சாத்கா

லத்துச் சந்திரன்போல் வெண்ணிறமுள்ளவராயும், சந்திரனைச் சிரசில் உடையவராயும், மூன்று கண்களையுடையவராயும், தியானிக்க வேண்டும்.

136. 1 அனந்தரை, தாமரைக்கண்ணராயும், ஆயிரம் படங்களுடன் கூடியவராயும், மின்னற் கொடிக்குச்சமமான காந்தியை உடையவராயும், ஆமைமீது வீற்றிருப்பவராயும், அஞ்சலி பந்தம் செய்துகொண்டிருப்பவராயும் தியானிக்கவேண்டும்.

137. பிரமனை, பொன்னிறமுள்ளவராயும், பருமனான சரீரமுள்ளவராயும், நான்கு கைகளையும் நான்கு முகங்களையும் ஹம்ஸ வாஹனத்தையும் உடையவராயும், தண்டம் அக்ஷமாலை ஸ்ருக்கு கமண்டலு இவற்றைத்தரித்திருப்பவராயும் தியானிக்கவேண்டும்.

138. வேதியில் (திண்ணையில்) உள்ள தூண்களின் அடியில் இருக்கும் கும்பங்களில் தர்மம் முதலியவற்றைப் பூஜிக்க வேண்டும். 2 சிலர் (கிழக்கு முதலிய) திக்குக்களிலுள்ள கும்பங்களில் அனந்தர் முதலாயினாரையும் பூஜை செய்கின்றனர்.

139. இந்திரன் முதலிய எல்லாத் திக்பாலர்களுக்கும் சிவபெருமானுடைய 3 ஆணையை அறிவிக்க வேண்டும். முதலில் வர்த்தனியையும், அதன் பின் சிவகும்பத்தையும் எடுத்துக்கொண்டு சுற்றி வரவேண்டும். முன்போல் முதலாவது சிவகும்பத்தையும், அதன் பின் (கும்பத்திற்கு இடது பக்கத்தில்) வர்த்தனியையும் (முன்னிருந்த இடத்தில்) ஸ்தாபிக்கவேண்டும்.

---

1 இந்த இடத்தில் விஷ்ணுவைக் கொள்ளுதலுமுண்டு.

2 ஸித்தாந்தசேகரத்தில் வேதிகையில் "கிழக்கு முதலிய திக்குக்களிலுள்ள கும்பங்களில் வித்யேசுவரர்களை அருச்சிக்க வேண்டு"மென்று கூறப்பட்டிருக்கின்றது.

3 இந்திரனைப் பூஜித்த பின்னர் செய்யப்படும் „ஹோஹோ உந்த்ர ஸ்வஸ்யாம் திஶிவிக்நோபஶாந்தயே । ஸாவதாநோ பவ யாவதேஷ யாகோ யாவத் ஸமாப்தி ஶிவாஜ்ஞயா'' "ஓ இந்திரனே! உம்முடைய திக்கிலுள்ள விக்கினங்களைப் போக்குதற்காக யாகம் முடியும் வரை கவனத்துடன் இருக்கவேண்டும். இது சிவபெருமானுடைய ஆணை" இவ்வாறான ஆணையை என்பது கருத்து. இவ்வாறே அக்கினி முதலாயினார்க்கும் கண்டு கொள்க.

140. சிவகும்பத்தில் எழுந்தருளிய சிவபெருமானுக்கும், வர்த்தனிக்கும் ஸ்திராஸன பூஜை செய்து, முன்போல் உத்பவ முத்திரை செய்துகொண்டு (கும்பம் வர்த்தனி இவற்றை) ஸ்பரிசிக்க வேண்டும்.

141. "உலகத்திற்கு நாதரான ஓ சிவபெருமானே! பக்தர்களிடம் கருணையால் தேவரீருடைய யாகத்தை ரக்ஷிக்கவேண்டும்" என்று விண்ணப்பஞ்செய்து, ரக்ஷித்தற்காகக் கும்பத்தினிடம் ஞானகட்கத்தைச் 1 சமர்ப்பிக்க வேண்டும்.

142. தீக்ஷை, ப்ரதிஷ்டை ஆகிய இவற்றில், கும்பம் அல்லது ஸ்தண்டிலம் அல்லது மண்டலம் இவற்றில் சிவபெருமானை அருச்சிக்கவேண்டும். பிங்களாமதமென்னும் நூலில் கும்பத்தில் இவ்வாறு சிவபெருமானைப் பூஜிக்கவேண்டுமென்று கூறப்பட்டிருக்கின்றது.

## மண்டலஞ் செய்யும் முறை.

143-144. பின்னர், மண்டலஞ் செய்யும் முறையும் சிறிது கூறப்படுகிறது. எவ்வாறெனில், மண்டலத்தின் மத்தியில் எட்டுத்தளங்களுடன் முதல்அம்சத்தில் கர்ணிகையையும், இரண்டாவது அம்சத்தில் கேஸரங்களையும், மூன்றாவது அம்சத்தில் தளங்களையும், நான்காவது அம்சத்தில் தளங்களின் நுனிகளையும் கொண்டதாகத் தாமரையை வரையவேண்டும். கர்ணிகையை எட்டங்குல அளவாக வரைய வேண்டும்.

145. தாமரையின் இலைகள், தளங்களின் நுனி, காத்ரங்கள், (பத்மத்திற்கு நான்கு பக்கமும் செய்யப்படும் பீடங்கள் காத்ரமெனப்படும்) தளங்களின் ஸந்தி ஆகிய இவற்றை அழகுக்குத் தக்கவாறு முறையே நான்கு அங்குல அளவாக வரைய வேண்டும்.

---

1 யஜ்ஞஸ்யாஸ்ய பதிஸ்த்வம் ஹி சிவமூர்த்திஸ் ஸாச்வதீ தவ । அஸௌ தே ஜ்ஞாநகட்கோऽயம் ஸ்வாயுதம் ஸ்வீகுருஷ்வ ॥

இ-ள். "தேவரீர் இந்த யாகத்திற்கு யஜமானராக இருக்கிறீர். இந்த உம்முடைய மூர்த்தியானது சாசுவதமானது. இது உம்முடைய ஞானகட்கம். ஆகையால் உம்முடைய ஆயுதத்தை ஸ்வீகரித்துக் கொள்ளும்" என்று பிரார்த்தித்து ஞானகட்கத்தைச் சமர்ப்பிக்க வேண்டும்.

146. தளங்களின் நுனியிலிருந்து ஒரு அங்குலம் விட்டு, நான்கு பக்கங்களிலும் ஒரு அங்குல அளவாக ஒவ்வொரு ஆவரண மண்டலமும் வித்வான்களால் செய்யத் தக்கது.

147. சிவபெருமானுடைய ஆஸனமானது, (ஆஸனமாகிய பத்மமானது) சிலவிடங்களில் வீதி (பந்தி) முதலியவற்றுடன் கூடியதாகக் காணப்படுகின்றது. வீதியின் துவாரமானது (வாயிலானது) தாமரைக்குச் சமமாக இருக்கவேண்டும். இதற்குப் பாதி அளவாகவும் சிலவிடங்களில் காணப்படுகின்றது.

148. துவாரத்தினளவாக 1 சோபையும், இதற்குப் பாதி அளவாகக் 2 கபோலங்களும் செய்யப்பட வேண்டும். வெண்மை. செம்மை, கருமை, பொன்மை ஆகிய நிறங்களையுடைய பொடிகளை 3 முறைப்படி தூவ வேண்டும்.

149. கேஸரங்கள், தளங்களின் நுனி, தளங்கள், காத்ரங்கள், இவற்றை மூன்று அங்குல அளவாகவும், கர்ணிகையை ஆறங்குல அளவாகவும் சிலர் வரைகின்றனர்.

150-150½. இந்த மண்டலத்தில் சிவபெருமானைப் பூஜித்து, குண்டத்தின் சமீபத்திற்குச் செல்லவேண்டும். குண்டத்தின் நாபியை முன்னிட்டு உட்கார்ந்த மூர்த்திபர்கள் ஆசார்யருடைய ஆணையால், தத்தம்குண்டங்களில் (பதினெண்) ஸம்ஸ்காரங்களைச் செய்யவேண்டும்.

---

1 மண்டலத்தின் ஒரு அவயவம் சோபை எனப்படும்.

2 துவாரத்தின் பக்கத்திலுள்ள இரண்டு பாகங்கள் கபோலம் எனப்படும்.

3 மஞ்சள் முதலியவற்றாலாக்கிய பொடிகளால் கர்ணிகையை மஞ்சள் நிறமுடையதாகச் செய்யவேண்டும். வெண்மை நிறமுடையதாகவேனும் செய்யவேண்டும். கேஸரங்களை அடி நடு நுனி இவற்றில் முறையே வெண்மை கலந்த செம்மை நிறமுள்ள பொடிகளையும், பொன்மை நிறமுள்ள பொடிகளையும், செம்மை நிறமுள்ள பொடிகளையும் தூவி, பல நிறங்களுள்ளவையாகச் செய்யவேண்டும். எட்டுத் தளங்களையும் வெண்மை அல்லது செம்மை நிறமுள்ளவையாகச் செய்ய வேண்டும். யவம் கோதுமை இவற்றால் வெள்ளைப் பொடிகளையும், தாது, (மலையரிதானக் கல்) விந்தூரம் இவற்றால் செம்மை நிறப்பொடிகளையும், பொசுக்கப்பட்ட உமிகளால் கருமை நிறப்பொடிகளையும், பசுமை நிற இலைகளால் பச்சைப் பொடிகளையும் கொள்ளவேண்டும், இவ்வாறு கிரணகமத்தில் கூறப்பட்டிருக்கின்றது.

## யாகமண்டபத்தில் வேதபாராயணஞ் செய்தல்.

151. ஜபம் செய்வதில் வலிமையுள்ளவர் அதிகமாக [1] அஸ்திரமந்திரத்தை ஜபஞ்செய்ய வேண்டும். சிலர் ஸம்ஹிதா மந்திரத்தை ஜபிக்கவேண்டும்.

152½. தம் சாகைக்குரிய வேதத்தைக்கற்ற பிராமணர்கள் சாந்தி சூக்தங்களைப் பாராயணஞ் செய்யவேண்டும். ருக்வேதத்தை அத்யயனஞ் செய்த பிராமணர், கிழக்குத் திக்கில் இருந்துகொண்டு ஸ்ரீ ஸூக்தம், பாவமானி, (பவமாந ஸூக்தம்) மைத்ரகம், விருஷாகபி, இவற்றைப் பாராயணஞ்செய்யவேண்டும்.

153-153½. ஸாமவேதத்தை அத்யயனஞ் செய்த பிராமணர், தெற்குத் திக்கில் இருந்துகொண்டு தேவ வ்ரதம், பாருண்டம், ஜ்யேஷ்ட ஸாம, ரதந்தரம், புருஷங்கதி ஆகிய இவற்றைக் கானஞ் செய்யவேண்டும்.

154-154½. யஜுர்வேதத்தை அத்யயனஞ் செய்த பிராமணர், மேற்குத் திக்கில் இருந்துகொண்டு ருத்ரம், புருஷஸூக்தம், சுலோகாத்யாயம், பிராஹ்மணம் இவற்றைப் பாராயணஞ் செய்யவேண்டும்.

155-155½. அதர்வ வேதத்தை அத்யயனஞ் செய்த பிராமணர், நீலருத்ரம், ஸ்கந்தஸூக்தம், அதர்வசிர்ஷம் இவற்றை [2] வடக்குத் திக்கிலிருந்துகொண்டு பாராயணஞ் செய்யவேண்டும்.

## ஹோமஞ் செய்யும் முறை.

156-157. ஆசாரியர் (பிரதான குண்டத்தில்) அக்கினியை உண்டுபண்ணி, அந்த அக்கினியின் கிழக்கு முதலிய பாகங்களிலிருந்து அக்கினியை எடுத்து, கிழக்கு முதலிய திக்குக்களி

---

1 சிவதீக்ஷைபெற்ற பிராமணர் அக்கினி திக்கில் சிவாஸ்திரத்தையும், நிருருதி திக்கில் பாசுபதாஸ்திரத்தையும், வாயுதிக்கில் க்ஷுரிகாஸ்திரத்தையும், ஈசான திக்கில் அகோராஸ்திரத்தையும் ஜபம் செய்யவேண்டுமென்று ஸித்தாந்த சேகரத்தில் கூறப்பட்டிருக்கின்றது.

2 ருக்வேதத்தைக் கிழக்குத் திக்கிலும், யஜுர்வேதத்தைத் தெற்குத் திக்கிலும், ஸாமவேதத்தை மேற்குத் திக்கிலும், அதர்வ வேதத்தை வடக்குத் திக்கிலும் பாராயணஞ் செய்யலாமென ஸித்தாந்த சேகரத்தில் கூறப்பட்டிருக்கின்றது.

லுள்ள குண்டங்களில் அக்கினியை வைக்கவேண்டும். பின்னர் தூபம் தீபம், சரு, இவற்றிற்காக அக்கினியை எடுக்கவேண்டும்.

158-159. முன்போல் சிவபெருமானை அருச்சித்து, சிவாக்கினியில் மந்திரங்களுக்குத் தர்ப்பணாகுதிகளைச் செய்து, நல்ல தேசம் நல்ல காலம் முதலியன ஸித்திப்பதற்காவும், கெட்ட சகுனங்கள் நாசமாவதற்காவும், (மூலமந்திரத்தை உச்சரித்து) ஹோமஞ்செய்து, மந்திரங்களை அறிந்த ஆசாரியர் நன்மையைத் தரும் பூர்ணாகுதியைச் செய்து, முன்போல் சருவைப் பாகஞ் செய்து, ஒவ்வொரு குண்டத்திலும் வைக்கவேண்டும்.

## ஸ்நான மண்டபத்தில் ஈசுவரருக்குச் செய்ய வேண்டுவன.

160. யஜமானனால் கொடுக்கப்பட்ட முன் கூறப்பட்ட ஆபரணம் முதலியவற்றை அணிந்த யாவரும், (மூர்த்திபர் ஆசாரியர் இவர்கள்) சந்தோஷமுடைய மனதுடன் ஸ்நான மண்டபத்திற்குச் செல்ல வேண்டும்.

161. கிழக்கு வேதிகையில் தாமரையடையாளத்துடன் கூடிய பத்ரபீடத்தில் பிரணவாஸனத்தில் ஈசுவரருக்கு ஸந்நிதானம் செய்து, தாடனம் அவகுண்டனம் இவற்றைச் செய்ய வேண்டும்.

162-164. மிருத்திகை, கஷாயோதகம், கோமூத்திரம், கோமயம், இடையிடையில் சுத்த ஜலம், திருநீறு, க்ந்தோதகம், சுத்த ஜலம், இவற்றை பட் என்னும் பதத்தை இறுதியிலுடைய அஸ்திரமந்திரத்தை (சுஷ்ராய ஹூம்ஃபட் என்னும்மந்திரத்தை) உச்சரித்து அபிஷேகஞ் செய்து, ஆசாரியர் மூர்த்திபர்களுடன் (இவ்விதம்) ஆகார (மூர்த்தி) சுத்தி செய்து, கவச மந்திரத்தால் ஜபிக்கப் பெற்றதாயும், பொன்னிறமுள்ளதாயும் உள்ள ஆடையால் (மூர்த்தியை) மூடி, வெண்ணிறமுள்ள புஷ்பங்களால் பூஜித்து, வடக்கு வேதிகைக்குக்கொண்டுபோக வேண்டும்.

## லக்ஷணோத்தார விதி.

165. அந்த வேதிகையில், ஸமர்ப்பிக்கப் பெற்ற ஆஸனத்தை உடைய சய்யையில், (படுக்கையில்) (ஈசுவரரை) விற்றிருக்

கச் செய்து, குங்குமத்தால் பூசப் பெற்ற நூலால் லிங்கத்தை விபாகம் செய்து ஆசாரியர் குறியை வரைய வேண்டும்.

166. தேர்ச்சியடைந்த சிற்பி, சுவர்ணத்தாலாக்கப்பெற்ற சலாகையாகிற (ஊசியாகிற) ஆயுதத்தால், சாஸ்திரங்களில் கூறப் பட்ட விதிப்படி குறியைக் கீற வேண்டும்.

167. எல்லா விருப்பமும் ஸித்திப்பதற்காக, விக்கிரஹத் தின் மூன்றிலொரு பாகத்திற்குக் கீழேனும், கால், அல்லது அரைப் பாகத்திற்குக் கீழேனும், மங்களகரமான குறியைச் செய்ய வேண்டும்.

168. எல்லா லிங்கங்களிலும், லிங்கத்தின் நீளத்தைப் பதி னறு பாகஞ் செய்து, அதை மூன்றாகப் பிரித்து, (மேல்) ஒரு பாகத்தைவிட்டு, மற்றிரு பாகங்களும் குறி செய்யப்படும் திரு மேனியின் விஸ்தாரமாகும்.

169. ஒரு முழ லிங்கத்திற்கு, ஒன்பது பாகமாகச் செய் யப்பட்ட யவமென்னும் தான்யத்தின் எட்டுப்பாகங்களினளவா கக் குறி ரேகையின் ஆழம் அகலம் இவை இருக்க வேண்டும்.

170. இவ்வாறே இரண்டு முழம் முதலுள்ள லிங்கங்களு க்கு, முறையே எட்டுப் பாகங்களை அதிகமாகச் செய்வதால், ஒன் பது முழமுள்ள லிங்கத்திற்கு எட்டு யவங்களினளவான அகலம் ஆழம் இவற்றைச் செய்யவேண்டும்.

171-172. கால்களால் விருத்தி அடைந்த எல்லா ஸகள லிங்கங்களிலும், இரண்டு பங்கு அதிகமாகக் குறி செய்யப்படும் திருமேனியின் விஸ்தாரமிருக்க வேண்டும். குறி ரேகையின் ஆழம் அகலம் ஆகிய இவையும் இரண்டு பங்கு அதிகமாக இருக் கவேண்டும். எல்லா லிங்கங்களிலும் லிங்கத்தின் மத்தகத்திற் குச் சமமாகக் குறியைச் (குறியின் சிரஸை) செய்யவேண்டும்.

173-174. குறி செய்யப்படும் திருமேனியை எட்டுப் பா கமாகப் பிரித்து, சிரசில் இரண்டு பாகங்களை விட்டு ஆறு பாகத் திலேனும், லிங்கத்தினடியில் இரண்டு பாகங்களை விட்டு (நான்கு பாகத்திலேனும்) குறி ரேகைகளைச் செய்து, பின்புறத்தில் ரே கைகளைச் சேர்க்க வேண்டும். குறி செய்யும் முறை மற்ற நூல் களில் பலவிதமாகக் கூறப்பட்டிருக்கிறது. இங்கு சிறிது கூறப் பட்டது.

175-176. இரத்தின லிங்கம், ஸ்வயம்பு லிங்கம், நதியிலுண்டான லிங்கம், பரமேசுவர ஸம்பந்தமான சல லிங்கம், லோஹ லிங்கம், இவற்றிற்கு ஒரு ஆகமத்திலும் குறி செய்தல் காணப் படவில்லை. இரத்தினங்களிலுள்ள சுத்தமான காந்தியே அவற்றிற்கு லக்ஷணமாகும். ஸகள லிங்கத்தில் நயனோன்மீலனரூபமான குறியானது உருவத்தின் ஸன்னிதானத்திற்காகச் செய்யப்படுகிறது.

## குறி செய்த பின்னர்ச் செய்ய வேண்டுவன.

177-177½. லக்ஷணோத்தார ரேகையை, நெய், தேன் இவற்றால் மிருத்யுஞ்ஜய மந்திரத்தை உச்சரித்து நிரப்பி, பின்னர், சிற்பி ஸ்பரிசித்ததாலுண்டான தோஷம்நீங்குவதற்காக, மிருத்திகை முதலியவற்றால் லிங்கத்திற்கு அபிஷேகம் செய்வித்து அருச்சிக்க வேண்டும்.

178-178½. மோதிரம், பாத்ரம், படுக்கை, ஆடைகள், சுவர்ணத்தாலாக்கப் பெற்ற ஊசி, ஆகிய இவற்றைச் சிற்பிக்குக் கொடுத்து, சிற்பியைச் சந்தோஷிக்கச் செய்து, ஆசாரியருக்கு மங்களகரமான பசுவைக் கொடுக்க வேண்டும்.

179-181. பின்னர், தூபம் அறுகு அக்ஷதை முதலியவற்றால் லிங்கத்திற்குப் பூஜை செய்யவேண்டும். வாழுகின்ற புத்திரர்களை உடையவர்களாயும், சுமங்கலிகளாயுமுள்ள பெண்கள், மங்களம் பாடிக்கொண்டு, வலமாகவும், இடமாகவும், நூல் அல்லது தர்ப்பத்தால் பரிசித்து, கோரோசனையைப் பூசுதல் முதலியன செய்யவேண்டும். பின்னர், வெல்லம், உப்பு, தான்யம், அக்ஷதை முதலியவற்றைக் கொடுத்து, அந்தப் பெண்களைப் போகச்செய்ய வேண்டும்.

182-185. ஆசாரியர், மூர்த்திபர்களுடன் இருதயமந்திரம் அல்லது பிரணவத்தை உச்சரித்துக்கொண்டு, இடையிடையே சுத்தஜலத்துடன் மிருத்திகை, கோமயம், கோமூத்ரம், திருநீறு இவற்றாலும், பஞ்சகவ்வியம், பஞ்சாமிருதம், கஷாயோதகம், எல்லா ஓஷதிகளுடன் கூடிய ஜலம், புஷ்போதகம், பலோதகம், ஸ்வர்ணோதகம், ரத்னோதகம், கோசிருங்கோதகம், ஸஹஸ்ரதாரா ஜலம், திவ்யௌஷதி ஜலம், கங்காஜலம், சந்தனம், லவண சமுத்திரம் முதலிய ஸமுத்திரங்கள் ஆவாஹனஞ்செய்யப் பெற்ற

கும்பஜலம், சிவகும்பஜலம், ஆகிய இவற்ருல் லிங்கத்திற்கு அபிஷேகம் செய்யவேண்டும்.

186-186½. வாஸனையுள்ள சந்தனம் முதலியவற்றைப் பூசி, பஞ்சப்ரஹ்ம மந்திரங்களை உச்சரித்துப் புஷ்பங்களால் அருச்சித்து, கவசமந்திரத்தை உச்சரித்துச் செம்மை நிறமுள்ள ஆடை சாத்தி, அகோரமந்திரத்தை உச்சரித்து நீராஜனஞ் செய்து, (பஸ்மத்தால்) இரக்ஷைப் பொட்டிட வேண்டும்.

## மண்டபத்தின்மேற்கு வாயிலுக்குச் செல்லு முறை.

187-189½. கீதம், வாத்யம், நடனம், வேதகோஷம் முதலிய மங்கள சப்தங்கள், அர்க்கியம் முதலியவற்றிற்குரிய ஜலம், பால், தர்ப்பைநுனி முதலிய திரவியங்கள் ஆகிய இவற்ருல் (1 ஸந்தோஷமுடையவராகச் சிவபெருமானைச் செய்து, தேவரீர் ரதத்தில் எழுந்தருள வேண்டும் என்று பிரார்த்தித்து, ரதத்தில், ஏற்றி) ரதத்தின் மார்க்கத்தைத் தொடர்ந்து செய்யப்படும் ஜயஸ்தோத்ரம் முதலியன, கீதம், வாத்யம் ஆகிய மங்கள சப்தங்கள், இவற்றுடன் சுவர்ணம், வெண்கலம், ஆடை, ஏழுவகைத்தான்யங்கள், சோவி, நல்ல வாஸனையுள்ளபுஷ்பங்கள் ஆகிய இவற்றைப் பணத்தின் சக்திக்குத்தக்கவாறு (வழியில்) இறைத்துக்கொண்டு வலமாகச் சுற்றிப்போக வேண்டும்.

190-192. மண்டபத்தின் மேற்கு வாயிலில் சுவாமியை இறக்கி, 2 பத்ராஸனத்தில் இருக்கும் சிவபெருமானை இருதயமந்திரத்தால் பூஜித்து, புண்யாஹஞ் செய்து, மண்டபத்திற்குள் பிரவேசித்து, வேதிகையின் நடுவில், கட்டில் அல்லது பட்டகத்தில் (படிச்சட்டத்தில்) தலையணையுடன் கூடிய படுக்கையில் சுவா

---

1 இந்தக் குண்டலரேகையினுள் அடங்கியவிஷயங்கள் வடமொழிமூலத்தில் கிடையா. வடமொழிமூலத்தில் ,,ஸ்ரீயவாஜி ஆ ஃஜுஷெ:'' என்று மீண்டும் கூறியதை அனுசரித்துப் பொருளுக்கிணங்க அசிந்தியவிசுவசாதாக்ய ஆகமத்தினின்று சேர்க்கப்பட்டது.

2 மங்களகரமான ஆஸனத்தில் என்பது பொருள். மூலத்திலும் தருமபுரப் பிரதியிலும் ருத்ராஸனத்தில் என்றிருக்கின்றது. அசிந்தியவிசுவஸாதாக்ய ஆகமத்தை அனுசரித்து பத்ராஸனத்தில் என்று மொழிபெயர்க்கப்பட்டிருக்கின்றது.

மியைப் பிரணவத்தை உச்சரித்து வைத்து, ஆதார சக்தி முதல் சிவசக்தி ஈறுகப் பூஜிக்க வேண்டும்.

193-193½. பிராஸாதமானது மேற்கு முகமாக இருந்தால், நடுவிலிருந்து கிழக்குத் திக்கை ஆச்ரயித்து லிங்கத்தையும், இதற்கு மேற்குத் திக்கில் பிண்டிகையையும், (ஆவுடையாரையும்) இவ்வாறே (இதற்கு மேற்குத்திக்கில்) பிரமசிலையையும் வைக்க வேண்டும். பிராஸாதமானது கிழக்கு முகமாக இருந்தால் இந்த முறை முற்றிலும் 1 மாறுபடும்.

194-195-195½. (சுவாமிக்குத் தலைப்பக்கத்தில்) ஈசான திக்கில், பிரணவாஸனத்தில், (சிவகும்பத்திற்குச் சமானமான) நித்ராகும்பத்தை அஸ்திரமந்திரத்தை நூறு முறை அபிமந்திரித்து ஸ்தாபித்து, இருதயமந்திரத்தால் அர்க்கியம் சமர்ப்பித்து, லிங்கத்தை எடுத்து சிரோமந்திரத்தை உச்சரித்து, முன் கூறப்பட்ட ஆஸனத்தில் கிழக்குத் திக்கில் தலையை வைத்து படுக்கச் செய்து, அந்த லிங்கத்தில் ஸிருஷ்டி முறையாக பஞ்சப்பிரம மந்திரங்களை நியாஸஞ் செய்யவேண்டும்.

196-197. லிங்கத்திற்குச் சந்தனத்தைச் சாத்தி, தூபத்தையும், கவசமந்திரத்தால் ஆடைகளையும் சமர்ப்பித்து, நைவேத்தியம் சமர்ப்பித்து, தன்னுடைய சக்திக்குத் தக்கவாறு முன் சேகரிக்கப்பட்ட கிரஹோபகரணங்களையும் தம்பலப் படிக்கம் முதலிய யாவற்றையும் இருதயமந்திரத்தை உச்சரித்துச் சமர்ப்பிக்க வேண்டும்.

---

1 மாறுபடும் முறை ஸித்தாந்த சேகரத்தில் கூறப்பட்டிருக்கின்றது அது வருமாறு:— "பிராஸாதம் கிழக்கு முகமாக இருந்தால், லிங்கத்திற்குக் கிழக்குத்திக்கில் ஆவுடையாரையும், இதற்குக் கிழக்குத் திக்கில் பிரமசிலையையும், பிராஸாதம் தெற்கு முகமாக இருந்தால், லிங்கத்திற்குத் தெற்குத் திக்கில் ஆவுடையாரையும், இதற்குத் தெற்கில் பிரமசிலையையும், பிராஸாதம் வடக்கு முகமாயிருந்தால், லிங்கத்திற்கு வடக்குத் திக்கில் ஆவுடையாரையும், இதற்கு வடக்குத் திக்கில் பிரமசிலையையும் ஆசாரியர் நியாஸஞ் செய்யவேண்டும்" என்பதாம்.

198-199. அப்யங்க ஸ்நானத்திற்காக, கால் பக்கத்தில் நெய் தேன் இவற்றுடன்கூடிய பாத்திரத்தை 1 வைத்து, ஆசாரியர் அங்கு அமர்ந்து, தம் அதிபதிகளுடன் கூடிய சக்தி முதல் பூமியீறாகிய முப்பத்தாறு தத்துவங்களை நியாஸஞ் செய்து, புஷ்ப மாலைகளால் த்ரிகண்டத்தை (மூன்று பாகங்களைச்) செய்ய வேண்டும்.

200-200½. மாயாதத்துவம் ஸதாசிவ தத்துவம் சக்தி தத்துவம் இவை ஈறாக வியாப்தியையுடைய நாற்கோணம் எண் கோணம் வட்டம் இவற்றை லிங்கத்தில்செய்து, இவற்றில் (முறையே) ஆன்மதத்துவம் வித்யாதத்துவம் சிவதத்துவம் இவற்றை, ஒவ்வொரு பாகத்திலும் பிரமன் விஷ்ணு ருத்ரர் ஆகிய அதிபதிகளுடன் ஸிருஷ்டிக்ரமமாக நியாஸஞ் செய்யவேண்டும்.

## நவகுண்ட பக்ஷத்தில் மூர்த்தி மூர்த்தீசுவர நியாஸம்.

201-204. கிழக்குத்திக்கு முதற்கொண்டு ஒவ்வொரு திக்கிலும், முறையே பிருதிவி, அக்கினி, யஜமானன், சூரியன், ஜலம், வாயு, சந்திரன், ஆகாசம் ஆகிய மூர்த்திகளையும், இந்த மூர்த்திகளுக்கு முறையே அதிபதிகளாகிய சர்வர், பசுபதி, உக்ரர், ருத்திரர், பவர், ஈசுவரர், மஹாதேவர், பீமர் ஆகிய இவர்களையும் நியாஸஞ் செய்யவேண்டும். மூன்று மாத்திரைகளுடன் கூடிய ஹ்ரூம் ரூம் ஶூம் ஷூம் வூம் யூம் ஸூம் ஹூம் ஆகிய இந்த மந்திரங்கள் மூர்த்தி மூர்த்தீசுவரர்களைக் குறிக்கின்றன. பிரணவமேனும், இருதய பீஜமேனும், சிலவிடத்தில் மூலமந்திரமேனும் பிரயோகம் செய்யப்படுகின்றன.

## பஞ்சகுண்ட பக்ஷத்தில் மூர்த்தி மூர்த்தீசுவர நியாஸம்.

205-206. ஐந்து குண்டங்கள் செய்யப்படும் யாகத்தில் பிருதிவீ, ஜலம்,அக்கினி, வாயு, ஆகாசம் ஆகிய மூர்த்திகளையும்,இவற்றிற்குஅதிபதிகளாகிய பிரமன், விஷ்ணு, உருத்திரர், மகேசுவரர், ஸதாசிவர் ஆகிய இவர்களையும் மந்திரங்களை அறிந்த ஆசாரியர் ஸிருஷ்டிக்ரமமாக (லிங்கத்தில்) நியாஸஞ் செய்யவேண்டும்.

---

1 இருதய மந்திரம் அல்லது மிருத்யுஞ்ஜய மந்திரத்தால் பாத்திரத்தை வைத்து என்று ஸித்தாந்தசேகரத்தில் கூறப்பட்டிருக்கின்றது.

207. முமுக்ஷுவுக்கு நிவிருத்தி முதலிய கலைகளையும், இவற்றிற்கு அதிதேவதைகளாகிய ஸத்யோஜாதம் முதலியவற்றையும் நியாஸஞ் செய்யவேண்டும். அல்லது எல்லாவிடத்திலும் மூன்று தத்துவங்களையேனும் 1 தத்தமக்குரிய வியாப்தியுடன் நியாஸஞ் செய்யவேண்டும்.

208. சுத்தாத்துவாவில் வித்யேசுவரர்களும், அசுத்தாத்துவாவில் (இந்திரன் முதலிய) லோகநாயகர்களும், மந்திரநாயகர்களும், (அராகதத்துவத்தில் இருக்கும் உருத்திரர்களான அங்குஷ்டமாத்திரர், புவனேசர், ஈசானர், ஏகபிங்காக்ஷர், உத்பவர், பவர், மஹாதேவர், மஹாதேஜஸ் ஆகிய மந்திரநாயகர்களும்) வியாப்தியை உடையவர்களாய், மூர்த்தீசுவரர்களாக அறியப்படுவர்.

209. முறையே முப்பத்தைந்து, எட்டு, ஐந்து மூன்று ஆகிய இந்தத்தத்துவமந்திரங்களையும், இவற்றின் அதிபதிகளின் மந்திரங்களையும் அறிந்து கொள்ளுதற்காக இந்த மந்திரங்களின் பிரயோக முறை சிறிது கூறப்படுகின்றது.

ஓம் ஹாம் ஶக்தி தத்த்வாய நம: । ஓம் ஹாம் ஶக்தி தத்த்வாதிபாய ஶக்தீஶாய நம: । என்பது முதலியன, முப்பத்தைந்து தத்துவ தத்துவேசுவர மந்திரங்கள். ஓம் ஹாம் ஊம் க்ஷ்மா மூர்த்தயே நம: । ஓம் ஹாம் ஊம் க்ஷ்மா மூர்த்யதிபாய ஶர்வாய நம: । என்பது முதலியன எட்டு மூர்த்தி மூர்த்தீசுவர மந்திரங்கள். ஓம் ஹாம் வ்யாபி மூர்த்தயே நம: । ஓம். ஹாம் வ்யாபி மூர்த்யதிபாய ப்ரஹ்மணே நம: । என்பது முதலியன ஐந்து மூர்த்தி மூர்த்தீசுவர மந்திரங்கள். ஓம் ஹாம் ஶிவ தத்த்வாய நம: । ஓம் ஹாம் ஶிவ தத்த்வாதிபாய ருத்ராய நம: । என்பது முதலியன மூன்று தத்துவ தத்துவேசுவர மந்திரங்கள்.

---

1 ஸித்தாந்தசேகரத்தில் ஆன்மதத்துவம் மாயை ஈறாகவும், வித்யாதத்துவம் வித்தியாதத்துவமீறாகவும், சிவதத்துவம் சிவதத்துவமீறாகவும் வியாப்தியையுடையன. பிருதிவி முதலிய ஐந்து பூதங்களுக்கும் அந்த அந்தத் தத்துவ அளவாக வியாப்தி உண்டு. பிருதிவி முதல் புருஷதத்துவமீறாக யஜமானனுக்கு வியாப்தி உண்டு'' என்பது போன்ற வியாப்திமுறை கூறப்பட்டிருக்கின்றது.

## ஜீவந்யாஸஞ் செய்யும் முறை.

210-212½. நாபியிலுள்ள கிழங்கு தொடங்கி, மணியின் சப்தம் போல் பரவுகிறதாயும், மனதுடன் வேறுபடாததாயும், ஆனந்த ரஸத்தை வெளிப்படுத்துவதாயும் உள்ள மந்திரத்தை உச்சரித்து, பிரமன் முதலிய காரணேசுவரர்களைக் கடந்து, துவா தசாந்தத்திற்குக் கொண்டுபோய், மீண்டும் துவாதசாந்தத்திலி ருந்து கொண்டுவந்து, நிஷ்களராயும், வியாபகராயும், 1 முப்பத் தெட்டுக் கலைகளுடன் கூடியவராயும், சூரியன்போல் பிரகாசிக் கிறவராயும், எல்லாச் சக்திகளின் ரூபராயும், அங்கங்களுடன் கூடியவராயும் உள்ள சிவபெருமானை [புஷ்பாஞ்சலியில் இருப்பவ ராகத்] தியானித்து, லிங்கத்தில் நியாஸஞ் செய்யவேண்டும். இவ் வாறு செய்தல் எல்லாப்புருஷார்த்தங்களையும் தரும் 2 ஜீவந்யாஸ மெனப்படும்.

## பீடம் முதலியவற்றிற்குச் செய்யப்படும் நியாஸம்.

213-215. இனி, பீடம் முதலியவற்றில் செய்யப்படும் நியா ஸம் கூறப்படுகின்றது. பீடத்திற்கு அபிஷேகஞ் செய்து, சந்த னம் முதலியவற்றைப் பூசி, நல்ல ஆடைகளை உடுத்தி, சத்தி ரூப மாயுள்ள துவாரத்தில், ஐந்து இரத்தினங்கள் முதலியவற்றை உடையதாயும், லிங்கத்திற்கு வடக்குப் பக்கத்திலிருப்பதாயும், லிங்கத்திற்கு செய்யப்பட்டவாறு நியாஸஞ் செய்யப் பெற்றதா யும் இருக்கிற பீடத்தை முறைப்படி பூஜிக்கவேண்டும்.

216. இவ்வாறே ஸ்நானம் முதலியன செய்யப்பெற்ற பிர மசிலையை லிங்கத்தினடியில் நியாஸஞ் செய்யவேண்டும். இவ்வா றே ஸ்நானம் முதலிய ஸம்ஸ்காரங்களையுடைய விருஷபத்தையும் சத்தி ரூபக நியாஸஞ் செய்யவேண்டும்.

217-218. பிரணவத்தை முன்னிட்ட ஓம் ஸம் ஹ்ரீம் என்னும் பீஜாக்ஷரங்களுள் ஒன்றால், க்ரியாசக்திக்குச் சமமான

1 சசினீ அங்கதை முதலிய முப்பத்தெட்டு கலைகளுடன் என்பது பொருள்.

2 ஜீவநியாஸஞ் செய்த பின்னர் "அர்க்யம் முதலியவற்றால் ஸந்நிதா னம் முதலியவற்றைச் செய்யவேண்டும்," என்று ஸித்தாந்த சேகரத்தில் கூறப்பட்டிருக்கின்றது.

பிண்டிகைக்கும், ஆதாரரூபிணியான சிலைக்கும், விருஷபத்திற்கும், திருநீறு, தர்ப்பம், எள்ளு இவற்றைக்கொண்டு மூன்று ப்ராகாரங்களைச் செய்யவேண்டும். பின்னர் இரக்ஷிப்பதற்காக வெளியில் ஆயுதங்களுடன் கூடிய லோகபாலர்களைப் பூஜிக்கவேண்டும்.

ஓம் ஹ்ரீம் க்ரியாஶக்த்யை நம: । என்னும் மந்திரமேனும். 1 ஓம் ஹ்ரீம் ஸ: ஸம்ஹாரகௌரி ருத்ரதயிதே ஸ்வாஹா என்னும் மந்திரமேனும் பிண்டிகைக்குரிய மந்திரமாகும்.

ஓம் ஹ்ரீம் ஆதாரஶக்தயே நம: என்பது பிரமசிலைக்குரிய மந்திரம். ஓம் ஹாம் வ்ருஷபாய நம: என்பது விருஷபத்திற்குரிய மந்திரம்.

219-220. தாரிகா, தீப்திமதீ, உக்ரா, ஜ்யோத்ஸ்நா, சேதநா, பலோத்கடா, தாத்ரீ, விஹ்வீ ஆகிய எட்டு நாயகிகளை (மூர்த்தீசுவரிகளை) யேனும்; வாமை, ஜ்யேஷ்டை, க்ரியை, ஞானீ, இச்சை ஆகிய ஐந்து நாயகிகளையேனும், க்ரியை, ஞானீ, இச்சை ஆகிய மூன்று நாயகிகளையேனும், சாந்தமாயுள்ள மூர்த்திகளில் நியாஸஞ் செய்யவேண்டும்.

221-222. தமா, மோஹா, 2 க்ஷயா, நிஷ்டா, மிருத்யு, மாயா, பயா, ஜ்வரா ஆகிய எட்டு நாயகிகளையேனும், தமா, மோஹா, கோரா, தீவ்ரதபா, ஜ்வரா ஆகிய ஐந்து நாயகிகளையேனும், ஆன்மதத்துவம் முதலிய மூன்று தத்துவங்களுக்கு நாயகிகளாக க்ரியை, ஞானீ, இச்சை ஆகிய இந்தச் சக்திகளையேனும், உக்ரமாயுள்ள மூர்த்திகளில் நியாஸஞ் செய்ய வேண்டும்.

223. இந்தப் பிண்டிகை, பிரமசிலை முதலியவற்றிலும், முன்போல் முறைப்படி கௌரீ முதலியவர்களின் மந்திரங்களாலேயே எல்லா க்ரியைகளையும் செய்ய வேண்டும்.

## குண்டங்களில் ஹோமஞ் செய்யுமுறை.

224-224½. இவ்வாறு நியாஸஞ்செய்து பின்னர் குண்டத்தினருகிற் சென்று, குண்டத்தின் நடுவில் சிவபெருமானையும்,

---

1. ஓம் ஹ்ரீம் ஸம்ஹாரகௌரி ருத்ரதயிதே ஸ்வாஹா என்று தான் இந்தப் பிரதியிலுள்ளது. தர்மபுரம் பிரதியையும் அசிந்திய விசுவஸாதாக்கியத்தையும் அனுசரித்து இவ்வாறு திருத்தி மொழிபெயர்க்கப்பட்டிருக்கின்றது.

2 ஜயா என்று சில நூல்களில் பாடம் காணப்படுகின்றது.

மேகலைகளில் 1 மகேசுவரரையும், நாபியில் க்ரியா சக்தியையும், ஓஷ்டத்தில் (உதடில்) நாதத்தையும் நியாஸஞ் செய்யவேண்டும்.

225-226-227. பின்னர், ஆசாரியர் சிவகும்பம், மண்டலம், அக்கினி இவற்றில் எழுந்தருளிய சிவபெருமானுடன் நாடீஸந்தானஞ் செய்து கொள்ளவேண்டும். (அதாவது) சுழும்நா நாடியின் துவாரத்தின் வழியாக [மூலமந்திரத்தை உச்சரித்து] ரேசகத்தினல் வெளியில் வந்த தாமரை நூலுக்குச் சமமாயுள்ள சக்தியைச் சிவபெருமானிடம் பிரவேசிப்பதாயும்,பின்னர் அங்கிருந்து ரேசகத்தால் வெளியில்வந்து சுழும்நாநாடியின் துவாரத்தின் வழியாக மீண்டும் தன்னுடைய சரீரத்தில் பிரவேசிப்பதாயும் சிந்திக்க வேண்டும் [என்பதாம்] இவ்வாறே எல்லாவிடங்களிலும் நாடீஸந்தானஞ் செய்துகொள்ள வேண்டும். மூர்த்திபர்களோடும் ஒருவருக்கொருவர் நாடீஸந்தானஞ் செய்துகொள்ள வேண்டும்.

228-229. குண்டத்தில் ஆதார சக்தியைப் பூஜித்து, முறையே தர்ப்பணாகுதியைச் செய்து, தத்துவதத்துவேசுவரர்கள், மூர்த்தி மூர்த்தீசுவரர்கள் இவர்களை [ஆவாஹனஞ் செய்து] பூஜித்து, நெய் 2 முதலியவற்றால் ஹோமஞ்செய்து, திருப்தியையுண்டுபண்ணி, தேவதைகள் ஸாந்நித்யமாவதற்காக, ஸம்ஹிதாமந்திரத்தால் ஆயிரம் அல்லது ஐநூறு அல்லது நூறு முறை ஹோமம் செய்து, பூர்ணாகுதியைக் கொடுக்கவேண்டும்.

230. இவ்வாறே மூர்த்திபர்களும், தத்துவதத்துவேசுவரர்கள் தத்தம்க்குரிய மூர்த்தி மூர்த்தீசுவரர்கள் ஆகிய இவர்களுக்கு ஹோமஞ்செய்து,ஸாந்நித்யத்திற்காகவும் ஹோமஞ்செய்ய வேண்டும்.

## லிங்கத்தைச் சுத்தி செய்யுமுறை.

231-231½. பின்னர், பொருள் சமயம் இவற்றிற்குரியவாறு பஞ்சப்பிரம்ம மந்திரம், ஷடங்கமந்திரம் இவற்றாலும் ஹோமஞ்

---

1 மேகலைகளில் மூன்று தத்துவங்களையும் ஐந்து கலைகளையும் நியாஸஞ்செய்யவேண்டுமென்று ஸித்தாந்தசேகரத்திற்கூறப்பட்டிருக்கின்றது.

2 ஸமித்து, நெய், சரு, பொரி, மாவு, கடுகு, எள்ளு, அப்பம், யவம், வன்னிமரத்தினிலை, நெல் ஆகிய பதினொரு திரவியங்களை ஹோமஞ்செய்யவேண்டுமென்று ஸித்தாந்தசேகரத்திற் கூறப்பட்டிருக்கின்றது.

செய்து, தர்ப்பத்தினடியால் சாந்தி கும்பத்திலுள்ள தீர்த்தத்தை எடுத்து, லிங்கத்தினடியைப் புரோக்ஷித்து, லிங்கத்தினடியைத் தொட்டுக்கொண்டு, ஹோமஸங்க்யையை அனுசரித்து ஜபிக்கவேண்டும். (ஸங்க்யை-எண்)

232-233½. இருதயமந்திரத்தால் ஸந்நிதானம், கவசமந்திரத்தால் நிரோதனம், அவகுண்டனம் ஆகிய இவற்றைச் செய்து, பிரமபாகத்தைச்சுத்தி செய்து, விஷ்ணுபாகம் முதலியவற்றைச் சுத்தி செய்வதற்காக முன்போல் யாவற்றையுஞ் செய்து, ஓமத்தின் எண்ணை அனுசரித்து ஜபம் முதலியவற்றையுஞ் செய்து, தர்ப்பங்களின் நடு நுனி இவற்றால் லிங்கத்தின் நடு நுனி இவற்றைப் பரிசிக்கவேண்டும்.

234-235. ஸந்தானஞ்செய்யும் முறையாவது:— ஓம் ஹாம் ஹாம் என்றேனும், ஓம் ஓம் ஓம் என்றேனும், ஓம் ரூம் ரூம் என்றேனும், பீஜாக்ஷரத்தை உச்சரித்து, க்ஷாந்தியதீதாய நம: என்றும், ஓம் ஹாம் ஹாம் அல்லது, ஓம் ஓம் ஓம், அல்லது, ஓம் ரூம் ரூம் என்னும் பீஜாக்ஷரத்தை முன்னிட்டு வஹ்நிருத்யதீதாய நம: என்றும் உச்சரிக்க வேண்டும். இவ்வாறே யஜமானன் முதலிய மூர்த்திகளுக்கும் ஸந்தானஞ் செய்யவேண்டும். ஐந்து மூர்த்திகளைக்கொண்ட யாகத்திலும், இவ்வாறே இருதய பீஜம் முதலியவற்றால் ஸந்தானஞ் செய்யவேண்டும். (ஆன்மதத்துவம் வித்தியாதத்துவம் சிவதத்துவம் ஆகிய) மூன்று தத்துவங்கள் ரூபமாயுள்ள மூலமந்திரத்தில் 1 தத்தம் பீஜாக்கரங்களால் ஸந்தானஞ் செய்யவேண்டும்.

## பீடசுத்தி முதலியன.

236. பிரமசிலை, பிண்டிகை, விருஷபம் இவற்றில்ஒவ்வொரு பாகமும் சுத்தியாதற்காக 2 தம்மந்திரங்களால் நூறு முதலிய

---

1 ஓம் ஹாம் ஹீம் ஆத்மதத்த்வவித்யாதத்த்வாப்யாம் நம: । ஓம் ஹீம் ஹூம் வித்யாதத்த்வ ஶிவதத்த்வாப்யாம் நம: என்று ஸந்தானம் செய்யவேண்டும்.

2 க்ரியாஶக்தயே ஹூம் ஹா என்பது முதலிய மந்திரங்களால் என்பது கருத்து. சிவலிங்கப்ரதிஷ்டா விதியில் விரிவாகக் கூறப்பட்டமையால் இங்கு விரிவாகக் கூறப்படவில்லை.

எண்ணில் யாதானுமொரு எண்ணை அனுசரித்து ஹோமஞ்செய்து பூர்ணாகுதியைக் கொடுக்க வேண்டும்.

237. குறைதல் முதலிய தோஷங்களின் நீக்கத்திற்காக சிவமந்திரத்தை உச்சரித்து, நூற்றெட்டு முறை ஹோமஞ் செய்து, (ஆசாரியர், தம்மால்) செய்யப்பட்ட கிரியைகளைச் சிவபெருமானுடைய [வலது] காதில் அறிவிக்க வேண்டும்.

238-238½. [அறிவிக்கும் முறை வருமாறு:—] ஓ பிரபுவே! தேவரீரது சக்தியைத் துணையாகக்கொண்ட என்னால் இந்தக் கர்மாவானது தேவரீருக்குச் சமர்ப்பிக்கப்பட்டது. பகவானான உமக்கு நமஸ்காரம். துக்கத்தை நீக்கும் சிவபெருமானே! உமக்கு நமஸ்காரம். பூர்ணமாகவேனும் அபூர்ணமாகவேனும் இருக்கும் இந்தக் கிரியையைத் தன்னுடைய சக்தியால் பூர்த்திசெய்து ஏற்றருள வேண்டும். [என்பதாம்] ஓம் ஹௌம் ஶக்ஷிவ வ-ஶாய வ-ஷாயஸ்வாஹா என்று பிண்டிகையிலும் அறிவிக்க வேண்டும்.

239-239½. பின்னர், லிங்கத்தில் ஞானசக்தியையும், பீடத்தில் கிரியா சக்தியையும், பிரமசிலையில் ஆதாரசக்தியையும் நியாஸஞ் செய்து நிரோதனஞ் செய்யவேண்டும்.

240-241. ஏழுநாட்களேனும், ஐந்துநாட்களேனும், மூன்று நாட்களேனும், ஒருநாளேனும், அல்லது அப்பொழுதேனும் அதிவாஸஞ் செய்ய வேண்டும். அதிவாஸஞ் செய்யப்படாத யாகம் பலத்தைத் தராது.

242-242½. ஒவ்வொரு அதிவாஸதினத்திலும், தம் மந்திரங்களால் நூறு நூறு முறை ஆகுதிகளைக் கொடுக்கவேண்டும். சிவகும்பம் முதலியவற்றிற்குப் பூஜையைச் செய்து, திக்பலியையுங் கொடுக்க வேண்டும். ஸ்ரீ சோமசம்புசிவாசாரியரால் இந்த அதிவாஸ விதியானது கூறப்பெற்றது.

ஆகச் சுலோகம் 1577.

காமியவிதியில் அதிவாஸவிதி முற்றிற்று.

## சிவலிங்கப்ரதிஷ்டா விதி.

1-2-2½. காலையில் 1 நித்தியவிதியைச் செய்து, 2 துவார பாலர்களைப் பூஜித்து, [மேற்கு வாயில் வழியாக மண்டபத்திற்குள்] பிரவேசித்து, முன் கூறியபடி தேகசுத்தி 3 முதலியவற்றைச் செய்யவேண்டும். திக்பாலர்களை அருச்சித்து, சிவகும்பம் வர்த்தனீ இவற்றைப் பூஜித்து, அஷ்டபுஷ்பங்களால் லிங்கத்தை அருச்சித்து, அக்கினியில் ஹோமத்தையும் முறையே செய்யவேண்டும்.

## பிரமசிலையை நியாஸஞ் செய்தல்.

3-3½. பின்னர், சிவபெருமானிடம் 4 உத்தரவு பெற்று, அஸ்திரமந்திரத்தை உச்சரித்து, ப்ராஸாதத்திற்கு [கர்ப்பக்கிருஹத்திற்குச்] சென்று, ஹும்பட் என்னும் பதத்தை இறுதியிலுடைய அஸ்திரமந்திரத்தை உச்சரித்து, அங்குள்ள விக்னங்களைப் போக்கவேண்டும்.

4-5. கர்ப்பக்கிருஹத்தின் நடுவில் லிங்கத்தை ஸ்தாபிக்கக் கூடாது. வேதம்[நடு நூலின் சம்பந்தம்)ஆகிய தோஷம் நேருமாதலால் ஒரு யவம் அல்லதுபாதியவம் அளவு விட்டுச் சிறிது ஈசான திக்கைஆச்ரயித்து பிரமசிலையின் நடுவில் ஸ்தாபிக்கவேண்டும்.

6. அநந்தை என்னும் பெயரை உடையதாயும், எல்லா அத்துவாக்களுக்கும் ஆதார ரூபிணியாயும், எல்லா 5 அங்கங்களுடன் கூடியதாயும். அசலையாயும் [ஸ்திரையாயும்] உள்ள பிரமசிலையை, 6 மூலமந்திரத்தால் நியாஸஞ் செய்ய வேண்டும்.

---

1 காலையில் செய்யவேண்டிய ஸந்தி, மத்யாஹ்னத்தில் செய்யவேண்டிய ஸந்தி ஆகிய இரண்டையும் என்பது பொருள்.

2 வாஸ்துபிரமன் முதலியவர்களை என்பது கருத்து.

3 முதலியவற்றை என்னும் பதத்தால் ஸ்தானசுத்தி, விசேஷார்க்யம் சேகரித்தல், திரவியசுத்தி, மந்திரசுத்தி, பஞ்சகவ்வியம், பஞ்சாமிருதம், சிவஹஸ்தம் செய்தல் முதலியவற்றைக் கொள்ள வேண்டும்.

4 பிரதிஷ்டைக்காக உத்தரவு பெற்று என்பது கருத்து.

5 ஸர்வாங்கவ்யாப்திஸஹிதாம் என்றவித்தாந்தசேகரபாடத்தைக் கொண்டால், எங்கும் வியாப்தியை உடையதாயும் என்பது பொருளாகும்.

6 ஓம் ஹ்ரீம் ஆதாரஶக்தயே நம: என்பது மூலமந்திரம்.

7-7½. அல்லது ஓ॰ நமோவ்யாபி நிஷ்டே சுவசெய்ரு வெஹ்ரீம் ஆம் ஹ்ரீம் ஸ்வாஹா என்னும் மந்திரத்தை உச்சரித்து, சிவபெருமானுக்கு ஆஸன ரூபமாயுள்ள ஆதார சக்தியை "ஓ சக்தியே! சிவபெருமானுடைய ஆணையால் இங்கு எப்பொழுதும் தாம் வீற்றிருக்க வேண்டும்" என்று பிரார்த்தித்து, அருச்சித்து நிரோத முத்திரையால் நிரோதனஞ் செய்ய வேண்டும்.

## பிரமசிலையிலுள்ள குழிகளில் வைரம் முதலிய திரவியங்களையிடுதல்.

8-9-10-10½. 1 வஜ்ரம் முதலிய ரத்தினங்கள், விலாமிச்சை வேர் முதலிய ஓஷதிகள், சுவர்ணம் முதலிய லோஹங்கள், ஹரிதாளம் முதலிய தாதுக்கள், வ்ரீஹி [நெல்] முதலிய தான்யங்கள் ஆகிய முன் கூறப்பட்ட இவற்றை, முறையே பிரபாசக்தி ரூபங்களாயும், ஆரோக்யசக்தி ரூபங்களாயும், தேஹசக்தி ரூபங்களாயும், வீர்யசக்தி ரூபங்களாயும், தீப்தி [பிரகாச] சக்தி ரூபங்களாயும், ஒரே மனதாகப்பாவித்து, லோகபாலர்களின் மந்திரங்களால், கிழக்கு முதலிய திக்குக்களிலுள்ள எட்டுக் குழிகளில் ஒவ்வொன்றாக முறையே நியாஸஞ்செய்யவேண்டும்.

11-14½. சுவர்ணம், அல்லது தாம்பிரத்தாலாக்கப் பெற்ற ஆமை, அல்லது விருஷபத்தை, ஆற்றின் கரை அல்லது பர்வதத்தின் உச்சியிலுள்ள மிருத்திகையுடன், நடுவிலுள்ள குழியில்வாயிலை நோக்கி நியாஸஞ் செய்யவேண்டும். அல்லது சுவர்ணத்தாலாக்கிய மேருவை தேன் அக்ஷதை, மை இவற்றுடன் நியாஸஞ் செய்யவேண்டும். சுவர்ணம் அல்லது வெள்ளியாலாக்கப் பெற்ற பூமியை எழுவகை தான்யம், சுவர்ணம் இவற்றுடன் நியாஸஞ் செய்யவேண்டும். அல்லது சுவர்ணத்தாலேனும் வெள்ளியாலேனும் எல்லா லோகங்களாலேனும் ஆக்கப்பெற்ற தாமரையை, சுவர்ணம், 2 விஷ்ணுக்ராந்தம், இவற்றுடன் அநந்த மந்திரத்தால் நியாஸஞ் செய்யவேண்டும்.

---

1 அதிவாஸவிதி 95-வது சுலோகம் முதல் இவற்றின் பொருள் விளக்கப்பட்டிருக்கின்றது.

2 க்ராவாஹ என்னும் பாடத்தைக் கொண்டால் என்ஞ எனப் பொருள் படும்.

15-16-16½. சிவபெருமானுக்கு ஆதாரசக்தி முதல் சிவ சக்தி ஈறுகிய ஆஸனத்தைக் கற்பித்து, பாயஸத்தாலேனும் குங் கிலியத்தாலேனும் குழியைப் பூசி, கவசமந்திரத்தால் ஜபிக்கப் பட்ட ஆடையால் மூடி, அஸ்திரமந்திரத்தால் ஸம்ரக்ஷணஞ் செய்து, திக்பாலர்களுக்குப் பலி சமர்ப்பித்து, ஆசாரியர் ஆசமனம் செய்யவேண்டும்.

17-18. பிரமசிலைக்கும் சூத்திரத்திற்கும் [கயிற்றுக்கும்] உண்டான சேர்க்கையால் நேரிட்ட தோஷம் நீங்குதற்காக, மூல மந்திரம் அல்லது அஸ்திரமந்திரத்தை உச்சரித்து, நூறு ஆகுதி களைச் செய்து, பூர்ணுகுதி கொடுத்து, வாஸ்துதேவதைகளை ஒவ் வொரு ஆகுதிகளால் திருப்தி செய்துவைக்க வேண்டும்.

## பிரமசிலையில் லிங்கத்தை நியாஸஞ் செய்தல்.

19-20-20½. இருதயமந்திரத்தை உச்சரித்துச் சிவபெரு மானை ரதத்தில் எழுந்தருளச் செய்து, மங்களவாத்தியம் முதலி யவற்றுடன் அழைத்து வர வேண்டும். தத்தம் திக்குக்களில் இருக்கும் மூர்த்திபர்களுடன் ஆசார்யர், சிவபெருமானுக்குமுன் னர்ச் செல்லவேண்டும். சிவபெருமான் எழுந்தருளிய ரதத்திற் குப் பின்னர், பந்துக்களுடன் யஜமானன் செல்லவேண்டும். இவ்வாறு சென்று பிராஸாதம் 1 முதலியவற்றைப் பிரதக்ஷிணஞ் செய்து, லிங்கத்தை பத்ரபீடத்தில், வாயிலை நோக்கி நீளமாக ஸ்தாபித்து, பிராஸாதத்திற்குட்கொண்டு போகவேண்டும்.

21-22. வாயில் செய்யப்பட்டிருந்தால் வாயில்வழியாகவும், செய்யப்படாவிடில் வாயிலை ஸங்கேதஞ் செய்து அதன் வழியாக வும், வாயிற் கட்டானது சிகையுடன் கூடாதிருந்தால் அதற்கு மேலாகவும், கூடியிருந்தால் வாயில் சாகைகளை ஸ்பரிசிக்காமல் வாயில் வழியாகவும் லிங்கத்தைக் கொண்டு போகவேண்டும்.

23. பிராஸாதத்தைக் கட்டுவதற்குத் தொடங்கியிருந்தால் மூலை வழியாகவும் கொண்டுபோகலாம். இதே விதியை எல்லா வியக்த லிங்கங்களிலும் அறிந்துகொள்ள வேண்டும்.

---

1 முதலிய என்னும் பதத்தால் கிராமத்தைக் கொள்ள வேண்டும்.

**24-25.** வாயில் வழியாகப் பிராஸாதத்திற்குச் செல்லு தல் ஜனங்களாலும் விரும்பப்பட்டிருக்கின்றது. அப்ரதானவா யில் வழியாக ப்ரவேசித்தால் வம்சத்திற்கு நாசமுண்டாகும். கர்த்தாவுக்கு நாசமுண்டாகும். ஆகையால் சாந்தியைச் செய்ய வேண்டும். ஜீர்ணமாதல் முதலிய தோஷங்களையுடைய லிங்கத் தை அப்ரதான வாயில் வழியாக வெளியில் கொண்டுபோக வேண்டும்.

**26-28½.** பின்னர் பத்ர பீடத்தில் லிங்கத்தை வாயிலைநோ க்கி ஸ்தாபித்து, வாத்தியம் முதலிய மங்கள கோஷத்துடன் அறுகு அக்ஷதை இவற்றால் அருச்சித்து, இருதயமந்திரத்தை உச்சரித்து "எழுந்தருளவேண்டும்" என்று சொல்லி, மகாபாசு பத மந்திரத்தை உச்சரித்துக்குழியிலிருந்து பலகைகளை விலக்கி ஆசாரியர் மூர்த்திபர்களுடன் [தென்னங்கயிறு முதலியவற்றால்] யந்திரத்தில் இருத்தித் தரிக்கச் செய்துகொண்டு, குங்குமம்முத லியவற்றைப் பூசி, சக்தி சக்திமான் இருவருக்கும் ஐக்யத்தைப் பாவித்து, தாரணையால் இரக்ஷிக்கப்பட்ட மூலமந்திரத்தை லய மீறாக உச்சரித்து, ஸிருஷ்டிக்ரமமாகக் குழியில் லிங்கத்தை நியா ஸஞ் செய்யவேண்டும்.

**29-30-30½.** பிரமபாகத்தின் மூன்றில் ஒரு பாகத்தையே னும், மூன்றில் இரண்டு பாகங்களையேனும், பாதிப்பாகத்தையே னும், எட்டில் ஒரு பாகத்தையேனும், யாவற்றையும் கீழே குழி யில் பிரவேசிக்கச் செய்து, நீளமுள்ள ஈயக்கரண்டிகளால் கெட் டிப்படுத்தி, குழியை மணலால் நிரப்பி, ஸ்திரமாக இருக்க வேண் டும் என்று கூறவேண்டும்.

**31-31½.** பின்னர், லிங்கமானது ஸ்திரமாக ஆனதும், ஸகள ரூபியான சிவபெருமானைத் தியானித்து, சக்தியீறாக மூலமந்திர த்தை உச்சரித்து, ஸிருஷ்டிக்ரமமாக நிஷ்களரானசிவபெருமானை லிங்கத்தில் நியாஸஞ் செய்யவேண்டும்.

**32-32½.** லிங்கத்தை ஸ்தாபிக்கும்பொழுது எந்த எந்தத் திக்கை நோக்கி லிங்கம் சாய்கின்றதோ, அந்த அந்தத் திக்பால ரின் மந்திரத்தால் [நூறு அல்லது ஆயிரம் முறை ஹோமஞ் செ ய்து] தக்ஷிணைஸமர்ப்பித்து, பூர்ணாகுதியைக்கொடுக்கவேண்டும்.

33-33½. சப்தம் உண்டாதல், வக்ரமாதல், பிரமித்தல், வெடித்தல் ஆகிய தோஷங்கள் நேரிட்டால் மூல்மந்திர அல்லது அகோரமந்திரத்தால் நூறு முறை ஹோமஞ் செய்யவேண்டும்.

34-34½. இவையின்றி ஏனையதோஷங்கள் நேரிடினும், சிவபெருமானுக்குரிய சாந்தியைச் செய்ய வேண்டும். இவ்வாறான தோஷங்கள் நீங்குதற்காகக் 1 கூறப்பட்ட நியாஸங்களை லிங்கத்தில் செய்யவேண்டும்.

## 2 பிண்டிகையை ஸ்தாபிக்கும் முறை.

35-36. பீடபந்தனத்தலால் [பீடத்தைச் சேர்த்தலால்] இலக்ஷணத்துடன் கூடியதாகவும், பரிசலக்ஷணத்தை உடையதாகவும் செய்து, கௌரீ மந்திரத்தை லயமீறாக உச்சரித்து, ஸிருஷ்டிக்ரமமாகப் பிண்டிகையை நியாஸஞ் செய்து, பக்கங்களிலுள்ள [லிங்கம் பீடம் இவற்றிற்கு இடையிலுள்ள] ஸந்தியை [சிறிதாயும் மிருதுவாயுமுள்ள] மணல் வஜ்ரத்தால் பூசுதல் இவற்றால் 3 நிரப்பவேண்டும்.

37-38. பின்னர் ஆசாரியர், மூர்த்திபர்களுடன் சாந்திகும்பத்திலுள்ள தீர்த்தத்தின் பாதியால் அபிஷேகஞ்செய்து, ஏனைய

---

1 லிங்கத்தில் பஞ்சப்ரஹ்ம ஷடங்க மந்திரங்கள், முப்பத்தெட்டுக் கலைகள், தத்துவ தத்துவேசுவர மூர்த்தி மூர்த்தீசுவர மந்திரங்கள் இவற்றை நியாஸஞ் செய்து, முத்திரைகளுடன் ஆவாஹனம் முதலியவற்றைச் செய்து, பாத்யம் ஆசமனம் அர்க்யம் புஷ்பம் கந்தம் ஆடைகள் இவற்றைச் சமர்ப்பிக்கவேண்டுமென்று வித்தாந்தசேகரத்தில் கூறப்பட்டிருக்கின்றது.

2 காமிகம் வித்தாந்த சேகரம் இவற்றில் பீடஸ்தாபன விதி விரிவாகக் கூறப்பட்டிருப்பதால் விரிவை அங்குக் காண்க.

3 நிரப்பி ஒழுங்கு செய்த பின்னர், "சிற்பியை அங்கிருந்து உத்வாஸனஞ் செய்து, ஆசாரியர் மூர்த்திபர்களுடன் ஸ்நானஞ்செய்து, ஆசமனம் ஸகளீகரணமிவற்றைச் செய்து, கர்ப்பகிருஹத்திற்குச் சென்று, பலமுறை ஜலத்தால் லிங்கம் பீடம் இவற்றைக் கழுவ வேண்டும்" என்று கூறி இதன் பின்னர் சாந்தி ஜலத்தால் அபிஷேகம் செய்தல் வித்தாந்தசேகரத்தில் கூறப்பட்டிருக்கின்றது.

கலசங்களிலுள்ள தீர்த்தத்தாலும், பஞ்சாமிருதம் 1 முதலியவற்றாலும் அபிஷேகஞ்செய்து, சந்தனம் முதலியவற்றால் பூசி, சிவபெருமானைப் பூஜித்து, உமாமஹேசுவர மந்திரங்களால் லிங்கம் பீடம் இவற்றை லிங்கமுத்திரை செய்துகொண்டு ஸ்பரிசிக்க வேண்டும்.

39-39½. பின்னர், த்ரிதத்துவநியாஸம், ஷடத்வ நியாஸம், மூர்த்தி மூர்த்தீசுவர நியாஸம், பஞ்சப்ரஹ்ம 2 ஷடங்க நியாஸம் இவற்றைச் செய்து, லிங்கத்தில் ஞானசக்தியையும், பீடத்தில்

---

1 முதலிய என்னும் பதத்தால் "கங்கை முதலிய நதீ தீர்த்தம், கோசிருங்கோதகம், பலோதகம், பல்லவோதகம், இரத்னோதகம் முதலியதீர்த்தங்களை மூலமந்திரம், பஞ்சப்ரஹ்ம ஷடங்கமந்திரம், வேதத்தில் விதிக்கப்பெற்ற அப்லிங்கமாயுள்ள (ஆபோஹிஷ்டா என்னும் தொடர்புள்ள) சூக்தம், சிவசூக்தம், கௌரீசூக்தம் இவற்றை உச்சரித்து, மங்களகோஷத்துடன் சிவபெருமானுக்கு அபிஷேகஞ் செய்யவேண்டும். பின்னர் ஆசாரியர் மூர்த்திபர்களுடன் மண்டபத்திற்குச் சென்று, கும்பத்தில் எழுந்தருளிய சிவபெருமான் வர்த்தனியில் எழுந்தருளிய கௌரீ இவர்களை வணங்கி, நம்பம் வர்த்தனி இவற்றை எடுத்து, நிருத்தம் கீதம் இவற்றுடன் பிராஸாதத்தை வலம் வந்து, பின்னர் உள்ளே சென்று, கும்பம் வர்த்தனி இவற்றை ஸ்தண்டிலத்தில் ஈசுவர ஸந்நிதியில் வைத்து, கும்பத்திலுள்ள சிவமந்திரத்தை ஜலத்துடன் கும்பத்திலிருந்து எடுத்து, அஞ்சலியின் நடுவில் அறுகு புஷ்பம் அக்ஷதை இவற்றுடன் வைத்துக்கொண்டு, மூலமந்திரத்தை மிகவும் ஸ்பஷ்டமாக துவாதசாந்தம் வரை உச்சரித்து, அங்குள்ள சிவபெருமானைப் புருவ நடுவுக்குக் கொண்டுவந்து, அஞ்சலியை அடைந்தவராகத் தியானித்து, சிவகும்பத்திலுள்ள தீர்த்தத்தை லிங்கத்தில் சிவமந்திரத்தை உச்சரித்து அபிஷேகஞ் செய்யவேண்டும். இவ்வாறே வர்த்தனீ தீர்த்தத்தை பீடத்தில் அபிஷேகஞ்செய்யவேண்டும்" என்பது முதலியன கொள்ளக்கிடக்கின்றன. இந்த விஷயம் ஸித்தாந்தசேகரத்திலுள்ளது.

2 தினந்தோறும் செய்யப்படுவதுபோல் தண்டபங்கி நியாஸம், அஷ்டத்ரிம்சத் கலாநியாஸம் முதலியவற்றைச் செய்து, பீடத்திலுமிவ்வாறே நியாஸஞ் செய்து, பிரமசிலையில் ஆதார சக்தியை நியாஸஞ் செய்து, பரமீகரணஞ் செய்து, தேநு முத்திரை, மஹாமுத்ரை இவற்றைக் காண்பிக்க வேண்டும் என்று ஸித்தாந்த சேகரத்தில் கூறப்பட்டிருக்கின்றது.

க்ரியாசக்தியையும் நியாஸஞ்செய்து, 1 அபிஷேகஞ் செய்ய வேண்டும்.

40-40½. பின்னர், குங்குமப்பூ பச்சைக்கர்ப்பூரம். இவை கலந்த சந்தனத்தைச் சிவபெருமானுக்கு இட்டு, எல்லா ஆபரணங்களாலும் அலங்கரித்து, (ஆடையைச் சாத்தி) நெய்யுடன் கூடிய குங்கிலியத்தைத் தகித்துத் தூபஞ்சமர்ப்பித்து, வியாபகமாகச் சிவபெருமானை நியாஸஞ் செய்யவேண்டும்.

41-42-43. புஷ்பமாலை, தூபம், தீபம், 2 நைவேத்யம், பழங்கள் இவற்றைச் சக்திக்குத் தக்கவாறு இருதய மந்திரத்தை உச்சரித்து ஸமர்ப்பித்து, ஆசமனம் அர்க்கியம் இவற்றைச் சமர்ப்பித்து, மூலமந்திரத்தை ஜபம்செய்து சிவபெருமானுடைய வரத ஹஸ்தத்திற் சமர்ப்பித்து; சந்திரன் சூரியன் நக்ஷத்திரங்கள் இவை இருக்குமளவும் இந்த ஆலயத்தில் மந்திரேசுவரர் மூர்த்தீசுவரர் இவர்களுடன் தேவரீர் தம் இஷ்டப்படி ஸாந்நித்யஞ்செய்தருள வேண்டும் என்று சிவபெருமானிடம் பிரார்த்திக்க வேண்டும்.

## விருஷப ஸ்தாபனம்.

44. இவ்வாறு பிரார்த்தித்து, சிவபெருமானை வணங்கி வெளியில் வந்து, இருதயமந்திரம், அல்லது பிரணவத்தால் விருஷபத்தை ஸ்தாபித்து, பின்னர் முன்போல் (எல்லாத் திக்குக்களிலும்) பலியைச் சமர்ப்பிக்க வேண்டும்.

## விருஷபத்தை ஸ்தாபித்த பின் செய்யவேண்டுவன.

45-46-47. பின்னர் 3 குறைதல் முதலிய தோஷங்கள் நீங்குதற்காக, மிருத்யுஞ்ஜய மந்திரத்தை உச்சரித்து, நூறு

---

1 மாவால் செய்யப்பட்ட திக்பாலர்களின் ஆயுதங்களை, லிங்கத்தில் மங்களகோஷத்துடன் திக்பாலர்களின் மந்திரத்தாலேனும், பாசுபதாஸ்திரத்தாலேனும் பூசி, ஸ்நபன கலச தீர்த்தங்களை அபிஷேகஞ் செய்ய வேண்டும் என்பது கருத்து.

2 நைவேத்யம் சமர்ப்பிக்கும் முறை ஸித்தாந்த சேகரத்தில் விரிவாகக் கூறப்பட்டிருக்கின்றது. நைவேத்யம் சமர்ப்பித்த பின் ஹஸ்தப்ரக்ஷாளனம் செய்து, முகவாசம் முதலியவற்றைச் சமர்ப்பிக்க வேண்டும்.

3 வாக்கு மனம் சரீரம் இவற்றால் நேரிட்ட தோஷங்கள் நீங்குதற்காக ஸமித்து, நெய், சரு, எள்ளு இவற்றை, சிவமந்திரம் சக்திமந்திரம் இவற்றால் தனித்தனி நூறு முறை ஹோமஞ் செய்து, வியாஹிருதி ஹோமஞ் செய்து, பூர்ணாகுதி கொடுக்க வேண்டுமென்று ஸித்தாந்த சேகரத்தில் கூறப்பட்டிருக்கின்றது.

முறை ஸமித்துக்களை ஹோமஞ் செய்து, சாந்திக்காக சருவாலும் சிவமந்திரத்தால் ஹோமஞ் செய்யவேண்டும். (மீண்டும் சிவபெருமானருகிற் சென்று) "ஓ பிரபுவே! அறிந்தும் அறியாமலும் செய்த யாவற்றையும் பூர்த்தி செய்தருள வேண்டும்" என்று பிரார்த்தித்து, சக்திக்குத் தக்கவாறு தன்னுடைய சுவர்ணம், பசுக்கள், பூமி முதலிய யாவற்றையும் கீதம் வாத்யம் முதலியவற்றிற்காக [நித்ய பூஜைக்காக] சிவபெருமானுக்கு நிவேதனஞ் செய்ய வேண்டும். பின்னர், நான்கு தினங்கள் தானம் மஹோத்ஸவம் இவற்றைச் செய்யவேண்டும்.

48-49-49½. ஆசாரியர், மூர்த்திபர்களுடன் 1 மூன்று தினங்களிலும் மூன்று ஸந்திகளிலும் ஹோமஞ்செய்ய வேண்டும். நான்காவது தினத்தில் அகோரமந்திரத்தை உச்சரித்து எல்லாக் குண்டங்களிலும் ஸம்பாதஹோமஞ் செய்ததால் சுத்தஞ் செய்யப்பெற்ற சருவை நிவேதனஞ் செய்யவேண்டும். நான்காவது தினம் வரை நிர்மாலிய தோஷம் கிடையாது. நான்காவது தினத்தில் நிர்மாலியத்தை நீக்கி லிங்கத்திற்கு அபிஷேகஞ் செய்து பூஜை செய்யவேண்டும்.

---

1 பிரதிஷ்டை செய்த தினம் முதல் மூன்று தினங்கள் லிங்கத்திற்கு அபிஷேகமின்றி, நெய், பஞ்சகவ்யம் இவற்றால் லிங்கத்தைப் பூச வேண்டும். அது எவ்வாறெனில் முதல், தினத்தில் மஞ்சளாலும், இரண்டாவது தினத்தில் கடுகாலும், மூன்றாவது தினத்தில் வெள்ளலொத்தியாலும், நான்காவது தினத்தில் ஸ்நபனங்களுடன் மையாலும், ஐந்தாவது தினத்தில், மனோசிலையாலும், ஆறாவது தினத்தில் கபிலநிறமுள்ள பசுவின் நெய்யாலும், ஏழாவது தினத்தில் கோரோசனையாலும் பூசவேண்டும் என்று ஸித்தாந்த சேகரத்தில் கூறி, வேறு சில திரவியங்களாலும் லிங்கத்தைப் பூசும் முறை கூறப்பட்டிருக்கின்றது. அன்றியும், "மூன்று தினங்களிலும், மூன்று ஸந்திகளிலும், ஆசாரியர் முதலிய யாவரும், சத்தம் குண்டங்களில் எள்ளு, நெய், ஸமித்து, சரு இவற்றால் நூற்றெட்டு, அல்லது ஆயிரம் முறை ஹோமஞ் செய்து, பின்னர் ஆசாரியர் பலியைச் சமர்ப்பிக்க வேண்டும். இரவில் நர்த்தனம், கீதம், ஸ்தோத்ரம் முதலியவற்றால் மஹோத்ஸவத்தைச் செய்யவேண்டும். லிங்கோத்பத்தி முதலாக லிங்கமாஹாத்மியத்தைப் படிக்கச் செய்ய வேண்டும். அதிவாஸ தினம் முதல் பிராமண போஜனம் முதலியன நடைபெறவேண்டும். ஆசாரியர் முதலாயினோர், யஜமானரால் பூஜிக்கப்பெற்றுப் புசிக்கவேண்டும். நான்காவது தினத்தில் காலையில் ஆசாரியர் மூர்த்திபர்களுடன் ஸ்நானம் ஸந்த்யோபாஸனைகளை

50-51-51½. (அரசர் முதலியவர்களால் பிரதிஷ்டை செய்யப்பட்ட) ஸாமான்ய லிங்கங்களில், 1 ஸாதாரணமந்திரங்களால் பூஜை செய்யவேண்டும். லிங்கத்தின் சைதன்யத்தை விஸர்ஜனஞ்செய்யாமல், தம் மந்திரங்களை விஸர்ஜனஞ் செய்யவேண்டும். அஸாதாரண லிங்கங்களில் க்ஷமஸ்வ என்று சொல்லி விஸர்ஜனம் செய்யவேண்டும். ஆவாஹனமாவது 2 வெளிப்படுதல். விஸர்ஜனமாவது 3 சக்தியின்மை.

52-53-53½. சில நூல்களில், 4 பிரதிஷ்டையின் முடிவில், ஸ்திரம் முதலிய குணங்களால் ஏழு ஆகுதிகளைக் கொடுக்கும்

---

முடித்து, ஆலயத்திற்குச் சென்று, எல்லா நிர்மாலியங்களையும் நீக்கி, ஐந்து சுத்திகளையுஞ்செய்து, பின்னர் நித்யபூஜை செய்து, நூற்றெட்டு முறை ஹோமஞ்செய்ய வேண்டும். மத்யாஹ்னத்தில் ஆயிரம், அல்லது ஐநூறு, அல்லது இருநூற்றைம்பது, அல்லது நூறு, அல்லது ஐம்பது, ஸ்நபனகலச தீர்த்தங்களால் லிங்கத்திற்கு அபிஷேகஞ்செய்ய வேண்டும். கந்தம், புஷ்பம், நைவேத்தியம் இவற்றைச் சமர்ப்பித்து, நித்யஹோமம் செய்யவேண்டும். குறைதல் முதலிய தோஷங்கள் நீங்குதற்காக, தத்தம்மந்திரங்களால் ஆயிரம் அல்லது நூற்றெட்டு முறை ஹோமஞ் செய்யவேண்டும். எல்லோரும் வியாஹ்ருதி ஹோமத்தைச் செய்து கர்மாவைப் பூர்த்தி செய்யும் பூர்ணாகுதியைச் செய்ய வேண்டும்" என்றும் கூறப்பட்டிருக்கிறது. சிவலிங்கப்ரதிஷ்டா விதியிலும் பிரதிஷ்டாதினத்திற்குப் பின்னர் இரண்டாவது மூன்றாவது தினங்களில் செய்யவேண்டுவன கூறப்பட்டிருக்கின்றன. விரியுமாதலின் இங்கு எழுதப்படவில்லை.

1 பிரணவம், மாதிருகை, மாயை, வ்யோமவ்யாபி, ஷடக்ஷரம், ப்ராஸாதம், அகோரம் ஆகிய இந்த ஏழும் ஸாதாரண மந்திரங்களெனப்படும்.

2 வெளிப்படுதலாவது- சிவசக்தியானது வெளிப்பட்டு, பிரகாசரூபமாகவும், அனுக்ரஹரூபமாகவும் பூஜகருக்குஅபிமுகமாதல்.

3 சக்தியின்மையாவது- பிரகாசமின்றி அடங்கி, பூஜகருக்குப் பராங்முகமாதல்.

4 பிரதிஷ்டை செய்த தினத்திலேனும், நான்காவது தினத்திலேனும், லிங்கம் பீடம் இவை ஸ்திரமாகுதற்காக, ஓம் நமஶ்ஶிவாய ஸ்திரோ பவ ஸ்வாஹா। ஓம் நமஶ்ஶிவாய ஸுப்ரஸந்நோ பவ ஸ்வாஹா। ஓம் நமஶ்ஶிவாய ஸுநாதிதோ பவ ஸ்வாஹா। ஓம் நமஶ்ஶிவாய நித்யோ பவ ஸ்வாஹா। ஓம் நமஶ்ஶிவாய வ்யாபகோ பவ ஸ்வாஹா। ஓம் நமஶ்ஶிவாய அவிநாஶீ பவ ஸ்வாஹா। ஓம் நமஶ்ஶிவாய த்ருப்தோ பவ ஸ்வாஹா। என்னும் மந்திரங்களால் ஹோமஞ் செய்ய வேண்டுமென்பது கருத்து.

முறை கூறப்பட்டிருக்கின்றது. ஸ்திரம், அப்ரமேயம், அநாதி போதம், நித்யம், ஸர்வகம், அவிநாசி, திருப்தம் ஆகிய இந்தக் குணங்கள் சிவபெருமானுடைய ஸாந்நித்யத்திற்காகக் கூறப்பட்டுள்ளன.

ஓம் நமசிவாய வஷிரோ ஹவஷாஹா என்பது முதலியன ஆகுதி மந்திரங்களாகும்.

54-55-55½. இவ்வாறு ஆகுதிகளைச் செய்து, சிவகும்பம் போல் இரண்டு கும்பங்களை (வேதிகையில்) ஸ்தாபித்துப், [பூஜித்து] அவற்றுள் ஒரு கும்பத்திலுள்ள தீர்த்தத்தால் சிவபெருமானுக்கு அபிஷேகத்தைச் செய்து, இரண்டாவது கும்பத்திலுள்ள தீர்த்தத்தை யஜமானருக்கு அபிஷேகம் செய்வதற்காக வைத்துக் கொள்ளவேண்டும். பின்னர், பலியைச் சமர்ப்பித்து, ஆசமனம் செய்து, [சண்டேசுவரரைப் பிரதிஷ்டை செய்வதற்காக] சிவபெருமானிடம் உத்தரவுபெற்று, வெளியிற்செல்லவேண்டும்.

## சண்டேசுவரப் பிரதிஷ்டை.

56-57-58. 1 ஜகதிக்கு வெளியில் ஈசான திக்கில், ஆலயத்தின் 2 கர்ப்பக்கிருக அளவான கோயிலில், ஆஸனபூஜை செய்யப்பெற்ற தன் [சண்டரின்] 3 பீடத்தில், முன்போல் ந்யாஸம், ஹோமம் முதலியன செய்து, விதிப்படி சண்டேசுவரரின் தியானத்துடன், சண்டரை ஸ்தாபித்து, அதன் பின் பஞ்சப்ரஹ்ம ஷடங்க மந்திரங்களால் பூஜிக்கவேண்டும். சண்டரின் அங்கமந்திரங்கள் முன்னரே கூறப்பட்டுள்ளன. இனி சண்டரின் பஞ்சப்ரஹ்ம மந்திரங்கள் கூறப்படுகின்றன.

---

1 யாகசாலையில் சண்டருக்கு முன்போல்தியானத்துடன் ஆகாரசத்தி, நேத்ரோன்மீலனம், மீண்டும் ஸ்நானம், படுக்கையில் அதிவாஸம், த்ரிதத்துவந்யாஸம், ஹோமம் முதலியன செய்யவேண்டும். இதன் பின்னரே சண்டரை அவரது ஆலயத்தில் பிரதிஷ்டை செய்யவேண்டும்.

2 சண்டேசுவர ஆலயமானது, பிரதான கர்ப்பக்கிருஹத்தின் அளவாகவும், அதில் பாதி அளவுள்ளதாகவும் இருக்கலாம்.

3 லிங்கத்தின் ஈசானபாகத்தில் இருக்கும் சண்டரை, பிரணவரூபமாகக் கும்பத்தில் ஆகர்ஷித்து, யாகசாலையில் ஸ்தாபித்துப் பூஜித்து, அபிஷேகஞ் செய்யவேண்டும் என்பது கருத்து.

𑍐 𑌹𑌂 𑌸𑌦𑍍𑌯𑍋𑌜𑌾𑌤𑌾𑌯 𑌹𑍂𑌂 𑌫𑌟𑍍 𑌨𑌮𑌃 ।
𑍐 𑌹𑌿𑌂 𑌵𑌾𑌮𑌦𑍇𑌵𑌾𑌯 𑌹𑍂𑌂 𑌫𑌟𑍍 𑌨𑌮𑌃 ।
𑍐 𑌹𑍁𑌂 𑌅𑌘𑍋𑌰𑌾𑌯 𑌹𑍂𑌂 𑌫𑌟𑍍 𑌨𑌃 ।
𑍐 𑌹𑍇𑌂 𑌤𑌤𑍍𑌪𑍁𑌰𑍁𑌷𑌾𑌯 𑌹𑍂𑌂 𑌫𑌟𑍍 𑌨𑌮𑌃 ।
𑍐 𑌹𑍋𑌂 𑌈𑌶𑌾𑌨𑌾𑌯 𑌹𑍂𑌂 𑌫𑌟𑍍 𑌨𑌮𑌃 ।

என்பது சண்டேசுவரரின் பஞ்சப்ரஹ்ம மந்திரங்களாகும். (சண்டேசுவரருக்கு விசேஷமாக அபிஷேகம் செய்து, அவரது மந்திரங்களால் நித்யபூஜை செய்து, சிவ நிர்மாலியத்தை நிவேதனம் செய்து)

59-60. சண்டேசுவர மூலமந்திரத்தை ஜபம் செய்து, அதனைச் சண்டருக்குச் சமர்ப்பித்து. ஸந்தர்ப்பணம் செய்து, நமஸ்கரித்து, "ஓ சண்டரே! சிவபெருமான் இந்த ஆலயத்தில் ஸாந்நித்பம் செய்துகொண்டிருக்கும் வரை. தேவரீர் ஸாந்நித்யம் செய்து கொண்டிருந்தருளவேண்டும். யான் அக்ஞானத்தால் செய்த குறைதல்அதிகம்முதலியஎல்லாத்தோஷங்களையும் உமது அனுக்ரஹத்தால் பூர்த்தி செய்தருள வேண்டும்" என்று சண்டரிடம் அறிவிக்க வேண்டும்.

61. பாணலிங்கம், சலலிங்கம், லோஹலிங்கம், ஸித்தரால் பிரதிட்டை செய்யப்பெற்ற லிங்கம், சுயம்புலிங்கம், எல்லா ப்ரதிமைகள் [சகளமூர்த்திகள்] ஆகிய இவற்றில் சண்டருக்கு அதிகாரம் கிடையாது.

62-63. அத்வைத பாவனையுடன் கூடிய ஸ்தண்டிலேசுவரரின் 1 பிரதிஷ்டையிலும் சண்டதோஷம் நீங்குதற்காக இவ்வாறே சண்டேசுவரரைப் பிரதிஷ்டைசெய்து, பந்துக்கள் பார்யை பரிவாரம் இவர்களுடன் கூடிய யஜமானரை, ஸ்தாபகரான ஆசாரியர், தன் கையால் முன்னர் ஸ்தாபிக்கப்பட்ட கும்பத்தால் அபிஷேகஞ் செய்து வைக்கவேண்டும்.

---

1 சண்டருக்குப் பிரிவின்மையான ஸ்தண்டிலாதிஷ்டான சிவ பூஜையிலும் என்பது கருத்து.

## ஆசாரியதக்ஷிணை.

64-65. யஜமானனும், பிரதிஷ்டை செய்த ஆசாரியனைச் சிவபெருமானைப் போல் பூசித்து, பொருளில் உலோபமின்றி, பூமி, சுவர்ணம் முதலியவற்றைத் தக்ஷிணையாக அவருக்குக்கொடுக்கவேண்டும். ஆசாரியர் சந்தோஷமடையாவிடில், யஜமானனுக்குப்பலம் நேராதாதலின், ஆசாரியருக்குச் சந்தோஷமுண்டாகும்படி அவரைப் பூஜிக்க வேண்டும்.

66-66½. பின்னர் மூர்த்திபர்கள், ஜபஞ் செய்தபிராமணர்கள், ஜோஸ்யர், சிற்பி ஆகிய இவர்களேயும், அன்புடன் சக்திக்குத் தக்கவாறு பூஜிக்க வேண்டும். (தக்ஷிணை கொடுத்தல் முதலியவற்றால் உபசரிக்க வேண்டும்.) பின்னர் முறையே தீனர்கள், குருடர், வருத்தமுற்றவர் ஆகிய எல்லோரையும் உபசரிக்க வேண்டும்.

## பிரதிஷ்டை செய்தலால் நேரும் பயன்.

67-68. பின்னர் பிரதிஷ்டை செய்த ஆசாரியர், சந்தோஷத்துடன் "பிரதிமை, லிங்கம், வேதிகை இவற்றில் எவ்வளவு பரமாணுக்கள் இருக்கின்றனவோ, அவ்வளவு எண்ணுள்ள அநேகயுகங்கள் வரை,இந்தப்பிரதிஷ்டையானது யஜமானனுக்குப்போகப் பயனை அளிக்கும்" என்ற இந்தப்பிரதிஷ்டை செய்தலால் நேரும் பயனை யஜமானனுக்கு அறிவிக்க வேண்டும்.

## ஆசாரியருக்கு யஜமானன் கூறும் உபசாரம்.

69. ஓ கருணைக் கடலான சுவாமி! இந்தப் பிரதிட்டையை நடத்தித் தந்தமையால், என்னால் தாங்கள் சிரமமுற்றிருக்கின்றீர்கள்.இந்த எல்லாச்சிரமத்தையும் பொறுத்தருளவேண்டும்.

70-70½. என்று அறிவித்துக்கொண்ட யஜமானனுக்கு, ஆசாரியர், பிரகாசிக்கிற நக்ஷத்திரக் கூட்டத்தின் காந்திபோன்ற காந்தியை உடைய பிரதிஷ்டை செய்தலால் நேரிட்ட புண்யத்தின் சமூகத்தை (ஜலம்) தர்ப்பம் புஷ்பம் அக்ஷதைகளுடன் தன்னுடைய கையால் ஸமர்ப்பிக்க வேண்டும்.

71-72. பின்னர் ஆசாரியர், பாசுபதாஸ்திரமந்திரத்தை ஜபஞ்செய்து, சிவபெருமானை வணங்கி, பலியிடுதலால் பூதங்களை ஸந்நிதானஞ் செய்து, நிரோதனஞ் செய்யவேண்டும். சிவபெரு

மான் லிங்கத்தைப் பற்றுக்கோடாகச் செய்து இருக்கும் வரை நீங்கள் (இரக்ஷித்தற்காக) இருக்கவேண்டும். [என்று பூதங்களுக்கு அறிவிக்க வேண்டும்.]

73. ஆசாரியர், யாகமண்டபத்திலுள்ள வஸ்திரம் முதலிய திரவியங்களைக் கிரஹித்துக் கொள்ளவேண்டும். அவ்வாறே ஸ்நபன மண்டபத்திலுள்ள எல்லாத் திரவியங்களையும் சிற்பி கிரஹித்துக் கொள்ளவேண்டும்.

## ஏனைய தேவர்களின் தத்துவ வியாப்தி.

74. ஏனைய தேவர்கள் முதலாயினரை அவரவர்க்குரிய தத்துவ வியாப்தியைப் பாவித்து, அவரவர்க்குரிய ஆகமங்களிலுள்ள மந்திரங்களாலேனும், முதல் அக்ஷரத்தின் வேற்றுமையாலேனும் பிரதிஷ்டை செய்யவேண்டும்.

75. ஸாத்யர் முதலிய தேவர்கள், நதிகள், ரிஷிகள், க்ஷேத்திரபர்கள், கிந்நரர் முதலியவர் ஆகிய இவர்கள் பிருதிவி தத்துவத்தைப் பற்றுக்கோடாகக் கொண்டு இருக்கின்றனர்.

76. 1 ஸரஸ்வதீ, லக்ஷ்மீ, நதிகள், இவர்களுக்கு ஜலதத்துவம் பற்றுக் கோடாக இருக்கின்றதென்று சிலவிடங்களில் காணப்படுகின்றது. புவனாதிபதிகளும், அவ்வவர்க்குரிய தத்துவத்தைப் பற்றுக்கோடாகக் கொண்டு இருக்கின்றனர்.

77. அண்டம், [பிருதிவீ] புத்தி, பிரதானம் ஆகிய மூன்று தத்துவங்கள் பிரமனுக்கு ஸ்தானமாகும். தன்மாத்திரங்கள், பிரதானம், புருஷதத்துவம் ஆகிய இந்த மூன்று தத்துவங்கள் விஷ்ணுவுக்கு ஸ்தானமாகும்.

78. நாகராஜன், கணங்கள், மாதாக்கள், [ஏழு மாதாக்கள்] யக்ஷராஜா, [குபேரன்] சுப்பிரமணியர், கணபதி இவர்களுக்கு அண்டம் [பிருதிவீ] புத்தி, சுத்தவித்தை ஆகிய தத்துவங்கள் ஸ்தானமாகும்.

---

1 கங்கை, யமுனை, ஸரஸ்வதி ஆகிய நதிகளுக்கு ஜலதத்துவம் ஸ்தானமாகுமென்று ஸித்தாந்த சேகரத்திற் கூறப்பட்டிருக்கின்றது.

79. 1 மாயை, ஸதாசிவம், சக்தி ஆகிய தத்துவங்கள் கௌரீ சிவபெருமான் சூரியன் இவர்களுக்கு ஸ்தானங்களாகும். வ்யக்தங்களான பூஜா விக்ரஹங்களுக்கு, ஈசுவர தத்துவம் வரை ஸ்தானமென்று கூறப்பட்டிருக்கின்றது.

80. முன் கூறப்பட்ட ஆமை முதலியன, இரத்தினங்கள் முதலிய ஐந்து திரவியங்கள் ஆகிய இவற்றை பீடத்தின் குழிக்குக் கீழ் பிரமசிலையின்றி நியாஸஞ் செய்யவேண்டும்,

81-81½. கர்ப்பக்கிருகத்தை ஆறுபாகமாகச் செய்து, ஒரு பாகத்தைப் பின்னால் விட்டு, எஞ்சிய ஐந்தாவது பாகத்தில் பிரதிமைகளைப் பிரதிஷ்டை செய்யவேண்டும். அல்லது கர்ப்பக்கிருஹத்தை எட்டுப்பாகமாக வகுத்து, ஏழாவது பாகத்தில் பிரதிஷ்டை செய்தல் சுகத்தைத் தரும்.

82-83-83½. 2 லேபம், சித்திரம் இவற்றில் ஸ்தாபிக்கும் பொழுது, தாரணைகளால் சுத்தி செய்யவேண்டும். ஸ்நானம் முதலியன செய்வித்தல், சிலை, இரத்தினம் முதலியவற்றை நியாஸஞ் செய்தல், கண் திறத்தல், ஆஸனம் முதலியவற்றைக் கற்பித்தல் ஆகிய இவை மனதால் செய்யப்படவேண்டும். சித்திரம் அழியாதவாறு நீர் கலவாதபுஷ்பங்களால் பூஜைசெய்யவேண்டும்.

## சல லிங்கப்பிரதிஷ்டை.

84-85. இனி சல லிங்கங்களைப் பிரதிஷ்டை செய்யும் முறை கூறப்படுகின்றது. ஐந்து அல்லது மூன்றாக வகுக்கப் பெற்ற தனிப் பீடமுள்ள லிங்கங்களில் (முறையே) மூன்று அல்லது இரண்டுபாகங்கள் 3. விக்ரஹபாகமாகும்.

86. பீடத்துடன் சேர்ந்த லிங்கங்களிலும் இவ்வாறே ஸித்திக்கும். ஆனால் (பீடம் லிங்கம் இவை) அபின்னமாகக் காணப்படுகின்றன. ஸ்படிக லிங்கம் முதலியவற்றில் இஷ்டமான மந்திரத்தால் ஸம்ஸ்காரத்தைச் செய்யவேண்டும்.

---

1 மாயாதத்துவமீறாகச் சூரியனும், ஸதாசிவதத்துவமீறாகச் சக்தியும், சக்தி தத்துவமீறாகச் சிவபெருமானும் வியாப்தியையுடைவர் என்று அசிந்திய விசுவஸாதாக்கியத்தில் கூறப்பட்டிருக்கிறது.

2 லேபமாவது சந்தனம் முதலியவற்றால் பூசிய இடம்.

3 ஏனைய பாகங்கள் பீடத்திற்குள் அடங்குமென்பது கருத்து.

87. அன்றியும் பிரமசிலாநியாஸம், இரத்தினம் முதலிய வற்றின் நியாஸம், பிண்டிகையில் சேர்த்தல் ஆகிய இவற்றை மனதால் செய்யவேண்டும்.

88. சுயம்பு லிங்கம், பாணலிங்கம், இவற்றிற்கு பீட ஸம்ஸ்காரத்தில் நியமமும், மூர்த்தி முதலியவற்றை நியாஸஞ்செய்வ தில் நியமமும் ஓரிடத்திலும் காணப்படவில்லை.

89. ஸ்நபனம், ஸம்ஹிதா மந்திரங்களால் நியாஸம், ஹோமம் இவற்றைச் செய்யவேண்டும். நதியிலுண்டான லிங்கங்களை முன்போல் பிரதிஷ்டை செய்யவேண்டும்.

90-91. மிருத்திகை, மாவு முதலியவற்றாலாகிய லிங்கத்தை வீக்ஷணம் முதலிய விதியால் அப்பொழுதே சுத்திசெய்து பூஜிக்கவேண்டும். பின்னர் அந்த லிங்கத்திலுள்ள மந்திரங்களைத் தன்னிடத்தில் ஸ்தாபித்து அந்த லிங்கத்தை எடுத்து ஜலத்தில் போடவேண்டும். இவ்வாறு பூஜை செய்தல் ஒரு வருஷத்தில் இஷ்ட பலனை அளிக்கும்.

92. ஸ்ரீ சோமசம்பு சிவாசார்யரால் சிவபெருமானுடைய பிரதிஷ்டையானது கூறப்பட்டது. இனி இந்த நூலில் கௌரீ முதலியவரின் பிரதிஷ்டையும் கூறப்படுகின்றது.

ஆக ச்லோகம் 1669.

சிவலிங்க ப்ரதிஷ்டாவிதி முற்றிற்று.

---

## கௌரீ ப்ரதிஷ்டை.

1-2-3. பின்னர் கௌரீ ப்ரதிஷ்டையில், முன்போல் மண்டபம் 1 முதலியவற்றை நிர்மாணஞ்செய்து, தேவியை அபிஷேகஞ்செய்து, சயனத்தில் ஆரோகணித்து, சிகை (பிரமரந்திரம்) முதற்கொண்டு நெற்றி ஈருகவும், நெற்றிமுதற்கொண்டு இருதயம் ஈருகவும், இருதயம்முதற்கொண்டு நாபி ஈருகவும், நாபி முதற்கொண்டு இரண்டு முழங்கால்கள் ஈருகவும், இரண்டு முழங்கால்கள் முதற்கொண்டு கால்கள் ஈருகவும், மூர்த்தி முதலிய வற்றை நியாஸஞ்செய்யவேண்டும். ஆத்ம தத்துவம் வித்யா தத்

1 முதலிய என்னும் பதத்தால் மண்டலம் குண்டம் இவற்றைக்கொள்ள வேண்டும்.

துவம், சிவ தத்துவம் இவற்றை இவற்றின் அதிபதிகளுடன் நியாஸஞ்செய்யவேண்டும்.

4-5-5½. மேலானவற்றிற்கும் மேலான சக்தியை நியாஸஞ் செய்து, ஹோமஞ்செய்து, முன்போல் ஜபஞ்செய்து, ஸந்தானஞ்செய்து நியாஸஞ்செய்யப்பெற்ற இரத்தினம் முதலியவற்றை உடையதாயும்; க்ரியாசக்தி ரூபமாயும் உள்ள பிண்டிகையை ஸதாசிவ தத்துவத்தை வியாபிப்பதாகத் தியானித்து, பராசக்தி சொரூபிணியான இந்தத் தேவியைத் தன் மந்திரத்தால் (கௌரியின் மந்திரத்தால்) ஸிருஷ்டிக்கிரமமாக பிண்டிகையில் ஸ்தாபித்துச் சேர்க்கவேண்டும்.

6-7. பின்னர் பீடத்தில் க்ரியா சக்தியையும் விக்ரஹத்தில் ஞான சக்தியையும் நியாஸஞ்செய்யவேண்டும். பின்னர் வியாபகமாக சக்தியை ஆவாஹனஞ்செய்து சேர்க்கவேண்டும். தேவிக்குப் பெயரிட்டுப் பூசிக்கவேண்டும்.

தேவியை அருச்சித்தற்குரிய மந்திரங்களாவன:—

ஓம் [1] க்ஷூம் க்ஷூமாண்டாய நம: । ஓம் ஹ்ராம் ருத்ராய நம: । ஓம் ஹ்ரூம் நாஸாய நம: । ஓம் ஹ்ரீம் பிந்துபாய நம: । ஓம் ஹ்ரூம் ஜ்ஞானாய நம: । ஓம் ஹ்ரைம் வைராக்யாய நம: । ஓம் ஹ்ரௌம் ஐஸ்வர்யாய நம: । ஓம் ஹ்ரீம் அதர்மாய நம: ஓம் ஹ்ரூம் அஜ்ஞானாய நம: । ஓம் ஹ்ரைம் அவைராக்யாய நம: । ஓம் ஹ்ரௌம் அநைஸ்வர்யாய நம: । ஓம் ஹம் அனந்தாஸனாய நம: । ஓம் ஹ: ஊர்த்வச்சதனாய நம: । ஓம் [2] ஹம் வக்ஷ்யாய நம: । ஓம் ஹாம் கேஸரேப்யோ நம: । ஓம் ஹாம் கர்ணிகாயை நம: । ஓம் [3] ஹ்ஷம் வாக்ஷ

1 மூலப்ரதிகளில் ஹூம் என்னும் பீஜாக்ஷரம் காணப்படுகின்றது. அசிந்திய விசுவஸாதாக்கியத்தை அனுசரித்து க்ஷூம் என்னும் பீஜாக்ஷரம் திருத்தப்பெற்றது.

2 ஓம் ஹ்ராம் வக்ஷ்யாய நம: । ஓம் ஹாம் கேஸரேப்யோ நம: । ஓம் ஹாம் கர்ணிகாயை நம: । என்று அசிந்திய விசுவஸாதாக்கியத்தில் காணப்படுகின்றது.

3 ஓம் ஹாம் வாக்ஷேப்யோ நம: । என்று அசிந்திய விசுவஸாதாக்கியத்தில் காணப்படுகின்றது.

ஷேப்யோ நம: । என்று ஆஸன பூஜை செய்து, ஓம் ஹ்ராம் 1 ப்ரபாயை நம: । ஓம் ஹ்ரீம் ஜ்ஞாநேந்த்ர்யை நம: । ஓம் ஹ்ரீம் க்ரியாயை நம: । ஓம் ஹ்ரீம் ஸூக்ஷ்மாயை நம: । ஓம் ஹ்ரூம் வாகீஸ்வர்யை நம: । ஓம் ஹ்ரைம் ஜ்வாலின்யை நம: । ஓம் ஹ்ரௌம் வாமாயை நம: । ஓம் ஹ்ரும் ஜ்யேஷ்டாயை நம: । ஓம் ஹ்ர: ரௌத்ர்யை நம: । என்று ஒன்பது சக்திகளையும், பூஜித்து ஓம் ஹௌம் ஹௌம் பத்மாஸநாய நம: । ஓம் ஹௌம் ஹௌம் ஸ்ரீமூர்த்தயே நம:, என்று ஆஸனமூர்த்திமந்திரங்களால் பூஜித்து.

8-9-9½. சந்தனமணியப் பெற்றவளாயும், புஷ்பத்தின் மீது இருப்பவளாயும், உருக்கின சொர்ணத்தின் காந்தியை உடையவளாயும்: நான்கு கைகள் ஒரு முகம் மூன்று கண்கள் இவற்றை உடையவளாயும், பரமேசுவரியாயும், எல்லா லக்ஷணங்களுடனும் கூடியவளாயும், எல்லா ஆபரணங்களையும் அணிந்தவளாயும், அக்ஷமாலை, அங்குசம், பாசம், மாதுளம்பழம் இவற்றை தரிப்பவளாயும், நல்ல பாக்கியத்தை உடையவளாயும் வரத்தை அளிப்பவளாயுமுள்ள கௌரியைத் தியானித்து,

ஓம் 2 ஹ்ரீம் ஸ: மஹாகௌரி ருத்ர 3 தயிதே ஸ்வாஹா 4 கௌர்யை நம: என்று மூலமந்திரத்தால் பூசித்து, ஓம் ஹ்ராம் ஹ்ருதயாய நம: । 5 ஓம் ஹ்ரீம் ஶிரஸே நம: । ஓம் ஹ்ரூம்

---

1 ஓம் ஹ்ரீம் ப்ராஜ்ஞ்யை நம: । என்று அசிந்தியவிசுவஸாதாக்கியத்தில் காணப்படுகின்றது.

2 ஓம் ஹ்ராம் ஹ்ரீம் ஸ: என்று அசிந்திய விசுவஸாதாக்கியம் தேவீ ப்ரதிஷ்டாவிதி இவற்றில் காணப்படுகின்றது,

3 தயிதாயை என்று அசிந்திய விசுவஸாதாக்கியத்தில் கூறப்பட்டிருக்கின்றது.

4 ஓம் கௌம் கௌர்யை நம: என்று அசிந்தியவிசுவஸாதாக்கியத்திற் கூறப்பட்டிருக்கின்றது.

5 ஓம் ஹ்ரீம் ஶிரஸே ஸ்வாஹா । ஓம் ஹ்ரூம் ஶிகாயை வஷட் । ஓம் ஹ்ரைம் கவசாய ஹும் । ஓம் ஹௌம் நேத்ரத்ரயாய வௌஷட் । ஓம் ஹ: அஸ்த்ராய பட் । என்று அசிந்தியவிசுவஸாதாக்கியத்தில் கூறப்பட்டிருக்கின்றது,

ஶிவாயை நம: । ஓம் ஶைம் கவசாய நம: । ஓம் ஶௌம் நேத்ராய நம: । ஓம் ப: அஸ்த்ராய நம:। ஓம் வீம் ஜ்ஞாநஶக்த்யை நம: । ஓம் ஸ்ரூம் க்ரியாஶக்த்யை நம: । என்று சொல்லிக் கொண்டு பூஜிக்கவேண்டும். லோகபாலர்களின் மந்திரங்கள் முன்னர்க் கூறப்பட்டுள்ளன. ஓம் ஹ்ராம் ஸௌபாக்யாயை நம:। ஓம் ஹ்ரீம் லலிதாயை நம: । ஓம் ஹ்ரூம் 1 கஶிண்யை நம: । ஓம் ஹ்ரௌம் காமேஶ்வர்யை நம:। என்னும் 2 இவை கௌரிக்குச்சமமான 3 நாமாக்களாகும்.

ஆகச் சுலோகம் 1678½.

கௌரீ ப்ரதிஷ்டாவிதி முற்றிற்று.

---

## ஆதித்யப்ரதிஷ்டாவிதி.

1-2, சூரியனை ப்ரதிஷ்டை செய்யும்பொழுது, முன்போல் மண்டபம் முதலியவற்றை நிர்மாணஞ் செய்து, முன்கூறப்பட்ட முறைப்படி அபிஷேகம் முதலியவற்றையும் செய்வித்து, அதன் பின் வித்யாதத்துவம் ஈறுக ஆஸனபூஜை செய்யப்பெற்ற சயனத்தில் அங்கங்களுடன் கூடிய சூரியனை ஆரோஹணித்து, அதிபதிகளுடன் மூன்று தத்துவங்களையும், ஆகாயம் முதலிய ஐந்து மூர்த்திகளையும், அந்த விக்ரஹத்தினிடத்தில் ந்யாஸஞ் செய்ய வேண்டும்.

3-4. முன்போல் பிண்டிகைக்கும் சுத்தி முதலியனசெய்து ஸதாசிவதத்துவம் ஈறுக வியாப்தியுடையதாயும், நியாஸஞ் செய்யப்பெற்ற இரத்தினம் முதலிய ஐந்து திரவியங்களை உடையதா

---

1 காமிந்யை நம: என்று தேவீப்ரதிஷ்டா விதி அசிந்த்யவிசுவஸாதாக்கியம் இவற்றில் படிக்கப்பட்டிருக்கின்றது.

2 இவை கௌரிக்குச் சமமான சக்திகளென்று அசிந்தியவிசுவஸாதாக்யத்தில் கூறப்பட்டிருக்கின்றது.

3 இவ்வாறு பூஜித்து முன்போல் நைவேத்யம் முதலியவற்றை நிவேதனஞ் செய்தல் முதலியன செய்யவேண்டும் என்று அசிந்தியவிசுவஸாதாக்கியத்திற் கூறப்பட்டிருக்கின்றது.

யும் உள்ள பிண்டிகையை, ஸர்வதோமுகி என்னும் சக்தியுடன் விதிப்படி பிரதிஷ்டை செய்து, ஆசாரியர் சூரிய மூலமந்திரத்தால் சூரியனைசக்தியிருக விதிப்படி பிரதிட்டைசெய்யவேண்டும்.

5. சுவாமி அல்லது ஆதித்ய என்னும் பதத்தை இறுதியிலுடையதாகப் பெயரிடவேண்டும். முன் கூறப்பட்ட சூரியமந்திரங்களைப் பிரதிஷ்டையிலுங் கொள்ளவேண்டும்.

ஆகச் சுலோக எண் 1683½.

ஆதித்யப்ரதிஷ்டாவிதி முற்றிற்று.

---

## விஷ்ணுப்ரதிஷ்டா விதி.

1. பின்னர் விஷ்ணுப்ரதிஷ்டையில் முன்கூறப்பட்ட மண்டபம் முதலியவற்றை நிர்மாணஞ்செய்து, அபிஷேகம் முதலியன செய்வித்தற்காக ஒரு முழத்தில் பத்திரபீடத்தையுஞ் செய்யவேண்டும்.

2-3. பிரணவத்தை முன்னர் உடையனவாகிய ஆம் ஈம் ஊம் ஐம் ஓம் ஔம் அ: ஆகிய அக்ஷரங்கள் நான்காவது வேற்றுமையுடன் கூடிய நடுவிலுள்ள பத்மம், இருதயம், சிரசு, சிகை, கவசம், நேத்திரம், அஸ்திரம் இவற்றுடன் கூடி இந்த ஏழும் மந்திரங்களாகும். இதன் விபரம் பின்னர்க் கூறப்படும்.

4 முதலில் ஓம் நமோ ஸ்வாமினே என்பதும், நடுவில் பகவதே என்பதும், இறுதியில் வாஸுதேவாய என்பதும் கூடி மூலமந்திரம் கூறப்பட்டது.

5. இடையிலுள்ள சொரூபத்தால் (பேதத்தால்) (தியானஞ் செய்யத்தக்க) எந்த மூர்த்தியானது (சாஸ்திரத்தில்) கூறப்பட்டதோ, (அந்த மூர்த்திகளில்) இந்த மந்திரத்தாலேயே ஸாக்ஷாத் விஷ்ணுப் பிரதிட்டை செய்யப்பெற்றிருக்கிறர்.

6-7-8½. மண்டபம் முதலியவற்றில் ஸம்ஸ்காரங்களைச் செய்து, இருதயமந்திரத்தால்திக்பாலர்களை ஆவாஹனஞ்செய்து, அருச்சித்து, இருதயமந்திரம், அஸ்திரமந்திரம், காயத்ரி, கவசம் ஆகிய மந்திரங்களால் விஷ்ணு லக்ஷ்மி இவர்களுக்கு அபிஷேகஞ் செய்வித்து, மீண்டும் அபிஷேகஞ் செய்வித்து, முறை

யே வஸ்திரத்தைச் சாத்தி, முன்போல் ஆஸனபூஜை செய்து, விக்ரஹத்தைச் சயனத்தில் ஆரோஹணித்து, அதன் பின் துவாதசாக்ஷர மந்திரத்தை (விக்ரஹத்தில்) நியாஸஞ்செய்து, ஆசாரியர் கட்கம் முதலியவற்றையும் நியாஸஞ் செய்யவேண்டும். நியாஸஞ் செய்யும் முறை வருமாறு:—

9-10-11. சிரசு, மூக்கு, நெற்றி, முகம், கழுத்து, இருதயம், வலதுபுயம், இடதுபுயம், இடது கணுக்கால், வலது கணுக்கால், இடதுபாதம், வலது பாதம் ஆகிய இவற்றில், முறையே சுவாலைகளின் சமூகம்போன்ற நிறம், வெண்மை, கருமை, கருமை சூரியனின் காந்திபோன்ற நிறம், பொன்மை, வெண்மை, செம்மை, வெண்மை, மின்னல் போன்ற பொன்னிறம், வெண்மை, செம்மை ஆகிய நிறங்களையுடைய ஓம் என்னும் அக்ஷரம் முதல் யகாரம் ஈறுகிய பன்னிரு அக்ஷரங்களை நியாஸஞ்செய்யவேண்டும்.

12-13-14. சுயம்பு பாஞ்சராத்ரம் என்னும் நூலில் இவை யாவும் கூறப்பட்டுள்ளன. பின்னர் பிரணவத்தை ஆதியிலும், நான்காம் வேற்றுமை, நம: என்னும் பதம் இவற்றை இறுதியிலுமுடைய தத்தம் நாமாக்களைக் கொண்ட மந்திரத்தால், சிகையில் கட்கத்தையும், மத்தகத்தில் சார்ங்கத்தையும், கைகளில் முஸலம் ஹலம், இவற்றையும் நியாஸஞ் செய்யவேண்டும். பிரணவத்தை ஆதியிலும் "ஜ்வக்ராய" என்பதை நடுவிலும், நம: என்பதை இறுதியிலுமுள்ள மந்திரத்தை உச்சரித்து, சக்ரத்தை நாபி, வயிறு, பிருஷ்டம், இவற்றில் நியாஸஞ் செய்யவேண்டும்.

15. ஓం ஸం; ணం, ஶం, ஶங்காய நம: என்னும் மந்திரத்தை உச்சரித்து, ஆசாரியர் ஆண் குறியில் சங்கத்தை நியாஸஞ் செய்யவேண்டும்.

16-16½. ஓం வం ०० விం யம் ஶதாயை நம: என்னும் மந்திரத்தால், ஆசாரியர் கதையை கணுக்கால் முழங்கால் இவற்றில் நியாஸஞ்செய்ய வேண்டும். பாதங்களுடைய பக்கங்களிலுள்ள கறடுகளில் பத்மத்தைப் பத்மமந்திரத்தால் நியாஸஞ்செய்ய வேண்டும்.

17-18-19-20. சிரசில் கேசவரையும், முகத்தில் நாராயணரையும், கழுத்தில் மாதவரையும், காதில் கோவிந்தரையும், இருதயத்தில் விஷ்ணுவையும், பிருஷ்டத்தில் மதுசூதனரையும், வயிற்றில் த்ரிவிக்ரமரையும், இடுப்பில் வாமனரையும், கணுக்கால்களில் ஸ்ரீதரர், ஹ்ரிஷீகேசர் இவர்களையும், பாதங்களில் பத்மநாபர், தாமோதரர், இவர்களையும், ஆகிய இந்த எல்லா மூர்த்திகளையும் துவாதசாக்ஷரமந்திரத்திலுள்ள ஒவ்வொரு அக்ஷரத்தையும் முறையே முதலில்சேர்த்துக் கொண்டு நியாஸஞ்செய்யவேண்டும்.

21-22-23, இனி இரண்டாவதாகிய இருதய மந்திரமானது கூறப்படுகின்றது. இருதயபீஜத்தை ஆதியிலும், நம: என்பதை இறுதியிலும் உடைய விஷ்ணவெ என்பது இருதய மந்திரமாகும். (அதாவது ௐ ஹாம் ஹ்ருதயாய விஷ்ணவெ நமஃ என்பது.) சிகையைக் குறிக்கும் மந்திரம் அந்த ஆகமத்தில் (பாஞ்சராத்திராகமத்தில்) பிரஸித்தமாயுள்ளது. பிரணவத்தை முதலிலும், நம: என்பதை இறுதியிலும், ப்ரஹ்மணே என்பதை மத்தியிலும் உடையமந்திரம் (அதாவது ௐ ஹௌம் ஶிவாயெ ப்ரஹ்மணெ நமஃ என்பது)சிகாமந்திரமாகும்.பிரணவத்தை முதலிலும் நமஃ என்பதை இறுதியிலும் ருத்ராய என்பதை மத்தியிலுமுடைய மந்திரம்(அதாவது ௐ ௐ கவசாயருத்ராய நமஃ என்பது)கவசமந்திரமாகும். ௐ ஸஃ ஸுதர்ஶநாய சக்ராய ஹுங்பட் என்பது அஸ்திரமந்திரமாகும்.

24. ௐ என்பதை ஆதியிலும், ஸம்பவிஷ்யத் என்பதை மத்தியிலும், நம: என்பதை இறுதியிலும், [இவ்வாறே] ஓம் என்பதை ஆதியிலும், ஜய என்பதை மத்தியிலும் நம: என்பதை இறுதியிலும் உடைய மந்திரங்களை நியாஸஞ் செய்யவேண்டும். பிரணவத்தை ஆதியிலும்நம: என்பதை இறுதியிலுமுடைய காயத்ரீ ஸாவித்ரீ இவர்களையும் நியாஸஞ் செய்யவேண்டும்.

25. பிரணவத்தை ஆதியிலும், நம. என்பதை இறுதியிலும் க்ஷௌம் நரஸிம்ஹாய என்பதை மத்தியிலும் உள்ள மந்திரம் ஏழுஅக்ஷரங்களையுடைய பிங்களாஸ்திரமெனப்படும்.

26-26½. அதாவது ௐ க்ஷிம் விஜ்ஞாநாக்ஷநரஸிம்ஹாய நமஃ என்பதாகும். இருதய பீஜத்தை முதலிலும், நான்காவது

வேற்றுமையை இறுதியிலுமுடைய இந்த மந்திரங்களை நியாஸஞ் செய்யவேண்டும். இடது வலது கண்களில் காயத்ரீ ஸாவித்ரீ இவர்களை நியாஸஞ் செய்து அன்புடன் பூஜிக்கவேண்டும்.

27-28-29-30. பன்னிரண்டு அரங்களால் [கோணங்களால்] பிரகாசிக்கிற கூறப்பட்ட சக்கிரத்தை நியாஸஞ் செய்து, அதன் நடுவில் எட்டுத் தளங்களை உடைய தாமரையை வரைந்து, கர்ணி கையில் இருதயமந்திரத்தையும், கிழக்குத் திக்கிலுள்ள தளத்தில் சிரோமந்திரத்தையும், தெற்குத் திக்கிலுள்ள தளத்தில் சிகாமந் திரத்தையும், மேற்குத் திக்கிலுள்ள தளத்தில் கவசமந்திரத்தை யும், வடக்குத் திக்கிலுள்ள தளத்தில் அஸ்திரமந்திரத்தையும், அக்கினிமூலையிலுள்ள தளத்தில் காயத்ரியையும், ஈசான மூலையி லுள்ள தளத்தில் ஸாவித்திரியையும், நிருருதி மூலையிலுள்ள தளத் தில் நேத்திரத்தையும், வாயுமூலையிலுள்ள தளத்தில் பிங்களாஸ் திரத்தையும் நியாஸஞ் செய்யவேண்டும். இது கர்ப்பாவரணம் எனப்படும்.

31-32-33. இனி வேறு [இரண்டாவது] ஆவாணத்தைக் கூறுதும். பன்னிரு அரங்களையுடைய இந்தச்சக்கிரத்தில் பிரண வத்தை முன்னிட்ட முன் கூறப்பட்ட கேசவ முதலான அவ் வந்த நாமாக்களைக்கிழக்குத் திக்கு முதலாக ஆரம்பித்து நியாஸம் செய்யவேண்டும். பின்னர் கட்கம், கதை, சக்ரம், சங்கம், பத் மம், ஹலம், முஸலம், சார்ங்கம், இவற்றை நியாஸஞ் செய்ய வேண்டும். இது மூன்றாவது ஆவரணமெனப்படும்.

34. பின்னர் ஆசாரியர் ஒரே மனதுடன் புஷ்பம், தூபம் நைவேத்யம், ஆடை, அலங்காரம் முதலியவற்றால் அங்கங்களு டன் கூடிய விஷ்ணுவைப் பூஜிக்கவேண்டும்.

35. ஐந்து மூர்த்திகளைக்கொண்ட நியாஸத்தில் ஓம் க்ஷும் என்பதை ஆதியிலும், நம: என்பதை இறுதியிலும் உடைய வாஸுதேவாய என்பதுமூலமந்திரமாகும்.

36-37. ஓம் க்ஷும், ஓம் ம்ரம், ஓம் ஊம், ஓம் கம், ஓம் கஃ என்னும் பீஜாக்ஷரங்களை முன்னரும், நம: என்பதைப் பின்னரு முடைய முறையே ஸங்கர்ஷண, ப்ரத்யும்ன, அநிருத்த, நாரா யண, கேசவ என்னும் இவை நான்காம் வேற்றுமையுடன் கூடி

மூர்த்தீசுவர மந்திரங்களாகும். பிருதிவி முதலிய ஐந்தும் மூர்த்திகளாகும். இவ்விடத்திலும் அங்க மந்திரங்களை நியாஸஞ்செய்து பூஜை செய்யவேண்டும்.

38-38½. எட்டு மூர்த்திகள் முதலிய பக்ஷத்திலும் மூர்த்தீசுவரர்கள் [முன்னரே] கூறப்பட்டிருக்கின்றனர். ஆசாரியர் பூர்ணாஹுதியீறாக ஹோமஞ்செய்து, மூலமந்திரத்தை ஆயிரம் அல்லது ஐநூறு முறை ஜபித்து [செய்யப்பட்ட கர்மாவை] மஹாவிஷ்ணுவின் காதில் அறிவிக்க வேண்டும்.

39-39½. யாகத்தில் நேர்ந்த தோஷங்கள் நீங்குதற்காக முன்போல்பலியைச்சமர்ப்பித்து, வியாஹிருதி ஹோமஞ்செய்து, பிண்டிகையைச் சுத்தஞ் செய்யவேண்டும்.

40.41-42-42½. ஓம் வம் ஶம் ஷம் ஹம் என்னும் பீஜாக்ஷரத்தை ஆதியிலும், லக்ஷ்ம்யை என்பதை நடுவிலும், நம: என்பதை இறுதியிலுமுடைய மந்திரத்தை உச்சரித்துப், பிண்டிகையை லக்ஷ்மியாகப் பவித்ததாகத் தியானித்து, இந்த மந்திரத்தில் உள்ளனவாயும், இருதயம், சிரசு, சிகை, கவசம், நேத்திரம் இவற்றைக் குறிப்பவையாயும் உள்ள ஹூம்பட் என்னும் பதத்துடன் கூடிய அஸ்திரமந்திரத்தை இறுதியில் உடைய ஐந்து அக்ஷரங்களால், [தனித்தனியாகவேனும்] சிலவிடத்தில் ஒரே முறையாகவேனும், இந்தப் பிண்டிகையைச் சுத்திசெய்து, முன்போல் பிராஸாதத்திற்குக் கொண்டுபோக வேண்டும்.

43-44-45. பிண்டிகையை, பிரகிருதியை வியாபிப்பதாகத் தியானித்து, ஓம் ஶ்ரீம் லக்ஷ்மீ பீடாய நம: । ஓம் வம் ஶம் ஷம் ஹம் ஶ்ரீம் லக்ஷ்ம்யை நம: என்று உச்சரித்து, லக்ஷ்மீ மந்திரத்தை நியாஸஞ் செய்து, முன்போல் இரத்தினங்களை நியாஸஞ் செய்து, பின்னர் துவாதசாக்ஷர மந்திரத்தை புருஷதத்துவமீறாக உச்சரித்து, பொன்மை நிறமுள்ள வஸ்திரத்தை உடையவராயும், நான்கு கைகளையுடையவராயும், சங்கு, சக்ரம், கதை, சார்ங்கம் இவற்றைக் கைகளில் உடையவராயும், துளசிமாலையைத் தரித்திருப்பவராயும் உள்ள விஷ்ணுவை அவ்விடத்தில் [விக்ரஹத்தில்] ஸ்தாபிக்கவேண்டும். [நியாஸம் செய்யவேண்டும்.] பின்னர் சக்கிரம், பத்மாஸனம் இவற்றை நமோந்தமாக நியாஸஞ்செய்ய வேண்டும்.

46-47-47½. இவ்வாறே மூர்த்தி மூர்த்தீசுவரர்களையும் வியாபகமாக நியாஸஞ்செய்து, தந்மாத்ரங்களில் ஆன்மதத்துவத்தையும், பிரதானத்தில் வித்யாதத்துவத்தையும், புருஷதத்துவமீறுகச் சிவதத்துவத்தையும் பாவித்து [நியாஸஞ்செய்து] பின்னர் எல்லாவற்றிற்கும் மேலானவராயும், மூன்று ஆவரணங்களுடன் கூடினவராயும் உள்ள விஷ்ணுவை ஆவாஹனஞ் செய்து, அன்புடன் விதிப்படி பூஜித்து, ஏனையவற்றை முன்போல் செய்ய வேண்டும்.

48-48½. ஸ்வாமி அல்லது மாதவ என்னும் பதத்தை இறுதியிலுடையதாகவும், யஜமானனின் பெயருடன் கூடியதாகவும், விஷ்ணுவுக்குப் பெயரிடவேண்டும். இவ்வாறு விஷ்ணுவின் பிரதிஷ்டையானது கூறப்பட்டது.

ஆகச்சுலோகம் 1732.

விஷ்ணுப்பிரதிஷ்டாவிதி முற்றிற்று.

---

## துவாரபால ப்ரதிஷ்டாவிதி.

1. இனி துவாரபாலர்களைப் பிரதிஷ்டை செய்யும் முறை கூறப்படுகின்றது. துவாரபாலர்களை கஷாயோதகம் முதலியவற்றால் சுத்திசெய்து, சயனத்தில் ஆரோபணஞ் செய்யவேண்டும்.

2. அடி, நடு, நுனி ஆகிய பாகங்களில், அதிபதிகளுடன் கூடிய ஆன்மதத்துவம் வித்யாதத்துவம் சிவதத்துவம் இவற்றை நியாஸஞ்செய்து, ஸந்திரோதனஞ்செய்து, [மூன்று பாகங்களையும் சுத்திசெய்வதற்காக] ஹோமஞ்செய்து, உசிதமாக [ஹோமத்தின் எண்ணிற்குரியவாறு] ஜபஞ் செய்யவேண்டும்.

3. வாயிலுக்குக் கீழே வாஸ்துவைப் பூஜிக்கவேண்டும். அவ்விடத்திலேயே அநந்த மந்திரத்தால் இரத்தினங்கள் முதலிய ஐந்தையும் நியாஸஞ்செய்து சாந்திஹோமஞ்செய்யவேண்டும்.

4-5-5½. யவம், வெண்கடுகு, விஷ்ணுக்ராந்தி, ஸித்தி, விருத்தி, ஸஹதேவீ ஆகிய ஒஷதிகள், எள்ளு, பசுவின் கொம்பிலுள்ள மிருத்து, தாதம், ரோகேந்திரம், மோஹினீ, லக்ஷ்மணா, அமிருதா, [சீந்தர்க் கொடி] ரோசனம், [முள்ளெலவை] கொன்றை, அறுகு இவற்றை ஒரு அங்குலம் அளவாக எடுத்து, மே

ழுள்ள உதும்பரத்தில் இரக்ஷைக்காக பிரணவத்தால் [நடுவிலிரு ந்து] சிறிது வடக்குத் திக்கில் கட்டவேண்டும்.

6-7. கீழே ஆன்மதத்துவத்தையும், சாகைகளில் வித்யா தத்துவத்தையும், ஆகாயத்தில் சிவதத்துவத்தையும், எல்லா ஆன்மாக்களிடத்தில்வியாபகமான மகேசுவரரையும், மூலமந்திரத்தை உச்சரித்து நியாஸஞ் செய்யவேண்டும்.

8. வாயிலில் இருக்கும் நந்தி முதலாயினரை, இருதய பீஜத்துடன் கூடிய அவரவர் நாமாக்களை உச்சரித்து, [அவரவர் ஸ்தானங்களில் ஸ்தாபித்துப் பூஜித்து] நூறு அல்லது ஐம்பது முறையேனும், அல்லது சக்திக்குத் தக்கவாறு இரண்டுபங்கு அதிகமாகவேனும் ஹோமஞ் செய்யவேண்டும்.

9. குறைதல் முதலிய தோஷங்கள் நீங்குதற்காக, அஸ்திர மந்திரத்தை உச்சரித்து நூறு முறை ஹோமஞ்செய்யவேண்டும். முன்போல் திக்பலியைச் சமர்ப்பித்து தக்ஷிணைமுதலியவற்றைக் கொடுக்க வேண்டும்.

ஆகச் சுலோகம் 1741.

துவாரபாலப் பிரதிஷ்டை முற்றிற்று.

---

## ஹிருத் கும்பப்பிரதிஷ்டா விதி.

1-1½. பின்னர், இனி பிராஸாதத்தில் சைதன்யத்தின் ஸம்பந்தமானது காண்பிக்கப்படுகின்றது. சுகநாஸ்ஸியின் முடிவில் கிழக்கு வேதிகையின் நடுவில், பத்மத்தின் ஆதாரசக்தியில் பிரணவத்தால் (சைதன்யத்தை) நியாஸஞ் செய்யவேண்டும்.

2-3-3½. [நியாஸஞ் செய்யும் முறை வருமாறு:—] சுவர்ணம் முதலியவற்றுள் யாதானுமொன்றால் ஆக்கப்பெற்றதாயும், 1 பஞ்சகவ்வியத்துடன் கூடியதாயும், தேன்பால் இவற்றுடன் கூடியதாயும், நியாஸஞ் செய்யப்பெற்ற இரத்தினம் முதலிய ஐந்தையுமுடையதாயும், ஆடை தரிக்கப் பெற்றதாயும், சந்தனத்தால் பூசப்பட்டதாயும், வாஸனையுள்ள புஷ்பத்துடன் தூபம் சமர்ப்பிக்கப் பெற்றதாயும், மாந்தளிரை முகத்தில் உடையதாயு

---

1 பஞ்சகவ்வியத்தால் சுத்தஞ் செய்யப்பட்டதாயுமென்பது கருத்து.

முள்ள கும்பத்தை, இருதயமந்திரத்தால் இருதய கமலத்தைப் போல் நியாஸஞ் செய்யவேண்டும்.

4-5-6. ஆசாரியர் ஸகளீகரணஞ் செய்து, பூரகஞ்செய்து, எல்லா ஆன்மாக்களிடமும் வேறுபடாத ஆன்மாவை ஆன்மமந்திரத்தால் கிரகித்து, இருதயத்தில் வாயுவை அடக்கி சிவபெருமானுடைய ஆணையை ஆன்மாவுக்கு 1 அறிவித்து, ரேசகத்தால் துவாதசாந்தத்திலிருந்து பிரகாசிக்கிற நெருப்புப் பொறிக்குச் சமமான ஆன்மாவைக் கொண்டுவந்து, கும்பத்திற்குள் நியாஸஞ் செய்யவேண்டும்.

7-8-9-9½. அந்தக் கும்பத்தில் சூக்கும தேகத்தையும், குணங்களை அறிவிக்கும் கலை முதலியவற்றையும், அதிபதிகளுடன் கூடிய பிருதிவியீருகிய தத்துவங்களின் சமூஹத்தையும் நியாஸஞ் செய்ய வேண்டும். பத்து நாடிகள், பத்து ப்ராணன்கள், (வாயுக்கள்) பதின்மூன்று இந்திரியங்கள் ஆகிய இவற்றையும், இவற்றின் அதிபதிகளையும், பிரணவத்தை ஆதியிலுடைய தத்தம் பெயர்களை உச்சரித்து நியாஸஞ்செய்து, தன் காரியத்திற்குக் காரணமாக மாயையையும், காலம் நியதி இவற்றையும், பிரேரகர்களான [கார்யங்களை நடத்துகிறவர்களான] வித்யேசுவரர்களையும், வியாபகராகிய சிவபெருமானையும், தன்மந்திரங்களால் அங்கங்களையும் நியாஸஞ்செய்து, நிரோத முத்திரையால் நிரோதனஞ் செய்யவேண்டும்.

10-11-11½. அல்லது சுவர்ணம் முதலியவற்றுள் யாதானுமொன்றால் ஆக்கப்பெற்றதாயும், புருஷதத்துவமீருக வியாப்தியுடையதாயும் உள்ள புருஷனை, பஞ்சகவ்வியம் கஷாயோதகம் முதலியவற்றால் முன்போல் சுத்திசெய்து, சயனத்தில் ஏற்றி உமாதேவியாருக்குப் பதியாகிய ருத்திரரைத் தியானித்து, சிவமந்திரத்தை உச்சரித்து, அந்தப் புருஷனிடத்தில் வியாபகமாக நியாஸஞ் செய்யவேண்டும்.

---

1 "ஓ ஆன்மாவே ! நீ சிவபெருமானுடைய ஆணையால் பிராஸாதத்திற்கு இருதயம் போன்ற கும்பத்தில் எப்பொழுதும் அன்புடன் இருக்க வேண்டும்" என்று அறிவித்து என்பது பொருள். அறிவித்த பின்னர், ஆன்மாவைத் துவாதசாந்தத்திற்குக் கொண்டுபோக வேண்டும்.

12-13. ஸாங்நித்யத்திற்காக ஹோமத்தையும், புரோக்ஷித்தல், பரிசித்தல், ஜபம், ஸாங்நித்தியம், நிரோதனம் ஆகிய யாவற்றையும் [அடி நடு ஈறு ஆகிய] மூன்று பாகங்களிலும் செய்து, பிரகிருதியிருக வியாப்தியையுடைய கும்பத்தில் அந்தப் புருஷனை நியாஸஞ்செய்ய வேண்டும்.

ஆகச் சுலோகம் 1754.

ஹிருத்கும்பப் பிரதிஷ்டா விதி முற்றிற்று.

---

## சூளி, துவஜம், தண்டம் இவற்றின் பிரதிஷ்டை.

1. தேவாலயத்தில் செய்ய வேண்டிய சூளி, துவஜதண்டம் துவஜம் இவற்றின் பிரதிட்டையானது ஆகமங்களிற் கூறப்பட்டவாறு இங்குக் கூறப்படுகின்றது.

2-3-4. பாதி அல்லது முழுக்கடாஹத்தின் பிரவேசத்துடன் பிராஸாதம் செங்கலாற் செய்யப்படின் மரத்தாலும், சிலையாற் செய்யப்படின் சிலையாலும், சூளியை, லிங்கத்தின் அளவாகச் செய்யவேண்டும். கும்பத்திலேனும் லிங்கத்தின் அளவாகச் செய்யவேண்டும். இந்தச் சூளியானது, த்ரிசூலத்துடன் கூடின் கிரகசூளி என்றும், சிரசில் லிங்கத்துடன் கூடின் ஈசசூளி என்றும் கூறப்படும். மாதுளம் பழத்துடன் கூடியதாகவும்ஆகமங்களிற் காணப்படுகின்றது.

5-6-6½. சித்திர (பல) நிறமுள்ள துவஜமானது ஜங்கையிருகவேனும், பாதிஜங்கையளவாகவேனும், தண்டத்தின் அளவாகவேனும் இருக்கவேண்டும். பீடத்தைச்சுற்றிய துவஜம் மஹாதுவஜம் எனப்படும். உத்தமம், மத்யமம், அதமம், என்னும் முறையால், முறையே பன்னிரண்டு, ஒன்பது, ஆறு முழங்களையுடைய தண்டம் (ஆகமங்களில்) கொள்ளப்பட்டிருக்கின்றது என்று வித்வான்களால் அறியத்தக்கது.

7-8-9. மூங்கில், ஸாலமரம், (மராமரம்) சுந்தரீ என்னும் மரம் இவற்றுலாக்கப் பெற்ற துவஜ தண்டமும், மங்களகரமான விருக்ஷத்தாலாக்கப்பெற்ற துவஜதண்டமும், எல்லா விருப்பங்களையும் தரும். இந்தத் துவஜ தண்டத்தை ஆரோபணஞ் செய்யுங்கால் பங்கத்தை அடைந்தால், அரசன் அல்லது யஜமான

னுக்கு அநிஷ்டமுண்டாகுமென அறிந்துகொள்ளவேண்டும். இந்தத் தோஷத்தின் நீக்கத்திற்காக அகோர மந்திரத்தால் முன்போல் சாந்தியைச் செய்யவேண்டும்.

10. துவாரபூஜை முதலியவற்றையும் மந்திரங்களுக்குத் தர்ப்பணத்தையும் செய்து, சூளி, தண்டம் இவற்றிற்கு அஸ்திர மந்திரத்தால் அபிஷேகஞ் செய்யவேண்டும்.

11. ஆசாரியர், இதே மந்திரத்தால் துவஜத்தைப் புரோக்ஷித்து, மிருத்து, கஷாயோதகம் முதலியவற்றால், பிராஸாதத்திற்கு அபிஷேகஞ் செய்யவேண்டும்.

12. (சந்தனம் முதலியவற்றைப்) பூசி, ஆடையைச் சாத்தி முன்போல் சயனத்தில் நியாஸஞ் செய்யவேண்டும். சூளியில் லிங்கத்திற் செய்யப்படுமாறு நியாஸஞ்செய்தல், ஞான சக்தி க்ரியா சக்திகளை நியாஸஞ் செய்தல் ஆகிய இவை கிடையா.

13-14. நான்காவது தினத்தில் விசேஷமாகச் சண்டரைக் கற்பித்தலும் கிடையாது. தண்டத்தில் ஆன்மதத்துவத்தையும், பின்னர் வித்யாதத்துவத்தையும், ஸத்யோஜாதம் முதலிய முகங்களையும், துவஜத்தில் சிவதத்துவத்தையும், நிஷ்களரானசிவபெருமானையும் நியாஸஞ் செய்து அங்கங்களைப் பூஜிக்க வேண்டும்.

15. ஆசாரியர், சூளியின் ஸாந்நித்யத்திற்காக ஒவ்வொரு பாகத்திலும் ஸம்ஹிதா மந்திரங்களால் ஹோமம் செய்து, பட் என்னும் பதத்தை இறுதியிலுடைய ஸம்ஹிதா மந்திரங்களால் துவஜத்தின் ஸாந்நித்யத்திற்காகவும் ஹோமஞ் செய்யவேண்டும்.

16. துவஜத்தின் பிரதிட்டையில் வேறுவிதமான விதியும் உண்டு. அவையாவும் சில ஆகமங்களில் துவஜமானது ஆவரண தேவதைகளுடன் கூடினதாகச் சிவயாகம் போல் காணப்படுகின்றது.

17-18. பிராஸாதத்திற்கு அபிஷேகம்செய்து, மாலை ஆடை முதலியவற்றால் அலங்கரித்து, ஜங்கை, வேதிகை, அதற்குமேல் ஆகிய இவற்றில் மூன்று தத்துவங்களை நியாஸஞ் செய்து, ஓமம் முதலியனசெய்து பின்னர் முன்போல் சிவபெருமானைப்பூஜித்து, எல்லாத்தத்துவங்களின் ரூபமாகப் பாவித்துச் சிவபெருமானை வியாபகமாக நியாஸஞ் செய்யவேண்டும்.

19. அனந்தர், காலருத்திரர் இவர்களைப்பாத சிலையில் தியானித்து நியாஸஞ் செய்யவேண்டும். பாதாளம்-நரகம் இவற்றுடன் கூஷ்மாண்டர், ஹாடகர் இவர்களைப் பீடபந்தத்தில் நியாஸஞ் செய்யவேண்டும்.

20-21. சதருத்திரர் முதலியவர்களால் தரிக்கப்பட்டதாக இந்தப் பிரமாண்டத்தைத் தியானித்து, புவனங்கள் லோகபாலர்கள் இவற்றுடன் ஜங்கையில் நியாஸஞ்செய்ய வேண்டும். ஜலம், அக்கினி, காற்று, ஆகாயம், ஆகிய தத்துவங்களிலுள்ள கர்ப்பாவரணமென்னும் பெயருள்ள நாற்பது புவனங்களையும், எட்டு யோனிகளுடன் கூடிய புத்தி தத்துவத்தையும் நியாஸஞ் செய்யவேண்டும்.

22. நாஸாபந்தத்தில் எட்டு யோனிகளுடன்கூடிய மூன்று குணங்களையும், கும்பத்தில் புருஷதத்துவத்தையும், ஸிம்மத்தில் அராகதத்துவத்தையும் தியானித்து நியாஸஞ்செய்யவேண்டும்.

23. மஞ்சரியின் வேதிகையில் வித்தை முதலிய நான்கு தத்துவங்களையும், கண்டத்தில் மாயையையும் ருத்திரர்களையும், அமலஸாரகத்தில் வித்யாதத்துவத்தையும் நியாஸஞ் செய்ய வேண்டும்.

24-25. கலசத்தில் ஈசுவரருடன் பிந்துவையும், வித்யேசுவரர்களுடன் ஜடா சூடரையும் நியாஸஞ்செய்து, சூலத்தைஅர்த்தசந்திரரூபமாகத் தியானித்து, இதில் மூன்று சக்திகளையும், தண்டத்தில் நாதத்தையும், துவஜத்தில் குண்டலினீ சக்தியையும், இவ்வாறுபிராஸாதத்தைத்தியானித்து நியாஸஞ்செய்யவேண்டும்.

26-27-28. பிண்டிகையுடன் லிங்கத்தைப்போல் ஜகதியுடன் பிராஸாதத்தைச் சேர்த்து, முன்போல் எல்லாக்ரியைகளையும் இங்கும் செய்து, முரஜம் முதலிய வாத்யங்களின் மங்கள கோஷத்துடனும், வேதகோஷத்துடனும் சிவ சூளி, துவஜம், தண்டம் இவற்றை ஆசாரியர், மூர்த்திபர்களுடன் தம்மந்திரங்களால் எழுப்பி நியாஸஞ் செய்யப்பெற்ற சக்தி தாமரை இவற்றையுடையதாயும், நியாஸஞ் செய்யப்பெற்ற இரத்தினம் முதலியவற்றையுடையதாயும் இருக்கிற தன்னுடைய பற்றுக்கோட்டில் வைக்கவேண்டும்.

29, யஜமானன் துவஜத்தைப்பரிசித்துக்கொண்டு, பந்துக்கள் இஷ்டர்கள் இவர்களுடன் பிராஸாதத்தைப் பிரதக்ஷிணஞ் செய்து, விருப்பமான பயனை அடைகிறான்.

30. ஆசாரியர், ஸ்திரமான மந்திராதிபதிகளுடன் கூடிய பாசுபதத்தைத் தியானித்துக்கொண்டு, ஆயுதங்களுடன் கூடிய அதிபதிகளை இரக்ஷித்தற்காக நிரோதனஞ் செய்யவேண்டும்.

31. குறைதல் முதலிய தோஷங்களின் நீக்கத்திற்காக ஹோமஞ்செய்து, திக்பலியைச் சமர்ப்பித்து, யாகத்தில் நேர்ந்த தோஷங்கள் நீங்குதற்காக ஆசாரியருக்குத் தக்ஷிணையைக் கொடுக்கவேண்டும்.

32-33. பிரதிமை, லிங்கம், வேதிகை இவற்றில் எவ்வளவு பரமாணுக்கள் இருக்கின்றனவோ, அவ்வளவு அனேகம் யுகங்கள் வரை ஆலயத்தை நிர்மாணஞ் செய்த யஜமானன் பலத்தை அனுபவிப்பான். இதற்குக் கோடிபங்கு அதிகமான புண்யம் பிராஸாதத்தில் துவஜத்தை ஆரோபணஞ்செய்தலாற்சித்திக்கின்றது. ஜீர்ணமானதைப் புதுப்பித்தலாலும் இதே புண்யம் உண்டென (ஆகமங்களில்) கூறப்பட்டிருக்கின்றது.

ஆகச்சுலோகம் 1787.

துவஜதண்டப் பிரதிஷ்டை முற்றிற்று.

---

## ஜீர்ணோத்தார விதி.

1-1½. இனி ஜீர்ணமான லிங்கங்களைப் புதுப்பிக்கும் முறை கூறப்படுகின்றது. ஜீர்ணோத்தாரம்செய்யப்படாவிடில், லிங்கமானது பூதங்களுக்குப் பற்றுக்கோடாகப் பவிக்குமாதலின், பெரிதான புண்யத்தில் விருப்பத்தினால் ஜீர்ணம் முதலியவற்றை உத்தாரஞ் செய்யவேண்டும்.

2-3-3½. ஜீர்ணம், மெலிவு, தஹித்தல், அளவில் குறைவு, அதிகம், லக்ஷணமில்லாதிருத்தல், பக்னமாதல், பருத்திருத்தல், வஜ்ரத்தால் அடிபடுதல், ஸம்புடமாதல், வெடிக்கப்படுதல், அங்கங்களற்றிருத்தல்ஆகிய தோஷங்களையுடைய லிங்கங்கள், பிண்டி, விருஷபம் இவற்றை விலக்கவேண்டும்.

4-5. அசைக்கப்படுதல், அசைதல், தாழ்ந்திருத்தல், உயர்ந்திருத்தல், விஷமமாக இருத்தல், திசையின் தவறுதல், விழப்

படுதல், நடுவில் இருத்தல்,விழுதல் ஆகிய குற்றங்களையுடையலிங்கங்கள் விருணம் (அடிபடுதலால் நேரும் புண்) அற்றிருப்பின் [மீண்டும் நன்ருகப்] பிரதிட்டை செய்யப்படல் வேண்டும்.

6. இந்த லிங்கங்கள் நதி முதலியவற்றின் பிரவாஹத்தால் கொண்டு போகப்பட்டால், அங்கிருந்து வேறிடத்தில் சாஸ்திரங்களிற் கூறப்பட்ட கிரியைகளால் பிரதிட்டை செய்யப்படல் வேண்டும்.

7. நன்ருகவேனும், கேடாகவேனுமுள்ள சிவலிங்கத்தை அசைக்கக் கூடாது. ஆயிரம் முறை ஹோமஞ்செய்து அசைக்க வேண்டும். நூறு முறை ஹோமஞ்செய்து ஸ்தாபனஞ் செய்ய வேண்டும்.

8. ஜீர்ணம் முதலிய தோஷங்களுடன் கூடியிருப்பினும் நித்யபூஜை முதலியன செய்யப்பெற்று நன்ருக இருப்பதாயும், ஜீர்ணம்முதலிய தோஷங்களற்றிருப்பினும் நித்யபூஜைமுதலியன செய்யப்பெருமையால் கேடுடையதாக இருப்பதாயுமுள்ள லிங்கத்திற்கு, முன் கூறியவாறு சாலனம், ஸ்தாபனம் இவற்றைச் செய்யவேண்டும். சாலனம்-அசைக்கப்படுதல்.

9—10—11. "நூறு முறை ஹோமஞ் செய்து ஸ்தாபனஞ் செய்யவேண்டும்" என்னும் தொடக்கமுள்ள வாக்கியத்திற்கு இந்தப் பொருள் கொள்ளப்படும். (அதாவது) லிங்கமானது அறியாமையால் ஸ்தாபனஞ் செய்யப்பெற்று, தாழ்ந்து போதல் முதலிய தோஷத்தை அடையுமாயின், அப்பொழுது ஆயிரம் முறை ஹோமஞ்செய்து சாலனஞ்செய்யவேண்டும். நீக்கப்பெற்ற பிரமசிலையின் சேர்க்கையை உடையதாயும், விருணமில்லாததாயும், சல (அசையும்) ஸ்வரூபமுள்ளதாயும், பற்றியதாயும், விதிப்படி சலனஞ் செய்யப்பெற்றதாயுமுள்ள லிங்கத்தை முன்கூறப்பெற்ற பலன் பெருகுதற்காக அவ்விடத்திலேயே ஸ்தாபனம்செய்யும்பொருட்டு உத்தாரணஞ்செய்யவேண்டும். (பிடுங்க வேண்டும்.)

12. தெற்கு அல்லது ஈசானதிக்கில், மேற்கே வாயிலும் ஒரு தோரணமுமுடையதாக மண்டபத்தை நிர்மாணஞ்செய்து, துவாரபூஜை முதலியன செய்து, ஸ்தண்டிலேசுவரரைப் பூஜிக்க வேண்டும்.

13-13½. மந்திரங்களுக்குத் தர்ப்பணாகுதிகளைச் செய்து, முன்போல் வாஸ்து தேவர்களைப் பூஜித்து, அந்தர்ப்பலி பஹிர்ப் பலிகளை இட்டு, பின்னர் ஆசாரியர் ஆசமனஞ்செய்து, லிங்கிகள், சிவபக்தியுள்ள வேதியர், நண்பர் முதலாயினூர், சிற்பி இவர்களைப் புசிப்பிக்க வேண்டும்.

14-15. பின்னர், ஓ பிரபுவே ! இந்த லிங்கமானது தோஷத்துடன் கூடியிருக்கிறது. இந்த லிங்கத்தை உத்தாரணஞ் செய்வதில் சாந்தி உண்டென்பது தேவரீரின் திருவாக்கு. ஆகையால் ஓ மகேசுவரரே ! இந்தக் கர்மாவில் என்னை அதிட்டித்தருள வேண்டும்.

16. இவ்வாறு சிவபெருமானிடம் அறிவித்து, நூற்றெட்டு முறை மூலமந்திரத்தை உச்சரித்து, தேன் நெய் பால் அறுகு இவற்றால் சாந்தி ஹோமத்தைச் செய்யவேண்டும்.

17. பின்னர் லிங்கத்திற்கு அபிஷேகஞ் செய்து, ஸ்தண்டிலத்தில் நம: என்னும் பதத்தை இறுதியிலுடையதாயும், சிவபெருமானைக் குறிப்பதாயுமுள்ள ஓம் வ்யாபகேஶ்வராய ஶிவாய நம꞉ என்னும் மந்திரத்தால் பூஜிக்கவேண்டும்.

ஓம் வ்யாபகேஶ்வர ஹ்ருதயாய நம꞉ । ஓம் வ்யாபகேஶ்வர ஶிரஸே ஸ்வாஹா । ஓம் வ்யாபகேஶ்வர ஶிகாயை வஷட் । ஓம் வ்யாபகேஶ்வர கவசாய ஹும் । ஓம் வ்யாபகேஶ்வர நேத்ராய வௌஷட் । 1 என்று இவ்வாறு ஐந்து அங்கமந்திரங்களால் சிவபெருமானை நன்றாகப் பூஜிக்க வேண்டும்.

18-19. பின்னர் அஸ்திரமந்திரத்தை உச்சரித்துக்கொண்டு "ஏதோ ஒரு பிராணி லிங்கத்தைப்பற்றி நிற்கின்றது. லிங்கத்தை விடுத்து சிவபெருமானுடைய ஆணையால் இஷ்டமானவிடத்திற்குச் செல்லட்டும். வித்யா வித்யேசுவரர்களுடன் கூடி சிவபெருமான் இந்த லிங்கத்தில் ஸாந்நித்தியஞ் செய்யப் போகிறார்"

---

1 "ஸர்வம் வ்யாபகேஶேந [illegible] ஶங்கரம்" என்னும் அசிந்திய விசுவஸாதாக்கியத்தின் பொருள் இங்கு ஆவசியகமானதால் சேர்க்கப் பெற்றது.

என்று இவ்வாறு அந்த லிங்கத்திற் பற்றிய ப்ராணிக்கு அறிவிக்க வேண்டும். [பிராணியாவது-ஜீர்ணமானவுடன் லிங்கத்திற் பற்றிய பூதம் முதலாயின]

20. பின்னர், பாசுபதாஸ்திர மந்திரத்தையுச்சரித்து ஒவ்வொரு பாகத்திலும் ஆயிரம் முறை ஹோமஞ்செய்து, சாந்தி தீர்த்தத்தால் புரோக்ஷித்து, தர்ப்பங்களால் பரிசித்துக்கொண்டு ஜபிக்கவேண்டும்.

21-22-23. பின்னர் ஆசாரியர் மாறுதலாக அர்க்கியஞ் சமர்ப்பித்து, லிங்கம் பிண்டிகை இவற்றிலிருப்பவர்களான தத்துவ தத்துவேசுவரர்கள் மூர்த்தி மூர்த்தீசுவரர்கள் இவர்களை விஸர்ஜனஞ்செய்து, சுவர்ணபாசத்துடன் விருஷபத்தின் தோளில் இருக்கும் கயிற்றால் (லிங்கத்தை) கட்டி ஜனங்களுடன் „ஶிவஹோ" என்று சொல்லிக்கொண்டு அந்த லிங்கத்தை ஜலத்தில் மூழ்கவைக்க வேண்டும். ஆசாரியர் நூறு முறை புஷ்டிக்காக ஹோமஞ் செய்யவேண்டும். திக்பாலர்களின் திருப்திக்காகவும் வாஸ்துவின் சுத்திக்காகவும், நூறு நூறுமுறை ஹோமஞ் செய்யவேண்டும்.

24. அந்த ஆலயத்தில் மஹாபாசுபதாஸ்திர மந்திரத்தால் இரக்ஷையைச் செய்து, ஆசாரியர், அந்த அளவில் லிங்கத்தை அந்த ஆலயத்தில் விதிப்படி பிரதிட்டை செய்ய வேண்டும்.

25. அசுரர்கள், முனிவர், தேவர்கள், தத்துவங்களையறிந்துளோர், [ஸித்தர்] இவர்களால் பிரதிட்டை செய்யப்பெற்ற லிங்கம் ஜீர்ணமாதல், பக்னமாதல், (உடைந்து போதல்) ஆகிய தோஷங்களையுடையதாயிருப்பினும், விதிப்படியேனும் சலனஞ் செய்யக் கூடாது.

26. இதே விதியை ஜீர்ணமான ஆலயத்தைப் புதுப்பித்தலில் கொள்ளவேண்டும். (மனிதரால் பிரதிட்டைசெய்யப்பட்ட லிங்கத்தில்) கட்கத்தில் (கத்தியில்) மந்திரங்களின் சமூகத்தை நியாஸஞ்செய்து வேறு ஆலயத்தை நிர்மாணஞ்செய்யவேண்டும்.

27. சுருங்கச்செய்தால் மரணம் ஸித்திக்குமெனக் கூறப்பட்டிருக்கின்றது. விஸ்தாரமாகச் செய்தால் தனக்ஷயமுண்டாகும். அதே திரவியம், அல்லது சிரேஷ்டமான திரவியத்தால்,

அந்த ஆலயத்தை அந்த அளவாக [முன்னிருந்த அளவாகச்] செய்யவேண்டும்.

ஆகச்சுலோகம் 1814.

ஜீர்ணோத்தார விதி முற்றிற்று.

---

## மடாலயப் பிரதிஷ்டா விதி.

1. இனி மடம் முதலியவற்றைப் பிரதிட்டை செய்யும் முறையும், பிரவேசிக்கும் முறையும் கூறப்படுகின்றது. மண்டபம் முதலியவற்றை நிர்மாணஞ் செய்து, மண்டபத்தில் சிவகும்பத்தை ஸ்தாபிக்க வேண்டும்.

2. இந்த மடத்தின் உட்புறம் வெளிப்புறங்களைக் கோமயத்தால் மெழுகி, புஷ்பமாலை ஆடை இவற்றின் காந்தியால் நிறைந்ததாகவும், தோரணங்களால் அலங்கரிக்கப் பெற்றதாகவும் செய்ய வேண்டும்.

3-4-5. யஜமானன், ஆசாரியர் முதலாயினுரை முன்னிட்டு பந்துக்களுடன் கூடி, பிராமணருடைய தோளில் இரண்டு ஆடைகள் சாத்தப்பெற்ற சிவகும்பத்தைத்தரிக்கச்செய்து, திவ்யமான வேதகோஷம் வாத்யகோஷம் இவற்றுடன் மடத்தைப் பிரதக்ஷிணம் செய்து, மடத்தின் முன்னர் சிறிது தாமதம் செய்து நின்று, 1 மங்கள காரியத்தைச் செய்த யஜமானன், நல்ல லக்னத்தில் தப்சுடன் கூடிய ஆசாரியரை மடத்திற்குள் பிரவேசிக்கச் செய்யவேண்டும். (பின்னர்) மடத்தின் அங்கணத்தில் தான்யத்தின் மேல் வடக்கு முகமாகக் கும்பத்தை நியாஸம் செய்ய வேண்டும்.

6 பின்னர் வேதியர், சோதிடர், சிற்பி இவர்களுக்குத் தக்ஷிணையைக்கொடுக்க வேண்டும். கிழக்குத் திக்கில் கும்பங்களையும், இரண்டு முழ அளவான மண்டலத்தில் வாஸ்துவையும் பூஜிக்கவேண்டும்.

---

1 மங்களகாரியமாவது— துவாரத்தில் வந்த சிவகும்பத்திற்கு அர்க்கியம் பாத்யம் ஆசமனீயம் இவற்றைச் சமர்ப்பித்து, நிவேதனம் கற்பூர ஆராத்ரிகம் இவற்றைச் செய்து, மந்திரபுரஸ்ஸரமாக பொரி புஷ்பாஞ்சலி இவற்றைஇறைத்து, ஜயவிஜயீபவ என்று செய்யப்படும் மங்களசப்தமாகும்.

7. ஜகதீ, பாதபீடம், ஜங்கை, கபோதம், சதனம் இவற்றில், முறையே நிவிருத்தி முதலிய கலைகளை நியாஸம் செய்ய வேண்டும்.

8. பின்னர், சக்திகளைப் பூஜித்து, இருதய பீஜத்துடன், தம் பெயர்களால் வேதிகையில் துவாரபாலர்களைத் தியானத்துடன் ஆவாஹனம் செய்து பூஜிக்கவேண்டும்.

9. பின்னர், ஹோமம் செய்யுமிடத்திற்குச்சென்று, வாஸ்து தேவதைகள், நிவிருத்தி முதலிய கலைகள், துவாரபாலர்கள் இவர்களுக்குத் தம் பெயர்களால் தர்ப்பணஞ் செய்யவேண்டும்.

10-11. திக்பலியிட்டு, ஆசமனஞ்செய்து, ஸகளீகரணஞ் செய்து, கும்மட்டி மாதுளை, மா, வில்வம், நாரத்தை, விளா, எலந்தை, நெல்லி, வார்த்தாகீ, (கத்திரி) மாதுளை இவற்றின் பழங்களுடன் கலச தீர்த்தங்களால் மடத்தின்மேல் அபிஷேகஞ்செய்ய வேண்டும்.

12. ஐசுவரியம் நிலைத்தற்காகவும், வம்சம் முதலியவற்றின் விருத்திக்காகவும், கீர்த்தியின் பொருட்டும், மடத்திற்கு, யஜமானனின்பெயரால் அடையாளஞ்செய்து பெயரிடவேண்டும்.

ஆகச்சுலோகம் 1826.

மடப்பிரதிஷ்டாவிதி முற்றிற்று.

---

## புஷ்கரிணீப்ரதிஷ்டை.

### வாஸ்துதேவதைகளின் அமைப்பு.

1. புஷ்கரிணியின் பிரதிட்டையானது ஆகமங்களை அநுசரித்துக் கூறப்படுகின்றது. முதலில் பதினொரு பாகமாகப் பிரிகப் பெற்றதாயும், நாற்கோணமாயும் உள்ள இடத்தில், வாஸ்துவைப் பூஜிக்கவேண்டும்.

2. ஈசானன், அக்கினி, நிருருதி, வாயு இவர்களைக்கோணங்களில் மூன்று பதங்களில் பூஜிக்கவேண்டும். பர்ஜன்யர் முதலியவர்கள் முறையே ஒவ்வொரு பதங்களில் இருக்கின்றனர்.

3. ஆபர் முதலாயினோர் இரண்டு கோஷ்டங்களிலும், மரீசி முதலாயினோர் பத்துப்பதங்களிலும், நடுவில் இருபத்தைந்து பதங்களில் பிரமனும் இருக்கின்றனர்.

4. ஸ்வீகரிக்கப்பெற்ற பூமியின் நடுவில் பிரதிஷ்டையின் ஆரம்பத்தில் மேற்குத் திக்கில் மங்களகரமான மண்டபத்தில் வாஸ்துவை முறைப்படி பூஜிக்கவேண்டும்.

## எட்டுத் தளங்களில் பூஜை செய்யும் முறை.

5. பின்னர், பிரணவத்தை ஆதியிலுடைய தன் பெயரால் மூர்த்தி அங்கம் இவற்றுடன், எட்டுத் தளங்களையுடைய வெண்டாமரையில் நடுவில் காலாக்கினியைப் பூஜிக்கவேண்டும்.

6-6½. கிழக்குத் திக்கிலுள்ள தளம் முதற்கொண்டு, ஒவ்வொரு தளங்களிலும், முறையே ஹாடகேசர், பலேசர், பலநாதர், மஹோதரர், மஹாப்தி, கலசாம்போதி, விரூபாக்ஷர், ப்ருகுடீசுவரர் ஆகிய இவர்களைப் பூஜிக்கவேண்டும்.

7-7½. பின்னர், பள்ளத்தில் அநந்தர் முதல் கார்க்கோடகர் ஈருகிய நாகங்களை, தம் பெயரால் பூஜித்து, யாகமண்டபத்திற்கு வெளியில் சரகீ முதலாயிருைரயும் பூஜிக்கவேண்டும்.

## புஷ்கரிணியில் நியாஸஞ்செய்ய வேண்டிய திரவியங்கள்.

8-9. 1 முதலைகள், லோகபாலர்கள், வெள்ளியால் செய்யப்பெற்ற அனந்தர், மஹாபத்மர், தக்ஷகர், குளிகர், சங்கர், வாசுகி, பத்மர், கார்க்கோடகர் ஆகிய எட்டு நாகங்கள் இவற்றைக்கிழக்கு முதலிய திக்குக்களில் முறையே பூஜித்து புஷ்கரிணியில் நியாஸஞ் செய்யவேண்டும்.

10. குப்பமேனி, விளாமிச்சை வேர், பொன்னுங்காணி, ஸஹா, (சிறு குருஞ்சி க்கத்தாழை) 2 யஷ்டி (அதிமதுரம்) 3 அங்கிரிகா, (சித்தாமல்லி) ஆகிய ஆறு ஒஷதிகளை அந்தத் தடாகத்தில் நியாஸஞ் செய்யவேண்டும்.

---

1 சுவர்ணம் வெள்ளி முதலியவற்ருலாக்கப்பெற்ற பலவிதமான ஜலஜந்துக்களை, கந்தம் முதலியவற்ருல் பூசித்து, புஷ்கரிணியில் நியாஸஞ் செய்ய வேண்டுமென்று ஸித்தாந்தசேகரத்தில் கூறப்பட்டிருக்கின்றது.

2 அமரகோசத்தில் யஷ்டிமதுகை என்று காணப்படுகின்றது.

3 அமரகோசத்தில் சுஜிவணிஃகா என்று காணப்படுகின்றது.

11. ஆமை, ஐந்து இரத்தினங்கள், ரஸம், கங்காஜலம், தாமரை, அர்க்யஜலம், பஞ்சகவ்வியம் இவற்றைப் புஷ்கரிணியில் நியாஸஞ் செய்யவேண்டும்.

## அஹியஷ்டியை ஸ்தாபித்தல்.

12-13. ஆழத்திற்கு இரண்டுபங்கு அதிகமாகவேனும், கால் பங்கு குறைவாகவேனும், பாதி அதிகமாகவேனும் (நீளம்) உள்ளதாயும், திருடமுள்ளதாயும், கண்களுடன் (கணுக்களுடன்) கூடியதாயும், ஸாலமரம் சுந்தரிகா என்னும் மரம் இவற்றாலாக்கப் பெற்றதாயும் உள்ள யஷ்டியை (தண்டத்தை) அபிஷேகஞ் செய்து அருச்சித்து, முராஜம் முதலிய வாத்யகோஷங்களுடன், துவஜ தண்டத்தைப்போல் அஹியஷ்டியை அநந்த மந்திரத்தால் நடுவில் நியாஸஞ் செய்யவேண்டும். (அஹியஷ்டியென்பது நாகம் போலுள்ள தண்டம்)

𑌓𑌂 𑌸𑌹𑌸𑍍𑌰𑌶𑌿𑌰𑍋𑌭𑌵𑌪𑍂𑌰𑍍𑌣𑌾𑌯 𑌵𑌿𑌶𑍍𑌵𑌾𑌧𑌾𑌰𑌧𑍃𑌤𑌾𑌯 𑌵𑍈 ।
𑌓𑌂 1 𑌹𑍍𑌰𑍀𑌂 𑌹𑍍𑌰𑍂𑌂 𑌫𑌟𑍍 𑌅𑌨𑌨𑍍𑌤𑌨𑌾𑌗𑌾𑌧𑌿𑌪𑌤𑌯𑍇 𑌨𑌮𑌃 ॥

என்பது அநந்த மந்திரமாகும். இ-ள். "ஆயிரம் படங்களோச்சிரஸிலுடையவரும் உலகத்திற்குப்பற்றுக்கோடாகவுள்ளவருமான அநந்தராகிய ஸர்ப்பராஜனுக்கு நமஸ்காரம் செய்கிறேன்" என்பதாம்.

15. அஸ்திர ஜலத்தால் அப்யுக்ஷணஞ் செய்து, பாசுபதாஸ்திர மந்திரத்தால் அதிவாஸஞ் செய்யவேண்டும். பின்னர் க்ஷுரிகாஸ்திரமந்திரத்தால் ஜலத்தில் இறக்கி, வாமதேவமந்திரத்தால் நியாஸஞ் செய்யவேண்டும்.

16. யஜமானன் வெள்ளியாலாக்கப்பெற்ற 2 பாசத்தை எடுத்துக்கொண்டு, கபிலையின் (பசுவின்) முதுகில் சம்பந்தித்து, அந்தப் புஷ்கரிணியைக் கடக்க வேண்டும். ஆசாரியர் பாசுபதாஸ்திர மந்திரத்தை ஜபிக்க வேண்டும்.

---

1 𑌓𑌂 𑌹𑍍𑌰𑌾𑌂 𑌹𑍍𑌰𑍌𑌂 𑌫𑌟𑍍 என்றும் பாடபேதம் உண்டு.

2 பசுவின் கழுத்திலிடப்பட்ட வெள்ளிச் சங்கிலியை முதுகின் புறமாய் நின்று பிடித்துக் கொண்டு என்பது கருத்து.

17-18 அந்தப் புஷ்கரிணீயைத் தாண்டுதலால் வைதரிணீ என்னும் (நரகத்திலுள்ள) நதியானது தாண்டப் பெற்றதாகவா கின்றது. (பின்னர்) அகோரமந்திரத்தால் நூற்றெட்டு முறை ஹோமஞ்செய்து, வருணன் அல்லது வாமதேவருக்குத் தர்ப்ப ணஞ்செய்து, இந்த மந்திரத்தாலேயே சருவைப்பக்குவஞ்செய்து, சருவால் (சிவமந்திரத்தை உச்சரித்து ஓமம் செய்து) ஆசாரியர் சிவமந்திரத்தை உச்சரித்துப் பூர்ணாகுதி செய்யவேண்டும்.

19. இந்தப் பசுவையும் ஆடை பூமி ஆபரணம் இவற்றை யும் ஆசாரியருக்குச் சமர்ப்பிக்க வேண்டும். இதே முறையை ஆசாரியர் வாபீ தடாகம் இவற்றிலும் கொள்ள வேண்டும்.

ஆகச் சுலோகம் 1845.

புஷ்கரிணீ ப்ரதிஷ்டாவிதி முற்றிற்று.

---

## கூபப்பிரதிஷ்டாவிதி.

1-2-3-4. பின்னர் கிணற்றைப் பிரதிஷ்டை செய்யும் முறையும் சுருக்கமாகக் கூறப்படுகிறது. இந்தப் பிரதிஷ்டையி லும் பன்னிரு பாகமாகப் பிரிக்கப் பெற்ற மண்டலத்தில் வா ஸ்துவைப்பூஜிக்கவேண்டும். ஈசான திக்கு முதல் ஈசானதிக்கு வரையிலுள்ள கோணங்களில் இரண்டரைப் பதங்களுக்கு நாயகர் களான ஈசானன், அந்தரிக்ஷன், அக்கினி, மிருகர், நிருருதி, ரோ கர், வாயு, திதி இவர்களைப் பூஜிக்கவேண்டும். பர்ஜன்யர் முதலிய வர்களை ஒரு பதத்திலும், ஆபர் முதலியவர்களை இரண்டு பதங்க ளிலும், மரீசி முதலியவர்களை பதினொரு பதங்களிலும், பிரமனை முப்பத்தாறு பதங்களிலும், யாகமண்டபத்திற்கு வெளியில் சரகீ, முதலியவர்களையும், ஸ்கந்தர் முதலியவர்களை முன்போலும், ஸ்வதந்திரமாகவுள்ள மந்திரங்களாலேனும் இருதய மந்திரத்தா லேனும் பூஜிக்கவேண்டும்.

5. கிணற்றுக்கு மேற்குத்திக்கிலுள்ள மண்டபத்தில் முன் கூறியமுறையே தாமரையில், வெள்ளியாலாக்கப்பெற்ற எட்டு நா கங்களாற் சூழப்பெற்ற காலாக்னி தேவரைப்பூஜிக்கவேண்டும்.

6. பின்னர் இவர்களுக்கு ஹோமஞ்செய்து, பலிசமர்ப் பித்து, கிணற்றில் இரத்தினங்கள் முதலியவற்றைநியாஸஞ்செய்ய

வேண்டும். பின்னர் ஆசாரியர் சாந்தியின்பொருட்டு யஜமான னைச்சாந்தி கும்பத்திலுள்ள தீர்த்தத்தால் புரோக்ஷிக்கவேண்டும்.

7. யஜமானன், ஆசாரியருக்கு பசு சுவர்ணம் ஆடை முத லியவற்றைக்கொடுத்துத் திருப்தி செய்து வைக்கவேண்டும். பின்னர், சக்திக்குத் தக்கவாறு யாசகர்களுக்குப் போஜனம் முத லியவற்றை வழங்கவேண்டும்.

8. கிரியைகளை அறிந்தவனால் கிணறுபோன்ற பிறவற்றிற் கும் இதே விதியானது செய்யத்தக்கது. நியாஸம் ஹோமம் இவற்றை வலமாகவும் இடமாகவும் கொள்ளவேண்டும்.

ஆகச் சுலோகம் 1853

கூபப்பிரதிஷ்டாவிதி முற்றிற்று.

---

## விருக்ஷப் பிரதிஷ்டாவிதி.

1-2. நந்தனவனம், உத்யானவனம், இவற்றிலுள்ள விரு க்ஷத்திற்குக், கிழக்குத்திக்கு ஈசானதிக்கு ஆகிய திக்குக்களில் மண்டபத்தை நிர்மாணஞ்செய்து, முன்போல் ஸ்நபனம் நியாஸம் இவற்றைத் தத்தம்மந்திரங்களால் செய்யவேண்டும். விருக்ஷத்தின் அதிதேவதை ப்ரீதி அடைதற்காக, ஆசாரியர் பூர்ணுகுதியைக் கொடுக்கவேண்டும்.

3. பின்னர் யஜமானன், ஆசாரியர் வேதியர். இவர்களைப் பூஜிக்கவேண்டும். பந்துக்கள் நண்பர் ஏழைகள் இவர்களுக்குப் போஜனம் செய்து வைக்கவேண்டும். [வேண்டியவற்றைவழங்கி] திருப்தி செய்து வைக்கவும்வேண்டும்.

ஆகச் சுலோகம் 1856.

விருக்ஷப் பிரதிஷ்டா விதி முற்றிற்று.
காமீயவிதி முற்றிற்று.

---

## முடிவுரை.

1. சிவபெருமானுக்குச் சமமான காந்தியை உடைய ஸ்ரீ ஈசானசிவன் என்பவருடைய சிஷ்யர் விமலேசர் என்பவராவர். இவருடைய சிஷ்யர் சிவஸ்வரூபரான அஸ்திரசிவன் என்னும் பெயருடையவர். இவருடைய சிஷ்யர் ஸோமசம்புசிவாசாரியர்

